ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அஷ்டாத,ஶ ரஹஸ்யம்—

# பதிப்பாசிரியரின் முன்னுரை

"சித், அசித், ஈஶ்வரன் என்னும் மூன்று தத்துவங்களும் உண்மையானவை; மற்ற இரண்டு தத்துவங்களும் ஈஶ்வரனுக்கு ஶரீரமானவை. ஈஶ்வரனான ஸ்ரீமந் நாராயணன் நித்யமுக்தர்களோடு கூடியவனாய், பரமபதத்தில் வீற்றிருந்து நித்யவிபூ,தியாகிய அதையும், தன்னால் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்து தேர்ந்து அளிக்கப்படும் லீலாவிபூ,தியாகிய இதையும் செங்கோல் செலுத்தி ஆட்சிபுரிகிறான். அவனது செல்வங்களான இவ்விரு விபூ,திகளும் அவனால் வியாபித்து ஧ாரித்து நியமிக்கப்படும் ஶரீரமாய் அவனோடு ஒன்றிநிற்கையாலே உண்மைப்பொருள் ஒன்றே என்றும் கூறலாம். லீலாவிபூ,தியிலுள்ள சேதனர்களை நித்யவிபூ,திக்கு அழைத்துச் சென்று, அங்குள்ள நித்யமுக்தர்களுக்குப்போலே பேரின்பத்தையும், தன் விஷயமான கைங்கர்யமாகிய பெரும் பேற்றையும் அளித்து உகப்பதற்காகவே இவ்விபூ,தியைப் படைத்தல், காத்தல், அழித்தலையும், வேதசாஸ்திரங்களை அளித்தலையும், அவதரித்தலையும், ஞானிகளை அவதரிக்கச் செய்வதையும் தன் நிர்ஹேதுககிருபையாலே அவன் செய்கிறான். அதனாலே அவனே இயல்வான உபாயம்; பரமபதம் சென்று அவனுகந்த அடிமை செய்வதே தலைசிறந்த பேறு; இப்படிப்பேறும் (உபேயமும்) ஆறும் (உபாயமும்) அவனே என்று உணர்ந்து, இவ்வுலகில் அவனுக்கும் அவனடியார்களுக்குமேயான வாழ்க்கை நடத்தும் ஶரணாக,தர்களுக்கு அவன் இத்தலைசிறந்த பேற்றை இவர்கள் கையில் எதையும் எதிர்பாராமல் நிர்ஹேதுகமாக அருள்கின்றான்" என்னும் கொள்கை இந்த ப,ாரததேசத்தில் அநாதி,காலமாக வழங்கிவரும் வேதங்களிலும், அதை விளக்கவந்த ஸ்ம்ருதிகளிலும், இதிஹாஸபுராணங்களிலும் ஒன்றிலிட்ட விளக்காகக் காணப்படுகின்றது.

நம் தமிழ்நாட்டிலும் மிகப் பழைய நூல்களான எட்டுத் தொகை, பத்துப்பாட்டு என்னும் பதினெட்டுத் தொகுப்பு நூல்களிலும், தொல்காப்பியமாகிற இலக்கண நூலிலும் வேதங்களில் காணப்படும் சமயக்கொள்கை இதுவே எனப் பறைசாற்றப்படுகிறது.

சங்ககாலத்திற்குப் பிற்காலத்தில் இக்கொள்கையில் பல குழப்பங்கள் ஏற்பட்டுப் பல மதங்கள் ஏற்பட்டன. அப்போது தமிழ்நாட்டில் ஆழ்வார்கள் அவதரித்து, சங்க காலம்வரையில் தமிழர்களின் தனிப்பெருஞ் சமயமாய் விளங்கிய இந்த விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவமதமே வேத சாஸ்திரங்களில் விளங்கும் மதம் என நிலைநாட்டினர். இக்கொள்கையை ஆழ்வார்களுக்குப்பின் நாதமுனிகள், ஆளவந்தார், ஸ்ரீராமாநுஜர் முதலான ஆசாரியர்கள் உபய வேதாந்த அடிப்படையில் உறுதியாக அமைத்தனர்.

ஸ்ரீ ராமாநுஜர் காலம் வரையில் வடமொழியிலேயே நூலியற்றி இந்த மதக்கொள்கையை நிலைநாட்டிவந்தனர் பூர்வாசார்யர்கள். அவருக்குப்பின் அவதரித்த அவரது சீடரான திருக்குருகைப்பிரான்பிள்ளான் அவரது நியமனத்தாலே திருவாய்மொழிக்கு இரத்தினமும் பவழமும் போல் தமிழும், வடமொழியும் கலந்த மணிப்ரவாள நடையில் "ஆறாயிரப்படி" என்னும் உரையை முதன்முதலாக அருளிச்செய்தார். ஸ்ரீராமாநுஜரின் முக்கிய சீடரான கூரத்தாழ்வானின் திருக்குமாரரான ஸ்ரீ பராசரபட்டரின் சீடரான (வேதாந்தி) நஞ்சீயர் திருவாய்மொழிக்குச் சற்று விரிவாக "ஒன்பதினாயிரப்படி" என்னும் உரையையும், மற்ற ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்கள் சிலவற்றுக்கு சுருக்கமான உரைகளையும் அருளிச்செய்தார். அவரது சீடரான நம்பிள்ளையின் சீடரான பெரியவாச்சான்பிள்ளை ஆசார்ய நியமனத்தாலே திருவாய்மொழிக்கு "இருபத்து நாலாயிரப்படி" என்னும் உரையையும், ஆழ்வார்களின் மற்ற திவ்யப்ரபந்தங்கள் அனைத்துக்கும் விரிவான உரை

களையும் இயற்றியருளினர். மேலும், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உபதேச மந்திரங்களாய் விளங்கும் திருமந்திரம், த்வயம், சரமஶ்லோகம் என்னும் ரஹஸ்யத்ரயத்திற்கும் ஸ்ரீ பராசர ப₄ட்டர் வடமொழியில் எட்டு ஶ்லோகங்களாலே அருளிய விளக்கமான அஷ்டஶ்லோகியை அடியொற்றி மணிப்ர வாள நடையில் பரந்த ரஹஸ்யம், மாணிக்கமாலை, தத்வத்ரய ஸங்க்ரஹம் முதலான ரஹஸ்யங்களையும், ஸ்ரீராமாயணத்தில் முக்கியமான ஶ்லோகங்களுக்குத் "தனி ஶ்லோகம்" என்னும் பெயரில் விரிவான வ்யாக்கியானத் தையும், ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரரத்ன சது: ஶ்லோகிகளுக்கும், எம்பெருமானார் அருளிய கத்யத்ரயத் திற்கும், ருக்₃வேத₃கி₂லமான ஜிதந்தாஸ்தோத்ரத்திற்கும் அருமையான மணிப்ரவாளவுரைகளையும் இயற்றி ஆஸ்திக உலகத்தால் "வியாக்கியான சக்ரவர்த்தி" என்றும் "பரம காருணிகர்" என்றும் போற்றப்பெற்றார். நம்பிள்ளையின் மற்றொரு சீடரான வடக்குத்திருவீதிப்பிள்ளை, நம்பிள்ளை ஒருமுறை அருளிய திருவாய்மொழி யுரைப்பெருக்கை அப்படியே ஏடுபடுத்தினர். இதுவே பிற்காலத்தில் 'ஈடுமுப்பத்தாறாயிரப்படி' என்று புகழ்பெற்ற திருவாய் மொழிப்பேருரை. இவரே மற்ற ஆழ்வார்களின் சில திவ்ய ப்ரபந்தங்களுக்கும் நம்பிள்ளையருளிய உரைப்பெருக்குகளை ஏடுபடுத்தியருளியவர்.

இதுவரையில் பூர்வாசார்யர்களிடையே மிகுதியான கருத்துவேறுபாடுகளில்லாமல் வளர்ந்துவந்த இந்த விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீ வைஷ்ணவ மதத்தில் ரஹஸ்ய த்ரயார்த்த₂ங்கள் விஷயத்தில் சில கருத்து வேறுபாடுகள் தோன்றின. அச்சூழ்நிலையில் முற்கூறிய தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களின் கருத்துக்கள் வடக்குத்திருவீதிப்பிள்ளை யின் திருக்குமாரர்களாய், நைஷ்டி₂க ப்₃ரஹ்மசாரிகளான பிள்ளைலோகாசார்யராலும், அழகியமணவாளப்பெருமாள் நாயனாராலும், பெரியவாச்சான்பிள்ளையின் திருக்குமாரரான

நாயனாராச்சான்பிள்ளையாலும் தமது நூல்களில் நிலை நாட்டப்பெற்றன.

இவர்களில், அநுபவநூல்களான திவ்யப்ரபந்தங்களுக்கோ, ஸ்தோத்ரங்களுக்கோ உரையிடாமல், தத்வஹித புருஷார்த்தங்களையே விளக்கும் ரஹஸ்யங்களுக்கே உரையெழுதியவர் பிள்ளைலோகாசார்யர் என்னும் மஹாசார்யர். "அஷ்டாதசரஹஸ்யங்கள்" என்று புகழ்பெற்ற பதினெட்டு ரஹஸ்யங்களை அருளிய இவர் இந்த நூல்களில் விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தக்கொள்கை களையும், திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்கள் அருளிய ரஹஸ்யார்த்தக்கொள்கைகளையும் விரிவாக விளக்கி யருளினர். வாழ்நாள் முடியும்வரையில் திருமணமும் செய்துகொள்ளாமல் தர்ஶனத்திற்காகவே வாழ்ந்து முஸ்லிம் படையெடுப்பின்போது திருவரங்கனைக் காப்ப தற்காகத் தம் உயிரையும் அளித்த மஹாநுபாவர் இவர்.

இவரது அஷ்டாதசரஹஸ்யங்களில் பல இவரது திருத் தம்பியாராலும், இவரது காலத்தில் வாழ்ந்த நாயனாராச் சான்பிள்ளையாலும் அடுத்துவாழ்ந்த மணவாளமாமுனிக ளாலும் மிகுந்த கௌரவபுத்தியுடன் தமது நூல்களில் மேற்கோளாகக் காட்டப்படுவதிலிருந்தும், இவரது நூல் களில் முக்கியமானவையான முமுக்ஷுப்படிக்கும் ஸ்ரீவசந பூஷணத்திற்கும், தத்வத்ரயத்திற்கும் விஶதவாக்சிகா மணியான மாமுனிகள் உரையிட்டிருப்பதிலிருந்தும், அவை இன்றளவும் காலக்ஷேப க்ரந்தங்களாக ஸ்ரீவைஷ் ணவவுலகினரால் கற்கப்படுவதிலிருந்தும் இவற்றின் பெரு மையை உணரலாம்.

"த்வயார்த்தம் தீர்க்க ஶரணாகதி யென்றது ஸார ஸங்க்ரஹத்திலே" (ஆசார்யஹ்ருதயம் 210) என்று இவரது திருத்தம்பியார் தமது தலைசிறந்த ரஹஸ்யநூலான ஆசார்யஹ்ருதயத்தில் அஷ்டாதசரஹஸ்யங்களில் ஒன்றான

ஸாரஸங்க்₃ரஹத்தை மேற்கோளாகக்காட்டினர். நாயனுராச்சான்பிள்ளை தம் சது: ஶ்லோகீவ்யாக்₂யானத்தின் தொடக்கத்தில் 'இந்நால்வர் பண்ணும் உபகாரத்தை நவரத்னமாலையிலே நன்ருகக் காணலாமிறே " என்று அஷ்டாதசரஹஸ்யங்களில் ஒன்ருன நவரத்னமாலையை மேற்கோளாகக் காட்டினர். அத்துடன், அதே நூலில் (நமது பதிப்பில் 59-ம் பக்கத்தில்) முமுக்ஷுப்படியை மேற்கோளாகக் காட்டும் போது " அபி₄யுக்தாக்₃ரேஸரரான பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்தார் " என்றும், (நமது பதிப்பில் 63-ம் பக்கத்தில்) ஸ்ரீவசநபூ₄ஷணத்தை மேற்கோளாக எடுக்கும்போது " ஆசார்யாக்₃ரேஸரரான பிள்ளை லோகாசார்யரும்" என்றும், (நமது பதிப்பில் 73-ம் பக்கத்தில்) தத்வத்ரயத்தை மேற்கோளாக எடுக்கும்போது " பிள்ளைலோகாசார்யரும் அநுப₄வித்தருளினர் " என்றும் அருளியிருப்பதிலிருந்து அஷ்டாதசாரஹஸ்ய நூல்களிற் பல அவற்றின் ஆசிரியர் வாழ்ந்த காலத்திலேயே மிகப் புகழ் பெற்றுவிட்டன என விளங்குகிறது.

இந்தப் பதினெட்டு ரஹஸ்யங்களில் முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசநபூஷணம் எனும் மூன்றும் மாமுனிகளால் உரையிடப்பெற்று ஸ்ரீவைஷ்ணவவுலகில் காலக்ஷேபக்₃ரந்த₂ங்களாகக் கற்கப்படுகின்றன. ஸ்ரீவசநபூ₄ஷணத்திற்கு மாமுனிகளின் உரைக்கு முன்பே 'திருநாராயணபுரத்து ஆய்' என்னும் ஜநந்யாசார்யரின் வ்யாக்₂யானமும் அவதரித்துள்ளது. முமுக்ஷுப்படி வ்யாக்₂யான அவதாரிகையில், "முன்பே ரஹஸ்யத்ரயவிஷயமாக மூன்று ப்ரப₃ந்த₄ம் இட்டருளியிருக்கச் செய்தேயும், 'யாத்₃ருச்சி₂கப்படி' அதிஸங்க்₃ரஹமாகையாலும், 'பரந்தபடி' அதிவிஸ்த்ருதமாகையாலும், 'ஶ்ரிய:பதிப்படி' உப₄யதோ₃ஷமுமின்றிக்கேயிருந்ததேயாகிலும் ஸம்ஸ்க்ருதவாக்ய பூ₄ஹுளமாகையாலே பெண்ணுக்கும் பேதைக்கும் அதி₄கரிக்கப் போகாமையாலும், த்ரிவித₄தோ₃ஷமுமில்லாதபடி இன்ன

மும் ஒரு ப்ரப₃ந்த₄மிடவேணுமென்று திருவுள்ளம்பற்றி எல்லாவற்றுக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப் ப்ரப₃ந்த₄ம் இட்டருளிற்று" என்று அருளியிருப்பதிலிருந்து இவ்வஷ்டாத₃ஶ ரஹஸ்யங்களில் ரஹஸ்யத்ரய விவரணமா யமைந்த நாலு ப்ரபந்தங்களில் முமுக்ஷுப்படியே காலத் தால் பிற்பட்டதும், சிறப்பால் முற்பட்டதுமாகும் என விளங்குகிறது.

பிள்ளைலோகாசார்யர் தாமே தமது ரஹஸ்யங்களில் முற்பட்டவை சிலவற்றைப் பிற்பட்ட ரஹஸ்யங்களில் குறிப்பிட்டுள்ளார். முமுக்ஷுப்படியில் "ப₂லமிருக்கும்படி ப்ரமேயஶேக₂ரத்திலும் அர்ச்சிராதி₃க₃தியிலும் சொன் னோம்" (27) என்று ப்ரமேயஶேக₂ரத்தையும், அர்ச்சி ராதி₃க₃தியையும் குறிப்பிடுகிறார். "ஈஶ்வரனையொழிந்தவர் ரக்ஷகரல்லர் என்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்" (39) என்று ப்ரபந்ந பரித்ராணத்தைக் குறிப்பிடுகிறார். அதிலேயே "தே₃ஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேக₂ரத்திலே சொன்னோம்" (70) என்று தத்வஶேக₂ ரத்தைக் குறிப்பிடுகிறார். ஸ்ரீவசநபூஷணத்தில் "ஆர்த்தியும் அபி₄நிவேஶமுமிருக்கும்படி அர்ச்சிராதி₃க₃தியிலே சொன் னோம்" (295) என்று அர்ச்சிராதி₃ க₃தியைக் குறிப்பிடு கிறார். அதிலேயே "அவனுடைய ரக்ஷகத்வப்ரகாரம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்" (350) என்று ப்ரபந்ந பரித்ராணத்தைக் குறிப்பிடுகிறார்.

மணவாளமாமுனிகள் தம் உபதேசரத்தினமாலையில் "அன்னபுகழ் முடும்பை அண்ணல் உலகாசிரியன், இன் னருளால் செய்தகலை யாவையிலும்—உன்னில், திகழ் வசனபூடணத்தின் சீர்மை ஒன்றுக்கில்லை, புகழல இவ் வார்த்தை மெய் இப்போது." (53) என்று தொடங்கி ஏழு பாட்டுகளால் பிள்ளையுலகாசிரியர் அருளிய ரஹஸ்யக்₃ரந் த₂ங்கள் அனைத்திலும் தலைசிறந்தது ஸ்ரீவசநபூ₄ஷணமே என்று விரிவாகவும் உருக்கமாகவும் நிரூபிக்கிறார்.

மாமுனிகள் தத்வத்ரயம் 4, 6 சூர்ணைகளின் வ்யாக்₂யானத்தில் தத்வஸேக₂ரத்தை மேற்கோள் காட்டுகிறார். 182-வது சூர்ணையின் வ்யாக்₂யானத்தில் பிள்ளையுலகாசிரியர் தத்வத்ரய விஷயமாக மற்றுமிரண்டு சுருக்கமான ரஹஸ்யங்கள் அருளியிருப்பதாகக் குறித்து, அவற்றிலிருந்து மேற்கோள் காட்டுகிறார். இவையிரண்டும் இப்போது கிடைப்பவற்றில் இல்லை.

ஆக, பதினெட்டுரஹஸ்யங்களில் உரையிடுவதன் மூலமும் மேற்கோள் காட்டுவதன் மூலமும், மற்ற ஆசார்யர்களால் கையாளப்பட்டிருப்பவை (1) முமுக்ஷுப்படி (2) தத்வத்ரயம் (3) ஸ்ரீவசநபூஷணம் (4) ஸாரஸங்க்₂ரஹம் (5) நவரத்னமாலை (6) யாத்₃ருச்சி₂கப்படி (7) பரந்தபடி (8) ஸ்ரிய:பதிப்படி (9) தத்வஸேக₂ரம் ஆகியவை. பிள்ளையுலகாசிரியராலேயே முமுக்ஷுப்படியிலும், ஸ்ரீவசநபூஷணத்திலும், குறிப்பிடப்பெற்றவை (1) ப்ரபந்நபரித்ராணம் (2) தத்வஸேக₂ரம் (3) அர்ச்சிராதி₃ (4) ப்ரமேயஸேக₂ரம் ஆகியவை. பூர்வாசார்யர்கள் காலத்திற்கு பிற்பட்ட பிள்ளைலோகம் ஜீயர் அஷ்டாத₃ஶ ரஹஸ்யங்களில் ஒன்றான அர்த்த₂பஞ்சகத்திற்கு உரையிட்டிருக்கிறார். மாமுனிகளின் சீடரான எறும்பியப்பாவின் ப்ரபௌத்ரரான அழகிய மணவாள நாயனார், தம் ரஹஸ்ய விவேகத்தில் (1) முமுக்ஷுப்படி (2) ஸ்ரீவசநபூ₄ஷணம் (3) அர்ச்சிராதி₃ (4) தத்வத்ரயம் (5) தனிசரமம் ஆகிய ரஹஸ்யங்களை மேற்கோள் காட்டுகிறார். ஆக, ப்ராசீநர்களால் கையாளப் பெற்ற இப்பதினாலு ரஹஸ்யங்களுடன் (1) ஸம்ஸாரஸாம்ராஜ்யம் (2) நவவித₄ஸம்ப₃ந்த₄ம் (3) தனித்₃வயம் (4) தனிப்ரணவம் என்னும் நான்கையும் சேர்த்து நெடுங்காலமாகப் பிள்ளைலோகாசார்யர் அருளிய அஷ்டாத₃ஶரஹஸ்யம் என்று குலாவப்பட்டு வருகிறது. இவை தவிர, பிள்ளைலோகாசார்யர் 'தனிஶ்லோக'மும், கீ₃த₂யவ்யாக்₂யானமும் அருளியிருப்பதாக மாமுனிகள் ரஹஸ்யவ்யாக்₂யானங்களில்

மேற்கோள் காட்டுவதிலிருந்து விளங்குகிறது. அவை இப்போது கிடைப்பது இல்லை.

இந்த அஷ்டாதசரஹஸ்யம் தமிழிலும், தெலுங்கிலும் பலமுறை அச்சேறியிருந்தபோதிலும் அப்பதிப்புகள் அனைத்திலும் எழுதுவார் கவனக்குறைவால் விளைந்த பிழைகள் பல உள்ளன. கூடியவரை திருத்தமாக வெளியிடப் பெற்ற இப்பதிப்பிலும் நேரிட்டு விட்ட சில அச்சுப்பிழைகள் "பிழைதிருத்தம்" என்னும் பகுதியில் அளிக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் உள்ள முக்கிய விஷயங்களையும், நாமங்களையும் வாகூம்ருதவர்ஷீ ஸ்ரீ உ. வே. வரதாசார்யஸ்வாமி தொகுத்தளித்தார். ஸ்ரீரங்கம் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸபா வித்வான் ஸ்ரீ உ. வே. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ப்ரமாணத்திரட்டு எழுதுவதில் உசாத்துணையாயிருந்தார். அஷ்டாதசரஹஸ்யங்களில் உள்ள ஐதிஹ்யங்களில் வரும் ஆசார்யர்களின் பெயரகராதியை மதுரைப் பேராசிரியர் Dr. R. ரங்கராஜன் தொகுத்தளித்தார். அச்சுத்தாள்கள் திருத்துவதில் திருநாங்கூர் P. B. K. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, K. பிச்சுமணி அய்யங்கார் ஸ்வாமி, திருவெள்ளறை மேலத்திருமாளிகை ஸௌம்ய நாராயணன் ஸ்வாமி ஆகியோர் உதவினர். இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீவைஷ்ணவவுலகின் நன்றி உரியதாகும்.

பலவருடங்களாகக் கிடைக்காமலிருந்த இவ்வஷ்டாதசரஹஸ்யம் அக்ஷயவருடம் தையில் மகமாகிற இன்று பிள்ளை யுலகாசாரியரின் பேரருளால் நிறைவுற்றது. ஆத்திகவுலகம் இதைப்பெற்று, தத்வஹித புருஷார்த்தங்களை உணர்ந்து உய்வுபெறுவதாக.

அக்ஷய<br>தையில் மகம்<br>18-1-87

தாஸன்,<br>ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,<br>'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்.

# பிள்ளைலோகாசார்யர் வைப,வம்

*[ 'ஸ்ரீதர்மம்' ஆசிரியர் ]*

**லோகாசார்யாய கு,ரவே க்ருஷ்ணபாத,ஸ்ய ஸூநவே!**
**ஸம்ஸார போ,கி,ஸந்த,ஷ்ட ஜீவ ஜீவாதவே நம: ||**

[ஸ்ரீக்ருஷ்ணர் என்னும் திருநாமமுள்ள வடக்குத் திருவீதிப் பிள்ளையின் குமாரரும், ஆசார்ய லக்ஷணபூர்த்தியுள்ளவரும், ஸம்ஸாரப் பாம்பால் கடியுண்ட உயிர்களுக்கு உயிர்தரும் மருந்தாயிருப்பவருமான பிள்ளையுலகாசிரியர்க்கு நமஸ்காரம்.]

தமக்கு முந்தி வாழ்ந்த ஆழ்வார்கள், ஆசார்யர்கள் அனைவரும் ஒருதட்டென்றால், தாம் ஒரு தட்டாம்படி புகழ்படைத்தவர் பிள்ளையுலகாசிரியர். அவதாரம் தொடங்கிப் பரமபதமடைந்ததிருக ஒவ்வோரம்சத்திலும் சிறப்புப் பெற்றவர் இப்பேராசிரியர். மாமுனிகளின் உபதேச ரத்தினமாலை, பெரிய திருமுடியடைவு, யதீந்த்,ரப்ரவண ப்ரப,ாவம் முதலான நூல்களைத் துணைகொண்டு இவர்தம் பெருமையைச் சுருக்கமாக அநுப,விப்போம்.

## அவதார வைப,வம்

கார்த்திகையில் கார்த்திகைநாள் காசினியில் வந்துதித்த கலிகன்றியாம் திருமங்கை மன்னனே "*கண்ணா! நின் தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே*" [பெரிய திருமொழி 7-10-10] என்ற தம் திருவாக்கின்படி ஸ்ரீஜயந்தியிலேயே அவதரித்த கண்ணனும் பெரியவாச்சான்பிள்ளைக்குக் கவியின் பொருளைக் கற்பிக்கக் கார்த்திகையில் கார்த்திகை நாளிலேயே கலிகன்றியென்னும் திருநாமத்துடன் அவதரித்த பெருமையையுடைய லோகாசார்யராம் நம்பிள்ளை ஒரு நாள் நித்யப்படி காலக்ஷேபம் நிறைவடைந்தவுடன் நடுப்பகலில் ஏகாந்தமாய் எழுந்தருளியிருக்க, திருவடிகளில் ஆஶ்ரயித்த வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருத்தாயாரான அம்மி என்பவள் "உம்முடைய சீடனுக்கு என்பிள்ளைக்கு ஓர் கல்யாணம் செய்வித்தீரே! அவன் பத்னியோடு வாழமறுக்கிறான்; வம்சத்திற்குப்

பிள்ளையில்லாமற்போய்விடும்போல் இருக்கிறதே!" என்று பெரு வருத்தத்துடன் விண்ணப்பிக்க அவளைத் தேற்றி, அவளுடைய மாட்டுப்பெண்ணை அழைத்துவரச்சொல்லி அவளுடைய திருவயிற்றைத் தம் திருக்கையாலே ஸ்பர்சித்து 'நம்மைப்போல் இருக்கும் ஒரு பிள்ளையைப் பெறக்கடவாய்' என்று அநுக்ரஹித்து, வடக்குத் திருவீதிப்பிள்ளையை அழைத்து, "உம்முடைய விஹிதவிஷய வைராக்யத்தை உணர்ந்தோம்; ஆயினும், லோகமர்யாதைக்கு நாம் சொன்ன தற்காக இன்றிராக் கூடியிரும்" என்று நியமிக்க, அப்படியே கூடியிருந்தவளவில் உண்டான கர்ப்பம் பன்னிரண்டாம் மாதத்தில் பூலோக வைகுண்டமான ஸ்ரீரங்கத்தில் ஐப்பசியில் திருவோணத்தில் ஆண் குழந்தையாகப் பிறக்க, அவருக்கு "லோகாசார்யர் பிள்ளை" என்று நம்பிள்ளையுடைய திருநாமத்தையே சாத்தி, திருத்தகப்பனாரான வடக்குத் திருவீதிப் பிள்ளையால் ஸகலார்த்தங்களையும் அளித்து வளர்க்கப்பட்டவர் பிள்ளையுலகாசிரியர். இவர் திருத்தாயார் திருநாமம் ஸ்ரீரங்க நாச்சியார். இவர் கச்சிநகர் எழுந்தருளும் பேரருளாளரும் வரதனின் அம்சாவதாரமே என்பதை மாமுனிகள் தாமே ஓர் ஐதிஹ்யத்தின் மூலம் ஸ்ரீவசநபூஷணவ்யாக்யானத்திலே நிலை நாட்டியருளினார்.

பிள்ளைலோகாசார்யருடைய அப்தபூர்த்திக்கு நம்பெருமாளை ஸேவிப்பதற்காகக் குழந்தையைப் பல்லக்கில் எழுந்தருளுவித்து நம்பிள்ளை முதலான பெரியவர்களனைவரும் கோயிலுக்குச் சென்று மங்களாசாஸனம் செய்ய, பெருமாளும் நம்பிள்ளையை அர்ச்சகமுகமாக, "உம்மைப்போல் ஒரு பிள்ளையை அருளினீரே; இனி, நம்மைப்போல் ஒரு பிள்ளையை அருளும்" என்று நியமிக்க, நம்பிள்ளையும் அதை அங்கீகரிக்க, அவ்வநுக்ரஹத்தாலே பிள்ளையுலகாசிரியர்க்குத் திருத்தம்பியார் அவதரித்தருளினார். அழகியமணவாளனின் பிள்ளை என்பது தோற்ற அழகியமணவாளப்பெருமாள் நாயனார் என்று அவருக்குத் திருநாமம் சாத்தி, ராமலக்ஷ்மணர்களைப்போலும் பலராம க்ருஷ்ணர்களைப்போலும் அவர்களை வளர்த்து வந்தனர். இது பிள்ளைலோகாசார்யரின் அவதாரப் பெருமை.

## நிஷ்ட₂ா வைப₄வம்

திருத்தகப்பனாரைப்போலே பரமவிரக்தரான இப்பிள்ளைக ளிருவரும், வைராக்₃யப₄ங்கம் ஏற்படலாகாது என்னும் திரு வுள்ளத்தாலே நைஷ்டி₂கப்₃ரஹ்மசாரிகளாகவே இறுதிவரையில் வாழ்ந்து வந்தனர். இப்பெருமையாலேயே க்₃ருஹஸ்த₂ர்களா யிருந்த மற்ற ஆசார்யர்கள் "ப்ரபந்நனுக்கு விஹிதவிஷயநி வ்ருத்தி தன்னேற்றம் (சிறப்பு)" என்று சொல்லத் துணியாத போது, பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீவசநபூ₄ஷணத்திலே இவ்வரும் பொருளை ஸூத்ரமிட்டருளினர்.

## க்₃ரந்த₂ வைப₄வம்

மற்ற ஆசார்யர்கள் வேத₃ாந்த விவரணக்₃ரந்த₂ங்களும், வேத₃ாந்தச் சு₃வையில் அமைந்த திராவிட வேத₃ாந்த விவரண க்₃ரந்த₂ங்களும் அருளுவதையே முக்₂யக்ருத்யமாகக்கொண் டிருந்தனராகையால், ஸாரதமமான அர்த்த₂ங்கள் அவர்க ளுடைய கிரந்தங்களிலே தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்படி யிருக்கும். அப்படியல்லாமல், ஸாரதமமான ரஹஸ்ய த்ரய விவரணம், தத்வத்ரய விவரணம் முதலிய ரஹஸ்ய க்₃ரந்த₂ங் களை இயற்றுவதையே பொழுதுபோக்காகக் கொண்டிருந்தவ ராகையாலே, சாடுக்தி, ஶ்லேஷோக்தி, அலங்காரோக்தி முதலான எதுவும் கலவாமல், ஒவ்வொரு பத₃மும் தத்வ நிர்ணயபர மாகவேயிருக்கும் கிரந்தங்களையே அருளிய பெருமை பிள்ளை யுலகாசிரியர் ஒருவர்க்கே உரியதாகும். இவருடைய க்₃ரந்த₂ங் கள் 'அஷ்டாத₃ஶ ரஹஸ்யங்கள்' என்று பெயர்பெற்று ஸ்ரீவைஷ்ணவவுலகை உய்வித்து வருகின்றன. மாமுனிகளின் வ்யாக்யானங்களிலிருந்து தனிஶ்லோகம் முதலான மற்றும் சில கிரந்தங்கள் இவர் அருளியதாகத் தெரியவந்தாலும், அவை இப்போது கிடைப்பதில்லை. இவருடைய கிரந்தங்கள் அனைத் திலும் சிறப்புப் பெற்றதாய், மற்ற கிரந்தங்களிலில்லாத பல பரமரஹஸ்யார்த்த₂ங்களை அறிவிப்பதாய், பெரியபெருமா ளுடைய நியமனத்தால் அவதரித்ததாய், அவரால் அங்கீகரிக்கப் பட்டதான ஸ்ரீவசந பூ₄ஷணம் ஒன்றுக்கே இரு பூர்வாசார்ய வ்யாக்₂யாநங்கள் அமைந்தன. அதிலும் மாமுனிகளின் வ்யாக்₂

யானம் அத்யாச்சர்யமான பல அரும்பதவுரைகளோடும் மீமாம்ஸா பாஷ்யத்தோடும் பொலிகின்றது. இந்த க்ரந்தத்தைப்பற்றிச் சிலர் ஆக்ஷேபிக்க, இதில் அருளப்பட்ட அர்த்தங்களை ஸ்திரீகரிப்பதற்காகவே அழகியமணவாளன் திருமுன்பே இவர் திருத்தகப்பனாரான அழகியமணவாளப் பெருமாள் நாயனாராலே ஆசார்யஹ்ருதயம் என்னும் அத்புத க்ரந்தம் அருளிச் செய்யப்பெற்று, நம்பெருமாளின் அங்கீகாரத்தையும் அநுக்ரஹத்தையும் இந்த திவ்யக்ரந்தம் அடைந்தது. மாமுனிகளருளிய உபதேச ரத்தினமாலையில் பற்பல அரிய பாசுரங்களைப் பெற்ற பெருமை இவ்வொரு திவ்யக்ரந்தத்திற்கே உண்டு. இது இவருடைய க்ரந்த வைபவம்.

## குண வைபவம்

குணமென்னும் குன்றேறி நின்றவர் இவ்வாசிரியர் ஒருவரே. அஜாதசத்ருவாய் விளங்கிய பரமஸாத்விகர் இப் பெரியார். தம் ஸம்பந்தம் பெற்ற திர்யக்குகளுக்கும் மோக்ஷமளித்த பெருமை இப்பேராசிரியர்க்கு உண்டு. திருவரங்கம் துருஷ்கர்களால் ஆக்ரமிக்கப்பட்டபோது, பெரியபெருமாளுக்குத் திருமுன்பே கல்காப்புச் சாத்தி, நம்பெருமாளை எழுந்தருளுவித்துச் சென்று ரக்ஷித்த பெருமை இவர் சிறப்புக்களில் தலையானது. அப்படி ரக்ஷிக்கும் காலத்திலேயே (ஜ்யோதிஷ்குடி என்னும் கிராமத்திலே) திருநாட்டுக்கு எழுந்தருளி, தம்முடைய ஸர்வத்தையும் நம்பெருமாளுக்காகப் பரித்யாகம் செய்த பெருமை இப்பெரியார் ஒருவருக்கே உண்டு.

## சிஷ்யப் பெருமை

திருத்தகப்பனாரான அழகியமணவாளப் பெருமாள் நாயனார், கூரகுலோத்தமதாஸர், மாமுனிகளின் ஆசார்யரான திருவாய் மொழிப்பிள்ளை, விளாஞ்சோலைப்பிள்ளை மணற்பாக்கத்து (திருச்சானூர்) நம்பியார், (மாமுனிகளின் பூர்வாச்ரம திருத்தமப்பனாரான) திகழக்கிடந்தானண்ணன் முதலான பலபல பெருமக்களை சிஷ்யராகப் படைத்திருந்த பெருமையும் இப்பெரியார்க்கு உண்டு.

இப்படிப் பலபல பெருமைகளை உடைய இப்பேராசிரியருடைய திவ்யக்ரந்தங்களைக்கற்று உலகம் உய்வதாக.

# அஷ்டாதச ரஹஸ்யங்கள்

## விஷயஸூசிகை

## முன் இணைப்பு



## பின் இணைப்பு

# அஷ்டாதச ரஹஸ்யங்களிலுள்ள முக்கிய விஷயங்களின் ஸூசிகை

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அஷ்டாதச ரஹஸ்யத்தில் எடுக்கப்பட்ட

## :: நாமங்கள் ::

71 பெரியாழ்வார் (இவர்), பாஷ்யகாரர் (82), பெரியாழ்வார் (இவர்)
பெரியாழ்வார் (இவர்),
74 மாலாகாரர்- கூனி, ஸ்ரீவிதுரர், மாலாகாரர், கூனி (இவர்கள்)
77 ஆளவந்தார் (பரமாசார்யர்)
82 முதலிகள்
85 மதுரகவி (ஒருவர்), வடுகநம்பி, ஆழ்வான், ஆண்டான்
87 பிள்ளை (வ. தி. வி. பிள்ளை)
93 வசிட்டவாமதேவாதி
100 பெரியதிருவடி, ஸ்ரீஸேநாபதியாழ்வார் (103)
104 அநந்தன்
106 பெரியபெருமாள்
110 ஸ்ரீபரதாழ்வார், அக்ரூரன்
112 ஏத்தாளிகள், ஸ்ரீவிபீஷணன், பெருமாள், திருமங்கையாழ்வார்,
நம்மாழ்வார்
113 தேவகியார், நம்மாழ்வார்
114 ஸ்ரீவைகுண்டநாதன்
117 ப்ராதாக்கள், மாதாபிதாக்கள், பர்த்தாக்கள், சந்த்ராதித்யர்,
இந்த்ரன்
118 ருத்ரன், அர்த்தம், ஈச்வரன்
119 ஸர்வஸ்வம்
123 வாக்யத்வயம், திருவாய்மொழி
124 படைவீடு குதிரைகள், தேர், உருளைகள், புரோகிதர்,
அடுக்கொலியல், ஆலவட்டம்
125 ஒட்டிவட்டில், காளாஞ்சி, அடைப்பை, காளங்கள், சின்னங்கள்
126 ஆழ்வான், நுடங்கிடை, பிராட்டி
134 ஸர்ப்பவிஷம், ரஸநா ரஸவஸ்து.
137 அர்ஜுனன்
139 மாநஸாத்யவஸாயம்
151 ஆழ்வான்
155 பட்டர்
164 அர்ஜுனன்
165 ,,
166 க்ருஷ்ணன்
170 அபிசாரகர்மம்
172 எம்பெருமானர்—முன்புள்ளார், உய்யக்கொண்டார்

343 நஞ்ஜீயர், பட்டர்
344 மஹாராஜர், ஆழ்வார்கள், ஆசார்யர்கள், விபீஷணன்,
ராவணன், திரிஜடை
345 பிராட்டி மாஶுச:
347 சித்தயந்தீ, ஸம்ஸாரி, முமுக்ஷு, முக்தர், நித்யர்
348 அவித்யை, ப்ரக்ருதி
349 அநிஷ்டநிவ்ருத்தி, இஷ்டப்ராப்தி
354 பிள்ளை திருநறையூர் அரையர்
357 ஏகாயநன், சூர்ப்பணகி, ராவணன்
361 கலியன்
366 அக்ருரமாலாகாராதிகள்
367 கீதோபநிஷதாசார்யன்
368 திருக்கோட்டியூர் நம்பி, அர்ஜுனன், சிலர்
369 சிலர்
370 திருநாராயணம்
371 சிலர்
376 நஞ்ஜீயர்
383 பிள்ளை
389 எம்பெருமானார், ஆழ்வான்
390 ஆழ்வார், அபியுக்தர், சிலர், நஞ்ஜீயர்
392 கோயிலங்காடி
394 சோமாசியாண்டான், ஆளவந்தார், எம்பெருமானார், பிள்ளை
398 பிள்ளை
400 எம்பெருமானார், ஆண்டான்
401 உடையவர், உடையவர்
403 கத்யம், உடையவர்
407 நம்பிள்ளை
410 உடையவர், திருக்கோட்டியூர்நம்பி, பட்டர், நஞ்ஜீயர்,
நம்பிள்ளை, பின்பழகராம்பெருமாள் ஜீயர், ஆச்சான்பிள்ளை,
நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டர்
411 பிள்ளை எங்களாழ்வான், நடாதூரம்மாள், நம்பிள்ளை
416 நஞ்ஜீயர், பிள்ளை

# அஷ்டாதச ரஹஸ்யங்களில் காட்டப்படும் ஐதிஹ்ய நிர்வாஹங்களில் வரும் ஆசார்யர்களின் பெயரகராதி

[தொகுத்தவர்; Dr. இரா. அரங்கராஜன், M.A., Ph.D., மதுரை]



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீலோககு₃ரவே நம:

# அஷ்டாத₃ச ரஹஸ்யம்

## 1. முமுக்ஷுப்படி

தனியன்

லோகாசார்யாய கு₃ரவே க்ருஷ்ணபாத₃ஸ்ய ஸூநவே ।
ஸம்ஸாரபோ₄கி₃ஸந்த₃ஷ்ட ஜீவஜீவாதவே நம: ॥

மணவாளமாமுனிகள் அருளிச்செய்தது

லோககு₃ரும் கு₃ருபி₄ஸ்ஸஹ பூர்வை:
கூரகுலோத்தமதா₃ஸ முதா₃ரம் ।
ஸ்ரீநக₃பத்யபி₄ராமவரேஶௌ
தீ₃ப்ரஶயாநகு₃ருஞ்ச ப₄ஜேऽஹம் ॥

கோதிலுல காசிரியன் கூரகுலோத் தமதாதர்
தீதில்திரு மலையாழ்வார் செழுங்குரவை மணவாளர்
ஓதுபுகழ்த் திருநாவீ றுடையபிரான் தாதருடன்
போதமண வாளமுனி பொன்னடிகள் போற்றுவனே.

வாழியுல காசிரியன் வாழியவன் மன்னுகுலம்
வாழி முடும்பையென்னு மாநகரம் — வாழி
மனஞ்சூழ்ந்த பேரின்ப மல்குமிகு நல்லா
ரினஞ்சூழ்ந் திருக்கு மிருப்பு.

ஓது முடும்பை யுலகா சிரியனரு
ளேது மறவாத வெம்பெருமான் — நீதி
வழுவாச் சிறுநல்லூர் மாமறையோன் பாதந்
தொழுவார்க்கு வாரா துயர்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.

# திருமந்த்ரப்ரகரணம்

## உபோத்₃கா₃தம் — முன்னுரை

1. முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.

2. அதில் ப்ரத₂ம ரஹஸ்யம்— திருமந்த்ரம்.

3. திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப்போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்தி₄க்கவேணும்.

4. மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரத₃னான ஆசார்யன்பக்கலிலும் ப்ரேமம் க₃னக்க உண்டானால் கார்யகரமாவது.

5. ஸம்ஸாரிகள் தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து, ஈஶ்வர கைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி, தானே ஶிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்.

6. ஶிஷ்யனாய் நின்றது, ஶிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக.

7. ஸகல ஶாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம்போலே; திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞாநம் பைத்ருகத₄நம்போலே.

8. ப₄க₃வந் மந்த்ரங்கள் தான் அநேகங்கள்.

9. அவைதான், வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்க₃ம்.

10. அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ஶ்ரேஷ்ட₂ங்கள்.

11. இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதா₄நம்.

12. மற்றையவை இரண்டுக்கும் அபூர்த்தியும் உண்டு.

13. இத்தை, வேதா₃ங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள்.

14. வாச்ய ப்ரபா₄வம் போலன்று வாசக ப்ரபா₄வம்.

15. அவன் தூ₃ரஸ்த₂னானாலும் இது கிட்டி நின்று உதவும்.

16. த்₃ரௌபதி₃க்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே.

17. சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது

18. இதுதான் a"குலந்தரும்" என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்.

19. ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வல்லாப₄ங்களை ஆசைப் பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்.

20. கர்மஜ்ஞாநப₄க்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதி₄யைப் போக்கி அவற்றைத் தலைக்கட்டிக்கொடுக்கும்.

21. ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போ₄க₃த்துக்கும் ஹேதுவாயிருக்கும்.

22. b"மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே அறிய வேண்டும் அர்த்த₂மெல்லாம் இதுக்குள்ளே உண்டு.

23. அதாவது - அஞ்சர்த்த₂ம்.

24. பூர்வாசார்யர்கள், இதில் அர்த்த₂ம் அறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்த₂ஜ்ஞாநம் பிறந்த பின்பு, c"பிறந்தபின் மறந்திலேன்" என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்.

25. வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கு அடி, ஈஶ்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை.

## வாக்யார்த்த₂ம் — அக்ஷரப்பிரிவு முதலியவை

26. இதுதன்னில் சொல்லுகிற அர்த்த₂ம் - ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும் உபாயமும் ப₂லமுமென்னவுமாம்.

27. ப₂லமிருக்கும்படி ப்ரமேயஸேக₂ரத்திலும் அர்ச்சிராதி₃க₃தியிலும் சொன்னோம்.

28. இதுதான் எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பத₃மாயிருக்கும்.

---

a பெரியதிரு 1-1-9. b பெரியதிரு 8-10-3. c திருச்சந்த 64.

29. மூன்று பத₃மும் மூன்று அர்த்த₂த்தைச் சொல்லுகிறது.

30 அதாவது—ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்.

31. இதில் முதற்பத₃ம் ப்ரணவம்.

32 இது 'அ' என்றும், 'உ' என்றும், 'ம' என்றும் மூன்று திருவக்ஷரம்.

33. மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டினாற்போலே மூன்று வேதத்திலும் மூன்று அக்ஷரத்தையும் எடுத்தது.

34. ஆகையால், இது ஸகலவேத₃ஸாரம்.

## அகாரார்த்த₂ம்

35. இதில் அகாரம்-ஸகலஶப்₃த₃த்துக்கும் காரணமாய், நாராயணபத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கையாலே, ஸகல ஜக₃த்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது.

36. ரக்ஷிக்கையாவது - விரோதி₄யைப் போக்குகையும் அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்.

37 இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்.

38. ஸம்ஸாரிகளுக்கு விரோதி₄ ஶத்ருபீடா₃தி₃கள், அபேக்ஷிதம் அந்நபாநாதி₃கள்; முமுக்ஷுக்களுக்கு விரோதி₄ ஸம்ஸார ஸம்ப₃ந்த₄ம். அபேக்ஷிதம் பரமபத₃ ப்ராப்தி; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி₄ கைங்கர்ய ஹாநி, அபேக்ஷிதம் கைங்கர்ய வ்ருத்₃தி₄.

39. 'ஈஶ்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்' என்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்.

40. ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி₄ வேண்டுகையாலே, இதிலே ஸ்ரீஸம்ப₃ந்த₄மும் அநுஸந்தே₄யம்

41. அத்ர ப₄க₃வத்ஸேநாபதிமிஶ்ரர் வாக்யம்:—அவன் மார்புவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது.

42. ப₄ர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப் போலே ப்ரத₂ம சரமபத₃ங்களை விடாதேயிருக்கும் இருப்பு.

43. ஸ்ரீநந்த₃கோ₃பரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப்பிராட்டியைப்போலே.

44. ஒருவனடிமை கொள்ளும்போது க்₃ருஹிணிக்கென்றன்றோ ஆவணவோலை யெழுதுவது; ஆகிலும் பணி செய்வது க்₃ருஹிணிக்கிறே. அதுபோலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி.

45. ஆக, பிரித்து நிலையில்லை.

46. ப்ரபை₄யையும் ப்ரப₄ாவானையும், புஷ்பத்தையும் மணத்தையும் போலே.

47. ஆக, இச்சேர்த்தி உத்₃தே₃ஶ்யமாய் விட்டது.

## லுப்தவிப₄க்த்யர்த்த₂ம்

48. இதிலே, சதுர்த்தி₂யேறிக்கழியும்.

49. 'சதுர்த்தி₂யேறினபடியென்?' என்னில் –

50 நாராயணபத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கையாலே.

51. இத்தால், ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது.

52. 'ஶேஷத்வம் து₃:க்க₂ரூபமாகவன்றோ நாட்டிற் காண்கிறது' என்னில் —

53. அந்த நியமம் இல்லை; உகந்த விஷயத்துக்கு ஶேஷமாயிருக்கும் இருப்பு ஸுக₂மாகக் காண்கையாலே.

54. அகாரத்திலே கல்யாண கு₃ணங்களைச் சொல்லுகையாலே, இந்த ஶேஷத்வமும் கு₃ணத்தாலே வந்தது.

55. ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்.

56. ஶேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை.

57. ஆத்மாபஹாரமாவது ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போது இல்லையாய்விடும்.

## உகாரார்த்த₂ம்

58. ஸ்த₂ாநப்ரமாணத்தாலே உகாரம் அவத₄ாரணார்த்த₂ம்.

59. இத்தால், பிறர்க்கு ஶேஷம் அன்று என்கிறது.

60. பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறது என்றும் சொல்லுவர்கள்.

61. அதிலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரத₄ாநம்.

62. தே₃வர்களுக்கு ஶேஷமான புரோட₃ாஶத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈஶ்வரஶேஷமான ஆத்ம வஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு ஶேஷமாக்குகை.

63. ப₄க₃வச்சே₂ஷத்வத்திலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரத₄ாநம்

64. a "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்கையாலே.

65. இத்தால், தனக்கும் பிறர்க்கும்உரித்தன்றுஎன்கிறது.

## மகாரார்த்த₂ம்

66. மகாரம், இருபத்தஞ்சாம் அக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமாய் இருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது.

67. இதுதான் ஸமஷ்டிவாசகம்.

68. ஜாத்யேகவசநம்.

69. இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று, தே₃ஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.

70. தே₃ஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேக₂ரத்திலே சொன்னோம்.

71. மணத்தையும், ஒளியையுங்கொண்டு, பூவையும், ரத்நத்தையும் விரும்புமாபோலே, ஶேஷமென்று ஆத்மாவை ஆத₃ரிக்கிறது; அல்லாதபோது, b "உயிரினாற் குறைவிலம்" என்கிறபடியே த்யாஜ்யம்; அது தோன்ற ஶேஷத்வத்தைச் சொல்லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது.

## பத₃த்ரயஸமுத₃ாயார்த்த₂ம்

72. ஆக, ப்ரணவத்தால் c "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனோ" என்கிறபடியே ஜீவபரஸம்ப₃ந்த₄ஞ் சொல்லிற்று.

73. இத்தால், d "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றதாயிற்று.

74. அகாரத்தாலும், மகாரத்தாலும் ரக்ஷகனையும், ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தி₂யாலும், உகாரத்தாலும் ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும், ப₂லத்தையும் சொல்லிற்று.

---

a நான்-திருவ 68. b திருவாய் 4-8-10. c பெரியதிரு 8-9-3.
d முதல்திருவ 67.

## விவரணவிபாகம்

75. இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது.

76. உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தீ நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்.

77. அடைவே விவரியாதொழிகிறது - விரோதிபோய் அநுபவிக்கவேண்டுகையாலே.

## நமஶ்ஶப்தார்த்தம்

78. நமஸ்ஸு-"ந" என்றும் "ம:" என்றும் இரண்டு பதம்.

79. 'ம:' என்கிற இத்தால், 'தனக்கு உரியன்' என்கிறது; 'ந' என்று அத்தைத் தவிர்க்கிறது.

80. ஆக 'நம:' என்கிற இத்தால், 'தனக்கு உரியனன்று' என்கிறது.

81. பிறர்க்கு உரியனுன அன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்யதையுங்கூட அழியும்

82. இத்தால் விரோதியைக் கழிக்கிறது.

83. விரோதிதான் மூன்று.

84. அதாவது-ஸ்வரூப விரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்ய விரோதியும்.

85. ஸ்வரூப விரோதி கழிகையாவது-a"யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்கை; உபாயவிரோதி கழிகையாவது-b"களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்றிருக்கை; ப்ராப்ய விரோதி கழிகையாவது-c"மற்றை நங்காமங்கள் மாற்று" என்றிருக்கை.

86. 'ம:' என்கை ஸ்வரூபநாஶம், 'நம:' என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்.

87. இதுதான் - ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்.

88. d"தொலைவில்லிமங்கலந் தொழும்" என்கையாலே, ஸ்வரூபம் சொல்லிற்று; e"வேங்கடத்து உறைவார்க்கு நம" என்கையாலே, உபாயம் சொல்லிற்று; f"அந்தி தொழுஞ் சொல்" என்கையாலே, பலம் சொல்லிற்று.

---

a திருவாய் 2.9.9. b திருவாய் 5-8-8. c திருப்பாவை 29.
d திருவாய் 6-5-1. e திருவாய் 3.3.6. f திருவாய் 10.8-7.

89. a'உற்றதும் உன்னடியார்க்கடிமை' என்கிறபடியே இதிலே பா₄க₃வத ஶேஷத்வமும் அநுஸந்தே₄யம்.

90. இது - அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்; உகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்.

91. 'ஈஶ்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்து பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும்' என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே b தனக்கேயாக எனைக்கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால்.

92. அதாவது - போ₄க₃த₃ஶையில் ஈஶ்வரன் அழிக்கும் போது நோக்கவேணுமென்று அழியாதொழிகை.

93. அழிக்கைக்கு ஹேது-கீழே சொல்லிற்று; மேலுஞ் சொல்லும்.

94 இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்; இந்நினைவில்லாதபோது எல்லா து₃ஷ்க்ருதங்களும் க்ருதம்; இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு. இது இன்றிக்கேயிருக்கப் பண்ணும் யஜ்ஞாதி₃களும் ப்ராயஶ்சித்தாதி₃களும் நிஷ்ப்ரயோஜநங்கள்; இதுதன்னாலே எல்லாப் பாபங்களும் போம், எல்லாப் ப₂லங்களும் உண்டாம்.

## நாராயணபதா₃ர்த்த₂ம்

95. நாராயணனென்றது நாரங்களுக்கு அயநம் என்றபடி.

96. நாரங்களாவன-நித்யவஸ்துக்களினுடைய திரள்.

97. அவையாவன — ஜ்ஞாநாநந்தா₃மலத்வாதி₃களும் ஜ்ஞாந ஶக்த்யாதி₃களும், வாத்ஸல்ய ஸௌஶீல்யாதி₃களும், திருமேனியும், காந்தி ஸௌகுமார்யாதி₃களும், தி₃வ்ய பூ₄ஷணங்களும், தி₃வ்யாயுத₄ங்களும், பெரியபிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும் நித்யஸூரிகளும், ச₂த்ர சாமராதி₃களும், திருவாசல் காக்கும் முதலிகளும், க₃ணாதி₄பரும், முக்தரும், பரமாகாஶமும், ப்ரக்ருதியும், ப₃த்₃தா₄த்மாக்களும், காலமும், மஹதா₃தி₃ விகாரங்களும், அண்ட₃ங்களும், அண்ட₃த்துக்கு உட்பட்ட தே₃வாதி₃ பதா₃ர்த்த₂ங்களும்.

## அயநபதா₃ர்த்த₂ம்

98. அயநம் என்றது-இவற்றுக்கு ஆஶ்ரயமென்றபடி.

a பெரியதிரு 8-10-3. b திருவாய் 2-9-4.

99. அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆஶ்ரயமாக வுடையனென்னவுமாம்.

100. இவையிரண்டாலும் ப₄லித்தது பரத்வஸௌலப்₄யங்கள்.

101. அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம்.

102. a"எம்பிரானெந்தை" என்கையாலே, ஈஶ்வரனே எல்லாவுறவுமுறையுமென்று சொல்லும்.

103. நாம் பிறர்க்கான அன்றும் அவன் நமக்காயிருக்கும்.

104. இராமடம் ஊட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்.

**வ்யக்தசதுர்த்₂யர்த்த₂ம்**

105. 'ஆய' என்கிற இத்தால் b"சென்றாற்குடையாம்" என்கிறபடியே எல்லா அடிமைகளும் செய்யவேணுமென்று அபேக்ஷிக்கிறது.

106. 'நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லையென்று வைத்துக் கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கக் கூடுமோ?' என்னில்:

107. c"படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே" என்கிறபடியே கைங்கர்ய ப்ரார்த்த₂னை வந்தேறி அன்று; ஸ்வரூப ப்ரயுக்தம்.

108. ஆகையால் d"வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்கிற ப்ரார்த்த₂னையைக் காட்டுகிறது.

109. e"கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை. கண்டால் "ஸதா₃ பஶ்யந்தி" ஆகையாலே உறக்கமில்லை.

110. f"பழுதே பல பகலும் போயின" என்று இழந்த நாளுக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை.

---

a பெரியதிருமொழி 1-1-6. b முதல்திருவ 53. c பெருமாள்திரு 4-9. d திருவாய் 3-3-1. e திருவிருத்தம் 97 f முதல்திருவ 16.

111. a"அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்னாநின்றார்களிறே.

112. இவ்வடிமைதான் b"ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி" என்கிறபடியே ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் அநுவர்த்திக்கும்.

113. எட்டிழையாய் மூன்றுசரடாயிருப்பதொரு மங்க₃ள ஸூத்ரம்போலே திருமந்த்ரம்.

114. இத்தால், ஈஶ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கும் என்கிறது.

### மந்த்ரஸமுதா₃யார்த்த₂ம்

115. ஆக, திருமந்த்ரத்தால் 'எம்பெருமானுக்கே உரியேனான நான் எனக்கு உரியனன்றிக்கே ஒழியவேணும்; ஶர்வஶேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாகவேணும்' என்றதாயிற்று.

திருமந்த்ரப்ரகரணம் முற்றிற்று.

## த்₃வயப்ரகரணம் 2.

### உபோத்₃கா₄தம்

116. புறம்புண்டான பற்றுக்களை யடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் கு₃ணாநுப₄வ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும், இப்படி இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏற்றமறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்₃வயத்திலும் நியதனாகையும், ஆசார்யப்ரேமம் க₃னத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞாநமும், விரக்தியும், ஶாந்தியும் உடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதி₄காரிக்கு அவஶ்யாபேக்ஷிதம்.

117. இந்த அதி₄காரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தே₄யம்.

---

a திருச்சந்தவிருத்தம் 64. b திருவாய் 3.3.1.

118. எல்லா ப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமஶ்லோகத்தில் ஈஶ்வரனாலே பேறென்கிறது. த்வயத்தில் பெரியபிராட்டியாராலே பேறென்கிறது.

119. பெரியபிராட்டியாராலே பேறுகையாவது—இவள் புருஷகாரமானாலல்லது ஈஶ்வரன் கார்யஞ்செய்யானென்கை.

120. த்வயத்துக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும், அநந்யகதித்வமும் உடையவன்.

121. இவை இரண்டும் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்.

## வாக்யார்த்தம்

122. இதில் முற்கூற்றால், பெரியபிராட்டியாரை முன்னிட்டு ஈஶ்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால் அச்சேர்த்தியிலே அடிமையையிரக்கிறது.

## ஸ்ரீஶப்தார்த்தம்

123. ஸ்ரீ என்று பெரியபிராட்டியாருக்குத் திருநாமம்.

124. ஸ்ரீயதே, ஶ்ரயதே.

125. இதுக்கு அர்த்தம்—'எல்லார்க்கும் இவளைப்பற்றி ஸ்வரூபலாபமாய், இவள்தனக்கும் அவனைப்பற்றி ஸ்வரூபலாபமாயிருக்கும்' என்று.

126. இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக.

127. நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக.

128. இவள் தாயாய் இவர்கள் க்லேஶம் பொறுக்க மாட்டாதே, அவனுக்குப் பத்நியாய் இனிய விஷயமாயிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகாரம்,

129. திருவடியைப் பொறுப்பிக்குமவள், தன்சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே.

## மதுப்பினர்த்தம்

130. மதுப்பாலே இருவர் சேர்த்தியும் நித்யமென்கிறது.

131. இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை.

132. ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தையும் சேதநனுடைய அபராத₄த்தையுங்கண்டு அகலமாட்டாள்.

133. சேதநனுக்கு இவையிரண்டையும் நினைத்து அஞ்ச வேண்டா.

134. இத்தால்,— ஆஶ்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்கவேண்டா என்கிறது.

135. இவள் ஸந்நிதி₄யாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்.

## நாராயணஶப்₃த₃ார்த்த₂ம்

136. புருஷகார ப₄லத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் கு₃ணங்களைச் சொல்லுகிறது நாராயண பத₃ம்.

137. அவையாவன—வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌஶீல்யமும், ஸௌலப்₄யமும், ஜ்ஞாநமும், ஶக்தியும்.

138. குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யம்செய்யுமென்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வங்கண்டு அகலாமைக்கு ஸௌஶீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்₄யம்; விரோதி₄யைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாநஶக்திகள்.

139. இங்குச்சொன்ன ஸௌலப்₄யத்துக்கு எல்லைநிலம் அர்ச்சாவதாரம்.

140. இதுதான் பரவ்யூஹ விப₄வங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்.

141. இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்.

142. திருக்கையிலே பிடித்த தி₃வ்யாயுத₄ங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸநபத்₃மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்.

143. ரக்ஷகத்வ போ₄க்₃யத்வங்கள் இரண்டும் திருமேனியிலே தோற்றும்.

### சரணௌ பத₃ார்த்த₂ம்

144. சரணௌ — திருவடிகளை.

145. இத்தால் சேர்த்தியழகையும், உபாயபூர்த்தியையும் சொல்லுகிறது.

146. பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; ª திண் கழலாயிருக்கும்.

147. ஶேஷிபக்கல் ஶேஷபூ₄தன் இழியும் துறை; ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாபோலே.

148. இத்தால் பிராட்டிக்கு இருப்பிடமாய், கு₃ண ப்ரகாஶகமுமாய், ஶிஶுபாலனையும் அகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளும் திருமேனியை நினைக்கிறது.

### ஶரணம் பத₃ார்த்த₂ம்

149. ஶரணம் - இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக.

150. இத்தால், ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது.

151. கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே.

152. இவன் / செயலறுதியாலே உபாயமாக்குகிறு னித்தனை.

153. "சரணௌ ஶரணம்" என்கையாலே உபாயந் தான் வ்யாவ்ருத்தமான உபாயம் என்கிறது.

### ப்ரபத்₃யே பத₃ார்த்த₂ம்

154. ப்ரபத்₃யே-பற்றுகிறேன்.

155. வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினலும் பேற்றுக்கு அழிவில்லை ( இழவில்லை ); 'ஜ்ஞாநாந்மோக்ஷம்' ஆகையாலே, மாநஸமாகக்கடவது.

156. உபாயம் அவனாகையாலும், இவை நேரே உபாயம் அல்லாமையாலும், இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்ப₃ந்த₄ம் இல்லை.

157. வர்த்தமான நிர்த்₃தே₃ஶம்-ஸத்வம் தலையெடுத்து அஞ்சினபோது அநுஸந்தி₄க்கைக்காக.

---

ª திருவாய் 1-2-10. / செயலறுதி-செயலற்றுப்போகை;

158. உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும், இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும்.

159. பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்.

## உத்தரக₂ண்டா₂ர்த்த₂ம்

160. உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது.

161. ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை.

162. உபாயாந்தரங்களைவிட்டுச் சரமோபாயத்தைப் பற்றினாற்போலே, உபேயாந்தரமான ஐஶ்வர்ய கைவல்யங்களைவிட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்தி₂க்கிறது.

163. இவன் அர்த்தி₂க்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில்.

164. இவன் பாசுரங்கேட்டவாறே திருவுள்ளம் உகக்கும்.

165. ஶ்ரீமதே — பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு.

166. அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனுமிடத்தில் தான் ப்ராப்யையுமாய்க் கைங்கர்யவர்த்த₄கையுமாயிருக்கும்.

167. இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விஶத₃மாக அநுஸந்தி₄க்கிறது.

168. இளையபெருமாளைப்போலே இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்கை முறை.

169. அடிமைதான் ஸித்₃தி₄ப்பதும் ரஸிப்பதும் அச்சேர்த்தியிலே.

170. நாராயணாய—ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு.

171. இதிலே திருமேனியையும் கு₃ணங்களையும் சொல்லும்.

172. சேஷித்வத்திலே நோக்கு.

173. ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது.

174. இந்தச் சதுர்த்தி, கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது.

175. கைங்கர்யந்தான் நித்யம்.

176. நித்யமாக ப்ரார்த்தித்தே பெறவேணும்.

177. ஶேஷிக்கு அதிஶயத்தை விளக்கை ஶேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும், ப்ராப்யமும்.

178. நம:-கைங்கர்யத்தில் களையறுக்கிறது.

179. களையாவது-தனக்கென்னப் பண்ணுமது.

180. இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும்.

181. [a] "உனக்கே நாமாட்செய்வோம்" என்னும்படியே ஆகவேணும்.

182. ஸௌந்தர்யம் அந்தராயம்; கீழ்ச்சொன்ன கைங்கர்யமும் அப்படியே.

183. கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே, இப்பதத்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு.

184. [b] "மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்னுகின்றதிறே.

த்வயப்ரகரணம் முற்றிற்று.

## சரமஶ்லோகப்ரகரணம் 3.

### உபோத்காதம்—முன்னுரை

185. கீழே சில உபாயவிஶேஷங்களை உபதேஶிக்க; அவை துஶ்ஶகங்களென்றும், ஸ்வரூபவிரோதிகளென்றும் நினைத்து ஶோகாவிஷ்டனான அர்ஜுனனைக்குறித்து, அவனுடைய ஶோகநிவ்ருத்த்யர்த்தமாக 'இனி இதுக்கு அவ்வருகில்லை' என்னும்படியான சரமோபாயத்தை அருளிச்செய்கையாலே, சரமஶ்லோகமென்று இதுக்குப் பேராயிருக்கிறது.

186. இதில் பூர்வார்த்தத்தாலே அதிகாரிக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்; உத்தரார்த்தத்தாலே உபாயக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்.

---

[a] திருப்பாவை 29. [b] திருவாய் 9-3-4.

187. அதி₄காரிக்கு க்ருத்யமாவது—உபாயபரிக்₃ரஹம்.

188. அத்தை ஸாங்க₃மாக விதி₄க்கிறான்.

189. ராக₃ப்ராப்தமான உபாயந்தானே வைத₄மானால் கடுகப்பரிக்₃ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே.

190. இதில் பூர்வார்த்த₂ம் ஆறு பத₃ம்.

## ஸர்வத₄ர்ம ஶப்₃த₃ார்த்த₂ம்

191. ஸர்வத₄ர்மாந்-எல்லா த₄ர்மங்களையும்.

192. த₄ர்மமாவது-ப₂லஸாத₄நமாயிருக்குமது.

193. இங்குச் சொல்லுகிற த₄ர்மஶப்₃த₃ம் த்₃ருஷ்ட ப₂லஸாத₄நங்களைச் சொல்லுகையன்றிக்கே, மோக்ஷப₂ல ஸாத₄நங்களைச் சொல்லுகிறது.

194. அவைதான் - ஶ்ருதிஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே ப₃ஹுவசநப்ரயோக₃ம் பண்ணுகிறது.

195. அவையாவன - கர்மஜ்ஞாந ப₄க்தியோக₃ங்களும், அவதார ரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தமவித்₃யை, தே₃ஶவாஸம், திருநாமஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாயபு₃த்₃த்₄யா செய்யுமவையும்.

196. ஸர்வ ஶப்₃த₃த்தாலே அவ்வவ ஸாத₄நவிஶேஷங்களை அநுஷ்டி₂க்குமிடத்தில் அவற்றுக்கு யோக்₃யதாபாத₃கங்களான நித்யகர்மங்களைச் சொல்லுகிறது.

197. ஆக, ஶ்ருதி ஸ்ம்ருதி சோதி₃தங்களாய் நித்ய நைமித்திகாதி₃ ரூபங்களான கர்மயோக₃ாத்₃யுபாயங்களை என்றபடி.

198. இவற்றை, த₄ர்மம் என்கிறது-ப்₄ரமித்த அர்ஜுநன் கருத்தாலே.

## பரித்யஜ்ய பத₃ார்த்த₂ம்

199. பரித்யஜ்ய.

200. த்யாக₃மாவது-உக்தோபாயங்களை அநுஸந்தி₄த்து 'ஶுக்திகையிலே ரஜதபு₃த்₃தி₄ பண்ணுவாரைப் போலேயும், விபரீததி₃ஶா க₃மநம் பண்ணுவாரைப் போலேயும் அநுபாயங்களிலே உபாயபு₃த்₃தி₄ பண்ணினோம்' என்கிற பு₃த்₃தி₄விஶேஷத்தோடே த்யஜிக்கை.

201. 'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே பாதகாதிகளை விடுமாபோலே ருசி வாஸனைகளோடும் லஜ்ஜையோடுங் கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது.

202. ல்யப்பாலே "ஸ்நாத்வா புஞ்ஜீத" என்னுமா போலே உபாயாந்தரங்களைவிட்டே பற்றவேணும் என் கிறது.

203. "சசால சாபஞ்ச முமோச வீர:" என்கிறபடியே இவை அநுபாயங்களான மாத்ரமன்றிக்கே கால்கட்டு என்கிறது.

204. சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்கு உறுப்பு.

205. 'ஸர்வதர்மங்களையும் விட்டு' என்று சொல்லுகை யாலே, சிலர் 'அதர்மங்கள் புகுரும்' என்றார்கள்.

206. அது கூடாது; 'அதர்மங்களைச்செய்' என்று சொல்லாமையாலே.

207. 'தன்னடையே சொல்லிற்றாகாதோ?' என்னில்,—

208. ஆகாது; தர்மஶப்தம் அதர்மநிவ்ருத்தியைக் காட்டாமையாலே.

209. காட்டினாலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல் லிற்றாமித்தனை.

210. தன்னையும், ஈஶ்வரனையும், பலத்தையும் பார்த் தால் அவை புகுர வழியில்லை

## மாமின் அர்த்தம்

211. மாம்—ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையாளாய், உன்னிசைவுபார்த்து, உன் தோஷத்தை போக்யமாகக் கொண்டு, உனக்குப் புகலாய், நீர்சுடுமாபோலே சேர்ப் பாரே பிரிக்கும்போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை.

212. இத்தால் பரவ்யூஹங்களையும், தேவதாந்தர்யாமித் வத்தையும் தவிர்க்கிறது.

213. தர்ம ஸம்ஸ்தாபநம் பண்ணப்பிறந்தவன்தானே 'ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்கையாலே ஸாக்ஷாத் தர்மம் தானேயென்கிறது.

214. இத்தால், விட்ட ஸாத₄நங்களில் ஏற்றஞ் சொல்லுகிறது

215. அதாவது—ஸித்₃த₄மாய், பரமசேதநமாய், ஸர்வ ஶக்தியாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை.

216. மற்றை உபாயங்கள் ஸாத்₄யங்களாகையாலே, ஸ்வரூப ஸித்₃தி₄யில் சேதநனை அபேக்ஷித்திருக்கும்; அசேதநங்களுமாய், அஶக்தங்களுமாயிருக்கையாலே கார்யஸித்₃தி₄யில் ஈஶ்வரனை அபேக்ஷித்திருக்கும். இந்த உபாயம் அவற்றுக்கு எதிர்த்தட்டாயிருக்கையாலே, இதர நிரபேக்ஷமாயிருக்கும்.

217. இதிலே, வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்₄யங்களாகிற கு₃ணவிஶேஷங்கள் நேராக ப்ரகாஶிக்கிறது.

218. கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூ₄ளிதூ₃ஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்₂யவேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்.

## ஏகஶப்₃த₃ார்த்த₂ம்

219. ஏகம்.

220. இந்த ஏகஶப்₃த₃ம் ஸ்த₂ாநப்ரமாணத்தாலே அவத₄ாரணார்த்த₂த்தைக் காட்டுகிறது.

221. "மாமேவ யே ப்ரபத்₃யந்தே" "தமேவ சாத்₃யம்" "த்வமேவோபாயபூ₄தோ மே ப₄வ" a "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்றும் சொல்லுகிறபடியே.

222. இத்தால், 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாய பா₄வத்தைத் தவிர்க்கிறது.

223. ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது.

224. ஸ்ருஷ்ட்யவதாராதி₃முக₂த்தாலே பண்ணின க்ருஷிப₂லம்.

---

a திருவாய் 5.7.10.

225. a "அதுவும் அவனது இன்னருளே."

226. இத்தை ஒழியவும் தானே கார்யஞ்செய்யும் என்று நினைக்கக்கடவன்.

227. அல்லாதபோது உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாது.

228. இது ஸர்வமுக்தி ப்ரஸங்க₃பரிஹாரார்த்த₂ம், பு₃த்₃தி₄ ஸமாத₄நார்த்த₂ம், சைதந்யகார்யம், ராக₃ப்ராப்தம், ஸ்வரூபநிஷ்ட₂ம், அப்ரதிஷேத₄த்₃யோதகம்.

229. கீழ் தானும் பிறருமான நிலையைக் குலைத்தான்; இங்கு, தானும் இவனுமான நிலையைக் குலைக்கிறான்.

230. அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார க₃ர்ப்ப₄ம், அவத்₃யகரம்.

231. அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்.

232. மற்றை உபாயங்களுக்கு நிவ்ருத்தி தோ₃ஷம், இதுக்கு ப்ரவ்ருத்தி தோ₃ஷம்.

233. b "சிற்றவேண்டா"

234. நிவ்ருத்தி கீழே சொல்லிற்று.

235. உபகார ஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது; உபாயத்தில் அந்தர்ப₄வியாது.

### ஶரணஶப்₃தா₃ர்த்த₂ம்

236. ஶரணம் - உபாயமாக.

237. இந்த ஶரணஶப்₃த₃ம் - ரக்ஷிதாவையும் க்₃ருஹத்தையும் உபாயத்தையும் காட்டக்கடவதேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது; கீழோடே சேர வேண்டுகையாலே.

### வ்ரஜஶப்₃தா₃ர்த்த₂ம்

238. வ்ரஜ—பு₃த்₃தி₄பண்ணு.

239. க₃த்யர்த்த₂மாவது பு₃த்₃த்₄யர்த்த₂மாய், அத்₄யவஸியென்றபடி.

240. வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களாயிருக்கச் செய்தேயும், ஜ்ஞாநாந்மோக்ஷமாகையாலே மாநஸமான அநுஷ்ட₂ாநத்தைச் சொல்லுகிறது.

---

a திருவாய் 8-8-3. b திருவாய் 9-1-7.

241. ஆக, த்யாஜ்யத்தைச்சொல்லி, த்யாக₃ப்ரகாரத்தைச் சொல்லி, பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி, உபாயநைரபேக்ஷ்யஞ்சொல்லி, உபாயத்வஞ்சொல்லி, உபாயஸ்வீகாரம் சொல்லுகிறது.

## அஹம்பத₃ார்த்த₂ம்

242. அஹம்.

243. ஸ்வக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்.

244. ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், ப்ராப்தனான நான்.

245. இவன் கீழ்நின்ற நிலையும், மேல் போக்கடியும் அறிகைக்கும், அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் ஏகாந்தமான கு₃ணவிஶேஷங்களையும், தன்பேருகச் செய்து தலைக்கட்டுகைக்கு ஈடான ப₃ந்த₄விஶேஷத்தையும் காட்டுகிறது.

246. தனக்காகக்கொண்ட ஸாரத்₂யவேஷத்தை அவனையிட்டுப் பாராதே, தன்னையிட்டுப்பார்த்து அஞ்சின அச்சந்தீரத் தானான தன்மையை 'அஹம்' என்று காட்டுகிறான்.

247. கீழில் பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லைநிலமிறே.

## த்வாவின் அர்த்த₂ம்

248. த்வா-அஜ்ஞனாய், அஶக்தனாய், அப்ராப்தனாய், என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை.

## ஸர்வபாபஶப்₃த₃ார்த்த₂ம்

249. ஸர்வ பாபேப்₄ய:-மத் ப்ராப்தி ப்ரதிப₃ந்த₄கங்கள் என்று யாவையாவை சில பாபங்களைக் குறித்து அஞ்சுகிறாய், அவ்வோ பாபங்கள் எல்லாவற்றில்நின்றும்.

250. [a] "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிறபடியே அவித்₃யா கர்ம வாஸனா ருசி ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ங்களைச் சொல்லுகிறது.

---

[a] திருவிருத்தம் 1.

251. த்ருணச்சேதகண்டூயநாதிகளைப்போலே ப்ரக்ருதிவாஸநையாலே அநுவர்த்திக்குமவையென்ன, லோகாபவாத பீதியாலும், கருணையாலும், கலக்கத்தாலும் செய்யுமவையென்ன எல்லாவற்றையும் நினைக்கிறது.

252 'உந்மத்த ப்ரவ்ருத்திக்கு க்ராமப்ராப்திபோலே த்பஜித்த உபாயங்களிலே இவை அந்விதங்களாமோ ?' என்று நினைக்கவேண்டா.

253. கலங்கி உபாயபுத்த்யா பண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடு ஒக்கும்.

### மோக்ஷயிஷ்யாமியின் அர்த்தம்

254. மோக்ஷயிஷ்யாமி — முக்தனும்படி பண்ணக்கடவேன்.

255. ணிச்சாலே—நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப்போங்காண் என்கிறான்.

256. என்னுடைய நிக்ரஹ ப்லமாய் வந்தவை நானிரங்கினால் கிடக்குமோ ? என்கை.

257. அநாதிகாலம் பாபங்களைக்கண்டு நீ பட்ட பாட்டை அவைதாம் படும்படி பண்ணுகிறேன்.

258. இனி உன் கையிலும் உன்னைக்காட்டித் தாரேன். என்னுடம்பில் அழுக்கை நானே போக்கிக்கொள்ளேனோ ?

### மாஶுசவின் அர்த்தம்

259. மாஶுச:—'நீ உன்கார்யத்திலே அதிகரியாமையாலும், நான் உன்கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும், உனக்கு ஶோகநிமித்தம் இல்லைகாண்' என்று அவனுடைய ஶோகநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிறான்.

260. நிவர்த்தக ஸ்வரூபத்தைச் சொல்லி, நிவர்த்யங்கள் உன்னை வந்து மேலிடாதென்று சொல்லி, உனக்கு ஶோகநிமித்தம் இல்லைகாண் என்கிறான்.

261. [a] 'எத்தினாலிடர்க்கடற்கிடத்தியேழை நெஞ்சமே' என்கிறான்.

---

[a] திருச்சந்த 115.

262. பாபங்களை நான் பொறுத்துப் புண்யமென்று நினைப்பிடாநிற்க, நீ ஶோகிக்கக்கடவையோ?

**உபயுக்தார்த்த₂ம்**

263. உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

264. இதுக்கு ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கு.

265. "இதுதான் அநுவாத₃கோடியிலே" என்று வங்கிப் புரத்துநம்பி வார்த்தை.

266. அர்ஜுநன், க்ருஷ்ணனுடைய ஆனைத்தொழில்களாலும், ருஷிகள் வாக்யங்களாலும், க்ருஷ்ணன் தன் கார்யத்திலே அதி₄கரித்துக்கொண்டு போருகையாலும், இவனே நமக்குத் தஞ்சமென்று துணிந்த பின்பு தன்னைப்பற்றச் சொல்லுகையாலே.

267. புறம்பு பிறந்தது எல்லாம், இவன நெஞ்சை ஶோதி₄க்கைக்காக.

268. வேத₃புருஷன் உபாயாந்தரங்களை விதி₄த்தது— கொண்டிப் பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப்போலே, அஹங்கார மமகாரங்களால் வந்த களிப்பு அற்று ஸ்வரூப ஜ்ஞாநம் பிறக்கைக்காக.

269. ஸந்யாஸி முன்புள்ளவற்றை விடுமாபோலே இவ்வளவு பிறந்தவன் இவற்றைவிட்டால் குற்றம் வாராது.

270. இவன் தான் இவைதன்னை நேராக விட்டிலன்.

271. கர்மம் - கைங்கர்யத்திலே புகும்; ஜ்ஞாநம்-ஸ்வரூப ப்ரகாஶத்திலே புகும்; ப₄க்தி-ப்ராப்யருசியிலே புகும்; ப்ரபத்தி-ஸ்வரூபயாதா₂த்ம்யஜ்ஞாநத்திலே புகும்.

272. ஒரு ப₂லத்துக்கு அரிய வழியையும், எளிய வழியையும் உபதே₃ஶிக்கையாலே, இவை இரண்டும் ஒழிய ப₄க₃வத்ப்ரஸாத₃மே உபாயமாகக்கடவது.

273. பேற்றுக்கு வேண்டுவது — விலக்காமையும், இரப்பும்.

274. சக்ரவர்த்தித் திருமகன், பாபத்தோடே வரிலும் அமையுமென்றான்; இவன், புண்யத்தைப் பொகட்டு வர வேணுமென்றான்.

275. "ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசி விஶ்வாஸங்களையுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நஶித்தல் ஒழிய நடுவில் நிலையில்லை" என்று ப₄ட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை.

276. வ்யவஸாயம் இல்லாதவனுக்கு இதில் அந்வயம், ஆமத்தில் போ₄ஜநம்போலே.

277. a "விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்கிறபடியே அதி₄காரிகள் நியதர்.

278. b "வார்த்தையறிபவர்" என்கிற பாட்டும் c "அத்தனாகி" என்கிற பாட்டும் இதுக்கு அர்த்த₂மாக அநுஸந்தே₄யம்.

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
முமுக்ஷுப்படி முற்றிற்று.

# 2. தத்வத்ரயம்

## சித்ப்ரகரணம் 1.

1. முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம்போது தத்வத்ரயஜ்ஞாநமுண்டாகவேணும்.

2 தத்வத்ரயமாவது-சித்தும், அசித்தும், ஈஶ்வரனும்.

3. சித்தென்கிறது-ஆத்மாவை.

4. ஆத்மஸ்வரூபம் - d"சென்றுசென்று பரம்பரமாய்" என்கிறபடியே தே₃ஹேந்த்₃ரிய - மந: - ப்ராண - பு₃த்₃தி₄ விலக்ஷணமாய், அஜட₃மாய், ஆநந்த₃ரூபமாய், நித்யமாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஜ்ஞாநாஶ்ரயமாய், ஈஶ்வரனுக்கு நியாம்யமாய், தா₄ர்யமாய் ஶேஷமாயிருக்கும்.

5. ஆத்மஸ்வரூபம் - தே₃ஹாதி₃விலக்ஷணமானபடியென்? என்னில்.

6. தே₃ஹாதி₃கள் 'என்னுடைய தே₃ஹாதி₃கள்' என்று ஆத்மாவில் வேறுபட்டுத் தோற்றுகையாலும், 'இத₃ம்' என்று

a நாச்-திரு11-10. b திருவாய்7.5.10. c திருச்சந்த115. d திருவாய்8.8-5.

தோற்றுகையாலும், ஆத்மா 'நான்' என்று தோற்றுகையாலும், இவை - ஒருகால் தோற்றி ஒருகால் தோற்றாமையாலும், ஆத்மா எப்போதும் தோற்றுகையாலும், இவை பலவாகையாலும், ஆத்மா ஒருவனாகையாலும், ஆத்மா இவற்றில் விலக்ஷணனென்று கொள்ளவேணும்.

7. இந்த யுக்திகளுக்குக் கண்ணழிவுண்டேயாகிலும், ஶாஸ்த்ர ப₃லத்தாலே ஆத்மா தே₃ஹாதி₃ விலக்ஷணனாகக் கடவன்.

8. அஜட₃மாகையாவது - ஜ்ஞாநத்தையொழியவும் தானே தோற்றுகை.

9. ஆநந்த₃ரூபமாகையாவது - ஸுக₂ரூபமாயிருக்கை.

10. உணர்ந்தவன் 'ஸுக₂மாக உறங்கினேன்'என்கையாலே ஸுக₂ரூபமாகக்கடவது.

11. நித்யமாகையாவது - எப்போதுமுண்டாகை.

12. எப்போதுமுண்டாகில், ஜந்மமரணங்களுண்டாகிறபடியென் ? என்னில், ஜன்மமாவது-தே₃ஹஸம்ப₃ந்த₄ம். மரணமாவது - தே₃ஹவியோக₃ம்.

13. அணுவானபடியென் ? என்னில்.

14. ஹ்ருத₃ய ப்ரதே₃ஶத்தில்நின்றும் உத்க்ரமித்துப் போவது வருவதாமென்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே ஆத்மா அணுவாகக்கடவது.

15. அணுவாய் ஹ்ருத₃யத்தளவிலே நிற்குமாகில் ஶரீரமெங்குமொக்க ஸுக₂து₃:க்க₂ங்களை பு₄ஜிக்கிறபடியென்? என்னில்.

16. மணி த்₃யுமணி தீ₃பாதி₃கள் ஓரிடத்திலேயிருக்க, ப்ரபை₄ எங்குமொக்க வ்யாபிக்குமாபோலே, ஜ்ஞானம் எங்குமொக்க வ்யாபிக்கையாலே, அவற்றை பு₄ஜிக்கத் தட்டில்லை.

17. ஒருவன் ஏககாலத்திலே அநேக தே₃ஹங்களைப் பரிக்₃ரஹிக்கிறதும் ஜ்ஞாநவ்யாப்தியாலே.

18. அவ்யக்தமாகையாவது-க₄டபடாதி₃களை க்₃ரஹிக்கிற சக்ஷுராதி₃களால் தோற்றாதிருக்கை.

19. அசிந்த்யமாகையாவது - அசித்தோடு ஸஜாதீய மென்று நினைக்கவொண்ணுதிருக்கை.

20. நிரவயவமாகையாவது — அவயவஸமுதா₃யமின்றிக்கேயிருக்கை.

21. நிர்விகாரமாகையாவது - அசித்துப்போலே விகரிக்கையன்றிக்கே ஒருபடிப்பட்டிருக்கை.

22. இப்படியிருக்கையாலே - ஶஸ்த்ரம், அக்₃நி, ஜலம், வாதம், ஆதபம் தொடக்கமானவற்ருல் சே₂தி₃த்தல், த₃ஹித்தல், நனைத்தல், ஶோஷிப்பித்தல் செய்கைக்கு அயோக்₃யமாயிருக்கும்.

23. ஆர்ஹதர் - ஆத்மாவை தே₃ஹபரிமாணம் என்ருர்கள்.

24. அது ஶ்ருதிவிருத்₃த₄ம்.

25. அநேக தே₃ஹங்களைப் பரிக்₃ரஹிக்கிற யோகி₃கள் ஸ்வரூபத்துக்கு ஶைதி₂ல்ய(மு)ம் வரும்.

26. ஜ்ஞாநாஶ்ரயமாகையாவது — ஜ்ஞானத்துக்கு இருப்பிடமாயிருக்கை.

27. ஆத்மா ஜ்ஞானத்துக்கு இருப்பிடமின்றிக்கே ஜ்ஞாநமாத்ரமாகில்;

28. 'நான் அறிவு' என்று சொல்லவேணும், 'நான் அறியாநின்றேன்' என்னக்கூடாது.

29. ஜ்ஞாதா என்றபோதே - கர்த்தா, போ₄க்தா என்னுமிடம் சொல்லிற்ருயிற்று.

30. கர்த்ருத்வ போ₄க்த்ருத்வங்கள் ஜ்ஞாநாவஸ்தா₂விஶேஷங்களாகையாலே.

31. சிலர் கு₃ணங்களுக்கே கர்த்ருத்வமுள்ளது, ஆத்மாவுக்கு இல்லையென்ருர்கள்.

32. அப்போது இவனுக்கு ஶாஸ்த்ரவஶ்யதையும், போ₄க்த்ருத்வமும் குலையும்.

33. ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகளில் கர்த்ருத்வம் ஸ்வரூப் ப்ரயுக்தமன்று.

34. கு₃ணஸம்ஸர்க₃க்ருதம்.

35. கர்த்ருத்வந்தான் ஈஶ்வராதீ₄நம்.

36. ஜ்ஞாநாஶ்ரயமாகில் ஶாஸ்த்ரங்களிலே இவனை 'ஜ்ஞானம்' என்று சொல்லுவானென்? என்னில்:

37. ஜ்ஞானத்தை யொழியவும் தன்னையறிகையாலும், ஜ்ஞாநம் ஸாரபூ₄தகு₃ணமாய் நிரூபக த₄ர்மமாயிருக்கை யாலும் சொல்லிற்று.

38. நியாம்யமாகையாவது - ஈஶ்வரபு₃த்₃த்₄யதீ₄நமாக எல்லா வ்யாபாரங்களும் உண்டாம்படியிருக்கை.

39. தா₄ர்யமாகையாவது - அவனுடைய ஸ்வரூப ஸங்கல்பங்களை யொழிந்தபோது தன் ஸத்தையில்லையாம்படி யிருக்கை.

40. ஶேஷமாகையாவது-சந்த₃ந குஸும தாம்பூ₃லாதி₃ களைப்போலே அவனுக்கு இஷ்டவிநியோகா₃ர்ஹமாயிருக்கை.

41. இதுதான் - க்₃ருஹ க்ஷேத்ர புத்ர களத்ராதி₃ களைப்போலே ப்ருத₂க் ஸ்தி₂த்யாதி₃களுக்கு யோக்₃யமாம்படி யிருக்கையன்றிக்கே ஶரீரம்போலே அவற்றுக்கு அயோக்₃ய மாயிருக்கை.

42. ஆத்மஸ்வரூபந்தான்-ப₃த்₃த₄ முக்த நித்ய ரூபேண மூன்றுபடிப்பட்டிருக்கும்.

43. ப₃த்₃த₄ரென்கிறது - ஸம்ஸாரிகளை.

44. முக்தரென்கிறது-ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மற்றவர்களை.

45. நித்யரென்கிறது-ஒரு நாளும் ஸம்ஸரியாத ஶேஷ ஶேஷாஶநாதி₃களை.

46. ஜலத்துக்கு அக்₃நிஸம்ஸ்ருஷ்ட ஸ்தா₂லீ ஸம்ஸர்க₃த்தாலே ஔஷ்ண்யஶப்₃தா₃தி₃களுண்டாகிறப்போலே, ஆத்மாவுக்கு அசித் ஸம்ப₃ந்த₄த்தாலே அவித்₃யா கர்ம வாஸநா ருசிகள் உண்டாகிறன.

47. அசித்துக்கழிந்தவாறே அவித்₃யாதி₃கள் கழியும் என்பர்கள்.

48. இம்மூன்றும் தனித்தனியே அநந்தமாயிருக்கும்.

49. சிலர் 'ஆத்மபே₄த₃மில்லை, ஏகாத்மாவேயுள்ளது' என்றார்கள்.

50. அந்தப் பக்ஷத்தில் ஒருவன் ஸுகிக்கிற காலத்திலே வேறேயொருவன் து:க்கிக்கக் கூடாது.

51. அது தேஹ பேதத்தாலே என்னில்:

52. ஸௌபரி ஶரீரத்திலும் அது காணவேணும்.

53. ஒருவன் ஸம்ஸரிக்கையும், ஒருவன் முக்தனுகையும், ஒருவன் ஶிஷ்யனுகையும், ஒருவன் ஆசார்யனுகையும் கூடாது.

54. விஷம ஸ்ருஷ்டியும் கூடாது.

55. ஆத்மபேதம் சொல்லுகிற ஶ்ருதியோடும் விரோதிக்கும்.

56. ஶ்ருதி ஔபாதிகபேதத்தைச் சொல்லுகிறதென்னவொண்ணுது.

57. மோக்ஷதஶையிலும் பேதம் உண்டாகையாலே.

58. அப்போது தேவமநுஷ்யாதிபேதமும், காமக்ரோதாதி பேதமும் கழிந்து, ஆத்மாக்கள் ஸ்வரூபம் அத்யந்தம் ஸமமாய், ஒருபடியாலும் பேதஞ்சொல்லவொண்ணுதபடி யிருந்ததேயாகிலும்;

59. பரிமாணமும், எடையும், ஆகாரமும் ஒத்திருக்கிற-பொற்குடங்கள், ரத்நங்கள், வ்ரீஹிகள் தொடக்கமானவற்றிற்கு பேதமுண்டாகிறப்போலே ஸ்வரூப பேதமும் ஸித்தம்.

60. ஆகையால் ஆத்மபேதம் கொள்ளவேணும்.

61. இப்போது இவர்களுக்கு லக்ஷணம் ஶேஷத்வத்தோடே கூடின ஜ்ஞாத்ருத்வம்.

62. இவர்களுடைய ஜ்ஞாநந்தான் - ஸ்வரூபம்போலே நித்யத்ரவ்யமாய், அஜடமாய், ஆநந்தரூபமாயிருக்கும்.

63. ஆனல் ஜ்ஞாநத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் வாசியென்னென்னில்:

64. ஸ்வரூபம் - தர்மியாய், ஸங்கோசவிகாஸங்களுக்கு அயோக்யமாய், தன்னையொழிந்தவற்றை ப்ரகாஶிப்பியாமலே தனக்குத் தான் ப்ரகாஶிக்கக்கடவதாய், அணுவாயிருக்கும்; ஜ்ஞாநம்-தர்மமாய், ஸங்கோச விகாஸங்களுக்கு

யோக்₃யமாய், தன்னையொழிந்தவற்றை ப்ரகாஶிப்பிக்கக் கடவதாய், தனக்குத் தான் ப்ரகாஶியாதே ஆத்மாவுக்கு ப்ரகாஶிக்கக்கடவதாய், விபு₄வாயிருக்கும்.

65. அதில் சிலருடைய ஜ்ஞாநம் எப்போதும் விபு₄வாயிருக்கும்; சிலருடைய ஜ்ஞாநம் எப்போதும் அவிபு₄வாயிருக்கும்; சிலருடைய ஜ்ஞாநம் ஒரு கால் அவிபு₄வாய், ஒருகால் விபு₄வாயிருக்கும்.

66. ஜ்ஞாநம்-நித்யமாகில் 'எனக்கு ஜ்ஞாநம் பிறந்தது, நஶித்தது' என்கிறபடியென்? என்னில்:

67. இந்த்₃ரிய த்₃வாரா ப்ரஸரித்து விஷயங்களை க்₃ரஹிப்பது, மீளுவதாகையாலே அப்படி சொல்லக்குறையில்லை.

68. இதுதான் ஏகமாயிருக்கச்செய்தே நாநாவாய்த் தோற்றுகிறது - ப்ரஸரணபே₄த₃த்தாலே.

69. த்₃ரவ்யமானபடியென்? என்னில்,

70. க்ரியாகு₃ணங்களுக்கு ஆஶ்ரயமாய், அஜட₃மாய், ஆநந்த₃ரூபமாயிருக்கையாலே, த்₃ரவ்யமாகக்கடவது.

71. அஜட₃மாகில் ஸுஷுப்தி மூர்ச்சா₂தி₃களில் தோற்றவேண்டாவோ? என்னில்.

72. ப்ரஸரணமில்லாமையாலே தோற்றாது.

73. ஆநந்த₃ரூபமாகையாவது-ஜ்ஞாநம் ப்ரகாஶிக்கும் போது அநுகூலமாயிருக்கை.

74. விஷஶஸ்த்ராதி₃களைக் காட்டும்போது ப்ரதிகூலமாயிருக்கைக்கு அடி-தே₃ஹாத்ம ப்₄ரமாதி₃கள்.

75. ஈஶ்வராத்மகமாகையாலே எல்லாப் பதா₃ர்த்த₂ங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபா₄வம்; ப்ராதிகூல்யம் வந்தேறி.

76. மற்றை ஆநுகூல்யம் ஸ்வாபா₄விகமாகில், ஒருவனுக்கு ஒருகால் ஓரிடத்திலே அநுகூலங்களான சந்த₃நகுஸுமாதி₃கள், தே₃ஶாந்தரே காலாந்தரே - இவன்தனக்கும், அத்தே₃ஶத்திலே அக்காலத்திலே வேறே ஒருவனுக்கும் ப்ரதிகூலங்களாகக் கூடாது.

சித்ப்ரகரணம் முற்றிற்று.

## அசித்ப்ரகரணம் 2.

77. அசித்து - ஜ்ஞாநஶூந்யமாய், விகாராஸ்பத₃மா யிருக்கும்.

78. இது ஶுத்₃த₄ஸத்வமென்றும், மிஶ்ரஸத்வமென் றும், ஸத்வஶூந்யமென்றும் த்ரிவித₄ம்.

79. இதில் ஶுத்₃த₄ஸத்வமாவது - ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசாதே கேவல ஸத்வமாய், நித்யமாய், ஜ்ஞாநாநந்த₃ ஜநகமாய், கர்மத்தாலன்றிக்கே கேவல ப₄க₃வதி₃ச்சை₂ யாலே விமாந, கோ₃புர, மண்டப, ப்ராஸாத₃ாதி₃ரூபேண பரிணமிக்கக்கடவதாய், நிரவதி₄க தேஜோரூபமாய், நித்ய முக்தராலும் ஈஶ்வரனாலும் பரிச்சே₂தி₃க்கவரிதாய், அத் யத்₄பு₄தமாயிருப்பதொன்று.

80. இத்தைச்சிலர் ஜட₃மென்றார்கள்; சிலர் அஜட₃ மென்றார்கள்.

81. அஜட₃மானபோது - நித்யர்க்கும், முக்தர்க்கும், ஈஶ்வரனுக்கும், ஜ்ஞாநத்தை யொழியவும் தோற்றும்.

82. ஸம்ஸாரிகளுக்குத் தோற்றாது.

83. ஆத்மாவிலும், ஜ்ஞாநத்திலும் பி₄ந்நமானபடி யென்? என்னில்;

84. 'நான்' என்று தோற்றாமையாலும், ஶரீரங்களாய்ப் பரிணமிக்கையாலும், விஷயங்களையொழியவும் தானே தோற்றுகையாலும், ஶப்₃த₃ ஸ்பர்ஶாதி₃களுண்டாகை யாலும் பி₄ந்நமாகக்கடவது.

85. மிஶ்ர ஸத்வமாவது-ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் மூன்றோடுங்கூடி ப₃த்₃த₄சேதநருடைய ஜ்ஞாநாநந்த₃ங்க ளுக்குத் திரோத₄ாயகமாய், விபரீதஜ்ஞாநஜநகமாய், நித்ய மாய், ஈஶ்வரனுக்கு க்ரீடா₃பரிகரமாய், ப்ரதே₃ஶபே₄த₃த் தாலும், காலபே₄த₃த்தாலும் ஸத்₃ருஶமாயும், விஸத்₃ ருஶமாயுமிருக்கும் விகாரங்களை உண்டாக்கக் கடவதாய், 'ப்ரக்ருதி-அவித்₃யை - மாயை' என்கிற பேர்களை உடைத் தாயிருக்கும் அசித்₃விஶேஷம்.

86. ப்ரக்ருதியென்கிறது - விகாரங்களைப் பிறப்பிக்கை யாலே; அவித்₃யை என்கிறது - ஜ்ஞாநவிரோதி₄யாகை

யாலே; மாலை என்கிறது - விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே.

87. இதுதான் a"பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங் காரமனங்களே" என்கிறபடியே, இருபத்துநாலு தத்வமா யிருக்கும்.

88. இதில் ப்ரத₂மதத்வம் - ப்ரக்ருதி.

89. இது-அவிப₄க்த தமஸ்ஸென்றும், விப₄க்த தமஸ் ஸென்றும், அக்ஷரமென்றும் சில அவஸ்தை₂களை உடைத் தாயிருக்கும்.

90. இதில் நின்றும் கு₃ணவைஷம்யத்தாலே மஹ தா₃திவிகாரங்கள் பிறக்கும்.

91. கு₃ணங்களாகிறன — ஸத்வ-ரஜஸ் - தமஸ்ஸுக்கள்.

92. இவை ப்ரக்ருதிக்கு ஸ்வரூபாநுப₃ந்தி₄களான ஸ்வ பா₄வங்களாய், ப்ரக்ருத்யவஸ்தை₂யில் அநுத்₃பூ₄தங்களாய், விகாரத₃ஶையில் உத்₃பூ₄தங்களாயிருக்கும்.

93. ஸத்வம் - ஜ்ஞாந ஸுக₂ங்களையும், உப₄ய ஸங்க₃த் தையும் பிறப்பிக்கும்.

94. ரஜஸ்ஸு - ராக₃த்ருஷ்ணை ஸங்க₃ங்களையும், கர்ம ஸங்க₃த்தையும் பிறப்பிக்கும்.

95. தமஸ்ஸு - விபரீதஜ்ஞாநத்தையும், அநவதா₄நத் தையும், ஆலஸ்யத்தையும், நித்₃ரையையும் பிறப்பிக்கும்.

96. இவை ஸமங்களானபோது - விகாரங்கள் ஸமங்க ளுமாய், அஸ்பஷ்டங்களுமாய் இருக்கும்; விஷமங்களான போது-விகாரங்கள் விஷமங்களுமாய், ஸ்பஷ்டங்களுமாய் இருக்கும்.

97. விஷம விகாரங்களில் ப்ரத₂மவிகாரம் - மஹாந்.

98. இது-ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று த்ரி வித₄மாய், அத்₄யவஸாய ஜநகமாய் இருக்கும்.

99. இதில் நின்றும்-வைகாரிகம், தைஜஸம், பூ₄தாதி₃ என்று த்ரிவித₄மான அஹங்காரம் பிறக்கும்.

100. அஹங்காரம்-அபி₄மாந ஹேதுவாயிருக்கும்.

---

a திருவாய் 10-7-10.

101. இதில்-வைகாரிகத்தில் நின்றும் 'ஶ்ரோத்ர த்வக் சக்ஷுர் ஜிஹ்வா க்₄ராணங்கள்' என்கிற ஜ்ஞாநேந்த்₃ரியங்களைந்தும் 'வாக் பாணி பாத₃ பாயூபஸ்த₂ங்கள்' என்கிற கர்மேந்த்₃ரியங்களைந்தும், மநஸ்ஸூம் ஆகிற பதினொரு இந்த்₃ரியங்களும் பிறக்கும்.

102. பூ₄தாதி₃யில் நின்றும் ஶப்₃த₃தந்மாத்ரை பிறக்கும்; இதில் நின்றும்- ஆகாஶமும், ஸ்பர்ஶதந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும்-வாயுவும், ரூபதந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும்-தேஜஸ்ஸூம், ரஸதந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும் - அப்பும், க₃ந்த₄ தந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும் - ப்ருதி₂வி பிறக்கும்.

103. ஸ்பர்ஶ தந்மாத்ரை தொடக்கமான நாலு தந்மாத்ரைகளும் - ஆகாஶம் தொடக்கமான நாலு பூ₄தங்களுக்கும் கார்யமாய், வாயுதொடக்கமான நாலு பூ₄தங்களுக்கும் காரணமாய் இருக்கும் என்றுஞ் சொல்லுவர்கள்.

104. தந்மாத்ரங்களாவன — பூ₄தங்களினுடைய ஸூக்ஷ்மாவஸ்தை₂கள்.

105. மற்றை இரண்டு அஹங்காரமும்-ஸ்வகார்யங்களைப் பிறப்பிக்கும்போது,ராஜஸாஹங்காரம்-ஸஹகாரியாயிருக்கும்.

106. ஸாத்விகாஹங்காரம்-ஶப்₃த₃தந்மாத்ராதி₃ பஞ்சகத்தையும் அடைவே ஸஹகாரியாய்க்கொண்டு, ஶ்ரோத்ராதி₃ ஜ்ஞாநேந்த்₃ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும்; தத்ஸஹக்ருதமாய்க்கொண்டு வாக₂ாதி₃ கர்மேந்த்₃ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும் ; இவற்றையொழியத் தானே மநஸ்ஸை ஸ்ருஷ்டிக்குமென்றுஞ் சொல்லுவர்கள்.

107. சிலர் - இந்த்₃ரியங்களிலே சிலவற்றை பூ₄த கார்யம் என்றார்கள்.

108. அது ஶாஸ்த்ரவிருத்₃த₄ம்

109. பூ₄தங்கள் ஆப்யாயகங்களித்தனை.

110. இவை கூடினலல்லது கார்யகரமல்லாமையாலே, மண்ணையும், மணலையும், நீரையுஞ் சேர்த்து ஒரு த்₃ரவ்யமாக்கிச் சுவரிடுவாரைப்போலே, ஈஶ்வரன் - இவற்றையெல்லாம் தன்னிலே சேர்த்து ஒரு அண்ட₃மாக்கி, அதுக்குள்ளே சதுர்முக₂னை ஸ்ருஷ்டித்தருளும்.

111. அண்ட₃த்தையும், அண்ட₃காரணங்களையும் தானேயுண்டாக்கும்; அண்ட₃த்துக்குட்பட்ட வஸ்துக்களைச் சேதநர்க்கு அந்தர்யாமியாய் நின்று உண்டாக்கும்.

112. அண்ட₃ங்கள்தான் - அநேகங்களாய், பதினாலு லோகங்களோடேகூடி ஒன்றுக்கொன்று பதிற்றுமடங்கான ஏழு ஆவரணங்களாலும் சூழப்பட்டு, ஈஶ்வரனுக்கு க்ரீடா₃ கந்து₃க ஸ்தா₂நீயங்களாய், ஜலபு₃த்₃பு₃த₃ம்போலே ஏக காலத்திலே ஸ்ருஷ்டங்களாயிருக்கும்.

113. பூ₄தங்களில் ஆகாஶம் - அவகாஶஹேது, வாயு வஹநாதி₃ஹேது, தேஜஸ்ஸு - பசநாதி₃ஹேது, ஜலம் - ஸேசந பிண்டீ₃கரணாதி₃ஹேது, ப்ருதி₂வி-தா₄ரணாதி₃ஹேது என்பர்கள்.

114. ஶ்ரோத்ராதி₃ ஜ்ஞாநேந்த்₃ரியங்களைந்துக்கும் - அடைவே ஶப்₃தா₃தி₃களைந்தையும் க்₃ரஹிக்கை தொழில்; வாக்₃ாதி₃ கர்மேந்த்₃ரியங்களைந்துக்கும்,விஸர்க்₃-ஶில்ப-க₃தி-உக்திகள் தொழில்; மநஸ்ஸு-இவை இத்தனைக்கும் பொது.

115. ஆகாஶாதி₃ பூ₄தங்களுக்கு-அடைவே ஶப்₃தா₃தி₃கள் கு₃ணங்களாயிருக்கும்.

116. கு₃ணவிநிமயம்-பஞ்சீகரணத்தாலே.

117. ஆகாஶம் கறுத்துத் தோற்றுகிறதும்-அத்தாலே.

118. முன்புற்றை தந்மாத்ரைகளோடே கூடிக் கொண்டு, உத்தரோத்தர தந்மாத்ரைகள்-ஸ்வவிஶேஷங் களைப் பிறப்பிக்கையாலே கு₃ணாதி₄க்யமுண்டாயிற்று என்றும் சொல்லுவர்கள்.

119. ஸத்வஶூந்யமாவது - காலம்.

120. இது, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களினுடைய பரிணா மங்களுக்கு ஹேதுவாய், கலாகாஷ்டா₂தி₃ ரூபேண பரிண மிக்கக் கடவதாய், நித்யமாய், ஈஶ்வரனுக்கு க்ரீடா₃பரிகர மாய், ஶரீரபூ₄தமாயிருக்கும்.

121. மற்றை இரண்டுஅசித்தும்-ஈஶ்வரனுக்கும், ஆத் மாவுக்கும், போ₄க்₃ய போ₄கோ₃பகரணபோ₄கஸ்தா₂நங்களா யிருக்கும்.

122. போ₄க்₃யங்களாகிறன-விஷயங்கள்; போ₄கோ₃பகரணங்களாகிறன - சக்ஷுராதி₃கரணங்கள்; போ₄க₃ஸ்தா₂நங்களாகிறன - சதுர்த₃ஶ பு₄வநங்களும், ஸமஸ்த தே₃ஹங்களும்.

123. இதில் முற்பட்ட அசித்துக்கு - கீழெல்லையுண்டாய், சுற்றும் மேலும் எல்லையின்றிக்கேயிருக்கும்; நடுவில் அசித்துக்கு - சுற்றுங் கீழும் எல்லையின்றிக்கே மேல் எல்லையுண்டாயிருக்கும்; காலம் - எங்குமொக்கவுண்டாயிருக்கும்.

124. "காலந்தான் - பரமபத₃த்திலே நித்யம், இங்கு அநித்யம்" என்றும் சொல்லுவர்கள்.

125. சிலர் காலத்தை இல்லையென்றார்கள்.

126. ப்ரத்யக்ஷத்தாலும், ஆக₃மத்தாலும் ஸித்₃தி₄க்கையாலே அது சொல்லவொண்ணாது.

127. பலரும் தி₃க்கென்று தனியே ஒரு த்₃ரவ்யம் உண்டென்றார்கள்.

128. பல ஹேதுக்களாலும், ஆகாஶாதி₃களிலே அந்தர்பூ₄தமாகையாலே அதுவும் சேராது.

129. சிலர் - 'ஆவரணாபா₄வம் ஆகாஶம்' என்றார்கள்.

130. பா₄வரூபேண தோற்றுகையாலே அதுவும் சேராது.

131. வேறே சிலர், இதுதன்னை-நித்யம், நிரவயவம், விபு₄, அப்ரத்யக்ஷமென்றார்கள்.

132. பூ₄தாதி₃யிலே பிறக்கையாலும், அஹங்காராதி₃களில் இல்லாமையாலும், கண்ணுக்கு விஷயமாகையாலும், அவை நாலும் சேராது.

133. த்வகி₃ந்த்₃ரியத்தாலே தோற்றுகையாலே, வாயு அப்ரத்யக்ஷமென்கிறவதுவும் சேராது.

134. தேஜஸ்ஸு பௌ₄மாதி₃பே₄த₃த்தாலே ப₃ஹுவித₄ம்.

135. அதில் - ஆதி₃த்யாதி₃தேஜஸ்ஸு ஸ்தி₂ரம், தீ₃பாதி₃தேஜஸ்ஸு அஸ்தி₂ரம்.

136. தேஜஸ்ஸுக்கு - நிறம் சிவப்பு, ஸ்பர்ஶம் ஔஷ்ண்யம்.

137. ஜலத்துக்கு-நிறம் வெளுப்பு, ஸ்பர்ஶம் ஶைத்யம், ரஸம் மாது,ர்யம்.

138. பூ,மிக்கு - நிறமும், ரஸமும் ப,ஹுவித,ம்.

139. ஸ்பர்ஶம் - இதுக்கும், வாயுவுக்கும், அநுஷ்ண ஶீதம்.

140. இப்படி அசித்து மூன்றுபடிப்பட்டிருக்கும்.

அசித்ப்ரகரணம் முற்றிற்று.

## ஈஶ்வரப்ரகரணம் 3.

141. ஈஶ்வரன் - அகி,லஹேய ப்ரத்யநீகாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய், ஜ்ஞாந ஶக்த்யாதி, கல்யாண கு,ணக,ண பூ,ஷிதனாய், ஸகலஜக,த் ஸர்க,ஸ்தி,தி ஸம்ஹார கர்த்தாவாய், "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தா,ர்த்தீ, ஜ்ஞாநீ" என்கிற சதுர்வித, புருஷர்களுக்கும் ஆஶ்ரயணீயனாய், த,ர்மார்த்த,காமமோக்ஷாக்,ய சதுர்வித,ப,லப்ரத,னாய், விலக்ஷண விக்,ரஹயுக்தனாய், லக்ஷ்மீ பூ,மி நீளா நாயகனாயிருக்கும்.

142. அகி,லஹேயப்ரத்யநீகனாகையாவது - தமஸ்ஸுக்குத் தேஜஸ்ஸு போலேயும், ஸர்ப்பத்துக்கு க,ருட,னைப் போலேயும், விகாராதி,தோ,ஷங்களுக்கு ப்ரதிப,டனாயிருக்கை.

143. அநந்தனாகையாவது-நித்யனாய், சேதநாசேதநங்களுக்கு வ்யாபகனாய், அந்தர்யாமியாய் இருக்கை.

144. அந்தர்யாமிய,னால் தோ,ஷங்கள் வாராதோ வென்னில்;

145. ஶரீரக,தங்களான பா,ல்யாதி,கள் - ஜீவாத்மாவுக்கு வாராதாப்போலே, த்ரிவித,சேதநாசேதநதோ,ஷமும் ஈஶ்வரனுக்கு வாராது.

146. ஜ்ஞாநாநந்தைக,ஸ்வரூபனாகையாவது-ஆநந்த,ரூப ஜ்ஞாநனாயிருக்கை.

147. அதாவது - கட்டடங்க அநுகூலமாய், ப்ரகாஶமு மாயிருக்கை.

148 இவனுடைய ஜ்ஞாந ஶக்த்யாதி₃ கல்யாண கு₃ணங்கள் - நித்யங்களாய், நிஸ்ஸீமங்களாய், நிஸ்ஸங்க்₂ யங்களாய், நிருபாதி₄கங்களாய், நிர்தோ₃ஷங்களாய், ஸமா நாதி₄கரஹிதங்களாயிருக்கும்.

149. இவற்றில் வாத்ஸல்யாதி₃களுக்கு விஷயம் அநுகூலர்; ஶௌர்யாதி₃களுக்கு விஷயம் ப்ரதிகூலர்; இவற்றுக்குக் காரணமான ஜ்ஞாந ஶக்த்யாதி₃களுக்கு எல்லாரும் விஷயம்.

150 ஜ்ஞாநம் - அஜ்ஞர்க்கு; ஶக்தி - அஶக்தர்க்கு; க்ஷமை - ஸாபராத₄ர்க்கு; க்ருபை - து₃:க்கி₂களுக்கு; வாத் ஸல்யம் - ஸதோ₃ஷர்க்கு; ஶீலம் - மந்த₃ர்க்கு; ஆர்ஜவம்- குடிலர்க்கு; ஸௌஹார்த₃ம் - து₃ஷ்டஹ்ருத₃யர்க்கு; மார்த் த₃வம் - விஶ்லேஷபீ₄ருக்களுக்கு; ஸௌலப்₄யம் - காண ஆசைப்பட்டவர்களுக்கு; இப்படி எங்கும் கண்டுகொள்வது.

151. இப்படி ஈஶ்வரன் கல்யாணகு₃ணங்களோடே கூடியிருக்கையாலே, பிறர் நோவுகண்டால் 'ஐயோ' என்றிரங்கி, அவர்களுக்கு எப்போதுமொக்க நன்மையைச் சிந்தித்து, தனக்கேயாயிருத்தல், தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருத்தல் செய்யாதே, நிலா, தென்றல், சந்த₃நம், தண்ணீர்போலே பிறர்க்கேயாய், தன்னை ஆஶ்ரயித்த வர்கள்பக்கல் ஜந்ம ஜ்ஞாந வ்ருத்தங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே, தாங்களும் பிறரும் தஞ்சமல்லாத போது தான் தஞ்சமாய், ஸாந்தீ₃பநிபுத்ரனையும், வைதி₃கன் புத்ரர்களையும் மீட்டுக்கொண்டு வந்தாற்போலே அரியன செய்தும், அவர்கள் அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும், அவர்களுக்கு த்₄ருவபத₃ம்போலே பண்டில்லாதவற்றையும் உண்டாக்கியும், தந்தாம் ஸ்வம் தாம்தாம் விநியோக₃ங் கொண்டாற்போலேயிருக்கத் தன்னையும் தன்னுடைமையை யும் வழங்கி, அவர்கள் கார்யம் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய், தான் செய்த நன்மைகளொன்றையும் நினையாதே, அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே

நினைத்து, அநாதி₃காலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி எல்லா த₃ஶையிலும் இனியனாய், பா₄ர்யா புத்ரர்கள் குற்றங்களைக் காணாக்கண்ணிட்டிருக்கும் புருஷனைப் போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே, குற்றங்களைப் பெரியபிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய்நின்று ரக்ஷித்து, காமினியுடைய அழுக்குகக்கும் காமுகனைப்போலே அவர்கள் தோ₃ஷங்களை போ₄க்₃யமாகக்கொண்டு, அவர்கள்பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய், பிரிந்தால் - அவர்கள் வ்யஸநம் குளப்படி என்னும்படி தானீடுபட்டு, அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு, அவர்களுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி எளியனாய், அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும், புல்லிட வந்தவர்களையும் கொம்பிலுங்குளம்பிலும் ஏற்குமாபோலே பெரிய பிராட்டியாரையும், ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக் கொண்டு போரும்.

152 இவனே ஸகலஜக₃த்துக்கும் காரணபூ₄தன்.

153. சிலர் பரமாணுவைக் காரணமென்றார்கள்.

154. பரமாணுவில் ப்ரமாணமில்லாமையாலும், ஶ்ருதி விரோத₄த்தாலும் அது சேராது.

155. காபிலர் - ப்ரதா₄நம் காரணமென்றார்கள்.

156. ப்ரதா₄நம்-அசேதநமாகையாலும்,ஈஶ்வரன்,அதி₄ஷ்டி₂யாதபோது பரிணமிக்கமாட்டாமையாலும், ஸ்ருஷ்டி ஸம்ஹார வ்யவஸ்தை₂ கூடாமையாலும், அதுவும் சேராது.

157. சேதநனும் காரணமாகமாட்டான்.

158. கர்ம பரதந்த்ரனுமாய், து₃:க்கி₂யுமாயிருக்கையாலே.

159. ஆகையால், ஈஶ்வரன்தானே ஜக₃த்துக்குக் காரணம்.

160. இவன் காரணமாகிறது - அவித்₃யா கர்ம பரநியோகா₃தி₃களால் அன்றிக்கே, ஸ்வேச்சை₂யாலே.

161. ஸ்வஸங்கல்பத்தாலே செய்கையாலே இதுதான் வருத்தமற்றிருக்கும்.

162. இதுக்கு ப்ரயோஜநம் கேவலலீலை.

163. ஆனால் ஸம்ஹாரத்தில் லீலை குலையாதோ? என்னில்:

164. ஸம்ஹாரந்தானும் லீலையாகையாலே குலையாது.

165. இவன்தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே உபாதாநமுமாயிருக்கும்.

166. ஆனால் நிர்விகாரனென்னும்படி என்னென்னில்;

167. ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே (நிர் விகாரனென்னக் குறையில்லை.)

168. ஆனால் பரிணாமம் உண்டாம்படி என்னென்னில்;

169. விஶிஷ்டவிஶேஷண ஸத்வாரகமாக.

170. ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபாவம் - ஸர்வ ஶக்திக்குக் கூடாதொழியாதிறே.

171. ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்கையாவது - அசித்தைப் பரிணமிப்பிக்கையும், சேதநனுக்கு ஶரீரேந்த்ரியங்களைக் கொடுத்து ஜ்ஞாநவிகாஸத்தைப் பண்ணுகையும்.

172. ஸ்திதிப்பிக்கையாவது - ஸ்ருஷ்டமான வஸ்துக்களிலே பயிருக்கு நீர்கிலேபோலே, அநுகூலமாக ப்ரவேஶித்து நின்று ஸர்வரக்ஷைகளையும் பண்ணுகை.

173. ஸம்ஹரிக்கையாவது - அவிநீதனான புத்ரனைப் பிதா விலங்கிட்டு வைக்குமாபோலே, விஷயாந்தரங்களிலே கைவளருகிற கரணங்களைக் குலைத்திட்டுவைக்கை.

174. இம்மூன்றும் தனித்தனியே நாலு ப்ரகாரமாயிருக்கும்.

175 ஸ்ருஷ்டியில்-ப்ரஹ்மாவுக்கும், ப்ரஜாபதிகளுக்கும், காலத்துக்கும், ஸகல ஜந்துக்களுக்கும் அந்தர்யாமியாய் ரஜோகுணத்தோடேகூடி ஸ்ருஷ்டிக்கும்.

176. ஸ்திதியில் - விஷ்ண்வாதிரூபேண அவதரித்து, மந்வாதிமுகேந ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து, நல்வழி காட்டி, காலத்துக்கும், ஸகலபூதங்களுக்கும் அந்தர்யாமியாய் ஸத்வகுணத்தோடேகூடி ஸ்திதிப்பிக்கும்.

177. ஸம்ஹாரத்தில்-ருத்₃ரனுக்கும், அக்₃ந்யந்தகாதி₃க ளுக்கும், காலத்துக்கும், ஸகலபூ₄தங்களுக்கும் அந்தர்யாமி யாய் தமோகு₃ணத்தோடே கூடி ஸம்ஹரிக்கும்.

178. சிலரை ஸு₂கி₂களாகவும், சிலரை து₃:க்கி₂க ளாகவும் ஸ்ருஷ்டித்தால் ஈஶ்வரனுக்கு வைஷம்ய நைர்-க்₄ருண்யங்கள் வாராதோ? என்னில்;

179. கர்மமடியாகச் செய்கையாலும், பண்தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதா வைப்போலே ஹிதபரனாய்ச் செய்கையாலும் வாராது.

180. இவன்தான் a"முந்நீர்ஞாலம் படைத்த என்முகில் வண்ணன்" என்கிறபடியே ஸவிக்₃ரஹனாய்க்கொண்டு ஸ்ருஷ்ட்யாதி₃களைப்பண்ணும்.

181. விக்₃ரஹந்தான் - ஸ்வரூபகு₃ணங்களிலுங்காட்டில் அத்யந்தாபி₄மதமாய், ஸ்வானுரூபமாய், நித்யமாய், ஏகரூப மாய், ஶு₂த்₃த₄ஸத்வாத்மகமாய், சேதநதே₃ஹம்போலே ஜ்ஞாநமயமான ஸ்வரூபத்தை மறைக்கையன்றிக்கே, மாணிக்கச் செப்பிலே பொன்னையிட்டுவைத்தாற்போலே யிருக்க, பொன்னுருவான தி₃வ்யாத்மஸ்வரூபத்துக்கு ப்ரகாஶகமாய், நிரவதி₄கதேஜோரூபமாய், ஸௌகுமார்யாதி₃ கல்யாணகு₃ணக₃ணநிதி₄யாய், யோகி₃த்₄யேயமாய், ஸகல ஜநமோஹநமாய், ஸமஸ்தபோ₄க₃வைராக்₃யஜநகமாய், நித்ய முக்தாநுப₄வ்யமாய், வாசத்தடம்போலே ஸகலதாபஹர மாய், அநந்தாவதாரகந்த₃மாய், ஸர்வரக்ஷகமாய், ஸர்வா பாஶ்ரயமாய், அஸ்த்ரபூ₄ஷணபூ₄ஷிதமாயிருக்கும்.

182. ஈஶ்வரஸ்வரூபந்தான் - பரத்வம், வ்யூஹம், விப₄ வம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்று அஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும்.

183. அவற்றில் பரத்வமாவது - அகாலகால்யமான b நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யமுக்தர்க்கு போ₄க்₃ய னாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கும் இருப்பு.

184. வ்யூஹமாவது-ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாரார்த்த₂ மாகவும், ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்த₂மாகவும், உபாஸகாநு-க்₃ரஹார்த்த₂மாகவும், ஸங்கர்ஷண-ப்ரத்₃யும்ந - அநிருத்₃த₄ ரூபேண நிற்கும் நிலை.

a திருவாய் 3.2-1. b திருவாய் 2.8-4

185. பரத்வத்தில் ஜ்ஞாநாதிகளாறும் பூர்ணமாயிருக்கும்; வ்யூஹத்தில் இவ்விரண்டு குணம் ப்ரகடமாயிருக்கும்.

186. அதில் ஸங்கர்ஷணர் - ஜ்ஞாநபலங்களிரண்டோடுங்கூடி ஜீவதத்வத்தை அதிஷ்டித்து, அத்தை ப்ரக்ருதியில்நின்றும் விவேகித்து, ப்ரத்யும்நாவஸ்தையையும் புஜித்து, ஶாஸ்த்ரப்ரவர்த்தநத்தையும், ஜகத்ஸம்ஹாரத்தையும் பண்ணக்கடவராயிருப்பர்.

187. ப்ரத்யும்நர் - ஐஶ்வர்யவீர்யங்களிரண்டோடுங்கூடி, மநஸ்தத்வத்தை அதிஷ்டித்து, தர்மோபதேஶத்தையும், மநுசதுஷ்டயம் தொடக்கமான ஶுத்தவர்க்கஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவராயிருப்பர்.

188. அநிருத்தர்-ஶக்தி தேஜஸ்ஸுக்களிரண்டோடுங்கூடி, ரக்ஷணத்துக்கும், தத்வஜ்ஞாநப்ரதாநத்துக்கும், காலஸ்ருஷ்டிக்கும், மிஶ்ரஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர்.

189. விபவம்-அநந்தமாய், கௌண முக்ய பேதத்தாலே பேதித்திருக்கும்.

190. மநுஷ்யத்வம், திர்யக்த்வம், ஸ்தாவரத்வம்போலே கௌணத்வமும்இச்சையாலே வந்தது;ஸ்வரூபேண அன்று.

191. அதில் அப்ராக்ருத விக்ரஹங்களுமாய், அஜஹத்ஸ்வபாவவிபவங்களுமாய், தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலேயிருக்கக்கடவதான முக்ய ப்ராதுர்பாவங்களெல்லாம் முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யங்களாயிருக்கும்.

192. விதி ஶிவ பாவக வ்யாஸ ஜாமதக்ந்யார்ஜுந வித்தேஶாதிகளாகிற கௌண ப்ராதுர்பாவங்களெல்லாம் அஹங்காரயுக்த ஜீவர்களை அதிஷ்டித்து நிற்கையாலே முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யங்கள்.

193. நித்யோதித ஶாந்தோதிதாதி பேதமும், ஜாக்ரத் ஸ்வப்நாதியான சாதுராத்ம்யமும், கேஶவாதி மூர்த்யந்தரமும், ஷட்த்ரிம்ஶத் பேதபிந்நமான பத்மநாபாதிவிபவமும், உபேந்த்ர த்ரிவிக்ரம ததிபக்த ஹயக்ரீவ நரநாராயண ஹரி க்ருஷ்ண மத்ஸ்ய கூர்ம வராஹாத்யவதார விஶேஷங்களும், அவற்றினுடைய புஜ-ஆயுத - வர்ண - க்ருத்ய - ஸ்தாநாதி - பேதங்களும், துரவதரங்களுமாய், குஹ்யதமங்களுமாய் இருக்கையாலே சொல்லுகிறிலோம்.

194. அவதாரங்களுக்கு ஹேது இச்சை₂.

195. ப₂லம் ஸாது₄பரித்ராணாதி₃ த்ரயம்.

196. பல ப்ரமாணங்களிலும் ப்₄ருகு₃ ஶாபாதி₃களாலே பிறந்தானென்கையாலே, அவதாரங்களுக்கு ஹேது கர்ம மாகவேண்டாவோ? என்னில்,

197. அவைதன்னிலே ஶாபம் வ்யாஜம்; அவதாரம் ஐச்சி₂கமென்று பரிஹரித்தது.

198. அந்தர்யாமித்வமாவது - அந்த: ப்ரவிஶ்ய நியந்தாவாயிருக்கை

199. ஸ்வர்க்க₃ நரகப்ரவேஶாதி₃ ஸர்வாவஸ்தை₂களிலும், ஸகலசேதநர்க்கும் துணையாய், அவர்களை விடாதே நிற்கிற நிலைக்குமேலே ஶுபா₄ஶ்ரயமான திருமேனியோடே கூடிக்கொண்டு, அவர்களுக்கு த்₄யேயனாகைக்காகவும், அவர்களை ரக்ஷிக்கைக்காகவும், ப₃ந்து₄பூ₄தனாய்க்கொண்டு ஹ்ருத₃ய கமலத்திலே எழுந்தருளியிருக்குமிருப்பு.

200. அர்ச்சாவதாரமாவது - உ "தமருகந்ததெவ்வுருவ மவ்வுருவம்" என்கிறபடியே சேதநர்க்கு அபி₄மதமான த்₃ரவ்யத்திலே விப₄வவிஶேஷங்கள் போலன்றிக்கே, தே₃ஶ காலாதி₃காரி நியமமில்லாதபடி ஸந்நிதி₄பண்ணி, அபராத₄ங்களைக் காணக்கண்ணிட்டு, அர்ச்சகபரதந்த்ரமான ஸமஸ்த வ்யாபாரங்களையும் உடையனாய்க்கொண்டு, கோயில்களிலும், க்₃ருஹங்களிலும் எழுந்தருளிநிற்கும் நிலை.

201. ருசிஜநகத்வமும், ஶுபா₄ஶ்ரயத்வமும், அஶேஷ லோக ஶரண்யத்வமும், அநுப₄வ்யத்வமும் எல்லாம் அர்ச்சாவதாரத்திலே பரிபூர்ணம்.

202. ஸ்வஸ்வாமிபா₄வத்தை மாறாடிக்கொண்டு அஜ்ஞரைப்போலேயும், அஶக்தரைப்போலேயும், அஸ்வதந்த்ரரைப் போலேயும் இருக்கச்செய்தேயும், அபாரகாருண்ய பரவஶனாய்க்கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
தத்வத்ரயம் முற்றிற்று.

---

உ முதல்திருவ 44.

# 3. அர்த்த₂பஞ்சகம்

ஸம்ஸாரியான சேதநனுக்குத் தத்வஜ்ஞாநம் பிறந்து உஜ்ஜீவிக்கும்போது, அர்த்த₂பஞ்சக ஜ்ஞாநம் உண்டாக வேணும். அர்த்த₂பஞ்சகஜ்ஞாநமாவது — (1) ஸ்வஸ்வரூப, (2) பரஸ்வரூப, (3) புருஷார்த்த₂ஸ்வரூப, (4) உபாயஸ்வரூப, (5) விரோதி₄ஸ்வரூபங்களை உள்ளபடி அறிகை. இவற்றில் ஓரொருவிஷயந்தான் - அஞ்சுபடிப்பட்டிருக்கும்.

1. ஸ்வஸ்வரூபம் என்கிறது - ஆத்மஸ்வரூபத்தை; ஆத்மஸ்வரூபந்தான் - நித்யர், முக்தர், ப₃த்₃த₄ர், கேவலர், முமுக்ஷுக்களென்று ஐந்து.

2. பரஸ்வரூபம் என்கிறது - ஈஶ்வரஸ்வரூபத்தை; ஈஶ்வரஸ்வரூபந்தான் - பரத்வம், வ்யூஹம், விப₄வம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்று ஐந்து.

3. புருஷார்த்த₂ஸ்வரூபம் என்கிறது - புருஷனாலே அர்த்தி₂க்கப்படுமது புருஷார்த்த₂ம். அந்தப் புருஷார்த்த₂ந்தான் - த₄ர்ம, அர்த்த₂, காம, ஆத்மாநுப₄வ, ப₄க₃வத₃நுப₄வமென்று ஐந்து.

4. உபாயஸ்வரூபமென்கிறது - கர்ம, ஜ்ஞாந, ப₄க்தி, ப்ரபத்தி, ஆசார்யாபி₄மாநமென்று ஐந்து.

5. விரோதி₄ஸ்வரூபமென்கிறது - ஸ்வரூபவிரோதி₄, பரத்வவிரோதி₄, புருஷார்த்த₂விரோதி₄, உபாயவிரோதி₄, ப்ராப்திவிரோதி₄யென்று ஐந்து.

1. (1) இவற்றில் நித்யராவார் - ஒருநாளும் ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மாகிற அவத்₃யமின்றிக்கே நிரவத்₃யராய், ப₄க₃வத₃நுப₄வாநுகூல்யைகபோ₄கராய், a "வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசுதேவன்" என்கிற ஸ்ரீவைகுண்ட₂நாத₂னுக்கு b "விண்ணாட்டவர் மூதுவர்" என்கிறபடியே பட்டங்கட்டுகைக்கு உரியராம்படி மூப்பரான மந்த்ரிகளாய், ஈஶ்வரநியோக₃ாத் ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாரங்களைப்



a பெரியாழ்திரு 2-6-3. b திருவிருத்தம் 2.

பண்ணவும் ஶக்தராய், பரவ்யூஹாதி₃ ஸர்வாவஸ்தை₂களிலும் தொடர்ந்தடிமைசெய்யக்கடவராய், aகோயில்கொள்தெய்வங்களான ஸேனைமுதலியார் தொடக்கமான அமரர்கள்.

(2) முக்தராவார் - ப₄க₃வத் ப்ரஸாத₃த்தாலே ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தால் வந்த க்லேஶமலங்களெல்லாம் கழிந்து ப₄க₃வத்ஸ்வரூப ரூப கு₃ண விப₄வங்களை அநுப₄வித்து, அவ்வநுப₄வஜநிதப்ரீதி உள்ளடங்காமையாலே வாயாரப் புகழ்ந்து, b மீட்சியின்றி வைகுந்தமாநகரத்திலே களித்து ஆநந்தி₃க்கிற முனிவர்கள்.

(3) ப₃த்₃த₄ராவார்-பாஞ்சபௌ₄திகமாய், அநித்யமாய், ஸுக₂து₃:க்கா₂நுப₄வபரிகரமாய், ஆத்மவிஶ்லேஷத்தில் து₂ர்ஶந ஸ்பர்ஶநயோக்₃யமல்லாதபடி அஶுத்₃த₄ாஸ்பத₃மாய், அஜ்ஞாந அந்யதா₂ஜ்ஞாந விபரீதஜ்ஞாநஜநகமான ஸ்வதே₃ஹமே ஆத்மாவாகவும், ஶப்₃தா₃தி₃ விஷயாநுப₄வஜநிதமான ஸ்வதே₃ஹபோஷணமே புருஷார்த்₂மாகவும், ஶப்₃தா₃தி₃விஷயாநுப₄வத்துக்கு உறுப்பாக வர்ணாஶ்ரம த₄ர்மங்களை அழியமாறியும், அஸேவ்யஸேவைபண்ணியும், பூ₄தஹிம்ஸைபண்ணியும், பரதா₃ர பரத்₃ரவ்யாபஹாரம் பண்ணியும், ஸம்ஸாரவர்த்த₄கராய், ப₄க₃வத்₃விமுக₂ரான சேதநர்.

(4) கேவலனாவான் - தனியிடத்திலே மிகவும் க்ஷுத்பிபாஸைகளாலே நலிவுபட்டவன், ப₄க்ஷ்யாப₄க்ஷ்ய விவேகம் பண்ணமாட்டாதே தன்னுடம்பைத் தானே ஜீவித்து ப்ரஸந்நனுமாபோலே ஸம்ஸார தா₃வாக்₃நியாலே தப்தனானவன்—ஸம்ஸார து₃:க்க₂நிவ்ருத்திக்கு உறுப்பாக ஶாஸ்த்ர ஜந்ய ஜ்ஞாநத்தாலே ப்ரக்ருத்யாத்மவிவேகம் பண்ணி, ப்ரக்ருதி - து₃:க்கா₂ஶ்ரயமாய், ஹேயபதா₃ர்த்த₂ஸமுதா₃யமாய் இருக்கிற ஆகாரத்தையும், ஆத்மா - ப்ரக்ருதே: பரனாய், பஞ்சவிம்ஶகனாய், ஸ்வயம்ப்ரகாஶனாய், ஸ்வதஸ்ஸுகி₂யாய், நித்யனாய், அப்ராக்ருதனாய் இருக்கிற ஆகா

a திருவாய் 8-6-5. b திருவாய்மொழி 4 10-11.

ரத்தையும் அநுஸந்தி4த்து, முன்பு தான் பட்ட து3:க்க2த்தின் க4நத்தாலே இவ்வல்பரஸத்திலே கால்தாழ்ந்து, aஉணர்முழுநலமான பரமாத்ம விவேகம் பண்ணமாட்டாதே, bஅமுதவெள்ளத்தானுஞ்சிறப்புவிட்டு, அவ்வாத்மப்ராப்திக்கு ஸாத4நமான ஜ்ஞாநயோக3த்திலே நிஷ்ட2னாய், யோக3ப2லமான ஆத்மாநுப4வமாத்ரத்தையே புருஷார்த்த2மாக அநுப4வித்து, பின்பு ஸம்ஸார ஸம்ப3ந்த4மும், ப4க3வத் ப்ராப்தியும் அற்று, யாவதா3த்மபா4வி அஶரீரியாய்க் கொண்டு திரிவானொருவன்.

(5) மோக்ஷத்திலே இச்சை2யுடையவர்களுக்கு முமுக்ஷுக்களென்று பேராகக்கடவது. இதுதான் - முமுக்ஷுக்களாய், உபாஸகராயிருப்பாரும், முமுக்ஷுக்களாய், ப்ரபந்நராயிருப்பாருமாய் இரண்டுபடிப்பட்டிருக்கும்.

2. (1) ஈஶ்வரவிஷயத்தில் பரத்வமாவது-பரமபத3த்திலே **(அவாக்யநாத3ர:)** என்று எழுந்தருளியிருக்கிற cஆதியஞ்சோதியுருவான பரவாஸுதே3வர்.

(2) வ்யூஹமாவது - ஸ்ருஷ்டி ஸ்தி2தி ஸம்ஹார கர்த்தாக்களான ஸங்கர்ஷண ப்ரத்3யும்ந அநிருத்3த4ர்கள்,

(3) விப4வமாவது - ராமக்ருஷ்ணாத்3யவதாரங்கள்.

(4) அந்தர்யாமித்வம்-இரண்டுபடிப்பட்டிருக்கும். அதாவது-1.d"அடியேனுள்ளான்"என்றும், e"எனதாவி"என்றும், f "என்னுயிர்" என்றும் சொல்லுகிறபடியே ஆத்மாவுக்குள்ளும், 2.g"போதிற்கமலவன்னெஞ்சம் புகுந்து" என்றும், h"அரவிந்தப்பாவையும் தானுமகம்படி வந்துபுகுந்து"என்றும் i "புந்தியிற்புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்தவழகன்" என்றும், j "உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதி" என்றும் சொல்லுகிறபடியே லக்ஷ்மீஸஹிதனாய், விலக்ஷண விக்3ரஹயுக்தனாய்க்கொண்டு, ஹ்ருத3யகமலத்துக்குள்ளே ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் ஸதா3ாவலோகநம்பண்ணிக் கொண்டும் எழுந்தருளியிருக்கும் இருப்பு.

---

aதிருவாய்மொழி1-1-2. bதிருவாசிரியம்2. cதிருவாய்3-5-5. dதிருவாய்மொழி8-8-2. e திருவாய் 2-3-4. f திருவாய்9-5-1. g பெரியாழ்-திரு 5-2-8. h பெரியாழ்-திரு 5-2-10. i திருமாலை 16. j திருமாலை 34.

(5) அர்ச்சாவதாரமாவது - ௨ "தமருகந்ததெவ்வுருவ மவ்வுருவந்தானே தமருகந்ததெப்பேர் மற்றப்பேர்" என்கிற படியே தனக்கென்ன ஒருருவும், ஓர் பெயரும் இன்றிக்கே, ஆஶ்ரிதருகந்த வடிவே வடிவாகவும், அவர்களிட்ட பெயுரே பெயராகவும், ஸர்வஜ்ஞனாயிருக்கச்செய்தே அஜ்ஞனைப் போலேயும், ஸர்வஶக்தனாயிருக்கச்செய்தே அஶக்தனைப் போலேயும், அவாப்த ஸமஸ்தகாமனாயிருக்கச்செய்தே ஸாபேக்ஷனைப்போலேயும், ரக்ஷகனாயிருக்கச்செய்தே ரக்ஷ்யம்போலேயும், ஸ்வஸ்வாமிபா₄வத்தை மாறுடிக்கொண்டு கண்ணுக்கு விஷயமாம்படி ஸர்வஸுலப₄னாய்க்கொண்டு, கோயில்களிலும், க்₃ருஹங்களிலும், தே₃ஶகாலாவதி₄யின்றிக்கே எழுந்தருளியிருக்கும் நிலை.

3. (1) புருஷார்த்த₂ங்களில், த₄ர்மமாவது - ப்ராணி ரக்ஷணத்துக்குறுப்பாகப் பண்ணும் வ்ருத்தி விஶேஷங்கள்.

(2) அர்த்த₂மாவது - வர்ணாஶ்ரமாநுரூபமாக த₄நதா₄ந்யங்களை ஸங்க்₃ரஹித்து தே₃வதாவிஷயங்களிலும், பைத்ருகமான கர்மங்களிலும், ப்ராணிகள் விஷயமாகவும், உத்க்ருஷ்டமான தே₃ஶகால பாத்ரங்களையறிந்து, த₄ர்ம பு₃த்₃த்₄யா வ்யயிக்கை.

(3) காமமாவது - (A) ஐஹலௌகிகமாயும், (B) பாரலௌகிகமாயும் த்₃விவித₄மாயிருக்கும்.

(A) இஹலோகத்தில் காமமாவது-பித்ரு மாத்ரு ரத்ந த₄ந தா₄ந்ய வஸ்த்ராந்ந பாந புத்ர மித்ர களத்ர பஶு க்₃ருஹ க்ஷேத்ர சந்த₃ந குஸும தாம்பூ₃லாதி₃ பதா₃ர்த்த₂ங்களில் ஶப்₃தா₃தி₃விஷயாநுப₄வத்தால் வந்த ஸுக₂ விஶேஷங்கள்.

(B) பரலோகத்தில் காமமாவது-இதில் விலக்ஷணமாய், தேஜோரூபமான ஸ்வர்க்கா₃தி₃ லோகங்களிலே சென்று, பசி தாக ஶோக மோஹ ஜரா மரணாதி₃கள் இன்றிக்கே, ஆர்ஜித்த புண்யத்துக்கீடாக அம்ருதபாநம்பண்ணி, அப்

௨ முதல்திருவ 44.

ஸரஸ்ஸுக்களோடே ஶப்₃தா₃தி₃ விஷயாநுப₄வம் பண்ணுகை.

(4) ஆத்மாநுப₄வமாவது - து₃:க்க₂நிவ்ருத்தி மாத்ரமான கேவலாத்மாநுப₄வ மாத்ரத்தையும் மோக்ஷமென்று சொல்லுவர்கள்.

(5) /(இனி, ப₄க₃வத₃நுப₄வரூபமான) பரமபுருஷார்த்த₂ லக்ஷண மோக்ஷமாவது-ப்ராரப்₃த₄ கர்மஶேஷமாய் அவஶ்ய மநுப₄ாவ்யமான புண்யபாபங்கள் நஶித்து, (அஸ்தி-ஜாயதே-பரிணமதே - விவர்த்த₄தே - அபக்ஷீயதே-விநஶ்யதி) என்கிற படியே ஷட்₃பா₄வ விகாராஸ்பத₃மாய், தாபத்ரயாஶ்ரய மாய், ப₄க₃வத் ஸ்வரூபத்தை மறைப்பித்து, விபரீதஜ்ஞா நத்தை ஜநிப்பிக்கக்கடவதாய்,ஸம்ஸாரவர்த்த₄கமான ஸ்தூ₂ல ஶரீரத்தை உபேக்ஷையோடே பொகட்டு, ஸுஷும்நா நாடி₃யாலே ஶிர:கபாலத்தை பே₄தி₃த்துப் புறப்பட்டு, ஸூக்ஷ்ம ஶரீரத்தோடே வானேற வழிபெற்று, a மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுள் அன்னதோரில்லி யினூடுபோய், ஸூக்ஷ்ம ஶரீரத்தையும் வாஸநாரேணுவை யும் விரஜாஸ்நாநத்தாலே கழித்து, ஸகலதாபங்களுமாறும் படி அமாநவ கரஸ்பர்ஶமும் பெற்று, ஶுத்₃த₄ஸத்வாத்மக மாய், பஞ்சோபநிஷண்மயமாய், ஜ்ஞாநாநந்த₃ஜநகமாய், ப₄க₃வத₃நுப₄வைகபரிகரமாய், b ஒளிக்கொண்ட சோதியுமாய் இருக்கிற அப்ராக்ருத விக்₃ரஹத்தைப்பெற்று, c முடியுடை வானவர் முறைமுறை யெதிர்கொள்ள, நிரதிஶயாநந்த₃ மயமான திருமாமணி மண்டபத்தை ப்ராபித்து, லக்ஷ்மீ ஸஹிதனுய், பூ₄மிநீளா நாயகனுய், விலக்ஷண விக்₃ரஹயுக் தனுய், d குழுமித்தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருருவான ஸ்ரீவைகுண்ட₂ நாத₂னை நித்யாநுப₄வம்பண்ணி, நித்யகிங்கரஸ்வப₄ாவனுகை.

4. (1) உபாயங்களில் கர்ம யோக₃மாவது - யஜ்ஞ, தா₃ந, தபோ, த்₄யாந, ஸந்த்₄யாவந்த₃ந, பஞ்சமஹாயஜ்ஞ,

/ ( ) சில ஸ்ரீகோஶங்களிலில்லை. a பெரிய திருமடல்.
b திருவாய் 2-3-10. c திருவாய் 10-9-8. d திருவாய் 5-5-10.

அக்₃நிஹோத்ர, தீர்த்த₂யாத்ரா, புண்யக்ஷேத்ரவாஸ,க்ருச்ச்₂ர, சாந்த்₃ராயண, புண்யநத₃ஸ்நாந, வ்ரத, சாதுர்மாஸ்ய, ப₂லமூலாஶந, ஶாஸ்த்ராப்₄யாஸ, ஸமாராத₄ந, ஜப, தர்ப்பணாதி₃த₄ர்மாநுஷ்ட₂ாநத்தால் வந்த காயஶோஷணத்தாலே பாபநாஶம் பிறந்து, அத்தாலே இந்த்₃ரியத்₃வாரா ப்ரஸரிக்கிற த₄ர்மபூ₄த ஜ்ஞாநத்துக்கு ஶப்₃த₃ாதி₃கள் விஷயமல்லாமையாலே விஷயஸாபேக்ஷை பிறந்து, யம நியம ஆஸந ப்ராணாயாம ப்ரத்யாஹார த்₄யாந த₄ாரண ஸமாதி₄ ரூபமான அஷ்டாங்க₃யோக₃ க்ரமத்தாலே யோக₃ாப்₄யாஸ காலத்தளவும் ஜ்ஞாநத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை. இதுதான் ஜ்ஞாநயோக₃த்துக்கு ஸஹகாரியுமாய், ஐஶ்வர்யத்துக்கு ப்ரத₄ாநஸாத₄நமுமாயிருக்கும்.

(2) ஜ்ஞாநயோக₃மாவது - இப்படி யோக₃ஜந்யமான ஜ்ஞாநத்துக்கு - ஹ்ருத₃யகமலம், ஆதி₃த்யமண்ட₃லம் தொடக்கமான ஸ்த₂லவிஶேஷங்களில் எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனை விஷயமாக்கி, அவ்விஷயந்தன்னை ஶங்க₂ சக்ரக₃த₃ாத₄ரமாய், பீதாம்ப₃ரயுக்தமாய், கிரீடாதி₃ நூபுராந்த தி₃வ்யபூ₄ஷணாலங்க்ருதமாய், லக்ஷ்மீஸஹிதமாகவும் அநுப₄வித்து, யோக₃ாப்₄யாஸ க்ரமத்தாலே அநுப₄வகாலத்தைப்பெருக்கி, அநவரத ப₄ாவநாரூபமாக்குகை. இதுதான் ப₄க்தியோக₃த்துக்கு ஸஹகாரியுமாய், கைவல்ய மோக்ஷத்துக்கும் ப்ரத₄ாநஸாத₄நமுமாய் இருக்கும்.

(3) ப₄க்தியோக₃மாவது - இப்படி தைலத₄ாராவத₃விச்சி₂ந்நஸ்ம்ருதிஸந்தாநரூபமான அநுப₄வம் ப்ரீதிரூபாபந்நமாகையும், அதுதன்னை அறியப்பார்த்தால் ப்ராரப்₃த₄ கர்மங்கழிகையும், ஸாத₄ந ஸாத்₄யங்களை அநுஸந்தி₄த்து, அதினுடைய ஸங்கோசவிகாஸமாம்படி பரிணமிப்பிக்கையும்.

(4) ப்ரபத்த்யுபாயமாவது - இப்படி கர்ம ஜ்ஞாநஸஹக்ருதையான ப₄க்தியோக₃த்தில் அஶக்தர்க்கும் அப்ராப்தர்க்கும் ஸுகரமுமாய், ஶீக்₄ர ப₂லப்ரத₃முமாய், உபாயம் ஸக்ருத்தாகையாலே உபாயாநுஷ்ட₂ாந ஸமநந்தரம் உண்டா

சக்கடவதான ப₄க₃வத்₃விஷயாநுப₄வங்களெல்லாம் ப்ராப்ய கோடிக₃டிதங்களாகையாலே ஸ்வரூபாநுரூபமாயிருக்கும்.

இதுதான் (A) ஆர்த்தரூப ப்ரபத்தியென்றும், (B) த்₃ருப்தரூப ப்ரபத்தியென்றும் இரண்டுபடிப்பட்டிருக்கும்.

(A) ஆர்த்தரூபப்ரபத்தியாவது - நிர்ஹேதுகப₄க₃வத் கடாக்ஷமடியாக ஶாஸ்த்ராப்₄யாஸத்தாலும், ஸதா₃சார்யோபதே₃ஶத்தாலும் யதா₂ர்த்தஜ்ஞாநம் பிறந்தவாறே, ப₄க₃வத₃நுப₄வத்துக்கு விபரீதமான தே₃ஹஸம்ப₃ந்த₄மும், தே₃ஶஸம்ப₃ந்த₄மும், தே₃ஶிகருடைய ஸஹவாஸமும் து₃ஸ்ஸஹமாய், ப₄க₃வத₃நுப₄வத்துக்கு ஏகாந்தமாம்படி விலக்ஷணமான தே₃ஹத்தையும், தே₃ஶத்தையும், தே₃ஶிகரையும் ப்ராபிக்கையில் த்வரை விஞ்சி, a ஓயுமூப்புப்பிறப் பிறப்புப்பிணி வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்தாயனுகையாலே, b "திருவேங்கடத்தானே! புகலொன்றில்லா அடியேன்" c "வேங்கடத்துறைவார்க்கு நம:" என்று பூர்ணப்ரபத்திபண்ணி, d "பல நீ காட்டிப்படுப்பாயோ" e "இன்னங் கெடுப்பாயோ" f "இக்கரையேறியிளைத்திருந்தேன்" g "அயடையவருளாய்" h "திருவாணை நின்னாணைகண்டாய்" i "இனி நான் போகலொட்டேன்" என்று தடுத்தும், வளைத்தும் பெறுகை.

(B) த்₃ருப்தரூப ப்ரபத்தியாவது - ஶரீராந்தர ப்ராப்தியிலும் ஸ்வர்க்க₃நரகாநுப₄வங்களிலும் விரக்தியும் பீ₄தியும் பிறந்து, அதினுடைய நிவ்ருத்திக்கும், ப₄க₃வத்ப்ராப்திக்கும் உறுப்பாக ஸதா₃சார்யோபதே₃ஶ க்ரமத்தாலே உபாய ஸ்வீகாரம்பண்ணி, விபரீதப்ரவ்ருத்திநிவ்ருத்தராய், வேத₃ விஹிதமான வர்ணாஶ்ரமாநுஷ்டா₂நமும், ப₄க₃வத்₃பா₄க₃வத கைங்கர்யமும், மாநஸ வாசிக காயிகங்களாலே யதா₂பலம்

a திருவாய் 3-3-9. b திருவாய் 6-10-10. c திருவாய் 3-3-6.
d திருவாய் 6-9-9. e திருவாய் 6-9-8. f பெரியாழ்-திரு 5-3-7.
g பெரியதிரு 11-8-6. h திருவாய் 10-10-2. i திருவாய் 10-10-1.

அநுஷ்டி₂த்து, ஈஶ்வரன் - ஶேஷியாய், நியந்தாவாய், ஸ்வாமியாய், ஶரீரியாய், வ்யாபகனாய், தா₄ரகனாய், ரக்ஷகனாய், போ₄க்தாவாய், ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், ஸர்வஸம்பூர்ணனாய், அவாப்தஸமஸ்தகாமனாய் இருக்கிற ஆகாரத்தையும், தான் - அவனுக்கு ஶேஷமாய், நியாம்யமாய், ஸ்வம்மாய், ஶரீரமாய், வ்யாப்யமாய், தா₄ர்யமாய், ரக்ஷ்யமாய், போ₄க்₃யமாய், அஜ்ஞனாய், அஶக்தனாய், அபூர்ணனாய், ஸாபேக்ஷனாய் இருக்கிற ஆகாரத்தையும், அநுஸந்தி₄த்துக்கொண்டு a "களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண்மற்றிலேன்" என்று உபாயத்தில் ஸர்வப₄ரங்களையும் அவன் பக்கலிலே பொகட்டு, நிர்ப₄ரனாயிருக்கை.

(5) ஆசார்யாபி₄மாநமாவது - இவை ஒன்றுக்கும் ஶக்தனன்றிக்கேயிருப்பானொருவனைக் குறித்து, இவனுடைய இழவையும், இவனைப்பெற்றால் ஈஶ்வரனுக்குண்டான ப்ரீதியையும் அநுஸந்தி₄த்து, ஸ்தநந்த₄யப்ரஜைக்கு வ்யாதி₄யுண்டானால் அது தன் குறையாக நினைத்து ஔஷத₄ஸேவைபண்ணும் மாதாவைப்போலே இவனுக்காகத் தான் உபாயாநுஷ்டா₂நம்பண்ணி ரக்ஷிக்கவல்ல பரமத₄யாளுவான மஹாபா₄க₃வதன் அபி₄மாநத்திலே ஒதுங்கி, b "வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டும்' என்று சொல்லுகிற படியே ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் அவனிட்ட வழக்காக்குகை. எம்பெருமான் தனித்து நித்யஸித்₃த₄ ப்ராப்யனாகநிற்கச்செய்தே ஸகலதே₃வதாந்தர்யாமியாய்க் கொண்டு ப்ராப்யனாகிறப்போலே, இவ்வாசார்யாபி₄மாநமும் தனியே உபாயமாகாநிற்கச்செய்தேயும், எல்லா உபாயங்களுக்கும் ஸஹகாரியுமாய் ஸ்வதந்த்ரமுமாய் இருக்கும்.

5. (1) விரோதி₄வர்க்க₃த்தில் ஸ்வரூபவிரோதி₄யாவது- தே₃ஹாத்மாபி₄மாநமும், அந்யஶேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும்.

---

a திருவாய் 5-8-8. b நாச்-திரு 10.10.

(2) பரத்வவிரோதி₄யாவது - தே₃வதாந்தரபரத்வ ப்ரதி பத்தியும், ஸமத்வப்ரதிபத்தியும், க்ஷுத்₃ரதே₃வதா விஷயத்தில் ஶக்தியோக₃ப்ரதிபத்தியும், அவதாரவிஷயத்தில் மாநுஷ ப்ரதிபத்தியும், அர்ச்சாவதார விஷயத்தில் அஶக்தி யோக₃ ப்ரதிபத்தியும்.

(3) புருஷார்த்த₂ விரோதி₄யாவது - புருஷார்த்தா₂ந் தரங்களில் இச்சை₂யும், தானுகந்த ப₄க₃வத்கைங்கர்யங்களில் இச்சை₂யும்

(4) உபாய விரோதி₄யாவது - உபாயாந்தர வைலக்ஷண்ய ப்ரதிபத்தியும், உபாயலாக₄வமும், உபேயகௌ₃ரவமும், விரோதி₄பா₃ஹுள்யமும்.

(5) ப்ராப்திவிரோதி₄யாவது - ப்ராரப்₃த₄ ஶரீரஸம்ப₃ந்த₄மும், அநுதாபஶூந்யமாய் கு₃ருவாய் ஸ்தி₂ரமாய் இருந்துள்ள ப₄க₃வத₃பசார பா₄க₃வதாபசார அஸஹ்யாபசாரங்களும். இவை எல்லாவற்றுக்கும் விரோதி₄யென்று பேராகக் கடவது. அந்நதோ₃ஷம் - ஜ்ஞாந விரோதி₄யாகக்கடவது. ஸஹவாஸதோ₃ஷம் - போ₄க₃விரோதி₄யாகக்கடவது. அபி₄மாநம் - ஸ்வரூபவிரோதி₄யாகக் கடவது.

இப்படி அர்த்த₂பஞ்சக ஜ்ஞாநம் பிறந்து முமுக்ஷுவாய் ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிற சேதநனுக்கு மோக்ஷஸித்₃தி₄யளவும் ஸம்ஸாரம் மேலிடாதபடி காலக்ஷேபம்பண்ணும் க்ரமம் - வர்ணாஶ்ரமாநுரூபமாகவும், வைஷ்ணவத்வாநுரூபமாகவும், அஶநாச்சா₂த₃நங்களை ஸம்பாதி₃த்து **"யத₃ந்ந: புருஷோ ப₄வதி தத₃ந்நாஸ்தஸ்ய தே₃வதா:"** என்கிறபடியே ஸகலபதா₃ர்த்த₂ங்களையும் ப₄க₃வத்₃விஷயத்திலே நிவேதி₃த்து, யதா₂ப₃லம் பா₄க₃வதகிஞ்சித்காரமும்பண்ணி, தே₃ஹதா₄ரண மாத்ரத்தை ப்ரஸாத₃ ப்ரதிபத்தியோடே ஜீவிக்கையும், வருந்தியும் தத்வஜ்ஞாநம் பிறப்பித்த ஆசார்யன் ஸந்நிதி₄யிலே-கிஞ்சித்காரத்தோடே அவனுக்கு அபி₄மதமாக வர்த்திக்கையும், ஈஶ்வரன் ஸந்நிதி₄யிலே-தன்னுடைய நீசத்வத்தை அநுஸந்தி₄க்கையும், ஆசார்யன் ஸந்

நிதி₄யில்-தன்னுடைய அஜ்ஞதையை அநுஸந்தி₄க்கையும், ஸ்ரீவைஷ்ணவ ஸந்நிதி₄யில்-தன்னுடைய பாரதந்த்ர்யத்தை அநுஸந்தி₄க்கையும், ஸம்ஸாரிகள் முன்னில் - தன்னுடைய வ்யாவ்ருத்தியை அநுஸந்தி₄க்கையும், ப்ராப்யத்தில்-த்வரையும், ப்ராபகத்தில்-அத்₄யவஸாயமும், விரோதி₄யில்-ப₄யமும், தே₃ஹத்தில்-அருசியும், ஆர்த்தியும், ஸ்வரூபத்தில்-உணர்த்தியும், ஸ்வரக்ஷணத்தில் - அஶக்தியும், உத்₃தே₃ஶ்யவிஷயத்தில் - கௌ₃ரவமும், உபகாரவிஷயத்தில் - க்ருதஜ்ஞதையும், உத்தாரகப்ரதிபத்தியும், அநுவர்த்திக்கையும் வேணும்

இப்படி ஜ்ஞாநாநுஷ்டா₂நங்களோடே கூடிவர்த்திக்குமவன் - ஈஶ்வரனுக்குப் பிராட்டிமாரிலும், நித்யமுக்தரிலும் அத்யந்தாபி₄மத விஷயமாகக்கடவன்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
அர்த்த₂பஞ்சகம் முற்றிற்று.

# 4. ஸ்ரீவசநபூ₄ஷணம்

**ஸ்ரீவசநபூ₄ஷணத்துக்கே உரியனவாய், இதின் இருவகையான ப்ரகரணபே₄த₃ம் முதலியவைகளைக் காட்டும் தனியன்கள்**

**ஆறு ப்ரகரணமாக வகுக்கும் ஶ்லோகம்**

**(1) புருஷகாரவைப₄வஞ்ச, (2) ஸாத₄நஸ்ய கௌ₃ரவம்**
**(3) தத₃தி₄காரிக்ருத்யம், (4) அஸ்ய ஸத்₃கு₃ருபஸேவநம்।**
**(5) ஹரித₃யாமஹைதுகீம், (6) கு₃ரோருபாயதாஞ்ச யோ**
**வசநபூ₄ஷணேऽவத₃ஜ்ஜக₃த்₃கு₃ரும் தமாஶ்ரயே ॥**

**ஸாங்க₃ஸகி₃லத்₃ரவிட₃ ஸம்ஸ்க்ருதரூப வேத₃,**
**ஸாரார்த்த₂ ஸங்க்₃ரஹ மஹாரஸ வாக்யஜாதம்।**
**ஸர்வஜ்ஞலோகு₃ரு நிர்மிதமார்யபோ₄க்₃யம்**
**வந்தே₃ ஸதா₃ வசநபூ₄ஷண தி₃வ்யஶாஸ்த்ரம் ॥**

**ஆகண்டோ₂த்கண்ட₂வைகுண்ட₂ப்ரியாணாம் கண்ட₂பூ₄ஷணம்।**
**கு₃ருணா ஜக₃தாமுக்தம் வ்யாப்தம் வசநபூ₄ஷணம் ॥**

### ஆறு ப்ரகரணமாக வகுக்கும் பாட்டு

(1) பேறுதருவிக்குமவள் தன் பெருமை
(2) ஆறு (3) பெறுவான்முறை (4) அவன்
கூறுகுருவைப்பனுவல் (5) கொள்வதிலையாகிய
குளிர்ந்தவருள்தான்
(6) மாறில் புகழ் நற்குருவின் வண்மை
யொடெலாம் வசநபூடணமதில்
தேறிட நமக்கருள் முடும்பையிறைவன்
கழல்கள் சேரென் மனனே.

### ஒன்பது ப்ரகரணமாக வகுக்கும் பாட்டு

(1) திருமாமகள்தன் சீரருளேற்றமும்
(2) திருமால்திருவடி சேர்வழிநன்மையும்
(3) அவ்வழியொழிந்தன அனைத்தின் புன்மையும்
(4) மெய்வழிஊன்றிய மிக்கோர்பெருமையும்
(5) ஆரணம்வல்லவர் அமருநன்னெறியையும்
(6) நாரணன்தான் தரு நற்குருநீதியும்
(7) சோதிவானருள் தூய மா குருவின்
பாதமாமலர் பணிபவர் தன்மையும்
(8) தீதில் வானவர்தேவன் உயிர்களை
ஏதுமின்றி யெடுக்கும்படியையும்
(9) மன்னியவின்பமு(ம்) மாகதியும் குரு
வென்னுநிலைபெறு மின்பொருள்தன்னையும்
அசைவிலாவேத மதனுனனைத்தையும்
வசனபூடண வழியாலருளிய
மறையவர்சிகாமணி வண்புகழ்முடும்பை
யிறையவனெங்கோ னேருலகாரியன்
தேன்மலர்ச்சேவடி சிந்தைசெய்பவர்
மாநிலத்தின்பமதெய்தி வாழ்பவரே.

லோகாசார்யக்ருதே லோகஹிதே வசநபூ,ஷணே ।
தத்த்வார்த்த, த,ர்ஶிநோ லோகே தந்நிஷ்ட,ாஶ்ச
ஸுது,ர்லப,ா: ॥

ஜக,த,ாசார்யரசிதே ஸ்ரீமத்,வசநபூ,ஷணே ।
தத்த்வஜ்ஞாநஞ்ச தந்நிஷ்ட,ாம் தே,ஹி நாத, யதீந்த்,ர மே ॥

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## முதல் ப்ரகரணம்

### உபோத்₃கா₄தம்

1. வேதா₃ர்த்த₂ம் அறுதியிடுவது - ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே.

2. ஸ்ம்ருதியாலே-பூர்வபா₄க₃த்தில் அர்த்த₂ம் அறுதியிடக்கடவது; மற்றையிரண்டாலும் - உத்தரபா₄க₃த்தில் அர்த்த₂ம் அறுதியிடக்கடவது

3. இவையிரண்டிலும் வைத்துக்கொண்டு, இதிஹாஸம் ப்ரப₃லம்.

4. அத்தாலே அது முற்பட்டது.

### புருஷகாரோபாய வைப₄வ ப்ரகரணம் 6-ல் 1.

### (i) புருஷகார வைப₄வம்

5. இதிஹாஸஶ்ரேஷ்ட₂மான ஸ்ரீராமாயணத்தால் - சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது; மஹாபா₄ரதத்தால் - தூ₃துபோனவன் ஏற்றம் சொல்லுகிறது.

6. இவையிரண்டாலும்-புருஷகாரவைப₄வமும், உபாய வைப₄வமும் சொல்லிற்றாயிற்று.

7. புருஷகாரமாம்போது-க்ருபையும், பாரதந்த்ர்யமும், அநந்யார்ஹத்வமும் வேணும்.

8. பிராட்டி முற்படப்பிரிந்தது-தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக; நடுவிற்பிரிந்தது - பாரதந்த்ர்யத்தை வெளியிடுகைக்காக; அநந்தரம் பிரிந்தது - அநந்யார்ஹத்வத்தை வெளியிடுகைக்காக.

9. ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களிரண்டிலும் - புருஷகாரத்வம் தோற்றும்.

10. ஸம்ஶ்லேஷத₃ஶையில் - ஈஶ்வரனைத் திருத்தும்; விஶ்லேஷத₃ஶையில் - சேதநனைத் திருத்தும்.

11. இருவரையும் திருத்துவதும் உபதே₃ஶத்தாலே.

12. உபதே₃ஶத்தாலே இருவருடையவும் கர்மபாரதந்த்ர்யம் குலையும்.

13. உபதே₃ஶத்தால் மீளாதபோது - சேதநனை அருளாலே திருத்தும்; ஈஶ்வரனை அழகாலே திருத்தும்.

### (ii) உபாய வைப,வம்

14. அறியாத அர்த்த,ங்களை அடைய அறிவித்து, ஆசார்யக்ருத்யத்தையும், புருஷகாரக்ருத்யத்தையும், உபாய க்ருத்யத்தையும் தானே ஏறிட்டுக்கொள்ளுகையாலே மஹாப,ாரதத்தில் உபாயவைப,வம் சொல்லிற்றாயிற்று.

### (iii) உப,யலாத,ரண வைப,வம்

15. புருஷகாரத்துக்கும், உபாயத்துக்கும் வைப,வமாவது - தோ,ஷத்தையும், கு,ணஹாநியையும் பார்த்து உபேக்ஷியாத அளவன்றிக்கே, அங்கீ,காரத்துக்கு அவை தன்னையே பச்சையாக்குகை.

16. இரண்டும்-இரண்டும் குலையவேணுமென்றிருக்கில், இரண்டுக்கும் இரண்டும் உண்டாய்த்ததாம்.

17. இரண்டும் குலைந்ததென்றிருக்கில், இத்தலைக்கு இரண்டும் உண்டாய்த்ததாம்.

18. ராக்ஷஸிகள் தோ,ஷம் ப்ரஸித்,த,ம்.

19 ஜிதேந்த்,ரியரில் தலைவனாய், ஆஸ்திகாக்,ரேஸரனாய், "கேஶவஸ்யாத்மா" என்று க்ருஷ்ணனுக்கு தா,ரகனாயிருக்கிற அர்ஜுநனுக்கு தோ,ஷமேதென்னில், ப,ந்து,க்கள் பக்கல் - ஸ்நேஹமும், காருண்யமும், வத,பீ,தியும்.

20. த்,ரௌபதீ,பரிப,வம் கண்டிருந்தது - க்ருஷ்ணாபி,ப்ராயத்தாலே ப்ரத,ாநதோ,ஷம்.

21. பாண்ட,வர்களையும் நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க, வைத்தது-த்,ரௌபதி,யுடைய மங்க,ளஸூத்ரத்துக்காக.

22. அர்ஜுநனுக்கு - தூ,த்யஸாரத்,யங்கள் பண்ணிற்றும், ப்ரபத்த்யுபதே,ஶம் பண்ணிற்றும் இவளுக்காக.

ஆறு ப்ரகரணங்களில் ஒன்றாவதான
புருஷகாரோபாய வைப,வ ப்ரகரணம் முற்றிற்று.

### உபாயப்ரகரணம் 6-ல் 2.

23. ப்ரபத்திக்கு - தே,ஶநியமமும், காலநியமமும், ப்ரகார நியமமும், அதி,காரி நியமமும், ப,லநியமமும் இல்லை.

24. விஷயநியமமே உள்ளது.

25. கர்மத்துக்கு - புண்யக்ஷேத்ரம், வஸந்தாதி₃காலம், ஶாஸ்த்ரோக்தங்களான தத்தத் ப்ரகாரங்கள், த்ரைவர்ணிகர் என்றிவையெல்லாம் வ்யவஸ்தி₂தங்களாயிருக்கும்.

26. **"ஸ ஏஷ தே₃ஶ: கால:"** என்கையாலே இதுக்கு தே₃ஶகால நியமமில்லை.

27. இவ்வர்த்த₂ம்-மந்த்ர ரத்நத்தில் ப்ரத₂மபத₃த்திலே ஸுஸ்பஷ்டம்.

28. ப்ரகாரநியதியில்லை என்னுமிடம் எங்கும் காணலாம்.

29. த்₃ரௌபதி₃ ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று; அர்ஜுநன்-நீசர்நடுவேயிறே இவ்வர்த்த₂ம்கேட்டது.

30 ஆகையால் ஶுத்₃த்₄யஶுத்₃தி₄களிரண்டும் தேட வேண்டா, இருந்தபடியே அதி₄காரியாமித்தனை.

31. இவ்விடத்திலே வேல்வெட்டிப்பிள்ளைக்குப் பிள்ளை அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

32. அதி₄காரிநியமமின்றிக்கேயொழிந்தபடியென்? என்னில்; த₄ர்மபுத்ராதி₃களும், த்₃ரௌபதி₃யும், காகமும், காளியனும், ஸ்ரீக₃ஜேந்த்₃ராழ்வானும், ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானும், பெருமாளும், இளையபெருமாளும் தொடக்கமானவர்கள் ஶரணம் புகுருகையாலே அதி₄காரி நியமமில்லை.

33. ப₂லநியமமின்றிக்கேயொழிந்தபடியென்? என்னில்; த₄ர்மபுத்ராதி₃களுக்குப் ப₂லம் - ராஜ்யம். த்₃ரௌபதி₃க்குப் ப₂லம் - வஸ்த்ரம். காகத்துக்கும், காளியனுக்கும் ப₂லம் - ப்ராணம். ஸ்ரீக₃ஜேந்த்₃ராழ்வானுக்குப் ப₂லம்-கைங்கர்யம். ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானுக்குப் ப₂லம் - ராமப்ராப்தி. பெருமாளுக்குப் ப₂லம் - ஸமுத்₃ரதரணம். இளையபெருமாளுக்குப் ப₂லம்-ராமாநுவ்ருத்தி.

*34. விஷயநியமமாவது - கு₃ணபூர்த்தியுள்ள இடமே விஷயமாகை.

*35. பூர்த்தியுள்ளதும் - அர்ச்சாவதாரத்திலே.

36. ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்திபண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே.

---

* 34, 35 சூர்ணைகள் ஒன்றாகவும் சில பிரதிகளில் உள்ளன.

37. **"பூர்ணம்"** என்கையாலே, எல்லா கு₃ணங்களும் புஷ்கலங்கள்.

38. ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்₄யாதி₃கள் - இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாஶிப்பது இங்கே.

39. பூர்த்தியையும், ஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்துக் கொண்டு, தன்னை அநாத₃ரிக்கிறவர்களைத் தான் ஆத₃ரித்து நிற்கிறவிடம்.

40. பூ₄க₃த ஜலம்போலே-அந்தர்யாமித்வம். ஆவரண ஜலம்போலே-பரத்வம். பாற்கடல்போலே-வ்யூஹம். பெருக்காறுபோலே - விப₄வங்கள். அதிலே தேங்கின மடுக்கள் போலே - அர்ச்சாவதாரம்.

41. இதுதான்—ஶாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே விஷயாந்தரங்களிலே மண்டி விமுக₂ராய்ப்போரும் சேதநருக்கு வைமுக்₂யத்தைமாற்றி ருசியை விளைக்கக்கடவதாய், ருசிபிறந்தால் உபாயமாய், உபாயபரிக்₃ரஹம் பண்ணினால் போ₄க்₃யமுமாயிருக்கும்.

42. இதில் ப்ரபத்திபண்ணும் அதி₄காரிகள் - மூவர்.

43. அஜ்ஞரும், ஜ்ஞாநாதி₄கரும், ப₄க்திபரவஶரும்.

44. அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர் - அஸ்மதா₃தி₃கள். ஜ்ஞாநாதி₄க்யத்தாலே ப்ரபந்நர் - பூர்வாசார்யர்கள். ப₄க்தி பாரவஶ்யத்தாலே ப்ரபந்நர் - ஆழ்வார்கள்.

45 இப்படி சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற.

46 இம்மூன்றும் மூன்று தத்வத்தையும் பற்றி வரும்.

47. [a] "என்னான் செய்கேன்" என்கிறவிடத்திலே இம்மூன்றும் உண்டு.

48. அங்கு ஒன்றைப் பற்றியிருக்கும்.

49. முக்₂யமதுவே.

50 **"அவித்₃யாத:"** என்கிற ஶ்லோகத்திலே இம்மூன்றும் சொல்லிற்று.

51. **"இத₃ம் ஶரணமஜ்ஞாநாம்".**

---

[a] திருவாய் 5.8-3.

52. ப₄க்திதன்னிலே அவஸ்தா₂பே₄த₃ம் பிறந்தவாறே இதுதான் குலையக்கடவதாயிருக்கும்.

53. தன்னைப் பேணவும் பண்ணும், த₄ரிக்கவும் பண்ணும்.

54. இந்த ஸ்வப₄ாவவிஶேஷங்கள் - கல்யாணகு₃ணங்களிலும், திருச்சரங்களிலும், திருநாமங்களிலும், திருக்குழலோசையிலும் காணலாம்.

55. இதுதன்னைப் பார்த்தால் பிதாவுக்குப் புத்ரன் எழுத்துவாங்குமாபோலே இருப்பதொன்று.

56. இதுதனக்கு ஸ்வரூபம்-தன்னைப்பொருதொழிகை.

57. அங்க₃ம்-தன்னை ஒழிந்தவற்றைப்பொருதொழிகை.

58. உபாயம் - தன்னைப்பொறுக்கும்.

59. உபாயாந்தரம் - இரண்டையும் பொறுக்கும்.

60. இது - இரண்டையும் பொருது.

61. ப₄லத்துக்கு - ஆத்மஜ்ஞானமும், அப்ரதிஷேத₄முமே வேண்டுவது.

62. அல்லாதபோது - ப₃ந்த₄த்துக்கும், பூர்த்திக்கும் கொத்தையாம்.

63. ஆடத்தைப் போக்கிக்கொள்ளுகிறோமென்று ப்₄ரமித்து அத்தை விளைத்துக்கொள்ளாதொழிகையே வேண்டுவது.

64. ரக்ஷணத்துக்கு அபேக்ஷிதம்-ரக்ஷ்யத்வாநுமதியே.

65. எல்லா உபாயத்துக்கும் பொதுவாகையாலும், சைதந்ய கார்யமாகையாலும், ப்ராப்திதஶையிலும் அநுவர்த்திக்கையாலும், ஸ்வரூபாதிரேகி அல்லாமையாலும் அசித்₃வ்யாவ்ருத்தி வேஷத்தை ஸாத₄நமாக்கவொண்ணாது.

66. அசித்₃வ்யாவ்ருத்திக்கு ப்ரயோஜநம்-உபாயத்தில் உபகாரஸ்ம்ருதியும், உபேயத்தில் உகப்பும்.

67. a "உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்" என்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம் அவன் நினைவு.

68. அதுதான் எப்போதும் உண்டு.

---

a பெரியதிரு 2-7-1.

69. அது ப,லிப்பது - இவன் நினைவு மாறினால்.

70. 'அந்திமகாலத்துக்குத் தஞ்சம், இப்போது தஞ்சம் என் ? என்கிற நினைவுகுலைகை' என்று ஜீயர் / அருளிச் செய்தார்.

71. ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்கு உகப்பானும் அவனே.

72. ஸ்வயத்நநிவ்ருத்தி - பாரதந்த்ர்யப,லம். ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தி - ஶேஷத்வப,லம்.

73. பரப்ரயோஜந ப்ரவ்ருத்தி - ப்ரயத்நப,லம். தத்,விஷயப்ரீதி - சைதந்யப,லம்.

74. அஹமர்த்த,த்துக்கு ஜ்ஞாநாநந்த,ங்கள் தடஸ்த,மென்னும்படி தா,ஸ்யமிறே அந்தரங்க,நிரூபகம்.

75. இதுதான் வந்தேறியன்று.

76. ஸ்வாதந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும் வந்தேறி.

77. ஶேஷத்வவிரோதி,-ஸ்வாதந்த்ர்யம், தச்சே,ஷத்வவிரோதி, - ததி,தரஶேஷத்வம்.

78. அஹங்காரமாகிற ஆர்ப்பைத் துடைத்தால் ஆத்மாவுக்கு அழியாதபேர் அடியானென்றிறே.

79. க்ரூ,ராமகுலாதி,களால் வரும் பேர் அநர்த்த,ஹேது.

80. **"ஏகாந்தீ வ்யபதே,ஷ்டவ்ய:"**

**ஆறு ப்ரகரணங்களில் இரண்டாவதான உபாயப்ரகரணம் முற்றிற்று.**

## அதி,காரிநிஷ்ட,ாப்ரகரணம் 6-ல் 3.

81. உபாயத்துக்கு - பிராட்டியையும், த்,ரௌபதி,யையும், திருக்கண்ணமங்கையாண்டானையும்போலே இருக்க வேணும். உபேயத்துக்கு - இளையபெருமாளையும், பெரிய உடையாரையும், பிள்ளை திருநறையூர் அரையரையும், சிந்தயந்தியையும்போலேயிருக்கவேணும்.

82. பிராட்டிக்கும், த்,ரௌபதி,க்கும் வாசி-ஶக்தியும், அஶக்தியும்.

---

அ 8 / (பா) அருளிச்செய்வர்.

83. பிராட்டி - ஸ்வஶக்தியை விட்டாள்; த்₃ரௌபதி₃- லஜ்ஜையை விட்டாள்; திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்.

84. பசியராயிருப்பார் - அட்டசோறும் உண்ண வேணும் அடுகிறசோறும் உண்ணவேணும் என்னுமா போலே, காட்டுக்குப் போகிறபோது இளையபெருமாள் - பிரியில் த₄ரியாமையை முன்னிட்டு 'அடிமை செய்ய வேணும்' 'எல்லா அடிமையும் செய்யவேணும்' 'ஏவிக் கொள்ளவும் வேணும்' என்றார்; படைவீட்டில் புகுந்த பின்பு காட்டில் தனியிடத்தில் ஸ்வயம்பாகத்திலே வயிற் றைப் பெருக்கினபடியாலே ஒப்பூணுண்ணமாட்டாதே, ஒரு திருக்கையாலே - திருவெண்கொற்றக் குடையையும், ஒரு திருக்கையாலே - திருவெண்சாமரத்தையும் த₄ரித்து அடிமை செய்தார்.

85. பெரிய உடையாரும், பிள்ளை திருநறையூர் அரையரும் உடம்பை உபேக்ஷித்தார்கள். சிந்தயந்திக்கு- உடம்பு தன்னடையே போயிற்று.

86. உபாயத்துக்கு-ஶக்தியும், லஜ்ஜையும், யத்நமும் குலையவேணும் - உபேயத்துக்கு; ப்ரேமமும், தன்னைப்பேணா மையும், த₄ரியாமையும் வேணும்.

87. இவனுக்கு வைத₄மாய் வருமதிறே த்யஜிக்கலா வது; ராக₃ப்ராப்தமாய் வருமது த்யஜிக்கவொண்ணாதிறே.

88. உபாயத்வாநுஸந்தா₄நம் - நிவர்த்தகம்; உபேய த்வாநுஸந்தா₄நம்-ப்ரவர்த்தகம்.

89. அப்ராப்தவிஷயங்களிலே ஸக்தனானவன் அது லபி₄க்கவேணுமென்றிராநின்றால், ப்ராப்தவிஷய ப்ரவண னுக்குச் சொல்லவேண்டாவிறே.

90. அநுஷ்டா₂நமும், அநநுஷ்டா₂நமும் உபாயகோடி யிலே அந்வயியாது.

91. அநந்யோபாயத்வமும், அநந்யோபேயத்வமும், அநந்யதை₃வத்வமும் குலையும்படியான ப்ரவ்ருத்தி காணா நின்றோமிறே.

92. ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்.

93. உபாயபூ₄லமாய், உபேயாந்தர்பூ₄தமாய் இருக்குமது உபாயப்ரதிப₃ந்த₄கமாகாது.

94 ஸாத்₄யஸமாநம் விளம்ப₃ாஸஹமென்றிறே ஸாத₄நத்துக்கேற்றம்; ஸாத்₄யப்ராவண்யமடியாகவிறே ஸாத₄நத்திலிழிகிறது.

95. இவனுக்குப் பிறக்கும் ஆத்மகு₃ணங்களெல்லாவற்றுக்கும் ப்ரத₄ாநஹேது-இந்த ப்ராவண்யம்.

96. a "மாற்பால்மனஞ்சுழிப்ப" "பரமாத்மநி யோ ரக்த:" b "கண்டுசேட்டுற்றுமோந்து".

97. ஆத்மகு₃ணங்களில் ப்ரத₄ாநம்-ஶமமும், த₃மமும்.

98. இவை இரண்டுமுண்டானால் ஆசார்யன் கைபுகுரும். ஆசார்யன் கைபுகுந்தவாறே திருமந்த்ரம் கைபுகுரும். திருமந்த்ரம் கைபுகுந்தவாறே ஈஶ்வரன் கைபுகுரும். ஈஶ்வரன் கைபுகுந்தவாறே c "வைகுந்தமாநகர் மற்றது கையதுவே" என்கிறபடியே ப்ராப்யபூ₄மி கைபுகுரும்.

99. ப்ராப்யலாப₄ம் - ப்ராபகத்தாலே. ப்ராபகலாப₄ம் - திருமந்த்ரத்தாலே. திருமந்த்ரலாப₄ம் - ஆசார்யனாலே. ஆசார்யலாப₄ம் - ஆத்மகு₃ணத்தாலே.

100. இதுதான்-ஐஶ்வர்யகாமர்க்கும், உபாஸகர்க்கும், ப்ரபந்நர்க்கும் வேணும்.

101. மூவரிலும் வைத்துக்கொண்டு மிகவும் வேண்டுவது ப்ரபந்நனுக்கு.

102. மற்றையிருவர்க்கும்-நிஷித்₃த₄விஷயநிவ்ருத்தியே அமையும்; ப்ரபந்நனுக்கு - விஹிதவிஷயநிவ்ருத்தி தன்னேற்றம்.

103. இதுதான் சிலர்க்கு - அழகாலே பிறக்கும். சிலர்க்கு - அருளாலே பிறக்கும். சிலர்க்கு-ஆசாரத்தாலே பிறக்கும்.

---

a மூன்-திருவ 14. b திருவாய் 4-9-10. c திருவாய் 4-10-11.

104. பிறக்கும் க்ரமம் என்னென்னில், அழகு - அஜ்ஞாநத்தை விளைக்கும். அருள் - அருசியை விளைக்கும். ஆசாரம்-அச்சத்தை விளைக்கும்.

105. இவையும் ஊற்றத்தைப்பற்றச் சொல்லுகிறது.

106. அருசி பிறக்கும்போதைக்கு தோ₃ஷத₃ர்ஶநம் அபேக்ஷிதமாயிருக்கும்.

107. அது ப்ரத₄ாநஹேதுவன்று.

108. அப்ராப்ததையே ப்ரத₄ாநஹேது.

109. ப₄க₃வத்₃விஷயத்தில் இழிகிறதும் - கு₃ணங்கண்டன்று; ஸ்வரூபப்ராப்தமென்று.

110. இப்படி கொள்ளாதபோது, கு₃ணஹீநமென்று நினைத்த த₃ஶையில் - ப₄க₃வத்₃விஷய ப்ரவ்ருத்தியும், தோ₃ஷாநுஸந்த₄ாநத₃ஶையில் - ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியுங்கூடாது.

111. a"கொடியவென்னெஞ்சமவனென்றே கிடக்கும்" b "அடியேன் நான் பின்னும் உன் சேவடியன்றி நயவேன்" - என்னுநின்றார்களிறே.

112. கு₃ணக்ருததா₃ஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூபப்ரயுக்தமான தா₃ஸ்யமிறே ப்ரத₄ாநம்.

113. அநஸூயைக்குப் பிராட்டி அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

114. ப₄க₃வத்₃விஷய ப்ரவ்ருத்தி பின்னை சேருமோவென்னில், அதுக்கடி-ஸம்ப₃ந்த₄ம். அதுதான்-ஔபாதி₄கமன்று, ஸத்தாப்ரயுக்தம்.

115. அந்த ஸத்தை ப்ராவண்ய கார்யமான அநுப₄வமில்லாதபோது குலையும்; அது குலையாமைக்காக வருமவையெல்லாம் அவர்ஜநீயங்களுமாய், ப்ராப்தங்களுமாயிருக்கும்; ஆகையாலே ப₄க₃வத்₃விஷயப்ரவ்ருத்தி சேரும்.

116. ப்ராபகாந்தர பரித்யாக₃த்துக்கும் - அஜ்ஞாநாஶக்திகளன்று, ஸ்வரூபவிரோத₄மே ப்ரத₄ாநஹேது.

117. ப்ராபகாந்தரம் - அஜ்ஞர்க்கு உபாயம்.

---

a திருவாய் 5-3-5. b பெரியதிரு 11-8-7.

118. ஜ்ஞாநிகளுக்கு அபாயம்.

119. அபாயமாயிற்றது-ஸ்வரூப நாஶகமாகையாலே.

120. ª "நெறிகாட்டி நீக்குதியோ" என்னுநின்றதிறே.

121. **1. "வர்த்ததே மே மஹத்₃ப₄யம்"** என்கையாலே ப₄யஜநகம்; **2. "மா ஶுச:"** என்கையாலே ஶோகஜநகம்.

122 இப்படி கொள்ளாதபோது - ஏதத்ப்ரவ்ருத்தியில் ப்ராயஶ்சித்தவிதி₄ கூடாது.

123. திருக்குருகைப்பிரான்பிள்ளான் பணிக்கும்படி - 'மதி₃ராபி₃ந்து₃ மிஶ்ரமான ஶாதகும்ப₄மயகும்ப₄க₃ததீர்த்த₂ ஸலிலம்போலே, அஹங்கார மிஶ்ரமான உபாயாந்தரம்'.

124. ரத்நத்துக்குப் பலகரைபோலேயும், ராஜ்யத்துக்கு எலுமிச்சம்பழம்போலேயும், ப₂லத்துக்கு ஸத்₃ருஶமன்று.

125. தான் த₃ரித்₃ரனாகையாலே தனக்குக் கொடுக்கலாவதொன்றுமில்லை.

126. அவன் தந்தத்தைக் கொடுக்குமிடத்தில் அடைவிலே கொடுக்கில் அநுபாயமாம்; அடைவுகெடக் கொடுக்கில் களவு வெளிப்படும்.

127. ப₄ர்த்ருபே₄ாக₃த்தை வயிறு வளர்க்கைக்குறுப் பாக்குமாபோலே, இருவர்க்கும் அவத்₃யம்.

128. வேதா₃ந்தங்களுபாயமாக விதி₄க்கிறபடியென் ? என்னில்.

129. ஔஷத₄ஸேவை பண்ணுதவர்களுக்கு அபி₄மத வஸ்துக்களிலே ஆத்தைக் கலசியிடுவாரைப்போலே ஈஶ்வரனைக் கலந்து விதி₄க்கிறதித்தனை.

130. இத்தை ப்ரவர்த்திப்பித்தது பரஹிம்ஸையை நிவர்த்திப்பிக்கைக்காக.

131. இதுதான்-பூர்வ விஹித ஹிம்ஸைபோலே, விதி₄ நிஷேத₄ங்கள் இரண்டுக்கும் குறையில்லை.

132. அத்தை-ஶாஸ்த்ரவிஶ்வாஸத்துக்காக விதி₄த்தது. இத்தை-ஸ்வரூப விஶ்வாஸத்துக்காக விதி₄த்தது.

133. அது தோல்புரையே போம், இது மர்மஸ்பர்ஶி.

ª பெரியதிருவ 6.

134. இதுதான்-கர்மஸாத்,யமாகையாலே து,ஷ்கரமு மாயிருக்கும்.

135. ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்கள் ஒன்றுமில்லை.

136. ஆத்மயாதா,த்ம்யஜ்ஞாந கார்யமாகையாலே-ஸ்வரூபத்துக்கு உசிதமுமாய், a "சிற்றவேண்டா" என்கிற படியே நிவ்ருத்திஸாத்,யமாகையாலே, ஸௌகரமுமாயிருக்கும்.

137. பூர்ணவிஷயமாகையாலே, பெருமைக்கீடாகப் பச்சையிடவொண்ணாது.

138. ஆபி,முக்,யஸூசகமாத்ரத்திலே ஸந்தோஷம் விளையும்.

139. பூர்த்தி-கைவாங்காதே மேல்விழுகைக்கு ஹேது வித்தனை.

140. **1. "பத்ரம் புஷ்பம்" 2. "அந்யத் பூர்ணாத்"** b "புரிவதுவும் புகைபூவே".

141. புல்லைக்காட்டி அழைத்துப் புல்லையிடுவாரைப் போலே ப,லஸாத,நங்களுக்கு பே,த,மில்லை.

142. ஆகையாலே ஸௌக,ரூபமாயிருக்கும்.

143. இவன் அவனைப்பெற நினைக்கும்போது இந்த ப்ரபத்தியும் உபாயமன்று.

144. அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று.

145. இவையிரண்டும் - ஸ்ரீப,ரதாழ்வான் பக்கலிலும், ஸ்ரீகு,ஹப்பெருமாள் பக்கலிலும் காணலாம்.

146. ஸ்ரீப,ரதாழ்வானுக்கு - நன்மைதானே தீமையாயிற்று. ஸ்ரீகு,ஹப்பெருமாளுக்கு - தீமைதானே நன்மையாயிற்று.

147. ஸர்வாபராத,ங்களுக்கும் ப்ராயஶ்சித்தமான ப்ரபத்திதானும்-அபராத,கோடியிலேயாய், க்ஷாமணம்பண்ண வேண்டும்படி நில்லாநின்றதிறே.

148. நெடுநாள் அந்யபரையாய்ப்போந்த ப,ார்யை லஜ்ஜாப,யங்களின்றிக்கே ப,ர்த்ருஸகாஶத்திலே நின்று

a திருவாய் 9-1-7. b திருவாய் 1-6-1.

'என்னை அங்கீ,கரிக்கவேணும்' என்று அபேக்ஷிக்குமா போலேயிருப்பதொன்று இவன் பண்ணும் ப்ரபத்தி.

149. க்ருபையாலே வரும் பாரதந்த்ர்யத்தைக் காட்டில், ஸ்வாதந்த்ர்யத்தாலே வரும் பாரதந்த்ர்யம் ப்ரப,லம்.

150. இவ்வர்த்த,த்தை வேத,புருஷன் அபேக்ஷித்தான்.

151. அபேக்ஷா நிரபேக்ஷமாக-திருவடிக்கும், ஸ்ரீகு,ஹப் பெருமாளுக்கும் இதுண்டாயிற்று.

152. இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடு மென்னுமிடம் அப,யப்ரதா,நத்திலும் காணலாம்.

153. இருவர் முன்னிடுகிறதும் - தந்தாங்குற்றங்களை ஶமிப்பிக்கைக்காக.

154. ஸ்வரூபஸித்,தி,யுமத்தாலே.

155. ஔபாதி,கமுமாய் நித்யமுமான பாரதந்த்ர்யம் இருவர்க்கும் உண்டிறே.

156. அநித்யமான இருவர் பாரதந்த்ர்யம் குலைவதும் அத்தாலே.

157. ஸஸாக்ஷிகமாகையாலே இப்ப,ந்த,த்தை இருவராலும் இல்லைசெய்யப்போகாது.

158. a "என்னை நெகிழ்க்கிலும்" b "கோலமலர்ப் பாவைக்கன்பாகிய".

159. கர்மணிவ்யுத்பத்தியில் ஸ்வரூபகு,ணங்களால் வருகிற கர்த்ருஸங்கோச ராஹித்யத்தை நினைப்பது.

160. அதி,காரித்ரயத்துக்கும் புருஷகாரம் அவர்ஜநீயம்.

161. தனக்குத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலக்காயிருக்கும்.

162. அழகுக்கிட்ட சட்டை அணைக்கைக்கு விரோதி,யாமாபோலே.

163. "ஹாரோபி".

164. புண்ணும்போலே, பாரதந்த்ர்யமும் பராநுப,வத்துக்கு விலக்கு.

a திருவாய் 1-7-8. b திருவாய் 10.10.7.

165. கு,ணம்போலே தோ,ஷநிவ்ருத்தி.

166. ஆப,ரணம் அநபி,மதமாய், அழுக்கு அபி,மதமாய் இராநின்றதிறே.

167. "ஸ்நாநம் ரோஷஜநகம்" என்கிற வார்த்தையை ஸ்மரிப்பது.

168. a "வஞ்சக்கள்வன்" b "மங்கவொட்டு".

169. வேர்ச்சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றுதாப் போலே ஜ்ஞாநியை விக்,ரஹத்தோடு ஆத,ரிக்கும்.

170. பரமார்த்தனை இவனுடைய ஶரீரஸ்தி,திக்கு ஹேது-கேவலப,க,வதி,ச்சை,யிறே.

171. c "திருமாலிருஞ்சோலைமலையே" என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய ஶரீரைகதே,ஶத்திலேபண்ணும்.

172. அங்குத்தை வாஸம் ஸாத,நம், இங்குத்தை வாஸம் ஸாத்,யம்.

173. d "கல்லுங்கனைகடலும்" என்கிறபடியே இது ஸித்,தி,த்தால், அவற்றில் ஆத,ரம் மட்டமாயிருக்கும்.

174. e "இளங்கோயில் கைவிடேல்" என்று இவன் ப்ரார்த்தி,க்கவேண்டும்படியாயிருக்கும்.

175. ப்ராப்யப்ரீதிவிஷயத்வத்தாலும், க்ருதஜ்ஞதையாலும் பின்பு அவை அபி,மதங்களாயிருக்கும்.

176. ஆகையாலே தோ,ஷநிவ்ருத்திபோலே ஆந்தர கு,ணமும் விரோதி,யாயிருக்கும்.

177. தோ,ஷநிவ்ருத்திதானே தோ,ஷமாமிறே.

178. "தலை... அவனால்வரும் நன்மை ! ○ முலைப்பால்போலே" என்... வார்த்தை.

179. அவனையொழியத் தான்... வது - ஸ்தநந்த,ய ப்ரஜை... றும் வாங்கி, கா,த... க்கொடுக்குமா...

180. தன்னைத்தானேயிறே முடிப்பான்.

181. தன்னைத்தானே முடிக்கையாவது - அஹங்காரத்தையும், விஷயங்களையும் விரும்புகை.

182. அஹங்காரம் அக்₃நிஸ்பர்ஶம்போலே.

183. **1. "ந காமகலுஷம் சித்தம்" 2. "நஹி மே ஜீவிதே நார்த்த₂:" 3. "நதே₃ஹம்"** a "எம்மாவீட்டுத்திறமும்".

184. ப்ரதிகூல விஷயஸ்பர்ஶம் 'விஷஸ்பர்ஶம் போலே. அநுகூலவிஷயஸ்பர்ஶம் விஷமிஶ்ரபோ₄ஜநம் போலே.

185. அக்₃நிஜ்வாலையை விழுங்கி விடாய்கெட நினைக்குமாபோலேயும், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்க நினைக்குமாபோலேயும் - விஷயப்ரவணனாய் ஸுகி₂க்க நினைக்கை.

186. அசுணமா முடியுமாபோலே - ப₄க₃வத₃நுப₄வைகபரனாய், ம்ருது₃ப்ரக்ருதியாயிருக்குமவன் விஷயத₃ர்ஶநத்தாலே முடியும்படி.

187. b "காட்டிப்படுப்பாயோ" என்னக்கடவதிறே.

188. அஜ்ஞனான விஷயப்ரவணன் - கேவல நாஸ்திகனைப்போலே, ஜ்ஞாநவானான விஷயப்ரவணன் - ஆஸ்திக நாஸ்திகனைப்போலே.

189. கேவல நாஸ்திகனைத் திருத்தலாம்; ஆஸ்திக நாஸ்திகனை ஒருநாளும் திருத்தவொண்ணாது.

190. இவையிரண்டும் - ஸ்வரூபேண முடிக்குமளவன்றிக்கே பா₄க₃வதவிரோத₄த்தையும் விளைத்து முடிக்கும்.

191. காமரூபங்களையுடையராய் பா₄க₃வதவிரோத₄ம் பண்ணிப்போருமவர்கள் த₃க்₃த₄படம்போலே.

192. மடிப்புடவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக்கிடக்கும்; காற்றடித்தவாறே பறந்துபோம்.

193. 'ஈஶ்வரனவதரித்துப்பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பா₄க₃வதாபசாரம் பொறுமை' என்று ஜீயர் அருளிச்செய்வர்.

---

a திருவாய் 2.9.1. b திருவாய் 6.9.9.

194. " அவமாநக்ரியா "

195. ப₄ாக₃வதாபசாரந்தான் - அநேகவித₄ம்.

196. அதிலேயொன்று - அவர்கள் பக்கல் ஜந்ம நிரூபணம்.

197. இதுதான் அர்ச்சாவதாரத்தில்உபாத₃ாந ஸ்ம்ருதி யிலுங்காட்டில் க்ரூரம்.

198. அத்தை 'மாத்ருயோநி பரீக்ஷையோடொக்கும்' என்று ஶாஸ்த்ரம் சொல்லும்.

199. த்ரிஶங்குவைப்போலே கர்மசண்ட₃ாளனும், மார்விலிட்ட யஜ்ஞோபவீதந்தானே வாராய்விடும்.

200. ஜாதிசண்ட₃ாளனுக்குக் காலாந்தரத்திலே ப₄ாக₃வதனைக்கு யோக்₃யதையுண்டு; அதுவுமில்லை இவனுக்கு.

201. ஆரூட₄பதிதனைகையாலே.

202. இதுதனக்கு அதி₄காரிநியமமில்லை.

203. a " தமர்களில் தலைவராய சாதியந்தணர்களே லும்" என்கையாலே.

204. இவ்விடத்திலே வைநதேய வ்ருத்தாந்தத்தை யும், பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையையும் ஸ்மரிப்பது.

205. ஜ்ஞாநாநுஷ்ட₂ாநங்களையொழிந்தாலும் பேற்றுக்கு அவர்கள்பக்கல் ஸம்ப₃ந்த₄மே அமைகிறுப்போலே, அவையுண்டானாலும் இழவுக்குஅவர்கள்பக்கல் அபசாரமே போரும்.

206. இதில் ஜந்மவ்ருத்தாதி₃ நியமமில்லை.

207. இவ்வர்த்த₂ம் கைஶிகவ்ருத்தாந்தத்திலும், உபரிசரவஸு வ்ருத்தாந்தத்திலும் காணலாம்.

208. ப்₃ராஹ்மண்யம் விலைசெல்லுகிறது, வேத₃ாத்₄யயநாதி₃முக₂த்தாலே ப₄க₃வல்லாப₄ ஹேதுவென்று; அது தானே இழவுக்குறுப்பாகில் த்யாஜ்யமாமிறே.

209. ஜந்மவ்ருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கும் இழவுக்கும் அப்ரயோஜகம்.

---

a திருமாலை 43.

210. ப்ரயோஜகம் - பகவத்ஸம்பந்தமும் அஸம்பந்தமும்.—

211. பகவத்ஸம்பந்தமுண்டானால் இரண்டுமொக்குமோவென்னில்;

212. ஒவ்வாது.

213. உத்க்ருஷ்டமாக ப்ரமித்த ஜந்மம், ப்ரம்ஶஸம்பாவனையாலே, 1."ஶரீரே ச"என்கிறபடியே பயஜநகம்.

214. அதுக்கு ஸ்வரூபப்ராப்தமான நைச்யம் பாவிக்கவேணும்.

215. அபக்ருஷ்டமாக ப்ரமித்த உத்க்ருஷ்டஜந்மத்துக்கு இரண்டு தோஷமுமில்லை.

216. நைச்யம் ஜந்மஸித்தம்.

217. ஆகையால் உத்க்ருஷ்டஜந்மமே ஶ்ரேஷ்டம்.

218. 2. "ஶ்வபசோऽபி மஹீபால"

219. நிக்ருஷ்டஜந்மத்தால் வந்த தோஷம் ஶமிப்பது விலக்ஷணஸம்பந்தத்தாலே.

220. ஸம்பந்தத்துக்கு யோக்யதையுண்டாம்போது ஜந்மக்கொத்தை போகவேணும்.

221. ஜந்மத்துக்குக் கொத்தையும், அதுக்குப் பரிஹாரமும் * "பழுதிலாவொழுகல்" என்கிற பாட்டிலே அருளிச்செய்தார்.

222. வேதகப்பொன்போலே இவர்களோட்டை ஸம்பந்தம்.

223. இவர்கள்பக்கல் ஸாம்யபுத்தியும், ஆதிக்யபுத்தியும் நடக்கவேணும்.

224. அதாவது - ஆசார்யதுல்யரென்றும், ஸம்ஸாரிகளிலும், தன்னிலும், ஈஶ்வரனிலும் அதிகரென்றும் நினைக்கை.

225. ஆசார்ய ஸாம்யத்துக்கு அடி - ஆசார்யவசநம்.

226. இப்படி நினையாதொழிகையும் அபசாரம்.

---

* திருமாலை 42.

227. இவ்வர்த்த₂ம், இதிஹாஸ புராணங்களிலும், a"பயிலுஞ்சுடரொளி" b"நெடுமாற்கடிமை"யிலும், c"கண் சோரவெங்குருதி"யிலும், d 'நண்ணுதவாளவுண"ரிலும், e"தேட்டருந்திறல்தே"னிலும், f"மேம்பொரு"ளுக்கு மேலிற் பாட்டுக்களிலும் விஶத₃மாகக் காணலாம்.

228. க்ஷத்ரியனான விஶ்வாமித்ரன் ப்₃ரஹ்மருஷியானான்.

229. ஸ்ரீவிபீ₄ஷணனை ராவணன் குலபாம்ஸனன் என்றான்; பெருமாள் இக்ஷ்வாகுவம்ஶ்யராக நினைத்து வார்த்தை அருளிச்செய்தார்.

230. பெரிய உடையாருக்குப் பெருமாள் ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் பண்ணியருளினார்.

231. த₄ர்மபுத்ரர் அஶரீரி வாக்யத்தையும், ஜ்ஞாநாதி₄க்யத்தையுங்கொண்டு, ஸ்ரீவிது₃ரரை ப்₃ரஹ்ம மேத₄த்தாலே ஸம்ஸ்கரித்தார்.

232. ருஷிகள் த₄ர்மவ்யாத₄ன் வாசலிலே துவண்டு த₄ர்மஸந்தே₃ஹங்களை ஶமிப்பித்துக்கொண்டார்கள்.

233. க்ருஷ்ணன் பீ₄ஷ்மத்₃ரோணாதி₃கள் க்₃ருஹங்களை விட்டு ஸ்ரீவிது₃ரர் திருமாளிகையிலே அமுதுசெய்தான்.

234. பெருமாள் ஸ்ரீஶப₃ரி கையாலே அமுதுசெய்தருளினார்.

235. மாறனேர் நம்பி விஷயமாகப் பெரியநம்பி உடையவர்க்கு அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

236. **"ப்ராது₃ர்ப₄ாவைரித்யாதி₃".**

237. 'ப₄ாக₃வதனன்றிக்கே வேதா₃ர்த்த₂ஜ்ஞாநாதி₃களையுடையவன் குங்குமஞ்சுமந்த கழுதையோபாதி' என்று சொல்லாநின்றதிறே.

238. ராஜாவான ஸ்ரீகுலஶேக₂ரப்பெருமாள் திர்யக் ஸ்தா₂வர ஜந்மங்களை ஆசைப்பட்டார்.

---

a திருவாய் 3 7. b திருவாய் 8-10. c பெரியதிரு 7-4.
d பெரியதிரு 2-6. e பெருமாள்திரு 2. f திருமாலை 38.

239. ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரும், திருமகளாரும் கோ₃பஜந்மத்தை ஆஸ்தா₂நம் பண்ணினார்கள்.

240. கந்தல் கழிந்தால் ஸர்வர்க்கும் நாரீணாமுத்தமையுடைய அவஸ்தை₂ வரக்கடவதாயிருக்கும்.

241. ஆறு ப்ரகாரத்தாலே பரிஶுத்₃தா₄த்மஸ்வரூபத்துக்கும் தத்ஸாம்யமுண்டாயிருக்கும்.

242. த்₃ருஷ்டத்தில் உத்கர்ஷம் அஹங்காரத்தாலே; அத்₃ருஷ்டத்தில் உத்கர்ஷம் அஹங்காரராஹித்யத்தாலே.

243. ப்₃ரஹ்மாவாயிழந்துபோதல், இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல் செய்யும்படியாயிருக்கும்.

244. இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாஶஹேதுவான அஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷயப்ராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே, தன்னைக் கண்டால் ஶத்ருவைக் கண்டாற்போலேயும், அவற்றுக்கு வர்த்த₄கரான ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலேயும், அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் ப₃ந்து₄க்களைக் கண்டாற் போலேயும், ஈஶ்வரனைக்கண்டால் பிதாவைக் கண்டாற் போலேயும், ஆசார்யனைக்கண்டால் பசியன் சோற்றைக் கண்டாற்போலேயும், ஶிஷ்யனைக்கண்டால் அபி₄மதவிஷயத்தைக் கண்டாற்போலேயும் நினைத்து, 'அஹங்காரார்த்த₂ காமங்கள் மூன்றும், அநுகூலர் பக்கல் அநாத₃ரத்தையும், ப்ரதிகூலர்பக்கல் ப்ராவண்யத்தையும், உபேக்ஷிக்குமவர்கள் பக்கல் அபேக்ஷையையும் பிறப்பிக்கும்' என்றஞ்சி, 'ஆத்மகு₃ணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்பித்துக்கொள்ள வொண்ணாது; ஸதா₃சார்ய ப்ரஸாத₃மடியாக வருகிற ப₄க₃வத் ப்ரஸாத₃த்தாலே பிறக்குமத்தனை' என்று துணிந்து, தே₃ஹயாத்ரையிலுபேக்ஷையும், ஆத்மயாத்ரையிலபேக்ஷையும், ப்ராக்ருத வஸ்துக்களில் போ₄க்₃யதாபு₃த்₃தி₄ நிவ்ருத்தியும், 'தே₃ஹதா₄ரணம் பரமாத்மஸமாராத₄நஸமாப்தி ப்ரஸாத₃ ப்ரதிபத்தி' என்கிற பு₃த்₃தி₄விஶேஷமும், தனக்கொரு க்லேஶமுண்டானால் கர்மப₂லமென்றுதல் க்ருபாப₂லமென்றுதல் பிறக்கும் ப்ரீதியும், ஸ்வாநுஷ்டா₂நத்தில் ஸாத₄

நத்வப்ரவ்ருத்தி, நிவ்ருத்தியும், விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் வாஞ்சையும், உகந்தருளின நிலங்களில் ஆதராதிஶயமும், மங்களாஶாஸநமும், இதரவிஷயங்களில் அருசியும், ஆர்த்தியும், அநுவர்த்தநநியதியும், ஆஹார நியதியும், அநுகூலஸஹவாஸமும், ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்.

## த்ருதீயப்ரகரணம் 3.

245. மங்களாஶாஸநம் ஸ்வரூபவிருத்தமன்றோவென்னில்; ஜ்ஞாநதஶையில் ரக்ஷ்யரக்ஷகபாவம் தன்கப்பிலே கிடக்கும்; ப்ரேமதஶையில் தட்டுமாறிக்கிடக்கும்.

246. அவன் ஸ்வரூபத்தை அநுஸந்தித்தால் அவனைக் கடகாகக்கொண்டு தன்னை நோக்கும்; ஸௌகுமார்யத்தை அநுஸந்தித்தால் தன்னைக் கடகாகக்கொண்டு அவனை நோக்கும்.

247. இவ்வர்த்தம், சக்ரவர்த்தி, ஸ்ரீஜநகராஜன் - திருமகள், விஶ்வாமித்ரன், ஸ்ரீதண்டகாரண்ய வாஸிகளான ருஷிகள், திருவடி, மஹாராஜர், ஸ்ரீநந்தகோபர், ஸ்ரீவிதுரர், பிள்ளையுறங்காவில்லிதாஸர் தொடக்கமானவர்கள் பக்கலிலே காணலாம்.

248. இளையபெருமாளை ஸ்ரீகுஹப்பெருமாள் அதிஶங்கைபண்ண, இருவரையும் அதிஶங்கைபண்ணி குஹப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே.

249. ஒருநாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும் பாடாயிற்றிது.

250. இவர்கள் நம்முடைய கோடியிலே என்னும்படியாயிற்று ஆழ்வார்கள் நிலை.

251. ஆழ்வார்களெல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார்.

252. அவர்களுக்கு அது காதாசித்கம், இவர்க்கு இது நித்யம்.

253. அவர்களுடைய ஆழங்கால்தானே இவர்க்கு மேடாயிருக்கும்.

254. அவர்களுக்கு உபா,யஶேஷத்வத்தையுமழித்து, ஸ்வரூபத்தைக் குமிழிநீருண்ணப் பண்ணுமது, இவர்க்கு உபா,யவ்ருத்,தி,க்கும் ஹேதுவாய், ஸ்வரூபத்தைக் கரையேற்றும்.

255. ப,யநிவர்த்தகங்களுக்கு ப,யப்படுவது, ப்ரதிகூலரையும் அநுகூலராக்கிக்கொள்ளுவது, அதீதகாலங்களில் அபத,ாநங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரிவது, ப்ராப்திப,லமும் இதுவேயென்பது, அநிமிஷரைப் பார்த்து a"உறகல், உறகல்" என்பதாய்க்கொண்டு இதுதானே யாத்ரையாய் நடக்கும்.

256. அல்லாதவர்களைப்போலே கேட்கிறவர்களுடையவும், சொல்லுகிறவர்களுடையவும் தனிமையைத் தவிர்க்கையன்றிக்கே, b"ஆளுமாளார்" என்கிறவனுடைய தனிமையைத் தவிர்க்கைக்காயிற்று பா,ஷ்யகாரரும், இவரும் உபதே,ஶிப்பது.

257. அல்லாதார்க்கு ஸத்தாஸம்ருத்,தி,கள் த,ர்ஶநாநுப,வகைங்கர்யங்களாலே; இவர்க்கு மங்க,ளாஶாஸநத்தாலே.

258. உகந்தருளின நிலங்களை அநுஸந்தி,த்தால் ஊணும் உறக்கமுமின்றிக்கே, இவருடைய யாத்ரையே நமக்கெல்லார்க்கும் யாத்ரையாகவேணும்.

259. ஆகையால் மங்க,ளாஶாஸநம் ஸ்வரூபாநுகு,ணம்.

260. அநுகூலராகிறார் - ஜ்ஞாந ப,க்தி வைராக்,யங்கள் இட்டுமாறினாற்போலே வடிவிலே தொடைகொள்ளலாம்படியிருக்கும் பரமார்த்தர்.

261. ஒருசெய் கிரம்ப நீர் நின்றால் அசல் செய் பொசிந்து காட்டுமாபோலே இவையில்லாதார்க்கும் இவர்களோட்டை ஸம்ப,ந்த,த்தாலே உருவுதல் தீரக்கடவதாயிருக்கும்.

---

a பெரியாழ்திரு 5-2.9. b திருவாய் 8-3-3.

262. ஆறுநீர் வரவு அணித்தானால் அதுக்கீடான அடையாளங்களுண்டாமாபோலே, ப்ராப்தி அணித்தானவாறே இந்த ஸ்வபா,வவிஶேஷங்கள் தன்னடையே விளையக்கடவதாயிருக்கும்.

263. இவற்றைக்கொண்டு சரமஶரீரம் என்று தனக்குத்தானே அறுதியிடலாயிருக்கும்.

264. ப்ரதிகூலராகிறார்-தே,ஹாத்மாபி,மாநிகளும், ஸ்வதந்த்ரரும், அந்யஶேஷபூ,தரும், உபாயாந்தரநிஷ்ட,ரும், ஸ்வப்ரயோஜநபரரும்.

265. இவர்களுக்கு உத்,தே,ஶ்யரும், உபாயோபேயங்களும் பே,தி,த்திருக்கும்.

266. தே,ஹாத்மாபி,மாநிகளுக்கு உத்,தே,ஶ்யர்-தே,ஹவர்த்த,கரான மநுஷ்யர்கள்; உபாயம் - அர்த்த,ம், உபேயம் - ஐஹிகபோ,க,ம். ஸ்வதந்த்ரர்க்கு உத்,தே,ஶ்யர் - ஸ்வர்க்கா,தி,போ,க,ப்ரத,ர், உபாயம் - கர்மாநுஷ்டா,நம், உபேயம்-ஸ்வர்க்கா,தி,போ,க,ம். அந்யஶேஷபூ,தர்க்கு உத்,தே,ஶ்யர் - ப்,ரஹ்ம ருத்,ராதி,கள், உபாயம் - தத்ஸமாஶ்ரயணம், உபேயம் - தத்ஸாயுஜ்யம். உபாயாந்தரநிஷ்ட,ர்க்கு உத்,தே,ஶ்யன் - தே,வதாந்தர்யாமியான ஸர்வேஶ்வரன், உபாயம் - கர்மஜ்ஞாநப,க்திகள், உபேயம் - ப,க,வத,நுப,வம். ஸ்வப்ரயோஜநபரர்க்கு உத்,தே,ஶ்யன் -a"நெஞ்சினால் நினைப்பான் யவன்" என்கிறவன், உபாயம் - ஸ்வகீயஸ்வீகாரம், உபேயம் - ஸ்வார்த்த, கைங்கர்யம்.

267. முதல்சொன்ன மூவரும் நிக்,ரஹத்துக்கிலக்கு; மற்றையிருவரும் அநுக்,ரஹத்துக்கிலக்கு.

268. மூவருடையவும் கர்மம் அநுப,வ விநாஶ்யம்; நாலாமதி,காரிக்கு ப்ராயஶ்சித்த விநாஶ்யம்; அஞ்சாமதி,காரிக்குப் புருஷகார விநாஶ்யம்.

269. உபாயம் ஸ்வீகாரகாலத்தில் புருஷஸாபேக்ஷமுமாய், புருஷகாரஸாபேக்ஷமுமாயிருக்கும்; கார்யகாலத்தில் உப,யநிரபேக்ஷமாயிருக்கும்.

270. ஸ்வப்ரயோஜநபரரெல்லாரையும் ப்ரதிகூலராக நினைக்கலாமோவென்னில்;

---

a திருவாய் 3-6-9.

271. இங்கு ஸ்வப்ரயோஜநமென்கிறது - ஆஶ்ரய தோ₃ஷஜந்யமானத்தை.

272. ஆகையாலே தோ₃ஷமில்லை.

273. விஷயதோ₃ஷத்தாலே வருமவையெல்லாம் து₃ஸ்த்யஜமாயிறேயிருப்பது.

274. a"ஊமையரோடு செவிடர் வார்த்தை" 1."க₃தமந்யதி₃ச்ச₂தி"

275. இப்படி இவையித்தனையும் ஸதா₃சார்யப்ரஸாத₃த்தாலே வர்த்தி₄க்கும்போதைக்கு, வஸ்தவ்யம் - ஆசார்ய ஸந்நிதி₄யும் ப₄க₃வத்ஸந்நிதி₄யும், வக்தவ்யம் - ஆசார்ய வைப₄வமும் ஸ்வநிகர்ஷமும்; ஜப்தவ்யம் கு₃ருபரம்பரையும், த்₃வயமும்; பரிக்₃ராஹ்யம் - பூர்வாசார்யர்களுடைய வசநமும் அநுஷ்டா₂நமும்; பரித்யாஜ்யம் அவைஷ்ணவஸஹவாஸமும், அபி₄மாநமும். கர்த்தவ்யம்-ஆசார்ய கைங்கர்யமும், ப₄க₃வத்கைங்கர்யமும்.

276 கீழ்ச்சொன்ன ப₄க₃வத் கைங்கர்யமறிவது - ஶாஸ்த்ர முக₂த்தாலே; ஆசார்ய கைங்கர்யமறிவது ஶாஸ்த்ரமுக₂த்தாலும், ஆசார்யவசநத்தாலும்.

277. கைங்கர்யந்தானிரண்டு.

278. அதாவது - இஷ்டஞ்செய்கையும், அநிஷ்டம் தவிருகையும்.

279. இஷ்டாநிஷ்டங்கள், வர்ணாஶ்ரமங்களையும் ஆத்ம ஸ்வரூபத்தையும் அவலம்பி₃த்திருக்கும்.

280. புண்யத்துக்கஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே.

281. இவன் புண்யத்தைப் பாபமென்றிருக்கும்; அவன் பாபத்தைப் புண்யமென்றிருக்கும்; அவனுக்கு அது கிடையாது; இவன் அது செய்யான்.

282. கைங்கர்யந்தான் ப₄க்திமூலமல்லாதபோது ப்₄ரீதிமூலமாய் வரவேணும்.

283. அதுவுமில்லாதபோது, அதி₄காரத்திலும், உபாயோபேயங்களிலும் அந்வயமின்றிக்கே யொழியும்.

 a நாச்-திரு 12-1.

284. கைங்கர்யந்தன்னைப் ப₂லஸாத₄நமாக்காதே ப₂லமாக்கவேணும்.

285. அதாவது - தான் கையேலாதே அவனைக் கையேற்கப் பண்ணுகை.

286 கொடுத்துக்கொள்ளாதே கொண்டத்துக்குக் கைக்கூலி கொடுக்கவேணும்.

287. ஸ்ரீவிது₃ரரையும், ஸ்ரீமாலாகாரரையும், கூனியையும்போலே கிஞ்சித்கரித்தால் ஸ்வரூபம் நிறம்பெறுவது.

288. மடிதடவாத சோறும், சுருநாறுத பூவும், சுண்ணும்பு படாத சாந்துமிறே இவர்கள் கொடுத்தது.

289 கைங்கர்யத₃ஶைபோலே முன்புள்ள த₃ஶைகளிலும் ஸ்வரூபத்தை உஜ்ஜ்வலமாக்கவேணும்.

290. முன்பே நாலு த₃ஶையுண்டு.

291. அதாவது - ஜ்ஞாநத₃ஶையும், வரணத₃ஶையும், ப்ராப்தித₃ஶையும், ப்ராப்யாநுப₄வத₃ஶையும்.

292. ஜ்ஞாநத₃ஶையில் அஜ்ஞானத்தை முன்னிடும்; வரணத₃ஶையில் அபூர்த்தியை முன்னிடும்; ப்ராப்தித₃ஶையில் ஆர்த்தியை முன்னிடும்; ப்ராப்யாநுப₄வத₃ஶையில் அபி₄நிவேஶத்தை முன்னிடும்.

293. அஜ்ஞாநம்போவது - ஆசார்ய ஜ்ஞாநத்தாலே, அபூர்த்திபோவது - ஈஶ்வரபூர்த்தியாலே, ஆர்த்திபோவது- அருளாலே, அபி₄நிவேஶம்போவது - அநுப₄வத்தாலே.

294. அஜ்ஞாநத்துக்கடி - அபராத₄ம், அபூர்த்திக்கடி - ஜ்ஞாநபூர்த்தி, ஆர்த்திக்கடி - அலாப₄ம், அபி₄நிவேஶத்துக்கடி - அழகு.

295. ஆர்த்தியும் அபி₄நிவேஶமுமிருக்கும்படி அர்ச்சிராதி₃க₃தியிலே சொன்னோம்.

296 இவன் தனக்கு நாலு த₃ஶைபோலே நாலு கு₃ணமுமுண்டு.

297. அதாவது - ஜ்ஞாநமும், அஜ்ஞாநமும், ஶக்தியும், அஶக்தியும்.

298. இவைதான் அவனுக்குமுண்டு.

299. அவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு - இவனுடைய கு₃ணம், அஜ்ஞாநத்துக்கிலக்கு - இவனுடைய தோ₃ஷம், ஶக்திக்கிலக்கு - இவனுடைய ரக்ஷணம், அஶக்திக்கிலக்கு- பரித்யாக₃ம்.

300. இவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு - ஆசார்ய கு₃ணம், அஜ்ஞாநத்துக்கிலக்கு-ஆசார்யதோ₃ஷம், ஶக்திக் கிலக்கு - ஆசார்ய கைங்கர்யம், அஶக்திக்கிலக்கு - நிஷித்₃த₄ாநுஷ்டா₂நம்.

301. நிஷித்₃த₄ந்தானும் நாலுபடியாயிருக்கும்.

302. அதாவது - அக்ருத்யகரணமும், ப₄க₃வத₃பசார மும், பா₄க₃வதாபசாரமும், அஸஹ்யாபசாரமும்.

303. அக்ருத்யகரணமாவது-பரஹிம்ஸை, பரஸ்தோத் ரம், பரதா₃ரபரிக்₃ரஹம், பரத்₃ரவ்யாபஹாரம், அஸத்ய கத₂நம், அப₄க்ஷ்யப₄க்ஷணம் தொடக்கமானவை.

304. ப₄க₃வத₃பசாரமாவது – தே₃வதாந்தரங்களோடு ஒக்க ஈஶ்வரனை நினைக்கையும், ராமக்ருஷ்ணாத்₃யவதாரங்க ளில் மநுஷ்யஸஜாதீயதாபு₃த்₃தி₄யும், வர்ணாஶ்ரம விபரீத மான உபசாரமும், அர்ச்சாவதாரத்தில் உபாதா₃ந நிரூப ணமும், ஆத்மாபஹாரமும், ப₄க₃வத்₃த்₃ரவ்யாபஹாரமும் தொடக்கமானவை.

305. ப₄க₃வத்₃ த்₃ரவ்யத்தைத் தானபஹரிக்கையும், அபஹரிக்கிறவர்களுக்கு ஸஹகரிக்கையும், அவர்கள் பக்க லிலே யாசிதமாகவும் அயாசிதமாகவும் பரிக்₃ரஹிக்கையும் ப₄க₃வானுக்கு அநிஷ்டமாயிருக்கும்.

306. பா₄க₃வதாபசாரமாவது - அஹங்காரார்த்த₂காமங் களடியாக ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோத₄ம்.

307. அஸஹ்யாபசாரமாவது-நிர்நிப₃ந்த₄நமாக ப₄க₃வத்₃ பா₄க₃வத விஷயமென்றால் அஸஹமாநனாயிருக்கையும், ஆசார்யாபசாரமும், தத்₃ப₄க்தாபசாரமும்.

308. இவை ஒன்றுக்கொன்று க்ரூரங்களுமாய், உபாய விரோதி₄களுமாய், உபேயவிரோதி₄களுமாயிருக்கும்.

அதி₄காரிநிஷ்டா₂ ப்ரகரணம் ஸமாப்தம்.

309. தான் ஹிதோபதே₃ஶம் பண்ணும்போது, தன்னையும், ஶிஷ்யனையும், ப₂லத்தையும் மாருடி நினைக்கை க்ரூர நிஷித்₃த₄ம்.

310. தன்னை மாருடி நினைக்கையாவது - தன்னை ஆசார்யனென்று நினைக்கை; ஶிஷ்யனை மாருடி நினைக்கையாவது - தனக்கு ஶிஷ்யனென்று நினைக்கை; ப₂லத்தை மாருடி நினைக்கையாவது - த்₃ருஷ்ட ப்ரயோஜநத்தையும், ஶிஷ்யனுடைய உஜ்ஜீவநத்தையும், ப₄க₃வத் கைங்கர்யத்தையும், ஸஹவாஸத்தையும் ப₂லமாக நினைக்கை.

311. நினையாதிருக்க, இந்நாலு ப₂லமும் ஸித்₃தி₄க்கிறபடியென்? என்னில்; ஶேஷபூ₄தனான ஶிஷ்யன் நினைவாலே த்₃ருஷ்டப₂லம் ஸித்₃தி₄க்கும்; ஈஶ்வரன் நினைவாலே உஜ்ஜீவநம் ஸித்₃தி₄க்கும்; ஆசார்யன் நினைவாலே ப₄க₃வத்கைங்கர்யம் ஸித்₃தி₄க்கும்; உபகாரஸ்ம்ருதியாலே ஸஹவாஸம் ஸித்₃தி₄க்கும்.

312. ஸாக்ஷாத்ப₂லமும், ஆசார்யத்வமும் ஸித்₃தி₄க்கிறபடியென்? என்னில்; தன் நினைவாலும், ஈஶ்வரன் நினைவாலும் ஸித்₃தி₄க்கும்.

313. இப்படியொழிய உபதே₃ஶிக்கில், இருவருக்கும் ஸ்வரூப ஸித்₃தி₄யில்லை.

314. ஆசார்யனுக்கு ஶிஷ்யன்பக்கல் க்ருபையும், ஸ்வாசார்யன் பக்கல் பாரதந்த்ர்யமும் வேணும்.

315. க்ருபையாலே ஶிஷ்யன் ஸ்வரூபம் ஸித்₃தி₄க்கும், பாரதந்த்ர்யத்தாலே தன் ஸ்வரூபம் ஸித்₃தி₄க்கும்.

316. நேரே ஆசார்யனென்பது - ஸம்ஸாரநிவர்த்தகமான பெரியதிருமந்த்ரத்தை உபதே₃ஶித்தவனை.

317. ஸம்ஸாரவர்த்த₄கங்களுமாய், க்ஷுத்₃ரங்களுமான ப₄க₃வந் மந்த்ரங்களை உபதே₃ஶித்தவர்களுக்கு ஆசார்யத்வ பூர்த்தியில்லை.

318. ப₄க₃வந் மந்த்ரங்களை க்ஷுத்₃ரங்களென்கிறது - ப₂லத்₃வாரா.

319. ஸம்ஸாரவர்த்த₄கங்களென்கிறதும் அத்தாலே.

320. இதுதான் ஔபாதிகம்.

321. சேதநனுடைய ருசியாலே வருகையாலே.

322. ஶிஷ்யனென்பது - ஸாத்யாந்தர நிவ்ருத்தியும், பலஸாதந ஶுஶ்ரூஷையும், ஆர்த்தியும், ஆதரமும், அநஸூயையுமுடையவனை.

323. மந்த்ரமும், தேவதையும், பலமும், பலாநுபந்திகளும், பலஸாதநமும், ஐஹிகபோகமுமெல்லாம் ஆசார்யனென்று நினைக்கக்கடவன்.

324. 1. "மாதா பிதா யுவதய:" என்கிற ஶ்லோகத்திலே, இவ்வர்த்தத்தைப் பரமாசார்யரும் அருளிச்செய்தார்.

325. இதுக்கடி உபகாரஸ்ம்ருதி.

326. உபகாரஸ்ம்ருதிக்கு முதலடி ஆசார்யன் பக்கல் க்ருதஜ்ஞதை; முடிந்த நிலம் ஈஶ்வரன்பக்கல் க்ருதஜ்ஞதை.

327. ஶிஷ்யனும், ஆசார்யனும் அந்யோந்யம் ப்ரிய ஹிதங்களை நடத்தக்கடவர்கள்.

328. ஶிஷ்யன் தான் ப்ரியத்தை நடத்தக்கடவன்; ஈஶ்வரனைக் கொண்டு ஹிதத்தை நடத்தக்கடவன்; ஆசார்யன் மாறுடி நடத்தக்கடவன்.

329. ஶிஷ்யன் உகப்பிலே ஊன்றிப்போரும்; ஆசார்யன் உஜ்ஜீவநத்திலே ஊன்றிப்போரும்.

330. ஆகையால், ஶிஷ்யன் ஆசார்யனுடைய ஹர்ஷத்துக்கு இலக்காகையொழிய, ரோஷத்துக்கு இலக்காகைக்கு அவகாஶமில்லை.

331. நிக்ரஹத்துக்குப் பாத்ரமாம்போது அது ஹித ரூபமாகையாலே இருவர்க்கும் உபாதேயம்.

332. ஶிஷ்யனுக்கு நிக்ரஹகாரணம் த்யாஜ்யம்.

333. நிக்ரஹந்தான் பகவந்நிக்ரஹம்போலே ப்ராப்யாந்தர்கதம்.

334. ஆசார்யன் ஶிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணக்கடவன்; ஶிஷ்யன் ஆசார்யனுடைய தேஹத்தைப் பேணக்கடவன்.

335. இரண்டும் இருவர்க்கும் ஸ்வரூபமுமாய், ப₄க₃வத் கைங்கர்யமுமாயிருக்கும்.

336. ஆசார்யனுக்கு தே₃ஹரக்ஷணம் ஸ்வரூபஹாநி; ஶிஷ்யனுக்கு ஆத்மரக்ஷணம் ஸ்வரூபஹாநி.

337. ஆசார்யன் ஆத்மரக்ஷணம் பண்ணுமிடத்தில் அஹங்காரம் விரோதி₄; ஶிஷ்யன் தே₃ஹரக்ஷணம் பண்ணுமிடத்தில் மமகாரம் விரோதி₄.

338. ஆசார்யன் தன்னுடைய தே₃ஹரக்ஷணம் தன் வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன்; ஶிஷ்யன் ஸ்வதே₃ஹரக்ஷணம் ஆசார்யன் வஸ்துவைக்கொண்டு பண்ணக் கடவன்.

339. ஆசார்யன் ஶிஷ்யன் வஸ்துவைக் கொள்ளக் கடவனல்லன்; ஶிஷ்யன் தன் வஸ்துவைக் கொடுக்கக் கடவனல்லன்.

340. கொள்ளில் மிடியனும், கொடுக்கில் கள்ளனும்.

341. கொள்கொடையுண்டானல் ஸம்ப₃ந்த₄ம் குலையும்.

342. இவன் மிடியனுகையாலே கொடான்; அவன் பூர்ணனுகையாலே கொள்ளான்.

343. அவனுக்குப் பூர்த்தியாலே ஸ்வரூபம் ஜீவித்தது; இவனுக்கு மிடியாலே ஸ்வரூபம் ஜீவித்தது.

344. ஆனல் ஶிஷ்யன் ஆசார்யனுக்குப் பண்ணும் உபகாரமொன்றுமில்லையோவென்னில்;

345. ஆசார்யன் நினைவாலேயுண்டு.

346. அதாவது - ஜ்ஞாந வ்யவஸாய ப்ரேம ஸமாசாரங்கள்.

347. ஆசார்ய ப்ரீத்யர்த்த₂மாக இவனுக்குத் தவிர வேண்டுவது - ப₄க₃வத்₃த்₃ரவ்யத்தை அபஹரிக்கையும், ப₄க₃வத்₃போ₄ஜநத்தை விலக்குகையும், கு₃ருமந்த்ரதே₃வதா பரிப₄வமும்.

348. ப₄க₃வத்₃த்₃ரவ்யாபஹாரமாவது - ஸ்வாதந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும்.

349. ப₄க₃வத்₃பே₄ஜநத்தை விலக்குகையாவது-அவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகை.

350. அவனுடைய ரக்ஷகத்வக்ரமம் - ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்.

351. கு₃ருபரிப₄வமாவது - கேட்ட அர்த்த₂த்தின்படி அநுஷ்டி₂யாதொழிகையும், அநதி₄காரிகளுக்கு உபதே₃ஶிக்கையும்; மந்த்ரபரிப₄வமாவது - அர்த்த₂த்தில் விஸ்ம்ருதியும், விபரீதார்த்த₂ ப்ரதிபத்தியும்; தே₃வதாபரிப₄வமாவது-கரண த்ரயத்தையும் அப்ராப்தவிஷயங்களிலே ப்ரவணமாக்குகையும், தத்₃விஷயத்தில் ப்ரவணமாக்காதொழிகையும்.

352. இவனுக்கு ஶரீராவஸாநத்தளவும் ஆசார்ய விஷயத்தில் a"என்னைத் தீமனங்கெடுத்தாய்" b"மருவித்தொழும் மனமேதந்தாய்" என்று உபகாரஸ்ம்ருதி நடக்கவேணும்.

353. மநஸ்ஸுக்குத் தீமையாவது-ஸ்வகு₃ணத்தையும் ப₄க₃வத்ப₄ாக₃வத தோ₃ஷங்களையும் நினைக்கை.

354. தோ₃ஷம் நினையாதொழிகிறது - கு₃ணம்போலே உண்டாயிருக்கவன்று; இல்லாமையாலே.

355. தோ₃ஷமுண்டு என்று நினைக்கில் அது பர தோ₃ஷமன்று; ஸ்வதோ₃ஷம்.

356. ஸ்வதோ₃ஷமானபடியென்? என்னில்.

357. ஸ்வதோ₃ஷத்தாலும் ப₃ந்த₄த்தாலும்.

358. ஸ்வதோ₃ஷமில்லையாகில் கு₃ண ப்ரதிபத்தி நடக்கும்.

359. நடத்ததில்லையாகில் தோ₃ஷஜ்ஞாநமே தோ₃ஷமாம்.

360. இதுதனக்கு அவஸரமில்லை.

361. ஸ்வதோ₃ஷத்துக்கும், ப₄க₃வத்₃ப₄ாக₃வத கு₃ணங்களுக்குமே காலம் போருகையாலே.

362. ஸம்ஸாரிகள் தோ₃ஷம் ஸ்வதோ₃ஷமென்று நினைக்கக்கடவன்.

363. அதுக்கு ஹேது ப₃ந்த₄ ஜ்ஞாநம்.

---

a திருவாய் 2.7.8. b திருவாய் 2.7.7.

364. a "இறைப்பொழுதுமெண்ணேமே" என்கை யாலே அதுதான் தோன்றுது.

365. தோன்றுவது நிவர்த்தநார்த்த₂மாக.

366. பிராட்டி, ராக்ஷஸிகள் குற்றம் பெருமாளுக்கும் திருவடிக்கும் அறிவியாதாப்போலே, தனக்குப் பிறர் செய்த குற்றங்களை ப₄க₃வத்₃ப₄ாக₃வத விஷயங்களில் அறிவிக்கக் கடவனல்லன்.

367. அறிவிக்க உரியவனகப்பட வாய்திறவாதே ஸர்வஜ்ஞவிஷயங்களுக்கும் மறைக்கும் என்னுகின்றதிறே.

368. குற்றஞ்செய்தவர்கள்பக்கல் பொறையும், க்ருபை யும், சிரிப்பும், உகப்பும், உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்.

ஸத₃ாசார்யாநுவர்த்தந ப்ரகரணம் முற்றிற்று.

369. ஸ்வதோ₃ஷாநுஸந்தா₄நம் ப₄யஹேது; ப₄க₃வத்₃ கு₃ணநுஸந்தா₄நம் அப₄யஹேது.

370. ப₄யாப₄யங்களிரண்டும் மாறுடில் அஜ்ஞதையே ஸித்₃தி₄க்கும்.

371. ஆனல் b "நலிவானின்ன மென்னுகின்றாய்" c"ஆற்றங்கரைவாழ் மரம்போல் அஞ்சுகின்றேன்" என்கிற பாசுரங்களுக்கடியென்? என்னில்.

372. ப₃ந்த₄ாநுஸந்தா₄நம்.

373. ப்ரஜை தெருவிலே இடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே, நிருபாதி₄க ப₃ந்து₄வாய் ஶக்தனுயிருக் கிறவன் விலக்காதொழிந்தால், அப்படி சொல்லலாமிறே.

374. ப்ரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும் வாங்காதொழிந்தால், தாயே தள்ளினளென்னக் கடவதிறே.

375. இவனுடைய அநுமதி, பேற்றுக்கு ஹேது வல்லாதாப்போலே, அவனுடைய அநுமதியும் இழவுக்கு ஹேதுவன்று.

376. இரண்டும் இருவருக்கும் ஸ்வரூபம்.

377. இழவுக்கடி - கர்மம்; பேற்றுக்கடி - க்ருபை.

378. மற்றைப்படி சொல்லில் இழவுக்குறுப்பாம்.

a பெரியதிரு 2-6-1. b திருவாய் 7.1.1. c பெரியதிரு 11-8.1.

379. எடுக்க நினைக்கிறவனைத் தள்ளினுயென்கை எடாமைக்குறுப்பிறே.

380. a "சீற்றமுள" என்ற அநந்தரத்திலே இவ்வர்த்தத்தைத் தாமே அருளிச்செய்தாரிறே.

381. சீற்றமுண்டென்றறிந்தால் சொல்லும்படி என்னென்னில்; அருளும், ஆர்த்தியும், அநந்யகதித்வமும் சொல்லப்பண்ணும்.

382. சீறினுலும் காலைக்கட்டிக்கொள்ளலாம்படியிருப்பாஞெருவனைப்பெற்றல் எல்லாம் சொல்லலாமிறே.

383. **1. "க்ருபயா பர்யபாலயத்" b "அரிசினத்தால்".**

## சதுர்த்தப்ரகரணம்

### த்ரிபாத்விபூதிப்ரகரணம்

384. த்ரிபாத்விபூதியிலே பரிபூர்ணுநுபவம் நடவா நிற்க, அது உண்டது உருக்காட்டாதே, தேஶாந்தரகதனை புத்ரன் பக்கலிலே பித்ருஹ்ருதயம் கிடக்குமாபோலே ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய், இவர்களைப் பிரிந்தால் ஆற்றமாட்டாதே, இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குக் கரணகளேபரங்களைக்கொடுத்து, அவற்றைக்கொண்டு வ்யாபரிக்கைக்கீடான ஶக்திவிஶேஷங்களையும் கொடுத்து, கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்கள் என்று கண்ணுக்குத் தோற்றுதபடி, உறங்குகிற ப்ரஜையைத் தாய் முதுகிலே அணைத்துக்கொண்டு கிடக்குமாபோலே, தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக விடமாட்டாதே அகவாயிலே அணைத்துக்கொண்டு, ஆட்சியில் தொடர்ச்சி நன்று என்று விடாதே, ஸத்தையே நோக்கி உடன்கேடனுய், இவர்கள் அஸத்கர்மங்களிலே ப்ரவர்த்திக்கும்போது மீட்கமாட்டாதே அநுமதிதாநத்தைப் பண்ணி, உதாஸீநரைப்போலேயிருந்து, மீட்கைக்கு இடம் பார்த்து, நன்மையென்று பேரிடலாவதொரு தீமையும்


a பெரியதிரு 11-8-2. b பெருமாள்திரு 5-1.

காணுதே, நெற்றியைக் கொத்திப் பார்த்தால் ஒருவழியாலும் பசைகாணுதொழிந்தால் அப்ராப்யமென்று கண்ணநீரோடே மீளுவது, தனக்கேற இடம்பெற்றவளவிலே, 'என்னூரைச் சொன்னாய், என்பேரைச் சொன்னாய், என்னடியாரை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்னுமாபோலே சிலவற்றை யேறிட்டு, மடிமாங்காயிட்டு, பொன்வாணியன் பொன்னை உரைகல்லிலேயுரைத்து மெழுகாலே யெடுத்துக் கால்கழஞ்சென்று திரட்டுமாபோலே. ஜந்ம பரம்பரைகள் தோறும் "யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம்" என்கிற ஸுக்ருத விஶேஷங்களைக் கற்பித்துக்கொண்டு, தானே அவற்றை ஒன்றுபத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்.

385. லலிதாசரிதாதிகளிலே இவ்வர்த்தம் சுருக்கமொழியக்காணலாம்.

386. அஜ்ஞான மநுஷ்யர்கள் வாளாதந்தானென்றிருப்பர்கள்.

387. ஜ்ஞானவான்கள், a"இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை யென்னுள் வைத்தான்" b"எந்நன்றிசெய்தேனுவென்னெஞ்சிற்றிகழ்வதுவே" c'நடுவே வந்துய்யக்கொள்கின்றநாதனை" d"அறியாதன அறிவித்த அத்தா நீசெய்தன அடியேனறியேனே" e"பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி யடிமைகொண்டாய்" f"என்னைத்தீமனங் கெடுத்தாய்" g "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்றீடுபடாநிற்பர்கள்.

388. பாஷ்யகாரர் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரியதிருமண்டபத்துக்குக் கீழாக முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே இவ்வர்த்தம் ப்ரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது.

a திருவாய் 10-8.9. b திருவாய் 10-6-8. c திருவாய் 1-7-5.
d திருவாய் 2.3-2. e திருவாய் 5.7-3. f திருவாய் 2.7.8.
g திருவாய் 2-7-7.

389. ஆகையால் அஜ்ஞாதமான நன்மைகளையே பற்றாசாகக்கொண்டு கடாக்ஷியாநிற்கும்.

390. இவையுங்கூட இவனுக்கு விளையும்படியிறே இவன்தன்னை முதலிலே அவன் ஸ்ருஷ்டித்தது.

391. அது தன்னை நிரூபித்தால் இவன்தனக்கு ஒன்றும் செய்யவேண்டாதபடியாயிருக்கும்.

392. பழையதாக உழுவது, நடுவது, விளைவதாய்ப் போரும் க்ஷேத்ரத்திலே உதிரி முளைத்துப் ப₂லபர்யந்தமாமா போலே, இவைதான் தன்னடையே விளையும்படியாயிற்று, பத்தியுழவன் பழம்புனத்தை ஸ்ருஷ்டித்த கட்டளை.

393. அவைதான் எவையென்றால்;

394. பூர்வக்ருத புண்யாபுண்ய ப₂லன்களைச் சிரகாலம் பு₄ஜித்து, உத்தரகாலத்தில் வாஸனைகொண்டு ப்ரவர்த்திக்குமத்தனை என்னும்படி கையொழிந்த த₃ஶையிலே, "நாமார், நாம் நின்றநிலையேது, நமக்கினிமேல் போக்கடி ஏது?" என்று பிறப்பன சில நிரூபண விஶேஷங்களுண்டு, அவையாதல், முன்பு சொன்னவையாதல்.

395. 1. **"யதா₂ ஹி மோக்ஷகா: பாந்தே₂,"** என்று தொடங்கி இதினுடைய க்ரமத்தை ப₄க₃வச்சா₂ஸ்த்ரத்திலே சொல்லிற்று.

396. உ "வெறிதே அருள்செய்வர்" என்று இவ்வர்த்த₂த்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே.

397. உ [செய்வார்கட்கு] என்று - அருளுக்கு ஹேது ஸுக்ருதமென்னுநின்றதே என்னில்; அப்போது உ[வெறிதே] என்கிறவிடம் சேராது.

398. ப₄க₃வதா₃பி₄முக்₂யம் ஸுக்ருதத்தாலன்றிக்கே ப₄க₃வத்க்ருபையாலே பிறக்கிறது; அத்₃வேஷம் ஸுக்ருதத்தாலே என்னில்; இந்தப் ப₂லவிஶேஷத்துக்கு அத்தை ஸாத₄நமாக்கவொண்ணாது.

---

உ திருவாய் 8.7.8.

399. ஶாஸ்த்ரமும் விதி₄யாதே, நாமும் அறியாதே இருக்கிற இத்தை ஸுக்ருதமென்று நாம் பேரிடுகிறபடி யென்? என்னில்; நாமன்று; ஈஶ்வரனென்று கேட்டிருக்கை யாயிருக்கும்.

400. இவ்வர்த்த₂விஷயமாக ஆழ்வார்கள் பாசுரங் களில் பரஸ்பரவிருத்₃த₄ம்போலே தோற்றுமவற்றிற்சொல் லும் பரிஹாரங்களும், மற்றுமுண்டான வக்தவ்யங்களும் விஸ்தர ப₄யத்தாலே சொல்லுகிறிலோம்.

401. ஆகையால் இவன் விமுக₂னான த₃ஶையிலுங் கூட உஜ்ஜீவிக்கைக்கு க்ருஷிபண்ணின ஈஶ்வரனை அநு ஸந்தி₄த்தால், எப்போதும் நிர்ப்ப₄ரனாயே இருக்குமித்தனை.

402. ஆ "எதிர்சூழல் புக்கு".

403. ஒருவனைப் பிடிக்கநினைத்து ஊரை வளைவாரைப் போலே வ்யாப்தியும்.

404. ஸ்ருஷ்ட்யவதாராதி₃களைப்போலே 'ஸ்வார்த்த₂ மாக' என்றிறே ஜ்ஞாநாதி₃கர் அநுஸந்தி₄ப்பது.

405. கர்மப₂லம்போலே க்ருபாப₂லமும் அநுப₄வித்தே அறவேணும்.

406. க்ருபை பெருகப்புக்கால் இருவர் ஸ்வாதந்த்ர்யத் தாலும் தகையவொண்ணாதபடி இருகரையும் அழியப் பெருகும்.

407. ப₄யஹேது - கர்மம், அப₄யஹேது - காருண்யம்.

408. ப₄யாப₄யங்களிரண்டும் மாறிமாறி ப்ராப்தி யளவும் நடக்கும்.

409. நிவர்த்யஜ்ஞாநம் ப₄யஹேது, நிவர்த்தகஜ்ஞாநம் அப₄யஹேது.

**ப₄க₃வந்நிர்ஹேதுக க்ருபாவைப₄வ ப்ரகரணம் முற்றிற்று.**

### சரம ப்ராப்ய ப்ராபக ப்ரகரணம்

410. ஸ்வதந்த்ரனை உபாயமாகத்தான் பற்றின போதிறே இப்ரஸங்க₃ந்தானுள்ளது.

---

ஆ *திருவாய் 2-7-6.*

411. உண்டபோது ஒரு வார்த்தையும், உண்ணாதபோது ஒரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே, அவர்கள் பாசுரங்கொண்டன்று இவ்வர்த்தம் அறுதியிடுவது.

412. அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவருண்டிறே, அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்தம் அறுதியிடக்கடவோம்.

413. ஸ்வரூபத்துக்கும், ப்ராப்யத்துக்கும் சேர்ந்திருக்க வேணுமிறே ப்ராபகம்.

414. வடுகநம்பி ஆழ்வானையும், ஆண்டானையும் இருகரையரென்பர்.

415. ப்ராப்யத்துக்கு ப்ரதமபர்வம்-ஆசார்யகைங்கர்யம்; மத்யமபர்வம் - பகவத்கைங்கர்யம்; சரமபர்வம் - பாகவத கைங்கர்யம்.

416. ஸ்வரூபப்ராப்தியை ஶாஸ்த்ரம் புருஷார்த்தமாகச் சொல்லாநிற்க, ப்ராப்திபலமாய்க்கொண்டு கைங்கர்யம் வருகிறாப்போலே ஸாத்ய விவ்ருத்தியாய்க்கொண்டு சரமபர்வம் வரக்கடவது.

417. இதுதான் துர்லபம்.

418. விஷயப்ரவணனுக்கு அத்தைவிட்டு பகவத் விஷயத்திலே வருகைக்குள்ள அருமைபோலன்று, ப்ரதம பர்வத்தைவிட்டுச் சரமபர்வத்திலே வருகைக்குள்ள அருமை.

419. அங்கு தோஷதர்ஶநத்தாலே மீளலாம்; இங்கு அதுசெய்யவொண்ணாது.

420. தோஷமுண்டானாலும் குணம்போலே உபாதேயமாயிருக்கும்.

421. லோகவிபரீதமாயிறே இங்கிருப்பது.

422. குணம் உபாதேயமாகைக்கு ஈடான ஹேது தோஷத்துக்குமுண்டிறே.

423. நிர்க்ருணனென்று வாய்மூடுவதற்கு முன்னே க்ருணாவானென்று சொல்லும்படியாயிருந்ததிறே.

424. இப்படி சொல்லும்படி பண்ணிற்று, க்ருபையாலேயென்று, ஸ்நேஹமும், உபகார ஸ்ம்ருதியும் நடந்ததிறே.

425. நிர்க்₄ருணனாக ஶங்கித்துச் சொல்லும் அவஸ்தை₂யிலும், காரணத்தை ஸ்வக₃தமாகவிறே சொல்லிற்று.

426. கு₃ணதோ₃ஷங்களிரண்டும், க்ஷுத்₃ர புருஷார்த்த₂த்தையும் புருஷார்த்த₂காஷ்டை₂யையும் குலைக்கும்.

427. நித்யஶத்ருவாயிறேயிருப்பது.

428. இப்படி ப்ராப்யத்தை அறுதியிட்டால் அதுக்கு ஸத்₃ருஶமாக வேணுமிறே ப்ராபகம்.

429. அல்லாதபோது ப்ராப்யப்ராபகங்களுக்கு ஐக்யமில்லை.

430. ஈஶ்வரனைப் பற்றுகை - கையைப் பிடித்துக் காரியங்கொள்ளுமோபாதி; ஆசார்யனைப் பற்றுகை காலைப் பிடித்துக் காரியங்கொள்ளுமோபாதி.

431. ஆசார்யன் இருவர்க்கும் உபகாரகன்.

432. ஈஶ்வரனுக்கு ஶேஷவஸ்துவை உபகரித்தான்; சேதநனுக்கு ஶேஷியை உபகரித்தான்.

433. ஈஶ்வரன் தானும் ஆசார்யத்வத்தை ஆசைப் பட்டிருக்கும்.

434. ஆகையிறே கு₃ருபரம்பரையிலே அந்வயித்ததும், ஸ்ரீகீ₃தையும் அப₄யப்ரதா₃நமும் அருளிச்செய்ததும்.

435. ஆசார்யனுக்கு ஸத்₃ருஶப்ரத்யுபகாரம் பண்ணலாவது - விபூ₄திசதுஷ்டயமும் ஈஶ்வரத்₃வயமு முண்டாகில்.

436. ஈஶ்வர ஸம்ப₃ந்த₄ம் ப₃ந்த₄மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கும்; ஆசார்ய ஸம்ப₃ந்த₄ம் மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும்.

437. ப₄க₃வல்லாப₄ம் ஆசார்யனாலே.

438. ஆசார்யலாப₄ம் ப₄க₃வானாலே.

439. உபகார்யவஸ்து கௌ₃ரவத்தாலே, ஆசார்யனைக்காட்டில் மிகவும் உபகாரகன் ஈஶ்வரன்.

440. ஆசார்ய ஸம்பந்தம் குலையாதே கிடந்தால், ஜ்ஞாந பக்தி வைராக்யங்களுண்டாக்கிக் கொள்ளலாம்; ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தால், அவையுண்டானாலும் ப்ரயோஜநமில்லை.

441. தாலிகிடந்தால் பூஷணங்கள் பண்ணிப் பூணலாம்; தாலிபோனால் பூஷணங்களெல்லாம் அவத்யத்தை விளைக்கும்.

442. தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப்பிரிந்தால் அத்தை உலர்த்துமாபோலே, ஸ்வரூப விகாஸத்தைப் பண்ணும் ஈச்வரன்தானே ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தால் அத்தை வாடப்பண்ணும்.

443. இத்தையொழிய பகவத்ஸம்பந்தம் துர்லபம்.

444. இரண்டும் அமையாதோ, நடுவிற்பெருங்குடியென்? என்னில்;

445. கொடியைக் கொள்கொம்பிலே துவக்கும்போது சுள்ளிக்கால் வேண்டுமாபோலே ஆசார்யாந்வயத்துக்கும் இதுவேணும்.

446. 'ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தைக் குலைத்துக்கொண்ட இவனுக்கு ஆசார்யாபிமாநமொழிய கதியில்லை' என்று பிள்ளை பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்.

447. ஸ்வஸ்வாதந்த்ர்ய பயத்தாலே பக்திநழுவிற்று.

448. பகவத் ஸ்வாதந்த்ர்ய பயத்தாலே ப்ரபத்தி நழுவிற்று.

449. ஆசார்யனையும் தான் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பமாகையாலே, காலன்கொண்டு மோதிரமிடுமோபாதி.

450. ஆசார்யாபிமாநமே உத்தாரகம்.

451. கைப்பட்டபொருளைக் கைவிட்டுப் புதைத்த பொருளைக் கணிசிக்கக்கடவனல்லன்.

452. வீடாய் பிறந்தபோது கரஸ்த₂மான உத₃கத்தை உபேக்ஷித்து ஜீமூதஜலத்தையும், ஸாக₃ரஸலிலத்தையும், ஸரித்ஸலிலத்தையும், வாபீகூபபயஸ்ஸுக்களையும் வாஞ்சி₂க்கக் கடவனல்லன்.

453. பாட்டுக்கேட்குமிடமும், கூப்பீடுகேட்குமிடமும், குதித்தவிடமும், வளைத்தவிடமும், ஊட்டுமிடமு மெல்லாம் வகுத்தவிடமேயென்றிருக்கக்கடவன்.

454. இவனுக்கு ப்ரதிகூலர் - ஸ்வதந்த்ரரும், தே₃வதாந்தரபரரும். அநுகூலர் - ஆசார்யபரதந்த்ரர். உபேக்ஷணீயர் - ஈஶ்வரபரதந்த்ரர்.

455. ஜ்ஞாநாநுஷ்ட₂ாநங்களிரண்டும் - அல்லாதார்க்கு உபாயாங்க₃மாயிருக்கும். இவனுக்கு உபேயாங்க₃மாயிருக்கும்.

456. இவனுக்கு நிஷித்₃தா₄நுஷ்ட₂ாநம் - தன்னையும் பிறரையும் நஶிப்பிக்கையாலே த்யாஜ்யம்.

457. தான் நஶிக்கிறது - மூன்றபசாரத்திலும் அந்வயிக்கையாலே; பிறர் நஶிக்கிறது - தன்னை அநாத₃ரித்தும் தன் அநுஷ்ட₂ாநத்தை அங்கீ₃கரித்தும்.

458. விஹிதபோ₄க₃ம் — நிஷித்₃த₄போ₄க₃ம்போலே லோகவிருத்₃த₄முமன்று; நரகஹேதுவுமன்று. ஆயிருக்கச் செய்தே, ஸ்வரூபவிருத்₃த₄முமாய், வேதா₃ந்த விருத்₃த₄முமாய், ஶிஷ்டக₃ர்ஹிதமுமாய், ப்ராப்யப்ரதிப₃ந்த₄கமுமாயிருக்கையாலே த்யாஜ்யம்.

459. போ₄க்₃யதாபு₃த்₃தி₄, குலைந்து த₄ர்மபு₃த்₃த்₄யா ப்ரவர்த்தித்தாலும் ஸ்வரூபம் குலையும்.

460. 1. **"க்ஷேத்ராணி மித்ராணி"** என்கிற ஶ்லோகத்தில் அவஸ்தை₂ பிறக்கவேணும், ஸ்வரூபம் குலையாமைக்கு.

461. ப்ராப்யபூ₄மியில் ப்ராவண்யமும், த்யாஜ்ய பூ₄மியில் ஜிஹாஸையும், அநுப₄வாலாப₄த்தில் ஆத்மதா₄ரணயோக்₃யதையும் உபாயசதுஷ்டயத்துக்கும் வேணும்.

462. a"பழுதாகாதொன்றறிந்தேன்"என்கிற பாட்டை, பூர்வோபாயத்துக்கு ப்ரமாணமாக அநுஸந்தி₄ப்பது.

463. b "நல்லவென் தோழி" c "மாருய தானவனை" என்கிற பாட்டுக்களையும், ஸ்தோத்ரத்தில் முடிந்த ஶ்லோகத்தையும், 1. "பஶவர் மநுஷ்ய:" என்கிற ஶ்லோகத்தையும், இதுக்கு ப்ரமாணமாக அநுஸந்தி₄ப்பது.

464. ஆசார்யாபி₄மாநந்தான் - ப்ரபத்திபோலே உபாயாந்தரத்துக்கு அங்க₃முமாய், ஸ்வதந்த்ரமுமாயிருக்கும்.

465. ப₄க்தியில் அஶக்தனுக்கு ப்ரபத்தி; ப்ரபத்தியில் அஶக்தனுக்கு இது.

466. இது ப்ரத₂மம் ஸ்வரூபத்தைப் பல்லவிதமாக்கும், பின்பு புஷ்பிதமாக்கும், அநந்தரம் ப₂லபர்யந்தமாக்கும்.

சரமபர்வ நிஷ்ட₂ாப்ரகரணம் ஸமாப்தம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீவசநபூ₄ஷணம் முற்றிற்று.

# 5. அர்ச்சிராதி₃

## தனியன்

(கலித்துறை)

**போர்மண்டலஞ்சங்கு தண்டுவில்வாள்புக ராழிவெய்யோன்**
**கார்மண்டலஞ்சென்று காண்பார்தமக்குக் கதிரொளியோன்**
**ஏர்மண்டலந்தன்னை யெய்தும்வழியை யினிதுரைத்தான்**
**பேர்மண்டலகுரு வென்னு முடும்பை பிறந்தவனே.**

## ப்ரத₂மப்ரகரணம்

ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனுக்கு விபூ₄தித்₃வயமும் ஶேஷமாயிருக்கும். அதில் போ₄க₃விபூ₄தியிலுள்ளார் d "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்கிற

அ—12

a நான்-திருவ 89. b நாச்-திரு 10.10. c நான்-திருவ 18. d திருவாய் 4-9-10.

படியே அவனுடைய செங்கோலே ஏகாதபத்ரமாக நடக்கும்படி அவனுடைய அபிமாநத்திலே அந்தர்பவித்துப் போருவர்கள். லீலாவிபூதியிலுள்ளார் அவர்களைப்போலே சந்தாநுவர்த்திகளன்றிக்கே ஸங்கல்பாநுவிதாயிகளாய், 1. "நம இத்யேவ வாதிந:" என்கிறதுக்கு எதிராக 2. "ந நமேயம்" 3. "ஈஶ்வரோஹம்" என்கிறபடியே, மனையடைவே, a "யானேயென்றனதே" என்று, அவர்கள் b"பணியா அமரரா"யிருக்கும் இருப்புக்கெதிராக c"மற்றோர் தெய்வம்பாடி ஆடிப்பணிந்து", d"மிக்கார் வேதவிமலர்" என்கிறபடியே, அவர்களைப்போலே e"பெருமக்க"ளாயிராதே f "சிறியார் சிவப்பட்டார்" என்கிறபடியே சிறியராய், g"அயர்வறும் அமரர்கள்" என்கிறபடியே அவர்களைப்போலே திவ்யஜ்ஞாநோபபந்நராயிராதே h "அறிவிலா மனிச"ராய், i "ஒளிக்கொண்ட சோதிக்"கெதிராக j அழுக்குடம்பைப் பரிக்ரஹித்து, 4. "விபந்யவ:" k"விண்ணோர் பரவுந்தலைமகன்" என்கிறதுக்கெதிராக l"உலகில் கண்டவா தொண்டரைப் பாடி" m "உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்கிறபடியே அவனுக்கு ஆட்செய்யாதே, n மாரனார் வரி வெஞ்சிலைக்கு ஆட்செய்து, o தொண்டுபூண்டமுதமுண்ணாதே p பாவையர் வாயமுதமுண்டு, 5. "ஸ ஏகதா பவதி" என்கிறதுக்கெதிராக q குலந்தான் எத்தனையும் பிறந்து, r உருவார் சக்கரஞ்சங்கு சுமந்து இங்கவனோடு ஒருபாடுழலாதே s ஆக்கையின் வழியுழன்று, 6. "ஏதத் வ்ரதம் மம" என்கிறவனுடைய வ்ரதத்துக்கு எதிராக t அதானும்பற்றி நீங்கும் விரதத்தை ஏறிட்டுக்கொண்டு, u "அவர் தரும் கலவியே கருதி ஓடினேன்"

---

a திருவாய் 2-9-9. b திருவாய் 8-3-6. c திருவாய் 4-10-7.
d திருவாய் 2-9-8. e திருவாய் 3-7-4. f நான்-திருவ 6.
g திருவாய் 1-1-1. h திருமாலை 13. i திருவாய் 2-3-10.
j திருவிருத்தம் 1. k திருவாய் 2-6-3. l பெரியதிரு 1-1-7.
m திருப்பாவை 29. n பெரு-திரு 3-3. o திருமாலை 5.
p பெரிய திரு 1-3-5. q பெரியதிரு 1-9-4. r திருவாய் 8-3-7.
s திருவாய் 3-2-1. t திருவிருத்தம் 95. u பெரியதிரு 1-1-1.

என்கிறபடியே a அலம்புரிந்த நெடுந்தடக்கைக்கும் எட்டாதபடி கைகழியவோடி, b அற்பசாரங்களவை சுவைத்தகன்றுபோரக்கடவராயிருப்பர்கள். இவர்கள் தன்மையைப் பார்த்துக் கைவிடாதே, ஸ்வாபா₄விக ஸம்ப₃ந்த₄மே ஹேதுவாக விடமாட்டாதே c எதிர்சூழல் புக்குத் திரிகிற ஸர்வஜ்ஞ₄த ஸௌஹ்ருத்தான ஸர்வேஶ்வரனுடைய யத்ந விஶேஷம் ஒருநாள்வரையிலே ஓர் அவகாஶத்திலே ப₂லித்து, அத்₃வேஷாபி₄ஸந்தி₄யையுடையனும், மோக்ஷ ஸமீக்ஷாயுக்தனும், ப்ரவ்ருத்₃த₄மான வைராக்₃யனும், விவேகாபி₄நிவேஶியாய், ஸதா₃சார்ய ஸமாஶ்ரயணம் பண்ணிச் d செய்த வேள்வியனும், ஸம்ஸாரத்தினுடைய கொடுமையை அநுஸந்தி₄த்து, ஸர்ப்பாஸ்யக₃தமான மண்டூ₃கம்போலேயும், காட்டுத்தீ கதுவின மான்பேடைபோலேயும், e இருபாடெரி கொள்ளியினுள் எறும்புபோலேயும், f ஆவாரார் துணையென்றலை நீர்க்கடலுள் அழுந்தும் நாவாய்போலேயும், g ஆற்றத் துளங்கி, h "பல நீ காட்டிப் படுப்பாயோ" i "இன்னங்கெடுப்பாயோ", j "ஐவர்திசை திசை வலித்தெற்றுகின்றனர்" k "கூறைசோறிவைதாவென்று குமைத்துப்போகார்" என்று இந்த்₃ரியங்களினுடைய கொடுமையை நினைத்துக் கூப்பிட்டு, l "எண்ணாராத் துயர்விளைக்கு மிவையென்ன உலகியற்கை" m "உயிர்மாய்தல் கண்டாற்றேன்" n "ஒ௦ உலகினதியல்வே" என்று ஸம்ஸாரிகள் இழவுக்கு நொந்தாற்றமாட்டாதே, o "பேயரே எனக்கு யாவரும்" p "நாட்டுமானிடத்தோடு எனக்கரிது" என்றும் q "நாட்டாரோடியல்வொழிந்து" என்றும் சொல்லுகிறபடியே, பிராட்டிக்கு ராக்ஷஸிகளோட்டை ஸஹவாஸம் அஸஹ்யமானாற்போலே, r மெய்யில்

a திருநெடுந் 6. b திருவாய் 3-2-6. c திருவாய் 2-7-6.
d திருவாய் 5-7-5. e பெரியதிரு 11-8-4. f திருவாய் 5-1-9.
g பெரியதிரு 11-8-2. h திருவாய் 6-9-9. i திருவாய் 6-9-8.
j திருவாய் 7-1-10. k பெரியதிரு 7-7-9. l திருவாய் 4-9-1.
m திருவாய் 4-9-3. n திருவாசி 6. o பெருமாள்திரு 3-8.
p பெரியாழ்திரு 5-1-5. q திருவாய் 10-6-2. r பெருமாள்திரு 3-1.

வாழ்க்கையை மெய்யெனக்கொண்டு a உண்டியேயுடையே உகந்தோடுகிற ஸௌரிசிந்தா விமுக₂ரான ஸம்ஸாரிக ளோட்டை ஸஹவாஸம் து₃ஸ்ஸஹமாய், b 'இந்நின்ற நீர்மை இனியாமுறாமை'' c ''எங்கினித் தலைப்பெய்வன்'' d '' நாளேலறியேன் '' e ''வானுலகம் தெளிந்தே என்றெய்துவது'' f ''தரியேன் இனி'' g ''கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதோ'' என்று ப₄க₃வத₃நுப₄வம் பெறுமை யாலே பெருவிடாய்ப்பட்டு, h தீயோடுடன் சேர்மெழுகாய், i காணவாராய் என்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து, காணப்பெறுமையாலே j ஒருபகலாயிர மூழியாய், **1. "க்ருத க்ருத்யா: ப்ரதீக்ஷந்தே"** என்கிறபடியே k ஆக்கைவிடும் பொழுதை மநோரதி₂த்து, மஹிஷியினுடைய உச்சி₂ஷ்டத்தை விரும்பும் ராஜபுத்ரனைப்போலே தான் த்யஜித்த தே₃ஹத்தை விரும்புகிற ஈஶ்வரனை l ''மங்கவொட்டு'' என்றபேக்ஷித்து, m 'உண்டிட்டாயினி யுண்டொழியாய்'' n ''முற்றக்கரந்தொளித்தாய்'' o ''திருவாணை நின்னாணை கண்டாய்'' p'' இனி நான் போகலொட்டேன்'' என்று தடுத்தும், வளைத்தும் பெறவேண்டும்படி பரமப₄க்திதலையெடுத்தல், அவ்வளவன்றிக்கே உக்திமாத்ரத்திலே அந்வயித்தல், q ''நானும் பிறந்தமை பொய்யன்றே'' r ''தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டும்'' என்று சொல்லுகிறபடியே s பழுதாகாத வழியை யறிந்து t வேருகவேத்தியிருக்குமவனைப் பற்றுதல்செய்து, u தெளிவுற்று வீவின்றி நிற்குமவனுக்கு, ஶரீராவஸாநகாலத்திலே, ஈஶ்வரன் தன் திருவடிகளிலே இவன் தலைசாய்த்தவன்றுதொடங்கி

a பெருமாள்திரு 3-4. b திருவிருத்தம் 1. c திருவாய் 3.2.9.
d திருவாய் 9-8-4. e பெரியதிரு 6-3-8. f திருவாய் 5.8.7.
g திருவாய் 6-9-9. h திருவாய் 6.9.6. i திருவாய் 8.5.2.
j திருவாய் 10-3-1. k திருவாய் 1-2-9. l திருவாய் 10.7.10.
m திருவாய் 10-10-6. n திருவாய் 10.10.8. o திருவாய் 10.10.2.
p திருவாய் 10-10-1. q நாச்-திரு 10-4. r நாச்-திரு 10-10.
s நான்-திருவ 89. t நான்,திருவ 18. u திருவாய் 7.5.11.

**1. "ருணம் ப்ரவ்ருத்₃த₄ம்"**, a "உன்னடியார்க்கென் செய்வனென்றேயிருத்தி நீ" என்கிறபடியே பெருந் தனிசாளனாய், ப்ரத்யுபகாரந்தேடித் தடுமாறி, b திருத்திப் பணிகொள்ள நினைத்து, பல்வாங்கின பாம்புபோலே ஸம்ஸாரம் மறுவலிடாதபடி அடியறுக்கச் செய்தேயும் 'பிணமெழுந்து கடிக்கிறதோ' என்று அதிஶங்கைபண்ணி, அமர்ந்த நிலத்திலே கொண்டுபோகையிலே விரைந்து, 'இவன் விடாய்குளப்படி' என்னும்படி கடல்போலே c முற்றப்பருக வேண்டும்படி பெருவிடாயை யுடையனாய், d ஒருமாநொடியும் பிரியாதே, சக்ரவர்த்தி, பெருமாள் திருவபி₄ஷேகத்துக்கு, வஸிஷ்ட₂ வாமதே₃வாதி₃களை யழைத்துப் பாரித்தாற்போலே, நித்யஸூரிகளை யழைப்பித்து வழியைக்கோடிப்பிப்பதாய்க்கொண்டு, **2. "அலங்காரவிதி₄ம் க்ருத்ஸ்நம் காரயாமாஸ வேஶ்மநி"** என்கிறபடியே e வீடுதிருத்தி, அநாதி₃காலார்ஜிதங்களாய் இவன் ஆசார்ய ஸமாஶ்ரயணம் பண்ணின அன்றே தொடங்கி f அருளென்னுந் தண்டாலடியுண்டு மூக்கும் g முகமுஞ் சிதைந்து, h பண்டுபோலே வீற்றிருக்கை தவிர்ந்து மடியடக்கி நில்லாதே சரக்கு வாங்கி, i "மருங்குங்கண்டிலமால்" என்னும்படி யொளித்து வர்த்திக்கிற பூர்வாக₄ங்களையும், உத்தராக₄ங்களையும், அநுகூலர் விஷயமாகவும், ப்ரதிகூலர் விஷயமாகவும், வருணனைக்குறித்துத் தொடுத்த அம்பை மருகாந்தாரத்திலே விட்டாற்போலே அசல்பிளந்தேறிட்டு, இவனோடு ஸம்ப₃ந்த₄முடையராய் நரகாநுப₄வம் பண்ணுகிறவர்களை **3. "ஏதத்ஸம்ப₃ந்தி₄நஶ்சாந்யே"** என்கிறபடியே ஸ்வர்க₃ஸ்த₂ராம்படி நினைப்பிட்டு, **4. "ஊட₄: பஞ்சாத்மநா தேந தார்க்ஷ்யரூபேண"** j "செழும்பறவை தானேறித்திரிவான்" என்று சொல்லுகிறபடியே k "அருளாழிப்புட்கடவீர்"

a பெரியதிருவ 53. b திருவாய் 3.5.11. c திருவாய் 9.6.10.
d திருவாய் 10.7.8. e திருவாய் 1.5.10. f பெரியதிருவ 26.
g பெரியதிருவ 69. h பெரியதிருவ 20. i பெரியதிருவ 54.
j திருவாய் 10-6-5. k திருவாய் 1.4.6.

என்று இவனுசைப்பட்டபடியே a கொற்றப்புள்ளொன்றேறி வந்து தோன்றி, b மஞ்சுயர் பொன்மலைமேலெழுந்த மாமுகில்போன்ற வடிவையநுப₄விப்பித்து, ஆதிவாஹிகரை யழைத்தருளி, இவனை ஸத்கரிக்கும் க்ரமத்திலே ஸத்கரிக்க அருளிச்செய்ய, பின்பு **1. "இந்த்₃ரியைர்மநஸி ஸம்பத்₃ய மாநை:", 2. "வாங்மநஸி ஸம்பத்₃யதே மந: ப்ராணே ப்ராணஸ் தேஜஸி தேஜ: பரஸ்யாம் தே₃வதாயாம்"** என்கிறபடியே, பா₃ஹ்யகரணங்கள் அந்த:கரணத்திலே சேர்ந்து, அந்த:கரணம் ப்ராணனோடே சேர்ந்து,ப்ராணன் இச்சேதநனோடே ஸம்ப₃ந்தி₄த்து, இவன் பூ₄தஸூக்ஷ்ம விஶிஷ்டனாய்க்கொண்டு பரமாத்மாவின் பக்கலிலே சேரும். பின்பு, க₃ர்மகாலத்திலே ஆதி₃த்யகிரணத்தாலே தப்தனானவன் நிழல்மரத்தைப்பற்றி இளைப்பாறுமாபோலே, ஸம்ஸார து₃:க்க₂ார்க்க தாபதப்தனான இவன் வாஸுதே₃வ தருச்சா₂யையைக்கிட்டி விஶ்ரமித்து, திருக்கோவலூருக்குப் போம்போது திருமங்கையாழ்வாருக்கு c "தானுகந்த வூரெல்லாந் தன்தாள்பாடி" என்கிறபடியே திருவுலகளந்தருளின திருவடிகளே பாதே₂யமாமாபோலே, **3. "ப்ராணப்ரயாணபாதே₂யம்" 4. "பாதே₂யம் புண்ட₃ரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்"** என்கிறபடியே த்₃வயவசநமே பாதே₂யமாகவும், **5. "ஏதேந ப்ரதிபத்₃யமாநா:", 6. "தே₃வயாநபத₂ஸ்ஸர்வே முக்திமார்க்க₃ாபி₄லாஷிண:"** என்கிறபடியே அர்ச்சிராதி₃மார்க்க₃மே d பெருவழியாகவும், e அண்டத்தப்புறத் துய்த்திடுமையனாய், ஆப்ததமனாய், f படர்கொள் பாம்பணைப்பள்ளிகொண்ட g சுரிகுழற் கமலக்கட் கனிவாய்க்காளமேகமான h அரங்கத்துறையுமின் துணைவனே வழித்துணையாகவும், விரஜாதீரமும் திவ்யவ்ருக்ஷமும் ஐரம்மத₃ஹ்ரத₃ தடமுமே விஶ்ரமஸ்த₂லமாகவும், திரு i மாமணிமண்டபமே புகலிடமாகவும், அர்ச்சிராதி₃ புருஷர்களே உசாத்துணையாகவும், j சூழ்விசும்பணி முகிலி

a பெரியதிரு 8-1-8. *b* பெரியதிரு 9-2-8. c திருநெடுந 6.
d பெரியதிரு 10-9-5. e பெரியதிரு 7-10-5. f திருவாய் 10-1-4.
g திருவாய் 10-1-1. h பெரியதிரு 3-7-6. i திருவாய் 10-9-11.
*j* திருவாய் 10-9-1.

னுடைய முழக்கமே ப்ரயாண படஹத்₄வநியாகவுமமைந்து a வழியைத்தரும் நங்கள் வானவரீசனை ஹார்த்த₃ன் b வழி படட்டோடவருள, c வானே றவழிபெற்று, போக்கிலே யொருப் பட்டு, ப்ரீத்யதிஶயத்தாலே, அநாதி₃காலம் தன்னைக் குடிமைகொண்டுபோந்த ஸம்ஸாரத்தை d "நரகத்தை நகு நெஞ்சே" என்கிறபடியே புரிந்து பார்த்துச்சிரித்து, e மாக வைகுந்தங் காண்பதற்குப் பண்டேயுண்டான ஆசை கொந்தளித்து மேலேமேலே பெருக, பிராட்டியும் ஸ்ரீவிபீ₄ஷணப்பெருமாளும் இலங்கையினின்றும் புறப்பட் டாற்போலே ஹ்ருத₃யகமலத்தினின்றும் புறப்பட்டு, 1. **"ஶதம் சைகா ச ஹ்ருத₃யஸ்ய நாட்₃ய:"** என்கிறபடியே - ஹ்ருத₃யத்தைப் பற்றிக்கிடக்கிற நூற்றொரு நாடி₃யிலும் ஸுஷும்நை என்று பேரையுடைத்தான மூர்த்த₃ந்யநாடி₃ யாலே வித்₃யாமாஹாத்ம்யத்தாலும் ஶேஷ₂வயாநாநுஸ்ம்ருதி யாலும் ப்ரஸந்நனான ஹார்த்த₃ன் கைவிளக்குப் பிடித்துக் கொண்டுபோகப் போய், *ஶிர:கபாலத்தை* பே₄தி₃த்து, **2. "தா ஆஸு நாடீ₃ஷு ஸ்ருப்தா: ஆப்₄யோ நாடீ₃ப்₄ய: ப்ரதாயந்தே தேऽமுஷ்மிந்நாதி₃த்யே ஸ்ருப்தா:...அத₂ ஏதைரேவ ரஶ்மிபி₄ரூர்த்₄வம் ஆக்ரமதே"** என்கிறபடியே அந்நாடி₃ யோடே ஸம்ப₃ந்தி₄த்து, ஆதி₃த்யரஶ்மியை அநுஸரித்துக் கொண்டு, **3. "ஓங்காரரத₂மாருஹ்ய"** என்கிறபடியே ப்ரணவமாகிற தேரிலேயேறி,மநஸ்ஸு ஸாரத்₂யம் பண்ணப் போம்போது, f கையார் சக்கரத்தினின்று எல்லாவடிவும் புதுக்கணிக்குமாபோலே உப₄யவிபூ₄தியும் புதுக்கணித்து, கடல் தன் கா₃ம்பீ₄ர்யமெல்லாம் குலைந்து, கீழ்மண் கொண்டு மேல்மண்ணெறிந்து ஸஸம்ப்₄ரம ந்ருத்தம் பண்ணியார்க்க, உபரிதநலோகங்களிலுள்ளார்களுடைய உபஹாரபாணிகளாய், g நெடுவரைத் தோரணம் நிரைத்து, ஆகாஶமெங்கும் பூர்ணகும்ப₄ங்களாலே பூர்ணமாக்கி,

a *திருவாய்* 3-9-3. b *திருவாய்* 8-10-4. c *திருவாய்* 10-6-5.
d *திருவாய்* 10-6-5. e *திருவாய்* 9-8-7. f *திருவாய்* 5-1-1.
g *திருவாய்* 10-9-2.

a தூபநன்மலர் மழைபொழிந்து, 'இவனொருகால் தங்கிப் போமோ' என்கிற நோயாசையாலே b எதிரெதிரிமையவ ரிருப்பிடம்வகுக்க, லோகங்களெல்லாமதிரும்படி கடலிரைத் தாற்போலே வாத்₃யங்கள் எங்கும் முழங்க, வழியிலுள்ளார்க ளடைய c "போதுமினெமதிடம் புகுதுக" என்கிறபடியே தந்தாம் ஸ்த₂ாநங்களையும் ஐஶ்வர்யங்களையும் ஸமர்ப்பிக்க, சிலர் d கீதங்கள்பாட, சிலர் யாக₃ாதி₃ஸுக்ருத ப₂லங்களை ஸமர்ப்பிக்க, வேறே சிலர் தூ₄பதீ₃பாதி₃களாலே அர்ச் சிக்க, சிலர் e காளங்கள் வலம்புரி கலந்தெங்கு மாரவாரிப்ப, e வாளொண்கண் மடந்தையரான ஆதிவாஹிகமஹிஷிகள், 'இது அராஜகமாய்க் கிடக்கக்கடவதோ, இத்தையாள வேணும்' என்று மங்களாஶாஸநம்பண்ண, f மருதரும் வசுக்களும் இவன் விரைந்துபோனால் ஈஶ்வரன் நமக்குக் கையடைப்பாக்கின நிலங்கழிந்ததென்றிராதே, லோகாந் தரங்களிலும் தொடர்ந்துசென்று இவன் செவிப்படும்படி ஸ்தோத்ரம்பண்ண, g 'மற்றெல்லாங் கைதொழப்போய்'' என்கிறபடியே பெரிய ஸத்காரத்தோடே போம்போது, **1. "அர்ச்சிஷமேவாபி₄ஸம்ப₄வந்தி அர்ச்சிஷோऽஹ அஹ்ந ஆபூர்யமாணபக்ஷம்", 2. "அக்₃நிர்ஜ்யோதிரஹஶ் ஶுக்லஷ் ஷண்மாஸா உத்தராயணம்"** என்று சா₂ந்தோ₃க்₃ய வாஜ ஸநேய கௌஷீதகீ ப்ரஶ்₂ருதிகளிற் சொல்லுகிறபடியே, அர்ச்சிராதி₃புருஷர்கள் வழிநடத்தப் போம்.

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

## த் விதீயப்ரகரணம்

அதில் முற்பட அர்ச்சிஸ்ஸைக்கிட்டி, அவன் சிறிதிடம் வழிநடத்த, பின்பு அஹஸ்ஸையும், ஶுக்லபக்ஷாபி₄மாநி யையும், உத்தராயணாபி₄மாநியையும், ஸம்வத்ஸராபி₄ மாநியையும், வாயுவையுங் கிட்டி, அவர்கள் வழிநடத்த,

---

a திருவாய் 10-9-3. b திருவாய் 10-9-4. c திருவாய் 10-9-5.
d திருவாய் 10-9-5. e திருவாய் 10-9-6. f திருவாய் 10-9-7.
g பெரியதிரு 3-7-8.

1."ப்ரவிஶ்ய ச ஸஹஸ்ராம்ஶும்" a"மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுள்" என்கிறபடியே, ஹிரண்மய மாய், காலசக்ரப்ரவர்த்தகமான bதேரார் நிறைகதிரோன் மண்டலத்திலே, எதிர்விழிக்கவொண்ணாதபடி நிரவதிக தேஜஸ்ஸோடே எதிரே ஒரு ஆதித்யன் செல்லுமாபோலே சென்று, அவன் bமண்டலத்தைக் கீண்டுபுக்கு அவ்வருகே போய், 2. "க்ரமாச்சந்த்ரமஸம் ப்ராப்ய" என்கிறபடியே க்ரஹநக்ஷத்ர தாரகா நிர்வாஹகனும் அம்ருதாத்மகனுமிருந்துள்ள சந்த்ரனைக்கிட்டி, அவன் ஸத்கரிக்க அவ்வருகே போய், அமாநவனைக்கிட்டி, அவன் வழிநடத்த, ஸர்வாப்யாயகனான வருணனும், த்ரைலோக்ய பாலகனான இந்த்ரனும், முக்தராய்ப்போகுமவர்களை ஸர்வப்ரகாரத்தாலும் மிகவும் ஶ்லாகிக்கக் கடவர்களாய், ஸுராஸுர கந்தர்வ யக்ஷ ராக்ஷஸ நிர்வாஹகனான ப்ரஜாபதியையுஞ் சென்றுகிட்டி, அவர்கள் லோகங்களையும் கடந்து, அண்டத்தையும், தஶோத்தரமான ஆவரண ஸப்தகத்தையும், cமுடிவில் பெரும்பாழான மூலப்ரக்ருதியையும் கடந்து; — முன்பு ஸம்ஸாரியான நாளில் அந்தகாராவ்ருதமாய், நீரும் நிழலுமின்றிக்கே 3."பீதோஸ்ம்யஹம் மஹாதேவ ஶ்ருத்வா மார்க்கஸ்ய விஸ்தரம்" என்கிறபடியே, கேட்டபோதே துளங்கவேண்டும்படியான கொடிய வழியிலே, யமபடர் பாசங்களாலும், புத்ரதாரமய பாசங்களாலுங் கட்டுண்டு, யமதூதராலே இழுப்புண்டு, dதொடைவழி நாய்கள்கவர, ஶக்தி ஶங்கு தோமர ஸாயக ஶூலாதிகளாலே நோவுபட்டு, வ்யாக்ர கிங்கரரான ராக்ஷஸர் முகங்களுக் கிரையாய் உடம்பெங்கும் சீயும் ரக்தமும்வடிய, பசியும் தாகமும் மேலிட்டு, தூதரைச் சோறும் தண்ணீரும் வேண்டி, மூக்கும் முகமும் உதடும் பல்லுந்தகர்ந்து, கையுங்காலுமொடிந்து, கூப்பிட்டுப்போன இழவுதீர — ஸுகோத்தரமான மார்க்கத்தாலே இவ்வெல்லை கடந்தபோதே தொடங்

a பெரியதிருமடல் 16. b சிறியதிருமடல் 7. c திருவாய் 10-10-10.
d பெரியாழ்திரு 4-5-5.

கிக் கண்டாரடைய ஸத்கரிக்க, தனக்கு உபாயமான a பாரளந்த பாதபோதுபோலேயும், b அந்தரமேழினூடு செலவுய்த்த பாதம்போலேயும் கடுநடையிட்டுப்போய், ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃களாகிற ஸிம்ஹவ்யாக்₄ராதி₃களைத் தப்பி, ஸம்ஸாரமாகிற c பெருந்தூற்றினின்றும் புறப்பட்டு, தாபத்ரயமாகிற காட்டுத்தீயிலே அகப்பட்டுப் பட்ட க்லேஶமெல்லாந்தீர, 1. **"ததஸ்து விரஜாதீரப்ரதே₃ஶம்"** 2. **"ஸ க₃ச்ச₂தி விரஜாம் நதீ₃ம்"** என்கிறபடியே அம்ருதவாஹினியாய், வைதரணிக் கெதிர்த்தட்டான விரஜையைச் சென்றுகிட்டி. d வன்சேற்றள்ளலையும் வாஸநாரேணுவையுங் கழுவி, மேக₄ாவ்ருதமான ஆதி₃த்யமண்ட₃லம்போலேயும், ராஹுக்₃ரஸ்தமான சந்த்₃ரமண்ட₃லம் போலேயும், சேற்றிலழுந்தின மாணிக்கம்போலேயும் e அழுக்குடம்பிலே யகப்பட்டுத் திரோஹிதஸ்வரூபனான இவன் அதுவும் நிவ்ருத்தமாய், 3. **"தத்தோயஸ்பர்ஶமாத்ரேண"** என்கிறபடியே விரஜாஜலஸ்பர்ஶத்தாலே திரோதா₄யகமான ஸூக்ஷ்மஶரீரமுங் கழியப்பெறுகையாலே, 4. **"ஸூர்யகோடி ப்ரதீகாஶ:"** என்கிறபடியே அநேகமாயிரமாதி₃த்யர்கள் சேரவுதித்தாற்போலே கண்கொண்டு காணவொண்ணாதபடி நிரவதி₄க தேஜஸ்ஸையுடையனாய், 5. **"அமாநவம் ஸமாஸாத்₃ய"** என்கிறபடியே சதுர்பு₄ஜனாய், ஶங்க₂ சக்ர க₃தா₃தா₄ரனாய், விரஜைக்கரையிலே யெழுந்தருளியிருக்கிற அமாநவனைச் சென்று கிட்டி, அவன் திருக்கைகளாலே ஸ்பர்ஶிக்க, பின்பு லாவண்ய ஸௌந்த₃ர்யாதி₃ கல்யாணகு₃ணாகரமாய் ஶுத்₃த₄ஸத்வமயமாய், ப₄க₃வத₃நுப₄வைக பரிகரமான விக்₃ரஹத்தைப்பெற்று, இந்த்₃ராதி₃ பத₃ங்கள்போலே கர்மஸாத்₄யமாய், நஶ்வரமாய், கு₃ணத்ரயாத்மகமாயிருக்கையன்றிக்கே, ப₄க₃வத்ப்ரீதிஸாத்₄யமாய், நித்யமாய், ஶுத்₃த₄ஸத்வாத்மகமாய், f "இல்லைகண்டீரின்டம்" என்கிறதுக்கு எதிர்த்தட்டாக

a திருச்சந்த 66 b பெரியதிரு 11-4-5. c திருவாய் 10-10-8.
d திருவிருத்தம் 100. e திருவிருத்தம் 1. f திருவாய் 9-1-5.

a நலமந்தமில்லதோர் நாடாய், b இருள்தருமா ஞாலத்துக்கு எதிர்த்தட்டாக c "தெளிவிசும்பு திருநாடு" என்கிறபடியே d தெளிதாகிய சேண்விசும்பாய், ஸநகாதி₃கள் நெஞ்சுக்கும் நிலமன்றிக்கே ப₄க₃வத₃நுகூல்யைக போ₄கரான நித்ய ஸித்₃த₄ராலே நெருங்கி, அவர்களாலும் அளவிடவொண்ணாத அளவையும், ஐஶ்வர்யத்தையும், ஸ்வப₄ாவமாகவுடைத்தான திவ்யதே₃ஶத்தைக் e கண்களாரளவும் நின்று கண்டு, f "விண்ணைத்தொழுது" என்கிறபடியே தொழுது, அமானவ பரிஸரத்திலே ஶங்க₂ காஹள பே₄ரிகளினுடைய முழக்கத்தைக்கேட்டு, g "ஓடுவார் விழுவாருகந்தாலிப்பார்-நாடுவார் நம்பிரானெங்குற்றனென்பார்" h "கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்—தொண்டீரெல்லீரும் வாரீர்" என்பாராய்க்கொண்டு பெரிய ஆர்ப்பரவத்தைப் பண்ணித் திரள்திரளாகப் புறப்பட்டு வருகிற நித்யமுக்தருடைய ஆநந்த₃ களகளத்தைக் கண்டு அநுப₄வித்துக்கொண்டு, பெரிய ப்ரதீயோடே போகிறவளவிலே, **1. "தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதித₄ாவந்தி" 2."தத்ராக₃த்ய ச தே தே₃வால் ஸாத்₄யாஶ்ச விமலாஶயா:"** என்கிறபடியே திவ்யமால்யம், திவ்யாஞ்ஜநம், திவ்ய சூர்ணம், திவ்யவஸ்த்ரம், திவ்யாப₄ரணம் தொடக்கமானவற்றை த₄ரித்துக்கொண்டு, ஐந்நூறு திவ்யாப்ஸரஸ்ஸுக்களும், நித்யஸூரிகளும் எதிரேவந்து, **3. "ப்₃ரஹ்மாலங்-காரேண" 4. "ப்₃ரஹ்மாலங்க்ரியா"** என்கிறபடியே அலங்கரித்து. i உடுத்துக்களைந்த நின்பீதகவாடை, சூடிக்களைந்த திவ்யமால்யம், திவ்யாப₄ரணங்கள், திவ்யாங்க₃ராக₃ங்கள் தொடக்கமானவற்றாலே அலங்க்ருதனாயிருக்கிறபடியைக் கண்டு, j "புனையிழைகளணிவும் ஆடையுடையும் புதுக்கணிப்பும் - நினையும் நீர்மையதன்று" என்று விஸ்மிதராய்க்

a திருவாய் 2-8-4. b திருவாய் 10-6-1. c திருவாய் 9.7-5.
d திருவாய் 10-8-5. e பெரியதிரு 7-10-9. f திருவாய் 4-4-1.
g பெரியாழ்திரு 1-1-2. h திருவாய் 5-2-2. i திருப்பல்லாண்டு 9.
j திருவாய் 8-9-5.

கொண்டாட, பின்பு அநேகமாயிரங்கொடிகளாலும், முத்துத்தாமங்களாலும், மேற்கட்டிகளாலும் அலங்க்ருதமாய், தி₃வ்யஸ்த்ரீபரிவ்ருதமாய், ப₄க₃வத்ஸங்கல்பகல்பிதமாயிருப்பதொரு தி₃வ்யவிமாநத்தைப் பெரியதிருவடி கொண்டு வர, அதிலே இவனையேற்றி ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு தி₃வ்யகாந்தாரத்தளவிலே சென்றவாறே; நாநாவித₄மான உபஹாரங்களை ஏந்திக்கொண்டு வேறே சில தி₃வ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிரேத்தி ஸத்கரிக்க, பின்பு தி₃வ்யக₃ந்த₄ம், ப்₃ரஹ்மக₃ந்த₄ம் தொடக்கமான அப்ராக்ருத க₃ந்த₄ங்களை ஆக்₄ராணம்பண்ணி ஸர்வக₃ந்த₄னுய் a "கொடியணி நெடுமதிள் கோபுரங்குறுகினர்" என்கிறபடியே த்₄வஜபதாகாதி₃களாலே அலங்க்ருதமான தி₃வ்ய கோ₃புரத்தைக் கிட்டி, திருவாசல் காக்கும் முதலிகள் b "வைகுந்தன் தமரெமரெமதிடம் புகுது" என்கிறபடியே பெரிய ஆத₃ரத்தோடே ஸத்கரிக்க, **1. "ஸமதீத்ய ஜநாகுலம்"** c "கவாடங்கடந்து புக்கு" என்கிறபடியே நெஞ்சையும் கண்ணையும் வருந்தி மீட்டுக்கொண்டு, அயோத்₄யையென்றும் அபராஜிதையென்றுஞ் சொல்லப்படுகிற d ஏர்கொள் வைகுந்தமாநகரத்திலே e ஒரு வண்ணஞ் சென்று புக்கு, **2. "ஸ்ரீவைகுண்ட₂ாய தி₃வ்யநக₃ராய நம:"** என்று f கண்ணன் விண்ணூரைத்தொழுது, g வைகுந்தத்தமரும் முனிவரும், 'கடலில் நீர் ஸஹ்யத்திலே ஏறக்கொழித்தாற்போலே ஸம்ஸாரஸ்த₂னுன இவன் இத்தே₃ஶத்திலே வரப்பெறுவதே!' என்று விஸ்மிதராய்க்கொண்டாட, பின்பு h கோயில்கொள் தெய்வங்களான பெரியதிருவடி, ஸ்ரீஸேநாபதியாழ்வான் தொடக்கமானவர்கள் தந்தாம் திருமாளிகைகளிலே கொண்டுபுக்கு, இவனை ஆஸநத்திலே உயர வைத்து, தாங்கள் தரையிலேயிருந்து, தங்கள் மஹிஷிகள் நீர்வார்க்க ஸ்ரீபாத₃ம் விளக்கி, தங்கள் மஹிஷிகளுக்கு

---

a திருவாய் 10.9.8. b திருவாய் 10.9.9. c பெரியதிருமடல் 73
d பெரியதிரு 4 8-10. e திருவாய் 6-1-7. f திருவிருத்தம் 2.
g திருவாய் 10.9-9. h திருவாய் 8-6-5.

a "தேவர் வைகல் தீர்த்தங்களே" என்று இவன் ப்ரபாவத்தைச் சொல்லி, ஸத்கரிக்கும் க்ரமத்திலே ஸத்கரிக்க, பின்பு ஸ்ரீமடகோபனும், திவ்ய சூர்ணங்களும், பூர்ண கும்பங்களும், மங்கள தீபங்களும் ஏந்திக்கொண்டு, தேசாந்தரகதனாய் வந்த புத்ரனைக்கண்ட தாய்மாரைப் போலே குளிர்ந்த முகத்தையுடைய b மதிமுகமடந்தையர் வந்தெதிர்கொள்ள, பெருந்தெருவாலே உள்ளேபுக்கு, திவ்யாவரண ஶதஸஹஸ்ராவ்ருதமான c செம்பொன் செய் கோயிலைக்கிட்டி, **1. "ஸ்ரீவைகுண்டாய திவ்ய விமாநாய நம:"** என்று தண்டனிட்டு ஒருபாட்டம் மழை விழுந்தாற்போலே தன்னுடைய வரவாலே தளிர்த்துச் செருந்தி இலையும் மரமும் தெரியாதபடி பஹுவிதமான நிறத்தையும் கந்தத்தையுமுடைய அப்ராக்ருத புஷ்பங்களாலே நெருங்கித் தேன்வெள்ள மிடுகிற சற்பகச்சோலைகளாலும், நாநாவிதமான பூக்களாலும், ரத்நங்களாலும் சமைந்த லீலாமண்டபங்களாலும், அபூர்வ வித்விஸ்மய ஜநகங்களான க்ரீடாஶைலங்களாலும், ஸ்ரீவைகுண்டநாதனுக்கும் பெரியபிராட்டியார்க்கும் லீலாபரிகரங்களாய், செவிகளடைய மயிர்க் கூச்சிடும்படி இனிய பேச்சுக்களையுடைய ஶுக ஶாரிகா மயூர கோகிலாதிகளாலும் ஆகுலங்களாய், மாணிக்கம் முத்து பவளம் தொடக்கமானவற்றாலே சமைந்தபடிகளையுடைத்தாய், நித்யமுக்தர்களுடைய திருவுள்ளங்கள்போலே குளிர்ந்து, தெளிந்து, அம்ருதரஸங்களான திவ்யஜலங்களாலே நிறைந்து, நாநாவித பக்ஷிஸங்க ஸமாகீர்ணமாய்த் துளும்பி யெங்குஞ் சொரிகிற தேன்வெள்ளத்தை யுடைத்தாய், d "மாதர்கள் வாண்முகமும் கண்ணுமேந்தும்" என்கிறபடியே b மதிமுக மடந்தையருடைய திருமுகங்களுக்கும் திருக்கண்களுக்கும் போலியான தாமரை செங்கழுநீர் தொடக்கமான அப்ராக்ருத புஷ்பங்களையுடைய

a திருவாய் 7-10-11. b திருவாய் 10.9-10. c பெரியதிரு 4-3-1.
d திருவாய் 5.9.7.

ஓதநெடுந்தடங்களாலும், நாநாவித,மான பூம்படுக்கைக ளாலும், பரிமளம்போலே பூக்களிலே படிந்து மது,வெள் ளத்திலே முழுகிப் பாட்டுக்களாலே அநுமேயங்களான தெய்வவண்டுகளினுடைய தி,வ்யக,ாநத்தாலும் கிட்டி னாரைப் பிச்சேற்றுகிற தி,வ்யோத்,யாந ஶதஸஹஸ்ரங்க ளாலும் சூழப்பட்டு, நாநாரத்நங்களாலே சமைந்த ஸ்தூலங்களையுமுடைத்தாய், அநேகமாயிரம் ரத்நஸ்தம்ப,ங்க ளாலே அலங்க்ருதமாய், உப,யவிபூ,தியிலுள்ளாரும் ஒரு மூலையிலே அடங்கும்படி இடமுடைத்தாய், தாமரை, செங்கழுநீர், சந்த,நம், அகில், கர்ப்பூரம் தொடக்கமான வற்றை அளைந்துவருகிற மந்த,மாருதனாலே ஸேவ்யமாந மாய், நிரதிஶயாநந்த,மயமான a திருமாமணி மண்டபத் தைச் சென்று கிட்டி, 1. "**ஆநந்த,மயாய மண்டப ரத்நாய நம:**" என்று தண்டனிட்டு, b அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுதை எப்போதுமொக்கப் பருகுகையாலே இளகிப் பதித்து, c வைகுந்தக் குட்டனோடு ஸாம்யாபந்நராய் அநுப,வஜநிதமான ஹர்ஷப்ரகர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஸாமகா,நம் பண்ணுவார், d "செஞ்சொற் கவிகாள் உயிர் காத்தாட்செய்மின்" என்று இன்பவாற்றிலே ஶ்ரீலக்ஷணமாகிற ஆழங்காலிலே கொண்டைக்கோல் நாட்டுவார், ஸ்வாசார்யனைக் குறித்து e "இழைகொள் சோதிச் செந்தாமரைக் கட்பிரா னிருந்தமை காட்டினீர்" என்பார், f "உற்றேனுகந்து பணிசெய் துனபாதம்பெற்றே னீதே இன்னம் வேண்டுவதெந்தாய்" என்பார், g "என் முடிவு காணாதே என்னுள் கலந்தானைச் - சொன்முடிவு காணேன் நான் சொல்லுவதென் சொல்லீர்" என்பார், h "நமோ நாராயணாய என்பார்" என்கிறபடியே i ஓவாது ரைக்குமுரையான பெரியதிருமந்த்ரத்தைச் சொல்லி, j" தோள்களை ஆரத்தழுவி என்னுயிரை அறவிலை செய்

a திருவாய் 10-9-11. b திருநெடுந் 14 c பெரியாழ்திரு 3-6-3.
d திருவாய் 10-7-1. e திருவாய் 6-5-5. f திருவாய் 10-8-10.
g திருவாய்2-5-8. h நாச்-திரு5-11. i முதல்திருவ95. j திருவாய்8-1-10.

தனன் சோதி!'' என்று ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவார், a உருகுமாலிலே ஆழ்வார் பட்டதுபட்டு, b''வல்வினையேனை யீர்கின்ற குணங்களையுடையாய்'' என்று அம்பு பாடரைப் போலே உழைப்பார், c''மேலைத் தொண்டுகளித்து'' என்கிற படியே தா₃ஸ்யரஸம் தலைமண்டையிட்டு **1. "நம இத்யேவ வாதி₃ந:" 2. "நமஶ்ஶப்₃த₃ம் ப்ரயுஞ்ஜதே"** என்கிறபடியே c அந்திதொழுஞ் சொல்லைச் சொல்லுவாராய்க்கொண்டு, இப்படி ப்ரளயஜலதி₄யிலே அலைவாரைப்போலே ஆநந்த₃ ஸாக₃ரத்திலே அலைந்து, நித்யமுக்தர் சொல்லுகிற dசெவிக் கினிய செஞ்சொற்களாலே, e வெஞ்சொலாளர்களுடைய கடுஞ்சொல்லைக்கேட்ட இழவுதீரச் செவிக்கிரையிட்டுக் கொண்டுபோய், தி₃வ்யாஸ்தா₂நத்தைக் கிட்டி, அப்பே ரோலக்கத்தின் நடுவே, தந்தாம் திருமுடிகளிலே தி₃வ்யா யுத₄ங்களை த₄ரித்துக்கொண்டு கூப்பின கைகளும் தாங் களுமாயிருக்கிற அஸ்த்ர ஶஸ்த்ராபி₄மாநிகளான தி₃வ்யபுருஷர் களும், தம்முடைய ஸங்கல்பத்தாலே ஸகலஜக₃த் ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாரங்களைப் பண்ணக்கடவ ஸேனைமுதலியார் தொடக்கமான தி₃வ்யபுருஷர்களும் வரிசையடைவே ஸேவித்திருக்க—

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

## த்ருதீயப்ரகரணம்

உப₄யவிபூ₄தியும் தொழிலாக வகுப்புண்டு, ஸர்வாஶ் சர்யமயமான f கோப்புடைய சீரிய சிங்காசனத்திலே பன்னிரண்டிதழாய், நாநாஶக்திமயமான தி₃வ்ய கமல மாய், அதில் தி₃வ்ய கர்ணிகையிலே புஷ்ப ஸஞ்சய விசித்ர மான தி₃வ்யயோக₃பர்யங்கமாய், அதின்மேலே அநேக மாயிரம் சந்த்₃ரர்களை உருக்கிவார்த்தாற்போலே குளிர்ந்த புகரையுடைத்தான திருமேனியையுடையனாய், கல்யாண

a திருவாய் 9.6. b திருவாய் 8-1-8. c திருவாய் 10-8-7.
d திருவாய் 10-6-11. e பெரியதிரு 5-8-4. f திருப்பாவை 23.

கு₃ணங்களுக்கு அந்தமில்லாமையாலும் ஸர்வவித₄ கைங்கர்யத்திலும் அதி₄க்ருதனும், கைங்கர்யபரர்க்கெல்லாம் படிமாவாயிருக்கையாலும் அனந்தனென்றும் ஶேஷனென்றும் திருநாமத்தையுடையனும், ப₄க₃வத₃நுப₄வத்துக்குப் போக்குவீடாகப் பல வாய்த்தலைகளையுமுடையனும், விஜ்ஞாநப₃லங்களுக்கும் ஶைத்ய மார்த்₃வ ஸௌரப்₄யாதி₃ கு₃ணங்களுக்கும் கொள்கலமான திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே, ரஜதகி₃ரி ஶிக₂ரத்திலே அநேகமாயிர மாதி₃த்யர்கள் சேர உதித்தாற்போலேயிருக்கிற ப₂ண மண்ட₃லங்களில் ஜ்யோதிர்மண்ட₃லத்தின் நடுவே, **1. "பதிம் விஶ்வஸ்ய"** என்கிறவனுக்கும் தன் பூர்த்தியாலே பொறிபுறந்தடவ வேண்டும்படியான பூர்த்தியையும், a "வாசஞ்செய் பூங்குழலாள்" என்கிறபடியே நாற்றத்துக்கும் நாற்றங்கட்டலாம்படியான பூங்குழலையும், புண்ட₃ரீகாக்ஷனையுங்கூடக் குடநீர் வார்ப்பித்துக்கொண்டு ஒருமூலையிலே குமிழிநீரூட்டும்படியான b வடிக்கோல வாணெடுங் கண்களையும், போ₄க₃த்துக்கு ஏகாந்தமான ஒப்பனைபோலே பா₃ல்யமத்₄யத்திலே மெய்க்காட்டுகிற யௌவநத்தையும், பேசில் பிசகும்படியான ஸௌகுமார்யத்தையும், c "பித்தர் பனிமலர் மேற்பாவைக்கு" என்கிறபடியே அல்லாதவர்கள் பக்கல்போலே நூல்பிடித்துப் பரிமாறவொட்டாத போ₄க்₃யதாப்ரகர்ஷத்தையும் போ₄கோ₃பபோ₄க₃த₃ கேளியிலே ப₄க₃வத்₃வைஶ்வரூப்யத்தைச் சிறுக்கும்படியான பெருமையையுமுடையளாய், தி₃வ்யபரிஜநங்களை தத்தத₃வஸ்தா₂நுரூபமாக தி₃வ்யபரிசர்யையிலே நியோகி₃யா நிற்பாளாய், ஸர்வாத்மாக்களுக்கும் d என்றுமொக்கச் d சார்வாய், ஶீலரூபகு₃ண விலாஸாதி₃களாலே e "உனக்கேற்கும்" என்னும்படியிருக்கிற f ஒசிந்த வொண்மலராளான பெரிய பிராட்டியார் வலவட்டத்திலே யெழுந்தருளியிருக்க, அவளிலுங் காட்டில் விஞ்சின க்ஷமாத₃யாதி₃கு₃ணங்களையும்,

---

a திருவாய் 10-10-2. b இரண்டாந்திரு 82. c திருநெடுந் 18.
d மூன்-திருவ 100. e திருவாய் 10-10-6. f திருவாய் 6-7-8.

நாவால் தொகைக்க வொண்ணுத அழகையுமுடையராய், அவளுக்கு a நிழல்போல்வனரான மற்றையிரண்டு காய்ச்சிமாரும் இடவட்டத்திலே ஸேவித்திருக்க, இவர்களுக்கு நடுவே மூன்று மின்கொடிகளோடேகூடி, தாமரை பூத்ததொரு காளமேகம் வெள்ளிமலையைக் கினியப்படித் திருக்குமாபோலே b "முடிச்சோதியா யுனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்கிறபடி திருமுகமண்டலத்தில் ஒளி வெள்ளமானது மேல் நோக்கிக் கொழித்தாற்போலேயாய், உபயவிபூதிக்கும் நிர்வாஹகனென்னுமிடத்தைக் கோட் சொல்லித் தரக்கடவதாய், தன் புகராலே அல்லாத புகரை யடைய முட்டாக்கிடுகிற c "விண்முதல் நாயகன் நீண்முடி" என்கிற திருவபிஷேகத்தையும், கண்டார் கண்ணும் நெஞ்சுமிருளும்படி இருண்டு சுழன்று, அஷ்டமீசந்த்ரனிலே அம்ருததாரை விழுந்தாற்போலே திருநெற்றியிலே சாத்தின திருநாமத்தை மறைப்பது காட்டுவதாய்க்கொண்டு அசைந்து விழுகின்ற d பூந்தண்டுழாய் விரைநாறுகிற e நீலப்பனியிருங் குழல்களையும், ஸௌகுமார்யாதிசயத்தாலே குறுவேர் பரம்பினாற்போலேயாய், f நயந்தார்கட்கு நச்சிலையான திருநெற்றியையும், அலர்ந்து குளிர்ந்திருக்கிற இரண்டு தாமரைப்பூக்களை மதுத்தாலே அமுக்கியாடுகிற இரண்டு வண்டொழுங்கு போலேயிருக்கிற g தன்கைச் சார்ங்கமதுவேபோல் அழகிய திருப்புருவங்களையும், கலந்து பிரிந்தவர்களுக்கு h இணைக்கூற்றங்களாய், அல்லாதவர்களைத் i தாயாயளிக்கக் கடவதாய், சேதநர்பக்கல் வாத்ஸல்யாதிசயத்தாலும், j செய்யாளான பிராட்டியை எப்போதுமொக்கக் கடாக்ஷிக்கையாலும், உபயவிபூத்யைச்வர்யத்தாலும் சிவந்து, **1. "பதிம் விச்வஸ்ய"** என்கிற ப்ரமாணம் வேண்டாதபடி k "அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை" என்கிறபடியே ஸர்வேச்வரத்வ

a திருவிருத்தம் 3. b திருவாய் 3-1-1. c திருவிருத்தம் 50.
d திருவாய் 2-6-10. e திருவாய் 9-9-3. f திருவாய் 7-7-7.
g நாச்.திரு 14-6. h திருவாய் 7-7-1. i பெரியதிரு 7-1-9.
j திருவாய் 9-4-1. k திருவாய் 6-7-10.

ஸிஹ்நமாய், வேறொருழகில் செல்ல வொட்டாதே தனக்கே யற்றுத்தீரும்படி பண்ணி a "தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந்தலைமகனை" என்கிறபடியே த்ரிபாத்₃விபூ₄தியையும் எழுத்து வாங்கிக் கூப்பிடும்படி பண்ணக்கடவதாய், குளிர்ந்து செவ்விபெற்று, பெரியபெருமாள் திருக்கண்கள்போலே b கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி, c இலங்கொளி சேரரவிந்தம் போன்று நீண்டு, மிதே₂ாபு₃த்₃த₄ஸ்பர்த₄ஸ்பு₂ரிதஶபு₂ரத்₃வந்த்₃வலளிதங்களாய், அழகோலக்கங் கிளம்பினால் அடையாளங்களான d தூதுசெய்கண்களையும், e "மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ அறியேன்" என்று நித்யஸந்தே₃ஹஜநகமான f கோலநீள் கொடிமூக்கையும், அதினுடைய பல்லவோல்லாஸம்போலேயிருக்கிற தி₃வ்ய கபோலங்களையும், அதினுடைய நவகுஸுமம்போலேயாய், g "பண்ணிலாமுத்தந்தவழ்கதிர் முறுவல்செய்து" என்கிறபடியே பூர்ணசந்த்₃ரன் முழுநிலாவைச் சொரிந்தாற்போலே திருமுத்தினொளியை ப்ரவஹிக்கிற ஸ்மிதத்தையும், h கோலந்திரள் பவளக் கொழுந்துண்டம்போலேயாய், பேச்சில் செல்லவொட்டாதே வாய்கரையிலே நீச்சாம்படி பண்ணி, நட்டாற்றிலே தெப்பத்தைப் பறிப்பாரைப்போலே அநுப₄வபரிகரமான சிந்தையைக் கவர்ந்து, கூப்பிடும்படி பண்ணக்கடவதாய், i கள்வப்பணி மொழிகளுக்கு ஆகரமான திருவத₄ரத்தையும், j "இலகுவிலகுமகரகுண்டலத்தன்" என்கிறபடியே ப்ரீத்யதிஶயத்தாலே ஶிர:கம்பநம் பண்ணுகையாலே அசைந்து, தி₃கூ₃ந்தங்களிலேமுட்டி, தேஜஸ்ஸு அலையெறிந்து, லாவண்யஸாகரத்திலே யேறித்தள்ளுகிற k மின்னுமாமணி மகரகுண்டலங்களையும், காந்தி ஶைத்ய மார்த்₃வ ஸௌரப்₄யாதி₃ கு₃ணங்க

a திருவாய் 2-6-3. b அமலனாதிபிரான் 8. c பெரியதிரு 2-5-8.
d திருவாய் 9-9-9. e திருவாய் 7-7-2. f திருவாய் 5-5-6.
g திருவாய் 9-2-5. h திருவாய் 7-7-3. i திருவாய் 10-3-4.
j திருவாய் 8-8-1. k பெரியதிரு 8-1-3.

ளாலே, a"சுற்றுமொளிவட்டஞ்சூழ்ந்து" என்கிறபடியே, ஸகலகலாபூர்ணமாய், ஸர்வாஹ்லாத,கரமாய், மறுக்கழற்றின சந்த்,ரமண்ட,லத்தையும் அப்போதலர்ந்த செந்தாமரைப் பூவையும் தோற்பிக்கக்கடவதாய், கிட்டினரைப் பிச்சேற்றி, b மையலேற்றி மயக்கும் மாயமந்திரமான c கோளிழை வாண்முகத்தையும், நாய்ச்சிமாருடைய ஹஸ்தாப,ரணங்களாலே முத்ரிதமாய், க்ரமுக தருண க்,ரீவா கம்பு, ப்ரதிமமான திருக்கழுத்தையும், நாய்ச்சிமாருடைய திருச்செவிப் பூக்களாலும், கர்ணபூ,ஷணங்களாலும், விகஸிதமான திருக்குழற்கற்றையாலும் உண்டான விமர்த்த,த்தாலே 1. "ஸீதயா ஶோபி,தம்" என்கிறபடியே அலங்க்ருதங்களாய், இரண்டு அட்டத்திலும் மரதககி,ரியைக் கடைந்து மடுத்தாற்போலே திண்ணியவாய் உப,யவிபூ,தியையும் தன் நிழலிலே நோக்கக்கடவனவாய், கணயத்துக்குள்ளே யிருப்பாரைப்போலே தன்னையண்டைகொள்ளுகையாலே, ஸம்ஸாரத்திலேயிருக்கச்செய்தேயும் நிர்ப,ரரும்படிபண்ணி, d "அலம்புரிந்த" என்கிறபடியே தனக்கு உப,யவிபூ,தியையும் வழங்கி, தி,வ்யாஸ்த்ர புஷ்பிதங்களாயிருக்கிற e கற்பகக்காவன நற்பலதோள்களையும் பெரிய பிராட்டியாருக்குக் கோயிற்கட்டணமாய், நித்யாநுப,வம் பண்ணு நிற்கச்செய்தேயும் f "இறையு மகலகில்லேன்" என்னும்படி பிச்சேற்றக்கடவதாய், அவள் திருவடிகளிற்சாத்தின செம்பஞ்சுக்குழம்பாலும், ஸ்ரீபூ,மிப்பிராட்டியாருடைய g கொங்கை மேற் குங்குமத்தின் குழம்பாலும் அலங்க்ருதமாய், வந மாலா விராஜிதமாய், பெரியபிராட்டியார்க்கு ஹிரண்ய ப்ராகாரமான h கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் ஸ்ரீகௌஸ்துப,ம் தொடக்கமான i குருமாமணிப் பூண் குலாவித்திகழுகிற அழகிய திருமார்பையும், காளமேக,த்திலே மின்கொடி படர்ந்தாற்போலே திருமேனிக்குப் பர

a பெரியாழ்-திரு 1-4-3.　b நாச்-திரு 2-4.　c திருவாய் 7-7-8.
d திருநெடுந் 6.　e திருவாய் 6-6-6.　f திருவாய் 6-10-10.
g நாச்-திரு 8-7.　h அமலனாதிபிரான் 9.　i பெரியாழ்-திரு 1-2-10.

ப₄ாக₃ரஸாவஹமாய், அழகு வெள்ளத்துக்கு அணைகட்டி னாற்போலே யிருக்கிற a வெண்புரி நூலையும், b 'உள்ளத்துள் நின்றுலாகின்றதே'' என்கிறபடியே நித்யமுக்தருடைய திருவுள்ளங்களிலே அழகு செண்டேறுகிற b திருவுதரபந்தத்தையும், ஸௌந்த₃ர்யஸாக₃ரம் இட்டளப்பட்டுச் சுழித்தாற்போலே நெஞ்சையும் கண்ணையும் சுழியாறு படுத்துகிற திருவுந்தியையும், ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், திருவாழியையும் சந்த்₃ராதி₃த்யர்களாகக்கருதி, c ''ஆங்கு மலருங் குவியும்'' என்கிறபடியே அலருவது குவிவதாய், விதி₄ஶிவநித₄ாநமான நாபீ₄பத்₃மத்தையும், d துடிசேரிடையையும், ஸந்த்₄யாராக₃ரஞ்ஜிதமான ஆகாஶம்போலே யிருக்கிற திருவரைக்குப் பரப₄ாக₃ரஸாவஹமாய், திருவரை பூத்தாற்போலே யிருக்கிற e அந்திபோல் நிறத்தாடையையும், ரம்ப₄ாஸ்தம்ப₄ாதிக₃ம்பீ₄ரமான திருத்தொடைகளையும் தாமரைநாளம்போலே கண்டகிதங்களான திருக்கணைக்கால்களையும், ஶங்க₂ரத₂ாங்க₃ கல்பகத்₄வஜாரவிந்த₃ாங்குஶ வஜ்ரலாஞ்ச₂நமாய், நாய்ச்சிமாருங்கூடக் கூசித்தொடவேண்டும்படி அத்யந்தம் ம்ருது₃க்களாய், f 'தேனே மலரும்'' என்கிறபடியே நிரதிஶயபோ₄க்₃யங்களான g துயரறு சுடரடிகளையும், லாவண்யஸாக₃ரத்தினுடைய திரையொழுங்குபோலே யிருக்கிற திருவிரல்களையும், அதிலே அநேக சந்த்₃ரர்கள் தோற்றினாற்போலே யிருக்கிற தி₃வ்ய நக₂ங்களையும், வயிரவுருக்காய் ஆண்களையும் பெண்ணுடையுடுத்தி, ப₃ந்து₄க்களோடு உறவறுத்து நாட்டைப் பகைவிளைத்து, h சேணுயர்வானத் திருக்குந் தேவபிரான்தன்னை h 'குதிரியாய் மடலூர்தும்'' என்கிறபடியே கண்டபோதே கையும் மடலுமாய்க்கொண்டு புறப்படும்படி பண்ணக்கடவதாய், கண்டபோதே எல்லாவிடாயுங்கெட்டு, கண்டகண்கள் மயிரெறியும்படி இருண்டு

---

a திருவிருத்தம் 79. b அமலனாதிபிரான் 4. c மூன்றாந்திருவ 67.
d திருவாய் 8-5-3. e அமலனாதிபிரான் 3. f திருவாய் 1-5-5.
g திருவாய் 1 1-1. h திருவாய் 5-3-9.

குளிர்ந்து, ஸாம்யாபந்நரான ஸூரிகளுடைய நெஞ்சையும் கண்ணையும் படையறுத்து a "இன்னாரென்றறியேன்" b "பண்டிவரைக்கண்டறிவ தெவ்வூரில்" என்று மதிமயங்கும்படி பண்ணக்கடவதாய், ஸகலஜந ஜீவாதுவாய், வைதக்த்ய வித்யாக்ருஹமாய், மநோரதாநாம் அபூமியாய், ஶ்ருத்யந்தவாக்ய ஸர்வஸ்வமாய், மாணிக்கச் செப்பிலே பொன்னையிட்டு வைத்தாற்போலேயிருக்கப் cபொன்னுருவான திவ்யாத்மஸ்வரூபத்துக்கு ப்ரகாஶகமாய், ஒன்றுக்கொன்று தள்ளி இட்டளத்தில் வெள்ளம்போலே சுழித்துநின்று முழாவுகிற ஆயுதாபரணங்களுடைய d சோதிவெள்ளத்தினுள்ளே உந்நேயமான e கரியகோலத் திருவுருவையும், நித்யஸூரிகள் அடுத்தடுத்துப் பார்க்கிற பார்வையுங்கூடப் பொறுதென்னும்படியான ஸௌகுமார்யத்தையும், பெரியபிராட்டியாருடைய f வடிக்கோல வாணெடுங்கண்களுக்கு நித்யலக்ஷ்யமாகையாலே g அரும்பென்றும் அலரென்றும் சொல்லலாம்படியான செவ்வியையும் கிண்ணகத்துக்குப் படலிட்டாற்போலேயிருக்கிற hமெய்யமர்பல்கலன்களையும், நித்யஸூரிகளைக் கொள்ளையூட்டிக் கொண்டு, விடாயர்முகத்திலே நீர்வெள்ளத்தைத் திறந்துவிட்டாற்போலே ஸகல ஶ்ரமங்களுமாறும்படி குளிர்ந்து, தெளிந்து கநககிரியையுருக்கிக் கடலிலே விளாசினாற்போலே i செம்பொனே திகழுகிற ஶ்யாமமான திருமேனியொளியாலே 1. "விஶ்வமாப்யாயயந்" என்கிறபடியே ஸகலஜகத்தையும் ஆப்யாயநம்பண்ணி, j "தெருவெல்லாங்காவிகமழ்" என்கிறபடியே கண்டவிடமெங்கும் புறப்பட்டு ப்ரவஹிக்கிற திருமேனியில் பரிமளத்தாலே ஸ்ரீவைகுண்டத்தை யெங்குமொக்கப் பரிமளிதமாக்கி, ஆலங்கட்டியை விட்டெறிந்தாற்போலே உடம்பெங்கும் வவ்வலிடும்படி குளிர்ந்து அரைக்ஷணமாறில் நித்யமுக்தரை ஒரு நீர்ச்சாவியாக்குகிற கடாக்ஷாம்ருத வ்ருஷ்டிகளாலே திவ்ய

a பெரியதிரு 10-10-9. b பெரியதிரு 8-1-9. c திருநெடு 1.
d திருவாய் 5-5-10. e கண்ணிநுண் 3. f இர-திருவ 82.
g பெரியதிரு 7-10-1. h திருவாய் 6-6-7. i திருவாய் 1-10-9.
j திருவாய் 9-6-1.

கோ₃ஷ்டி₂யைத் தளிரும் முறியுமாக்கி, கா₃ம்பீ₄ர்ய மாது₄ர்யாத்₃யநவதி₄ககு₃ணக₃ணபூ₄ஷிதங்களாய், அதிமநோஹர தி₃வ்யபா₄வ க₃ர்ப்ப₄ங்களாய், பூவலர்ந்தாற்போலேயிருக்கிற திருமுகத்தை எங்குமொக்கச் செவ்வி பெறுத்துவனவான லீலாலாபங்களாலே ஸூரிகளுடைய ஹ்ருத₃யங்களை உகப்பியாநின்றுகொண்டு, உப₄யவிபூ₄தியையும் ஆஸந ப₃லத்தாலே ஜயித்து,—

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

## சதுர்த்த₂ப்ரகரணம்

a ஏழுலகும் தனிக்கோல்செல்ல, b குழுமித்தேவர் குழாங்கள் கைதொழ எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்ட₂ நாத₂னை c "காண்பதெஞ்ஞான்று கொலோ" d "காட்டீரானீர்" என்கிற இழவுதீர, 1. **"த்₃ருஷ்ட ஏவ ஹி நஶ் ஶோகம்"** என்று இவன் மநோரதி₂த்துக்கொண்டு, சென்றபடியே கண்ணாரக்கண்டு, 2. **"ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:"** என்று ஹர்ஷபரவஶனாய் விழுந்து எழுந்திருந்து, பெரிய ப்ரீதியோடேசென்று, பாத₃பீட₂த்திலே அடியிட்டு தி₃வ்யஸிம்ஹாஸநத்திலேயேற, அவனும் இவனைக்கண்டு, 3. **"அவாக்யநாத₃ர:"** என்கிற ஆகாரங்குலைந்து, சந்த்₃ரனைக்கண்ட கடல்போலே விக்ருதனாய், தன்னைப்பிரிந்து நெடுநாள் தரைக்கிடை கிடந்தஇழவுதீர, 4. **"அங்கே ப₄ரதமாரோப்ய"** என்கிறபடியே மடியிலேவைத்து, ஸ்ரீப₄ரதாழ்வானையும் அக்ரூரனையும் அணைத்தாற்போலே அணைத்து, ப₄க்த்யதிஶயத்தாலே 5. **"கோऽஸி"** என்கிறபடியே "நீ யார்" என்று கேட்க; 5. **"அஹம் ப்₃ரஹ்மாஸ்மி"** என்று "நான் ராஜகுமாரன்" என்ன, "நீ இத்தனைகாலமும் செய்ததென்?" என்றுகேட்க, e "சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்ப

a திருவாய் 4-5-1. b திருவாய் 5-5-10 c திருவாய் 5-9-6.
d பெரியதிரு 4-9-7. e பெரியதிரு 6-3-4.

வெள்ளத்தாழ்ந்தேன்” என்ன, 'நீ அத்தால் பெற்ற பலம் ஏது' என்றுகேட்க, a “அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன்” என்ன, 'பின்பு நீசெய்ததென்?' என்ன, a “போந்தேன்” என்ன, 'நீபோந்த விரகென்?' என்றுகேட்க, a“புண்ணியனே” என்ன, 'நீ அதினின்றும் போந்து செய்ததென்?' என்ன, a“உன்னையெய்தி”னேன் என்ன, 'நம்மைக் கிட்டினவிடத்தில் நீ பெற்ற ப்ரயோஜநமென்?' என்ன, a “என் தீவினைகள் தீர்ந்தேன்” என்ன, செய்தது வாய்த்துச் செல்வனாய் b நலமந்தமில்லதோர் நாட்டிலே வர்த்திக்கப் பெறாதே, c “இல்லை கண்டீரின்பம்” என்கிற கொடுவுலகத்திலே நெடுங்காலம் அலமர்ந்தாயே, b பலமுந்து சீரிற்படியாதே, d பன்மா மாயப் பல்பிறவியிலே படிந்து நோவுபட்டாயே, e ஈறிலின்பத் திருவெள்ளத்தையிழந்து, a தடந்தோள் புணரின்ப வெள்ளத்திலே ஆழ்ந்து, நித்ய து:க்கிதனானாயே, f அதனைப் பிழையெனக் கருதி நம்மைப் பற்றி நம்மைக் காணவேணுமென்று ஆசைப்பட்ட போதே வந்து முகங்காட்டப் பெற்றிலோமே, g “ஆகாசத்தைநோக்கி அழுவன் தொழுவன்” என்கிற படியே நாமிருந்த தேசத்தை நோக்கி அழுவது தொழுவதாய், h“கூவிக்கொள்ளும் காலமின்னங் குறுகாதோ” i “எந்நாள் யானுன்னை இனிவந்து கூடுவன்” என்பதாய்க் கொண்டு நோவுபடும்படி தாழ்த்தோமே, j “துன்பக்கடல் புக்கு வைகுந்தன் என்பதோர் தோணிபெறாதுழல்கின்றேன்” என்று க்லேசித்த நீ அதினின்றுங் கரையேறி, k “நின்மாதாள் சேர்ந்து நிற்பதெஞ்ஞான்று கொலோ” என்கிற இழவுதீர நம்மைக் கிட்டப்பெற்றாயே, l “உள்ளுளாவி உலர்ந்துலர்ந்து” என்கிற தாபமாறக் கூடியிருந்து குளிரப்பெற்றாயே, நம்முடைய ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்கள்

a பெரியதிரு 6-3.4. b திருவாய் 2 8.4. c திருவாய் 9-1.6.
d திருவாய் 3.2-2. e திருவாய் 2.6-8. f பெரியதிரு 1-6-1.
g திருவாய் 5-8.4. h திருவாய் 6-9-9. i திருவாய் 3-2-1.
j நாச்-திரு 5-4. k திருவாய் 3.2.2. l திருவாய் 2-4.7.

ஸப,லமாயிற்றதே, 1. "ப்ரணஷ்டஸ்ய யதா,ர லாப,:" என்கிறபடியே நமக்குக் கிடையாதது கிடைத்ததே, உன்னுடைய வரவாலே இத்தே,ஶம் ஸநாத,மாயிற்றதே, இக்கோ,ஷ்டிக்கு நாயகரத்நம்போலேயிருக்க, நீ கிட்டி ஔஜ்ஜ்வல்யத்தையுண்டாக்கினாயே, a "நடந்த கால்கள் நொந்தவோ" என்று 2. "மநோஹரைஶ் சாடுபி,ரார்த்,ரயந் முதா," என்கிறபடியே ஏத்தாளிகளைப்போலே ஏத்தி, ஓக,பேக,ஸ்வநத்தாலே மயில்போலே ஆலிக்கும்படி பண்ணி, b நோயெல்லாம் பெய்ததோராக்கையிலே அகப்பட்டு, நெடுங்காலம் நோவுபட்டு, c மருத்துவனாய்நின்ற மாமணி வண்ணனைக்கிட்டி, d உள்ள நோய்களெல்லாம் துரந்து, e திருவருள் மூழ்கின இவனை, நோய்விட்டுக் குளித்த புத்ரனைப் பிதா பார்த்துக்கொண்டிருக்குமா போலேயும் f மாடக்கூத்தனுக்குப் பிழைத்த ஆழ்வாரைப் பார்த்துக்கொண்டிருக்குமாபோலேயும், 3. "லோசநாப்,யாம் பிப,ந்நிவ" என்று ஸ்ரீவிபீ,ஷணப் பெருமாளைப் பெருமாள் பார்த்துக்கொண்டிருக்குமாபோலேயும், g "என்னை நோக்காதொழிவதே" என்கிற இழவுதீரத் தாமரைக் கண்களால் நோக்கி நெடுநாள்பட்ட விடாயெல்லாம் மாற, h "ஒருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்காற் கமலத் தடம்போலேயிருக்கிற i பெருங்கண்மலர்ப் புண்டரீகங்களை இவன்பக்கலிலே ஒருமடைப்பட வைத்து, j எங்கும் பக்க நோக்கறியாதே, k "தாயே தந்தை"யில் திருமங்கையாழ்வார் மநோரதி,த்தாற்போலேயும், l "ஆராவமுதி"லும் m "இன்பம் பயக்க"விலும் நம்மாழ்வார் மநோரதி,த்தாற்போலேயும் இவன் மநோரதி,த்த மநோரத,ங்களையெல்லாம் ஸப,லமாக்கி, n 'உருக்காட்டாதே ஒளிப்பாயோ" என்கிற

---

a திருச்சந்த 61. b பெரியதிரு 9-7-7. c பெரியாழ்திரு 5-3-6.
d திருவாய் 2-6-4. e திருவாய் 8.9-5. f திருவாய் 8-5.
g திருமாலை 36. h திருவிருத்தம் 42. i திருவிருத்தம் 45.
j திருவாய் 2-6-2. k பெரியதிரு 1-9. l திருவாய் 5-8.
m திருவாய் 7-10. n திருவாய் 6-9-5.

இழவுதீர, 1. **"விவ்ருணுதே தநூம் ஸ்வாம்"** என்கிறபடியே a "காசினொளியில் திகழும் வண்ணம்" காட்டி, b "நல்கி யென்னைவிடான்" என்கிறபடியே விடாதே, 2. **"ஏஷ ஸர்வஸ்வபூ₄தஸ்து"** என்கிறபடியே விட்டுவிட்டணைத்து, 3. **"கிந்நு ஸ்யாச் சித்தமோஹோऽயம்"** c "மருள்தானீதோ" என்கிறபடியே நிரதிஶய வ்யாமோஹத்தைப் பண்ணி, பெரியபிராட்டியார் திருக்கையிலே காட்டிக்கொடுக்க, கம்ஸ வத₄ாநந்தரம் க்ருஷ்ணனைக்கண்ட தே₃வகியாரைப்போலே விம்மிப்பாய்கிற ஸ்தந்யத்தாலே உடம்பெங்கும் நனையும்படி யணைத்து, உப₄யவிபூ₄த்யைஶ்வர்யத்தையுங்கொடுக்க, d பூவளருந்திருமகளாலருள்பெற்று, மடியில் நின்று மிழிந்து போந்து, e "செய்யவுடையும் திருமுகமும் செங்கனி வாயும் குழலுங்கண்டு" என்கிறபடியே முன்பேபோந்து முன்புத்தையழகை அநுப₄வித்து, கிண்ணகத்தை எதிர்ச் செறிக்கவொண்ணுதாப்போலே நேர்நின்று அநுப₄விக்க வொண்ணுமையாலே அட்டத்திலேபோந்து அங்குத்தை யழகை அநுப₄வித்து, அது விட்டுப் பூட்டாவிடில் த₄ரிக்க வொண்ணுமையாலே பின்னே போந்து, பின்புத்தை யழகை அநுப₄வித்து, 4. **"பூர்வாங்க₃ாத₃தி₄காபராங்க₃ கலஹம்"** என்று அதில் முன்புதானே நன்ருயிருக்கை யாலே திரியவும் முன்னேபோந்து, ஸௌந்த₃ர்ய தரங்க₃ தாட₃ந தரளசித்தவ்ருத்தியாய், உத்தம்ஶிதாஞ்ஜலியாய், வளையவளைய வந்து, f "முழுசி வண்டாடிய தண்டுழாயின் மொய்ம்மலர்க்கண்ணியும் மேனியஞ்சாந்து - இழுசியகோல மிருந்தவாறும் எங்ஙனஞ்சொல்லுகேன் ஓவிநல்லார்-எழுதிய தாமரையன்னகண்ணும் ஏந்தெழிலாகமும் தோளும் வாயும் அழகியதாமிவரார்கொலென்ன" g "அச்சோ ஒருவர் அழகியவா" என்று விஸ்மித ஹ்ருத₃யனாய், h "அந்தாமத்தன்பு" i "முடிச்சோதி" தொடக்கமானவற்றில் நம்மாழ்வாரநு

a பெரியதிரு 4-9-4. b திருவாய் 1-10-8. c திருவாய் 8-7-3. d பெரியதிரு 11-6-10. e பெருமாள்திரு 6-7. f பெரியதிரு 2-8-7. g பெரியதிரு 9-2-1. h திருவாய் 2-5. i திருவாய் 3-1.

பு,வித்தாற்போலே தன்னைப் பெற்ற ப்ரீதியால் வந்த செவ்வியை அநுபு,வித்து 1."யத்ர நாந்யத் பஶ்யதி" என்கிற படியே புறம்பொன்றில் நெஞ்சுசெல்லாதே 2. "ஹாவு ஹாவு ஹாவு, அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்" a "அல்லிமாமலராள் தன்னொடு மடியேன் கண்டுகொண் டல்லல் தீர்ந்தேனே" b "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்டசதிர்கண் டொழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே", c "இசைவித்தென்னை உன்தாளிணைக்கீழிருத்துமம்மானே", d "பிறந்துஞ்செத்தும் நின்றிடரும் பேதைமை தீர்ந் தொழிந்தேன்" என்று ப்ரீதிக்குப் போக்குவிட்டு வாயாரப் புகழ, ஸ்ரீவைகுண்ட,நாத,னும் e வாளுடமருங்குளிர் விழிக ளாலே கடாக்ஷித்து, ஸஸ்மிதமாக ஸ்நிக்,த,க,ம்பீ,ர மது,ர மான பேச்சாலே f முகப்பேகூவி, g "நின்செம்மா பாத பற்புத்தலைசேர்த்து" என்று இவன் அபேக்ஷித்தபடியே h மலர் மகள் பிடிக்கும் i கமலமன்ன குரைகழல்களாலே உத்த மாங்க,த்தை அலங்கரித்து j தன்தாளின் கீழ்ச்சேர்த்து, நித்யகைங்கர்யத்திலே நியோகிக்க, k தொண்டேசெய் தென்றும் தொழுது வழி யொழுகப்பெற்று, l "வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்கிற அபி,நிவேஶாதிஶ யத்தாலே நாநாதே,ஹங்களைப் பரிக்,ரஹித்து, அஶேஷ ஶேஷ வ்ருத்திகளிலும் அந்வயித்து, ஆஸ்தா,ரரக்ஷா வ்யஸநிகளான நித்யஸூரிகளோடே கூடச் m சூழ்ந்திருந்து மங்க,ளாஶாஸநம்பண்ணி, n "சுழிபட்டோடுஞ் சுடர்ச் சோதி வெள்ளத்தின்புற்றிருந்து" என்கிறபடியே அம்ருத ஸாக,ராந்தர் நிமக்,நஸர்வாவயவனாய்க்கொண்டு யாவத் காலமிருக்கும்.

**அர்ச்சிராதி, முற்றிற்று.**

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

---

a பெரியதிரு 4-3.6. b திருவாய் 4-9-10. c திருவாய் 5-8.9.
d திருவாய் 4-7-7. e திருவிருத்தம் 63. f திருவாய் 8-5-7.
g திருவாய் 2-9-1. h திருவாய் 9-2-10. i திருவாய் 4-3 6.
j திருவாய் 7-5-10. k திருவாய் 10-4-9. l திருவாய் 3-3-1.
m திருப்பல்லாண்டு 12. n திருவாய் 8-10-5.

# 6. ப்ரமேயஶேகரம்

நிர்ஹேதுக ப₄க₃வத்கடாக்ஷ மடியாக அஜ்ஞாத ஸுக்ருதமுண்டாம்; அதடியாக அத்₃வேஷமுண்டாம்; அதடியாக ப₄க₃வத்₃ப₄ாக₃வத விஷயங்களில் ஆபி₄முக்₂ய முண்டாம்; ஆபி₄முக்₂ய முண்டானவாறே த்யாஜ்யோபாதே₃யவிப₄ாக ஜ்ஞாநத்தில் கௌதுகமுண்டாம்; அத்தாலே ஸாத்விக ஸம்ப₄ாஷண முண்டாம்; அத்தாலே ஸதா₃சார்ய ஸமாஶ்ரயணமுண்டாம்; அதுண்டானவாறே த்யாஜ்யோபாதே₃ய நிஶ்சயமுண்டாம்; அதுண்டானவாறே ப்ராப்யாந்தரத்தில் வைராக்₃யமும், பரமப்ராப்யத்தில் அபி₄நிவேஶமு முண்டாம்; அநந்தரம், ப்ராப்யாந்தர நிவ்ருத்திக்கும், பரமப்ராப்ய ஸித்₃தி₄க்குமடியான ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரமுண்டாம்; அநந்தரம், ப₄க₃வத்ப்ராப்தியிலே த்வரையுண்டாம்; அநந்தரம், 1. **"அஹம் ஸ்மராமி"** என்கிறபடியே - ஈஶ்வரஸ்ம்ருதிக்கு விஷயபூ₄தனும்; அநந்தரம், பூ₄தஸூக்ஷ்ம ஶரீரபரிஷ்வங்க₃முண்டாம், அநந்தரம், பரமாத்மஸம்ஸர்க்க₃ முண்டாம்; பின்பு, ஹார்த்த₃ாநுக்₃ரஹத்தாலே மார்க்க₃ விஶேஷப்ரகாஶமுண்டாம்; பின்பு ஹ்ருத₃ய கு₃ஹாநிர்க்க₃மநமுண்டாம்; அநந்தரம், மூர்த்த₄ந்யநாடீ₃ நிஷ்க்ரமணமுண்டாம்; அநந்தரம், அர்ச்சிராதி₃மார்க்க₃ க₃மந முண்டாம்; அநந்தரம், ஆதிவாஹிக ஸத்காரமுண்டாம்; அநந்தரம், ஆவரணாதிக்ரமண முண்டாம்; அநந்தரம், ப்ரக்ருத்யதிலங்க₄ந முண்டாம்; அநந்தரம், விரஜாஸ்நாந முண்டாம்; அநந்தரம், ஸூக்ஷ்மஶரீர விஶ்லேஷ முண்டாம்; அநந்தரம், அபஹதபாப்மத்வாதி₃ கு₃ணக₃ண ப்ராது₃ர்ப₄ாவ முண்டாம்; அநந்தரம், அமாநவகரஸ்பர்ஶ முண்டாம்; அநந்தரம், ப₄க₃வத் ஸங்கல்ப கல்பிதமான தி₃வ்யதே₃ஹ ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், அகாலகால்ய தி₃வ்யதே₃ஶப்ராப்தியுண்டாம்; அநந்தரம், அரம்ஹ்ரத₃ தடஸ்நாந முண்டாம்; பின்பு, தி₃வ்யாலங்கார முண்டாம்; பின்பு தி₃வ்யவிமாநாரோஹண முண்டாம்; பின்பு, திவ்ய

காந்தார ப்ரவேஶமுண்டாம்; அநந்தரம், தி₃வ்யாப்ஸரஸ் ஸத்காரமுண்டாம்; அநந்தரம், தி₃வ்யக₃ந்த₄ ப்ரவேஶ முண்டாம்; அநந்தரம், ப்₃ரஹ்மக₃ந்த₄ ப்ரவேஶமுண்டாம்; அநந்தரம், அப்ராக்ருத கோ₃புர ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், தி₃வ்யநக₃ர ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், ஸூரிபரிஷத் ப்ரத்யுத்₃க₃மக முண்டாம்; அநந்தரம் ராஜ மார்க்க₃ க₃மநமுண்டாம்; அநந்தரம், ப்₃ரஹ்மதேஜ: ப்ரவேஶ முண்டாம்; அநந்தரம், தி₃வ்யகோ₃புர ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், ப்₃ரஹ்மவேஶ்ம ப்ரவேஶமுண்டாம்; அநந்தரம், தி₃வ்யமண்டப ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், தி₃வ்ய பரிஷத் ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், ஸபத்நீக ஸர்வேஶ்வர த₃ர்ஶந முண்டாம்; அநந்தரம், ஸ்துதிப்ரணமாஞ்ஜலி ப்ரமுக₂ ஸம்ப்₄ரமாநுவர்த்தநமுண்டாம்; அநந்தரம், பரமாத்ம ஸமீப ப்ராப்தியுண்டாம்; அநந்தரம், பாத₃பீட₂ பர்யங்கா ரோஹண முண்டாம்; அநந்தரம் ப₄க₃வது₃த்ஸங்க₃ஸங்க₃ முண்டாம்; அநந்தரம், ஆலோகநாலாபாத்₃யநுப₄வ முண்டாம்; அநந்தரம், ஆலிங்க₃நாத்₃யநுப₄வமுண்டாம்; அநந்தரம், ஸ்வரூபரூபகு₃ண விக்₃ரஹாத்₃யநுப₄வமுண்டாம்; அநந்தரம், அநுப₄வஜநித ப்ரீதிப்ரகர்ஷமுண்டாம்; அநந் தரம், நாநாவித₄ விக்₃ரஹபரிக்₃ரஹமுண்டாம்; அநந்தரம், ஸர்வதே₃ஶஸர்வகால ஸர்வாவஸ்தோ₂சிதமான ஸர்வப்ர கார கைங்கர்யமுண்டாம்.

ப்ரமேயமோக்ஷரம் முற்றிற்று.
பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## 7. ப்ரபந்நபரித்ராணம்

முமுக்ஷுவாய், மோக்ஷார்த்த₂மாக ஸர்வேஶ்வரனைப் பற்றியிருக்குமவனுக்கு அநந்யக₃தித்வமும், ஆகிஞ்சந்ய மும் வேணும். அநந்யக₃தித்வமாவது— a "களைவாய் துன்பங் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்கிறபடியே-

a திருவாய் 5-8-8.

ஸர்வேஶ்வரனையொழிய வேறொரு ரக்ஷகரில்லை என்றிருக்கை. ப்₄ராதாக்கள், புத்ரர்கள், மாதாபிதாக்கள், ப்₃ரஹ்மருத்₃ராதி₃கள் தொடக்கமானவர்கள் ரக்ஷகராகக் குறையென்னென்னில்—ப்₄ராதாக்கள் ரக்ஷகரல்லர் என்னுமிடம் வாலிபக்கலிலும், ராவணன் பக்கலிலும் காணலாம். புத்ரர்கள் ரக்ஷகரல்லர் என்னுமிடம், ருத்₃ரன் பக்கலிலும், கம்ஸன் பக்கலிலும் காணலாம். மாதாபிதாக்கள் ரக்ஷகரல்லர் என்னுமிடம், கைகேயிபக்கலிலும், ஹிரண்யன் பக்கலிலும் காணலாம். மாதாபிதாக்கள்—யௌவநவிரோதி₄ என்று உபேக்ஷித்தல், க்ஷாமகாலம் வந்தவாறே ஆள் பார்த்துத் தூற்றிலேபொகடுதல், விலைகூறிவிற்றல், ஆபத்து வந்தவாறே நெகிழநினைத்தல், அர்த்₂க்ஷேத்ராதி₃களுக்காக எதிரிட்டுக்கொல்லுதல், முடியும் அவஸ்தை₂யிலே a "சோர்வினால் பொருள் வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து" என்கிறபடியே, ஈஶ்வரனை ஸ்மரித்துக் கரைமரஞ் சேரவொட்டாதபடி அலைத்தல் முடித்தல் செய்யாநிற்பர்கள். ஸ்த்ரீகளுக்கு ப₄ர்த்தாக்கள் ரக்ஷகரல்லர் என்னுமிடம், த₄ர்மபுத்ராதி₃கள் பக்கலிலும், நளன்பக்கலிலும் காணலாம். இவர்கள் ரக்ஷகரல்லரேயாகிலும், நாட்டார்க்குக் கண்காட்டியாய்ப் போருகிற சந்த்₃ராதி₃த்யர்கள் ரக்ஷகராகக் குறையென்? என்னில்; அவர்களும், ஈஶ்வராஜ்ஞைக்கஞ்சி, தாங்கள் நினைத்தபடி ஸஞ்சரிக்கப்பெறாதே, b நாழிகை கூறிட்டு உதி₃ப்பது அஸ்தமிப்பதாய்க்கொண்டு போருகையாலும், ஹிரண்ய ராவணாதி₃கள் கையிலே அகப்பட்டு அவர்களுக்கு இழி தொழில்செய்து திரிவார் சிலராகையாலும் ரக்ஷகராக மாட்டார்கள். த்ரைலோக்யத்துக்கும் பாலகனான இந்த்₃ரனும், 'எப்போதோ நம் பத₃ம் நழுவப்புகுகிறது' என்றஞ்சி ஸோபஹதனாய், இந்த்₃ரஜித்தின் கையிலே அகப்பட்டுக் கட்டுண்டு, மஹாப₃லிபோல்வார் கையிலே ஐஶ்வர்யத்தைப் பறிகொடுத்து, கண்ணுங்கண்ணீருமாய், கழுத்தங்

a பெரியாழ்திரு 4.5.3. b ஷை 4.1.8.

|| கப்படமுமாய்க்கொண்டு திரிவானொருவனுகையாலே அவ னும் ரக்ஷகனுகமாட்டான். ப்₃ரஹ்மாவும் — மது₄கைடப₄ர்கள் கையிலே அகப்பட்டு, வேத₃ங்களைப் பறிகொடுத்து, 'கண்ணிழந்தேன், த₄நமிழந்தேன்' என்று நிலந்துழாவுகை யாலும், ருத்₃ரன்கையிலே தலையறுப்புண்கையாலும் ரக்ஷக னுகமாட்டான். ருத்₃ரனும் — ஸகலப்ராணிகளையும் ஸம்ஹ ரிக்கையே தொழிலாகவுடையனாய், விடாயர் முகத்திலே நெருப்பைச் சொரிந்தாற்போலேயிருக்கத் a தழல்நிற வண்ணனாய், தன்னை ஆஶ்ரயித்தவர்களை 'அறுத்துத்தா * பொரித்துத்தா' என்று கொடுந்தொழில்களைச் செய்வித்துக் கொள்ளுகையாலும், தன்னை ஆஶ்ரயித்த வாணனை, 'தலையில் பூவாடாதே நோக்குகிறேன்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி, தன்னைத்தொழுத கைகளைக் கள்ளிக்காடு /சீய்த்தாற் போலே சீய்க்கக்கண்டு, 'உயிருண்டாகில் உப்புமாறியுண் ணலாம்' என்று நெற்றியில் கண்ணைப் புதைத்துக்கொண்டு நழுவினவனுகையாலும், லோககு₃ருவாய்த் தனக்குப் பிதா வான ப்₃ரஹ்மாவின் தலையைத்திருகிப் பாதகியாய், கூறு செய்தவூரிலே குறும்புசெய்து, கையுங் கைத்தளையுமாய்க் கொண்டு திரிவாரைப்போலே, கையும் கபாலமுமாய், திறந்துகிடந்த வாசல்கள்தோறும் புக்குத் தன்னை வெளியிட்டுக்கொண்டு திரிவானொருவனுகையாலும் ரக்ஷக னுகமாட்டான். இனி, அர்த்த₂ம் ரக்ஷகமாமோ ? என்று நிரூபித்தால், கள்ளர்கொள்ளுதல், காமங்கொள்ளுதல், கோமுற்றவர் கொள்ளுதல், ஜ்ஞாதிகொள்ளுதல், வ்யாதி₄ கொள்ளுதல், பிறரோடே எதிரிட்டு விஷப₄க்ஷணம் பண்ணித் தன்னைத்தானே முடித்துக்கொள்ளும்படி பண்ணுதல் செய்கையாலே அர்த்த₂மும் ரக்ஷகமாக மாட்டாது. ஈஶ்வரன், மாதாபிதாக்கள் கைவிட்ட அவ ஸ்தை₂யிலும் b "பின்னுநின்று அடியேனுக்குற்றுனாய் வளர்த் தென்னுயிராகி நின்றான்" என்கிறபடியே, தன்னுருக்

|| எளிவரவைக்காட்டும் வஸ்த்ரம். a பெரியதிரு 6.1-3.
*(பா) பொசுக்கித்தா /சீய்த்தல்-வெட்டுதல். b பெரியதிரு 8-9-7.

கெடுத்து வேற்றுருக்கொண்டு தாய்முகம் காட்டியும், இன்சொல்லுச்சொல்லியும், ப்₄ராதாக்களும் பு₄ர்த்தாக்களும் நெகிழநின்றவன்று தான் ஏறிட்டுக்கொண்டு கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோயும், புருவம் நெரித்தவிடத்திலே தேரை நடத்தியும், மார்விலே அம்பேற்றும், சாவாமல் நோக்கியும், செத்தாரை மீட்டும், நாராயணத்வப்ரயுக்தமான உதா₃ரத்தரிப்பாலே அகவாயிலேநின்று ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகையாலே, இவனே எல்லார்க்கும் ரக்ஷகன். இனி ஆகிஞ்சந்யமாவது - கர்மஜ்ஞாந ப₄க்திகளிலும், அவற்றுக்கு ஹேதுவான ஆத்மகு₃ணங்களிலும் அந்வயமின்றிக்கே, அவற்றுக்கு விபரீதங்களானவற்றாலே தான் பரிபூர்ணனாயிருக்கிற இருப்பையும், தன்னுடைய ஸ்வரூபம் ஸர்வப்ரகாரத்தாலும் ஈஶ்வரனுக்கு அத்யந்த பரதந்த்ரமாயிருக்கிற இருப்பையும் அநுஸந்தி₄த்து, 'நம் கார்யத்துக்கு நாம் கடவோமல்லோம்' என்றிருக்கை. இவை இரண்டையுமுடையனாய், ஈஶ்வரனையே உபாயமாகப் பற்றுகையாலே நிர்ப₄ரனாயிருக்குமவனுக்கு ஶரீராவஸாந காலத்திலே ப்ராப்தியணித்தானவாறே, 1. **"நயாமி"** என்று அருளிச்செய்தபடியே ஈஶ்வரன் தானே சரக்காளாய் வந்து, அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தாலே பரமபத₃த்தேறக் கொண்டுபோய், நித்யமுக்தரோடே ஒரு கோவையாக்கி, நித்ய கைங்கர்யத்தையும் கொடுத்தருளும்.

**ப்ரபந்நபரித்ராணம் முற்றிற்று.**
**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**
**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

## 8. ஸாரஸங்க்₃ரஹம்

அகி₂லஜக₃த்₃தி₄தாநுஶாஸநபரமான வேத₃த்திலும், வேதோ₃பப்₃ரும்ஹணார்த்த₂மாக ப்ரவ்ருத்தங்களான ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதி₃ ஸமஸ்தஶாஸ்த்ரங்களிலும் ப்ரஸித்₃த₄மாய், ஸர்வேஶ்வரனுடைய ஸர்வஸ்வம்மாய், நம் ஆசார்யர்களுக்கு ஆபத்₃த₄நமாயிருந்துள்ள அர்த்த₂

த்₃வயத்தையும் ப்ரதிபாதி₃க்கையாலே - த்₃வயமென்று திருநாமத்தையுடைத்தாயிருந்துள்ள வாக்யத்₃வயம், பத்து அர்த்த₂த்தை ப்ரதிபாதி₃க்கிறது.

அதாகிறது:—1. ஶ்ரிய:பதித்வமும், 2. நாராயணத்வமும், 3. நாராயணனுடைய ஸர்வலோகஶரண்யமான சரணாரவிந்த₃யுக₃ளமும், 4. அதினுடைய ப்ராபகத்வமும், 5. தத்₃கோ₃சரமாய் சேதநக₃தமாயிருந்துள்ள ப்ரார்த்த₂நாக₃ர்ப்ப₄விஸ்ரம்ப₄மும், 6. லக்ஷ்மீ தத்₃வல்லப₄ர்களுடைய நிகி₂லாத்ம நித்ய கைங்கர்ய ப்ரத₂மநார்த்த₂மான நித்ய ஸம்ப₃ந்த₄மும், 7. கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யான ஈஶ்வரனுடைய நிரதிஶயபோ₄க்₃யதையும், 8. ஸர்வஸ்வாமித்வமும், 9. நித்யகைங்கர்யமும், 10. கைங்கர்யப்ரதிப₃ந்த₄க நிஶ்ஶேஷ நிப₃ர்ஹணமுமாகிற அர்த்த₂விஶேஷங்கள்; ஈத்₃ருஶார்த்த₂விஶேஷப்ரகாஶகமான மந்த்ரவிஶேஷத்தினுடைய விவரணரூபமாய், அபௌருஷேயமாய், உபநிஷத்தாயிருந்துள்ள திருவாய்மொழியில் பத்துப்பத்தாலும் இப்பத்து அர்த்த₂த்தையும் பூர்வாசார்யர்கள் அடைவே சேர்த்து அநுஸந்தி₄த்துக்கொண்டு போருவர்கள்.

அதில் முதற்பத்தால்—a"மலர்மகள் விரும்பும் நம் அரும் பெறலடிகள்" என்றும், b"மலராள் மைந்தன்" என்றும், c"திருமகளார் தனிக்கேள்வன்" என்றும், d"திருவின் மணாளனென்னுடைச் சூழலுளானே" என்றும், e"பூமகளார் தனிக்கேள்வன்" என்றும், f"மைந்தனை மலராள் மணவாளனை" என்றும்-ஶ்ரிய:பதித்வம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

இரண்டாம் பத்தால்—g"எம்பெருமான் நாரணற்கு" என்றும், h"எம்பிரானெம்மான் நாராயணனாலே" என்றும், i"நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்" என்றும் நாராயணத்வம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

a [திருவாய் 1-3-1] b [1-5-9] c [1-6-9] d [1-9-1] e [1-9-3]
f [1-10-4] g [2-1-7] h [2-7-1] i [2-7-2]

மூன்றும் பத்தால் — a "நாண்மலராமடித்தாமரை" என்றும், b "அங்கதிரடியன்" என்றும், c "அவன் பாத பங்கயம்" என்றும், d "அன்று தேர்கடவிய பெருமான் கனைகழல்" என்றும், e "மூவுலகுந்தொழுதேத்துஞ் சீரடியான்" என்றும் நாராயணனுடைய ஸர்வலோக ஶரண்ய மான சரணாரவிந்தயுகளம் ப்ரதிபாதிதமாய்த்து,

நாலாம் பத்தால்— f "இலங்கைநகர் அம்பெரியுய்த்தவர்" என்றும், g "வல்வினை தீர்க்குங் கண்ணனை" என்றும், h "தொல்வினைதீர" என்றும், i "வெய்யநோய்கள் முழுதும் வியன்ஞாலத்து வீய" என்றும், j "மேவிநின்று தொழுவார் வினைபோக மேவும்" என்றும், k "பிறந்தும் செத்தும் நின்றிடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்" என்றும், l "நோயே மூப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழிய" என்றும், m "வேட்கையெல்லாம் விடுத்து - கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை" என்றும், n "அஃதேயுய்யப்புகுமாறு" என்றும், o "உய்வுபாயம் மற்றின்மை தேறி" என்றும்— அநிஷ்டநிவ்ருத்தீஷ்டப்ராப்திகரத்வலக்ஷணமான ப்ராபகத்வம் ப்ரதிபாதிதமாய்த்து.

அஞ்சாம் பத்தால்— p "தமியேனுக்கருளாய்" என்றும், q "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்றும், r "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றுங் குறை வேண்டேன்" என்றும், s "அவனை உயிருண்டான் கழல்களவையே சரணாகக்கொண்ட" என்றும், t "காமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்" என்றும், u "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும், u "நாடொறுமேகசிந்தையனாய்"

a [3.3.9] b [3-4-3] c [3-6-4] d [3.6-10] e [3-8-1] f [4-2-8] g.h [4.4.11] i [4-5-2] j [4-5-4] k [4.7.7] l [4.9.7] m [4.9.9] n [4-1.11] o [4.3.11] p [5.7.2] q [5-7-10] r [5-8-9] s [5-8-11] t [5.9.11] u [5.10.11]

என்றும் — தத்₃கே₃ாசரமாய், சேதநக₃தமாயிருந்துள்ள ப்ராரத்த₂நாக₃ர்ப₄விஸ்ரம்ப₄ம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

ஆறும் பத்தால் — a "திருமாமகளிருந்தாம் மலிந்திருந்து" என்றும், b "அடிமைசெய்வார் திருமாலுக்கே" என்றும், c "ஓசிந்தவொண்மலராள்கொழுநன்" என்றும், d "என்திருமார்வற்கு" என்றும், e "கோலத்திருமாமகளோடுன்னைக் கூடாதே" என்றும்—கைங்கர்ய ப்ரத₂மாநார்த்த₂மான லக்ஷ்மீதத்₃வல்லப₄ர்களுடைய நித்யஸம்ப₃ந்த₄ம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

ஏழாம் பத்தால் — f "கன்னலேயமுதே" என்றும், g "கொடியேன் பருகின்னமுதே" என்றும், h "அலைகடல் கடைந்த ஆரமுதே" என்றும், i "திருமாலின்சீர், இறப்பெதிர்காலம் பருகிலுமார்வனே?" என்றும், j "ஏழுலகை இன்பம்பயக்க" என்றும்—கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யான ஈஶ்வரனுடைய நிரதிஶயபோ₄க்₃யத்வம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

எட்டாம் பத்தால்— k "அடியனேன் பெரியவம்மான்" என்றும், l "விண்ணவர்கோன் நங்கள்கோனை" என்றும், m "அமர்ந்தநாதனை" என்றும், n "மூவுலகாளி" என்றும், o "நேர்பட்ட நிறைமூவுலகுக்கும் நாயகன்" என்றும்—ஸர்வஸ்வாமித்வம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

ஒன்பதாம் பத்தால்— p "பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு நின்கோயில் சீய்த்து" என்றும், q "நின் தீர்த்தவடிமைக் குற்றேவல் செய்து" என்றும், r "தொடர்ந்து குற்றேவல்செய்து" என்றும், s "கொடுவினையேனும் பிடிக்க" என்றும், t "உறுவதிது

---

a [6-5-8] b [6-5-11] c [6-7-8] d [6-8-10] e [6-9-3]
f [7-1-3] g [7-1-7] h [7-2-5] i [7-9-9] j [7-10-1]
k [8-1-3] l [8-2-2] m [8-4-10] n [8-9-5] o [8-9-11]
p [9-2-1] q [9-2-2] r [9-2-3] s [9-2-10] t [9-4-4]

வென்றுனக்காட்பட்டு'' என்றும், a''ஆட்கொள்வானொத்து'' என்றும், b''நானும் மீளாவடிமைப் பணிசெய்யப்புகுந்தேன்'' என்றும்-நித்யகைங்கர்யம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

பத்தாம் பத்தால் — c ''துயர்கெடுங்கடிது'' என்றும், d ''கெடுமிடராயவெல்லாம்'' என்றும், e ''எழுமையும் ஏதஞ்சாரா'' என்றும், f ''தீரும் நோய் வினைகளெல்லாம்'' என்றும், g ''இப்பிறப்பறுக்கும்'' என்றும், h ''உன்றன் திருவுள்ளம் இடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும் எம்பெண்மையாற்றேம்'' என்றும், i ''பிணியொன்றுஞ் சாரா பிறவிகெடுத்தாளும்'' என்றும், j ''பிறவித்துயர் கடிந்தோம்'' என்றும், k ''விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்''என்றும், l'' அமரா வினைகளே'' என்றும், m''கடுநரகம் புகலொழித்த'' என்றும், n''தடுமாற்றவினைகள் தவிர்த்தான்'' என்றும், o''பிறவிகெடுத்தேன்''என்றும் p'' அந்திதொழுஞ் சொல்லுப்பெற்றேன்'' என்றும், q''அவாவற்று வீடுபெற்ற'' என்றும்—கைங்கர்ய ப்ரதிப₃ந்த₄க நிஶ்ஶேஷநிப₃ர்ஹணம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

இப்படி ஶ்ரிய:பதித்வ ப்ரமுக₂ங்களாய், கைங்கர்ய ப்ரதிப₃ந்த₄க நிஶ்ஶேஷநிப₃ர்ஹணபர்யந்தங்களாயிருந்துள்ள உபாதே₃யார்த்த₂ங்களை ப்ரதிபாதி₃க்கக்கடவதாயிருந்துள்ள வாக்யத்₃வயமும், திருவாய்மொழியும்—ப₄க₃வச்சரணார்த்தி₂களாய் அநந்யோபாயபரராயிருக்கும் அதி₄காரிகளுக்குக் காலக்ஷேபஹேதுவாகவும், போ₄க₃ஹேதுவாகவும், ஈஶ்வரப்ரீதிஹேதுவாகவும் யாவச்ச₂ரீரபாதம் அநுஸந்தே₄யம்.

ஸாரஸங்க்₃ரஹம் முற்றிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

a [9-6-7] b [9-8-4] c [10-1-7] d [10-2-1] e [10-2-2]
f [10.2.3] g [10-2-5] h [10-3-9] i [10-4-7] j [10.4.3]
k [10-4.9] l [10-5-9] m [10-6-11] n [10-8-5] o [10.8.3]
p [10-8-7] q [10-10-11]

## / 9. ஸம்ஸாரஸாம்ராஜ்யம்

a துன்பக்கடலாய் b இருள்தருமாஞாலமான ஸம்ஸாரத்துக்கு உள்வாயிலே பஞ்சபூ₄தங்களாலே சமைந்து, 1."நவத்₃வாரபுரே"என்கிறபடியே-ஒன்பதுவாசலான படை வீட்டுக்கு உள்வாயிலே d 'கொடுவினைத்தூறு"என்பதொரு தூறும், புக வழிதெரியுமித்தனையொழியப் புறப்பட வழி தெரியாதிருப்பதொரு காட்டினுள்ளே, அநந்தக்லேஶ ப₄ாஜநமான மரத்தையிட்டு, அவித்₃யையென்கிற தேரைச் சமைத்து, அவஸ்த₂ாஸப்தகங்கள் என்கிற உருளைகளைச் சேர்த்து, ராக₃த்₃வேஷாதி₃களாகிற குதிரைகளை அணைத்து, கு₃ணத்ரயங்களென்கிற திரிக்குரும்பை ஊஞ்சலின்மேலே கர்மமென்கிற ஸிம்ஹாஸநத்தையிட்டு, ருசியென்கிற மேல் விரியை விரித்து, **2. "அவஶ்யமநுபோ₄க்தவ்யம்"** என்கிற படியே - அநுப₄வித்தன்றி மீளவொட்டாதிருக்கிற e உறு பிணிகளாகிற ப₄ார்யாவர்க்க₃ம் பக்கத்திலிருக்க, அந்த₄கார மாகிற விளக்கையேற்றி, அவஸ்துக்களாகிற த₃ாஸவர்க்க₃ம்-பரதே₃ாஷம் பரஹிம்ஸை பராநுவர்த்தநம் தொடக்கமான போ₄க₃ங்களை பு₄ஜிப்பிக்க பு₄ஜித்து, அப்ரகாஶித ஸ்வரூப ஸ்வப₄ாவனுன தன்னை வாஸனையென்கிற வீரத்தையிட்டுப் பார்த்து, தாபத்ரயங்களென்கிற விடாய்க்குடையின்கீழே பஞ்சவ்ருத்தி ப்ராணன்களாகிற புரோஹிதர் ஸம்ஸாரத்துக்கு மூர்த்₃தா₄பி₄ஷிக்தனுக்கி, க்₃யாதிலாப₄பூஜைகள் கொண்டாட, புண்யபாபங்களாகிற சாமரமிரட்ட, அநேக வித₄து₃:க்க₂பரம்பரைகள் அடுக்கொலியல் பணிமாற, அஹங்கார மமகாரங்களாகிற ஆலவட்டம்பணிமாற,

---

/ ஸாரார்த்த₂ சதுஷ்டயமென்கிற ரஹஸ்யத்தை (18) ரஹஸ்யத்தில் ஒன்றுகக்கொண்டிருக்கிறுர்கள் சிலர். அது பொருந்தாது. எங்களாழ்வான் அருளிச்செய்ததாக வார்த்தாமாலையில் அது உள்ளது

a நாச்-திரு 13-10. b திருவாய் 10-6-1. c பெரியதிரு 1-6-9.
d திருவாய் 3-2 9. e பெரியாழ்-திரு 5-2-6.

ஸதா₃ து₃:க்க₂வர்ஷிணி சுழற்றிப்பணிமாற, அஸ்ம்ருதி-ஒட்டி வட்டியெடுக்க, அபி₄நிவேஶம்-காளாஞ்சியெடுக்க, விஷயாந்தர ருசி- அடைப்பையெடுக்க, பூர்வோத்தராக₄ங்களென்கிற ஆனைகுதிரையோடே வாத பித்த ஶ்லேஷ்மங்களாகிற மந்த்ரிகள் ஸேவிக்க, காம க்ரோத₄ லோப₄ மோஹ மத₃மாத்ஸர்யம் தொடக்கமான ப்ரபு₄க்கள் ஸேவிக்க, ப₄க₃வத₃பசார பா₄க₃வதாபசார அஸஹ்யாபசார நாநாவித₄ாபசாரமாகிற காலாள்கள் ஸேவிக்க, நித்₃ராதே₃வி ஜ்யேஷ்டை₃ தொடக்கமான பெண்பிள்ளைகள் ஸேவிக்க, ஆசையாகிற பாஶக்கயிற்றாலே பிணைத்து, இந்த்₃ரியங்களாகிற மதகளிறுகள் வலிக்க, காலமாகிற ஸாரதி₂நடத்த, 'தே₃ஹாத்மாபி₄மானி வந்தான், ஸ்வதந்த்ரன் வந்தான், அந்யஶேஷபூ₄தன் வந்தான்' என்று காளங்கள் சின்னங்கள் கலந்து பணிமாற, a "மெல்லியலாக்கைக் கிருமி குருவில் மிளிர்ந்தாங்கே செல்லிய செல்கைத் துலகையென் காணும்" என்கிறபடியே-தானும் தன் பரிகரபூ₄தருமாக ஸுக₂ாநுப₄வம்பண்ணி, b "யாதானுமோராக்கையில் புக்கங்காப்புண்டு மாப்பவிழ்ந்தும் மூதாவியில் தடுமாறு முயிர் முன்னமே" என்கிறபடியே - புக்கபுக்க ஶரீரங்கள்தோறும் அஹங்கார மமகாரங்களைப்பண்ணி, ஸத்தாதா₄ரகனான ஸர்வேஶ்வரனை மறந்து, c மொய்த்த வல்வினையுள்நின்று த்ரிவித₄கரணங்களாலும் பாதகம் அதிபாதகம் மஹாபாதகம் தொடக்கமானவற்றாலே போது போக்கிக்கொண்டு போருகிறகாலத்திலே ஈஶ்வரனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே இவனுக்கு அத்₃வேஷம் பிறக்க, அத்தாலே ரக்ஷணத்துக்கு வழிகண்டு "கண்ணையெடுக்கக்கொடுத்த கோலைக்கொண்டு கண்ணைக் கலக்கிக்கொள்ளுவாரைப்போலே நம்பக்கல் சேரக்கொடுத்த உடம்பைக்கொண்டு அகலுகைக்குறுப்பாக்கினான்; d 'பல்பிறவி நோற்றேன்' என்று - ஒரு ஜந்மத்திலே அநேக

a திருவிருத்தம் 48.  b திருவிருத்தம் 95.
c திருமாலை 4.  d பெரியதிரு 1-9-8.

ஜந்மத்துக்குவேண்டும் பாபங்களை ஆர்ஜித்துக்கொள்ளுகிற இவனை நம்பக்கலிலே சேர்த்துக்கொள்ளும் விரகேதோ" என்று திருவுள்ளம்பற்றி, வலவட்டத்திலே a தூதுசெய் கண்கள் கொண்டொன்றுபேசி, ஆழ்வானும் b கருதுமிடம் பொருதுமவனுகையாலே, தன் பரிகரபூதரை ஏவிவிட, c நின்றிவ்வுலகிற்கடிவான் நேமிப்பிரான் தமர்போந்து, d அருளென்னு மொள்வாளுருவி, e "அடைந்த அருவினையோடல்லல் நோய்பாவம் மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான் முரணழிய முன்னொருநாள் தன்விலங்கை வைத்தான் சரண்" என்கிறபடியே-விரோதிவர்க்கத்தையடைய அழிவுசெய்து ஜ்ஞாநத்தைக்கொடுக்க, இவனும் சைதந்யம் குடிபுகுந்து, f "தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் வாளாவிருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம் கரந்துருவில் அம்மானை அந்நான்று பின்தொடர்ந்த ஆழியங்கை அம்மானை ஏத்தாதயர்த்து" என்கிறபடியே இழந்த நாளைக்கு அநுதபித்து, ப்ராப்யத்தை உள்ளபடி அறிவித்த ஆசார்யன்பக்கல் க்ருதஜ்ஞனாய், விரோதிவர்க்கத்தில் உபேக்ஷைபிறந்து, ஶ்ரிய:பதியைக்கிட்டியல்லது தரிக்க வொண்ணாதிருக்கிற ப்ரேமம் விளைந்து, 'இவ்வளவும் குலையுங்காட்டில் கைக்கொண்டருளவேணும்' என்று பிராட்டி புருஷகாரஞ்செய்ய, அவ்வளவும் பொறுக்க மாட்டாதபடியான வாத்ஸல்யாதிகுண விஶிஷ்டவஸ்துவாகையாலே கீழ்ச்செய்த அம்ஶத்தைத் திருவுள்ளம்பற்றி மேற்செய்யவேண்டும் அம்ஶத்தை ப்ராப்யபர்யந்தமாகத் தலைக்கட்டிக்கொடுத்தருளும்.

ஸம்ஸாரஸாம்ராஜ்யம் முற்றிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

a திருவாய் 9-9-9. b திருவாய் 10.6-8. c திருவாய் 5.2.6.
d இராமாநுச 93. e முதல்-திருவ 59. f பெரியதிருவ 82.

# 10. நவரத்நமாலை

ஶரணாக₃தனானவன் — 1. தன்னையும், 2. தனக்கு விரோதி₄யான தே₃ஹத்தையும், 3. தே₃ஹத்தைப் பற்றி வரும் ப₃ந்து₄க்களையும், 4. ஸம்ஸாரிகளையும், 5. தே₃வதாந்தரங்களையும், 6. ஸ்ரீவைஷ்ணவர்களையும், 7. ஆசார்யனையும், 8. பிராட்டியையும், 9. ஈஶ்வரனையும் நினைத்திருக்கும்படி எங்ஙனேயென்னில்.

1. உடம்பில் வேறுபட்டு நித்யனாய், ஒருபடிப்பட்டு அணுவாய், ஜ்ஞாநத்தையும் ஆநந்த₃த்தையும் வடிவாகவுடையனாய், ஜ்ஞாநத்துக்கும் ஆநந்த₃த்துக்கும் இருப்பிடமாய், எம்பெருமானையொழிய வேறொன்று நினைத்தல் சொல்லுதல் செய்யமாட்டாதே எம்பெருமானுக்கேயுரியனாய், தன் கார்யத்துக்குத் தான் கடவனன்றிக்கே அவனையே ப₃லமாகவுடையனாயிருக்குமென்று தன்னை நினைப்பான்.

2. தன்னை உள்ளபடி அறியவொட்டாதே விபரீத ஜ்ஞாநத்தை ஜநிப்பித்து இருபத்துநாலு தத்வங்களினுடைய திரளாய், அநித்யமாய், எப்போதுமொக்கப் பரிணமிக்கக் கடவதாய், ஒருநாளும் ஜ்ஞாநத்துக்கு இருப்பிடமன்றிக்கே அநந்த து₃:க்க₂ங்களை விளைப்பிக்கக் கடவதாய், ஶப்₃தா₃தி₃ விஷயங்களிலே மூட்டி நஶிப்பிக்குமென்று தன் தே₃ஹத்தை நினைப்பான்.

3. ஆத்மஜ்ஞாநத்தையும், ப₄க₃வத்₃ ஜ்ஞாநத்தையும், ப₄க₃வத்₃விஷயத்தில் ருசியையும், த்வரையையும் குலைத்து, தே₃ஹாத்மாபி₄மாநத்தையும், அஹங்கார மமகாரங்களையும், காமக்ரோதா₄தி₃களையும் விளைப்பித்து, பலபடியாலும் அநர்த்த₂த்தைப் பண்ணுவார்களென்று தே₃ஹத்தைப் பற்றிவரும் ப₃ந்து₄க்களை நினைப்பான்.

4. ப₄க₃வத₃நுப₄வத்துக்கும் ப₄க₃வத்கைங்கர்யத்துக்கும் விரோதி₄களாய் ஸம்ஸாரவர்த்த₄கராயிருப்பார்களென்று ஸம்ஸாரிகளை நினைப்பான்.

5. அஜ்ஞராய், அஶக்தராய், எம்பெருமான் பக்கலிலே பிறந்து அவன் கொடுத்த பத₃ங்களையுடையராய், அவனோடே

எதிரிட்டு து₃ர்மாநிகளாய், தங்களைப் போரப்பொலிய நினைத்து நாட்டாரை ப்₄ரமிப்பித்து அநர்த்த₂த்தைப் பண்ணுவார் சிலரென்று தே₃வதாந்தரங்களை நினைப்பான்.

6. ப₄க₃வத்₃ஜ்ஞாநத்துக்கும் இதர விஷய வைராக்₃யத்துக்கும் ப₄க₃வத்₃ ப₄க்திக்கும் வர்த்த₄கராய், உசாத் துணையாய், ப்ராப்யத்துக்கு எல்லைநிலமாயிருப்பார்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைப்பான்.

7. 'தன் கடாக்ஷத்தாலே என்னைத் திருத்தி, ஸர்வேஶ்வரன் கைக்கொள்ளுகைக்கு யோக்₃யனும்படி பண்ணி, அவன் திருவடிகளிலே சேர்த்து ^a அறியாதன அறிவித்து, ஸ்வாமியாய், என்றுமோக்க அடிமைகொள்ளும் மஹோபகாரகன்' என்று ஆசார்யனை நினைப்பான்.

8. நம்முடைய ஸர்வாபராத₄த்தையும் பொறுப்பித்து, ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்து, அவனுடைய காருண்ய வாத்ஸல்யாதி₃ கு₃ணங்களைக் கிளப்பி, நமக்குப் புருஷகாரபூ₄தையாய், மாதாவாய், ஸ்வாமிநியாய், ப்ராப்யையாயிருக்குமென்று பிராட்டியை நினைப்பான்.

9. ஸ்ருஷ்டி காலத்திலே ஶரீரத்தையும் இந்த்₃ரியங்களையும் தந்து, அந்தர்யாமியாய் நின்று ஸத்தையை நோக்கி, அத்₃வேஷத்தையும் ஆபி₄முக்₂யத்தையும் ஸத்ஸங்க₃தி தொடக்கமான ஆத்மகு₃ணங்களையும் பிறப்பித்து ஸதா₃சார்யனோடே சேர்த்து, நம்முடைய ஸர்வாபராத₄ங்களையும் பொறுத்து, ஸம்ஸார ஸம்ப₃ந்த₄த்தையுங்கழித்து, அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தையும் பரமபத₃த்தையும் கு₃ணாநுப₄வத்தையும் தந்து, யாவதா₃த்மபா₄வி நித்யகைங்கர்யங் கொள்ளும் ஸ்வாமியென்று ஸர்வேஶ்வரனை நினைப்பான்.

**நவார்த்த₂ரத்நமாலேயம் ஸத்₃பி₄ர்த₄ர்யா ஸதா₃ ஹ்ருதி₃ ।**
**ப₃த்₃த₄ா யேநாऽதியமலா தம் ஜக₃த்₃கு₃ருமாஶ்ரயே ॥**

நவரத்நமாலை முற்றிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

a திருவாய் 2-3-2.

# 11. நவவித,ஸம்ப,ந்த,ம்

**1."பிதா ச ரக்ஷகஶ்ஶேஷீ ப,ர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி: ।**
**ஸ்வாம்யாதா,ரோ மமாத்மா ச போ,க்தா சாத்,யமநூதி,த:॥"**

என்கிறபடியே - 1. அகாரத்தாலே - பிதாபுத்ரஸம்ப,ந்த,ம் சொல்லி, 2. **2."அவ-ரக்ஷணே"** என்கிற தா,துவினாலே - ரக்ஷ்யரக்ஷக ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, 3. லுப்தசதுர்த்தி,யாலே-ஶேஷஶேஷி ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, 4. உகாரத்தாலே-ப,ர்த்ருப,ார்யா ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, 5. மகாரத்தாலே-ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, 6. நமஸ்ஸாலே-ஸ்வஸ்வாமி ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, 7. நாரபத,த்தாலே-ஶரீரஶரீரி ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, 8. அயநபத,த்தாலே-ஆதா,ராதே,ய ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, 9. ஆயபத,த்தாலே-போ,க்த்ருபோ,க்,ய ஸம்ப,ந்த,ஞ்சொல்லி, ஆக, திருமந்த்ரத்தால்-நவவித, ஸம்ப,ந்த,ங்களைச்சொல்லித் தலைக்கட்டுகிறது.

நம்மாசார்யர்கள், ப்ரத,மரஹஸ்ய தாத்பர்யமான நவவித, ஸம்ப,ந்த,ம் ஸ்வரூபஜ்ஞனுக்கு நித்யாநுஸந்தே,யமென்று அநுஸந்தி,த்தும் உபதே,ஶித்தும் போருவர்கள்.

அவையெவையென்னில்—1. விஶேஷண விஶேஷ்ய ஸம்ப,ந்த,ம், 2. ரக்ஷ்ய ரக்ஷகஸம்ப,ந்த,ம், 3. ஶேஷஶேஷி ஸம்ப,ந்த,ம், 4. ப,ர்த்ருப,ார்யா ஸம்ப,ந்த,ம், 5. ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்ப,ந்த,ம், 6. ஸ்வஸ்வாமி ஸம்ப,ந்த,ம் 7. ஶரீரஶரீரி ஸம்ப,ந்த,ம், 8. தா,ார்யதா,ரக ஸம்ப,ந்த,ம், 9. போ,க்த்ருபோ,க்,ய ஸம்ப,ந்த,ம்.

(1) இதில், விஶேஷண விஶேஷ்ய ஸம்ப,ந்த,மாவது-1. ப்ரக்ருத்யர்த்த,ஶங்கா நிவர்த்தகமாய், 2. ஆஶ்ரயாஶ்ரயியாய், 3. வ்யாவர்த்தக வ்யாவர்த்யமாயிருப்பதொன்று.

1. ப்ரக்ருத்யர்த்த, ஶங்கா நிவர்த்தகமாகையாவது - ஸமஸ்தஶப்,த,காரணமான அகாரஸ்வப,ாவத்தாலே தத்,

 

வாச்யனும், ஸமஸ்தஶப்₃த₃ வாச்யமான சித₃சித்துக்களுக்குக் காரணமாமிடத்தில் "நித்யங்களானவை கார்யமாமிடத்தில் அநித்யங்களாமே" என்கிற ஶங்கையுதி₃க்க, அவை நித்யப்₃ரஹ்ம விஶேஷணமாகையாலே அநித்யத்வம் ஶங்கநீயமன்றென்று பரிஹரிக்குமதாகை.

2. ஆஶ்ரயாஶ்ரயியாவது - ஶௌக்ல்யம் படத்தைப் பற்றியல்லது நில்லாதாப்போலே, சித₃சித்துக்கள் ப₄க₃வத் ஸ்வரூபத்தைப் பற்றியல்லது ஸத்தையற்றிருக்கை.

3. வ்யாவர்த்தக வ்யாவர்த்யமாகையாவது - இவை ப₄க₃வத்ஸ்வரூபத்துக்குண்டான இதர வ்யாவ்ருத்திக்கு ப்ரகாஶகமாய், வ்யாவர்த்யமான ப₄க₃வத்ஸ்வரூபம் வ்யாவர்த்தகமான இவற்றையொழிய ப்ரகாஶியாதபடியுமாயிருக்கை. ஆக, நித்யகார்யாநாதி₃த்வஸூசகம் இந்த ஸம்ப₃ந்த₄ம்.

(2) ரக்ஷ்யரக்ஷக ஸம்ப₃ந்த₄மாகையாவது - 1. தா₄து ஸித்₃த₄மாய், 2. ப்ரக்ருத்யர்த்தா₂நந்தர பா₄வியாய், 3. உப₄ய ஸ்வரூபோசிதமாயிருப்பதொன்று.

1. தா₄துஸித்₃த₄மாகையாவது - **1. "அவ - ரக்ஷணே"** என்கிற தா₄த்வர்த்த₂மான ரக்ஷணம்-நிர்விஷயமாயும் நிராஶ்ரயமாயும் நில்லாமையாலே, **2 "யேந ஜாதாநி ஜீவந்தி"** இத்யாதி₃ ப்ரஸித்₃த₄மான ரக்ஷ்ய ரக்ஷகஸ்வரூப ப்ரத₃ர்ஶநமாகை.

2. ப்ரக்ருத்யர்த்தா₂நந்தரபா₄வித்வமாகையாவது - a "மூவாத்தனிமுதலாய் மூவுலகுங் காவலோன்" என்கிற படியே, ப்ரக்ருத்யர்த்த₂மான காரணத்வத்துக்கு அநந்தரம் வேண்டுவதொன்றுகை.

3. உப₄யஸ்வரூபோசிதமாகையாவது - ரக்ஷ்யரக்ஷக ஸ்வரூபமான பாரதந்த்ர்ய ஸ்வாதந்த்ர்யங்களுக்குச் சேருகை. பரதந்த்ரனுக்கு ஸ்வரக்ஷணாந்வயம் கூடாமையைக் காட்டும் இந்த ஸம்ப₃ந்த₄ம்.

---

a திருவாய் 2.8.5.

(3) ஶேஷஶேஷிஸம்ப₃ந்த₄மாவது – 1. விப₄க்தி ஸித்₃த₄மாய், 2. தா₃த்வர்த்த₂பரார்த்த₂தா ப்ரகாஶகமாய், 3. பே₄ாக₃ா நுரூபதா த₃ர்ஶகமாயிருப்பதொன்று.

1. விப₄க்திஸித்₃த₄மாகையாவது – அகாரத்தில் ஏறிக் கழிந்த சதுர்த்தி₂யிலுதித்த ஶேஷத்வம் - 1. **''யஸ்யாஸ்மி''** இத்யாதி₃ ப்ரஸித்₃த₄மான ஶேஷஶேஷிகளைக் காட்டுகை.

2. தா₃த்வர்த்த₂ பரார்த்த₂தா ப்ரகாஶகமாகையாவது - தா₃த்வர்த்த₂மான ரக்ஷணம் ஶரீரியான ஶேஷிப்ரயோஜந மத்தனையென்று காட்டுகை.

3. போ₄க₃ா நுரூபதா த₃ர்ஶகமாகையாவது - ஶேஷ வஸ்துஸ்வரூபம் ஶேஷிவிநியோக₃ா நுகு₃ணமாயிருக்கை யாயிற்று நிலைநின்ற வேஷம் என்று காட்டுகை. அதாவது- ஶேஷி ஶேஷத்வத்தை அழியமாறி விநியோகி₃க்குமிடத்தில் பிற்காலியாத முறையுணர்த்தி, ஸ்வக₃தஸ்வரூபகு₃ணத் தையும் ஸஹியாததொரு ஸம்ப₃ந்த₄ம்.

(4) ப₄ர்த்ருபா₄ர்யா ஸம்ப₃ந்த₄மாவது-1. உகாரஸித்₃த₄ மாய், 2. விப₄க்த்யர்த்த₂ஶோத₄கமாய், 3. ஸ்வரூபப்ராப்த மாயிருப்பதொன்று.

1. உகாரஸித்₃த₄மாகையாவது - உகாரார்த்த₂ம் அவ தா₄ரணார்த்த₂மாயிருக்கை. அதாவது - ரக்ஷகனான புரு ஷோத்தமனுக்கே ரக்ஷ்யமான ஆத்மஸ்வரூபம் அற்றுத் தீர்ந்திருக்குமென்று தோற்றுகை.

2. விப₄க்த்யர்த்த₂ஶோத₄கமாகையாவது - பதிவ்ரதை யினுடைய ஶேஷத்வம் அநந்யார்ஹமாயிருக்குமாபோலே, லுப்தசதுர்த்₂யர்த்த₂மான ப₄க₃வச்சே₂ஷத்வமும் அநந்யார்ஹமென்று மறுக்களைந்திருக்கை.

3 ஸ்வரூபப்ராப்தமாகையாவது - ப₄ர்த்ருத்வ பா₄ர்யா த்வங்கள் பும்ஸ்த்ரீத்வத்துக்கீடாமாபோலே, ப₄ர்த்ருபா₄ர்யா ஸம்ப₃ந்த₄ம் ஸ்வாதந்த்ர்ய பாரதந்த்ர்யங்களுக்கீடாகை. அந்யார்ஹப்ரஸங்கா₃ஸஹம் இந்த ஸம்ப₃ந்த₄ம்.

(5) ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்ப₃ந்த₄மாகையாவது - (1) மகாரத்₃ருஶ்யமாய், 2 உகாரார்த்த₂ாநுஸந்த₄ாநாபேக்ஷித மாய், அசித்₃வ்யாவ்ருத்தி வேஷமாயிருப்பதொன்று.

1. மகாரத்₃ருஶ்யமாகையாவது - 1. **"மந - ஜ்ஞாநே"** என்கிற ஜ்ஞாநவாசியான மகாரம் காட்டுகிற ஜ்ஞாத்ரு த்வத்துக்கு ஜ்ஞேயம் ப₄க₃வத்ஸ்வரூபாதி₃களாய்த் தோன்றுகை.

2. உகாரார்த்த₂ாநுஸந்த₄ாநாபேக்ஷிதமாகையாவது – உகாரார்த்த₂மான ப₄ர்த்ருப₄ார்யா ஸம்ப₃ந்த₄ாநுஸந்த₄ாநத் துக்கு ஜ்ஞாத்ருத்வம் அபேக்ஷிதமாகை.

3. அசித்₃வ்யாவ்ருத்தி வேஷமாகையாவது - இந்த ஸம்ப₃ந்த₄ங்களையறிகையும், ஜ்ஞேயமும், ஜ்ஞாதாவாகையும். ஜ்ஞேயாதீ₄நமுமாய், தத்ப்ரயோஜநமுமாயிருக்கும் இந்த ஜ்ஞாத்ருத்வமென்று காட்டும் இந்த ஸம்ப₃ந்த₄ம்.

(6) ஸ்வஸ்வாமி ஸம்ப₃ந்த₄மாவது - 1. நமஶ்ஶப்₃த₃ தாத்பர்யமாய், 2. மகாரார்த்த₂ நிப₃ந்த₄ந ப்₄ரமநாஶகமாய், 3. ஸ்வாபா₄விகமாயிருப்பதொன்று.

1. நமஶ்ஶப்₃த₃ தாத்பர்யமாகையாவது - நமஶ்ஶப்₃ தா₃ர்த்த₂மான அஹம் மமதா நிவ்ருத்தி, ப₃லித்வாபி₄ மாநித்வங்களையும் 'ஸ்வக₃தமன்று, பரக₃தம்' என்று காட்டி, ப₃லியுமாய், அபி₄மாநியுமான எம்பெருமானுடைமையுமாய்த் தோன்றுகை.

2. மகாரார்த்த₂ நிப₃ந்த₄நப்₄ரம நாஶகமாகையாவது- மகாரார்த்த₂மான ஜ்ஞாத்ருத்வ நிப₃ந்த₄நமாய் வந்த கர்த்ருத்வ ப்₄ரமத்தை அறுக்குமதாகை. அதாவது-பராதீ₄ந மான ஸ்வரூபத்தின் கு₃ணவிஶேஷங்களும் பராதீ₄நமென்று ஸ்வாதீ₄நதாப்ரதிபத்தியைக் கெடுக்கை.

3. ஸ்வாபா₄விகமாகையாவது - அஹங்காராதி₃களைப் போலே வந்தேறியன்றிக்கே, **2. "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்₃ரஹ்மணி ஸ்தி₂தம்"** என்கிற

படியே ஜீவபரர்களுடைய ஸ்வஸ்வாமிஸம்ப₃ந்த₄ம் ஸ்வதஸ் ஸித்₃த₄மாய்ப் போருகை. ஸ்வத்துக்கு ஸ்வரக்ஷண கர்த்ருத்வமில்லையென்றும், ஸ்வாமிக்கே அது தொழிலென்றும் காட்டுகிறது இந்த ஸம்ப₃ந்த₄ம்.

(7) ஶரீரஶரீரி ஸம்ப₃ந்த₄மாவது - 1. நாராயணபத₃த்தில் ஸமாஸ விஶேஷ ஸித்₃த₄மாய், 2. நமஶ்ஶப்₃தா₃ர்த்த₂ ஸ்வரூபப்ரகாஶகமாய், 3. ஸாமாநாதி₄கரண்யயோக்₃யமாய் இருப்பதொன்று.

1. ஸமாஸ விஶேஷஸித்₃த₄மாகையாவது - நாராயண பத₃த்தில் ப₃ஹுவ்ரீஹி ஸமாஸத்திலே வ்யாப்யமான நாரங்கள் ஶரீரமாய், அந்தர்வ்யாப்தியாலே வ்யாபக ஸ்வரூபம் ஶரீரியாய்த் தோன்றுகை.

2. நமஶ்ஶப்₃தா₃ர்த்த₂ ஸ்வரூபப்ரகாஶகமாகையாவது- நமஶ்ஶப்₃தா₃ர்த்த₂மான ஸ்வஸ்வாமி ஸம்ப₃ந்த₄ம், க்₃ருஹ க்ஷேத்ராதி₃ ஸம்ப₃ந்த₄ங்கள் போலன்றிக்கே அப்ருத₂க் ஸித்₃த₄மாயிருக்குமென்று காட்டுகை.

3. ஸாமாநாதி₄கரண்ய யோக்₃யமாகையாவது - ஸ்வரூபபே₄த₃த்தாலே பி₄ந்நப்ரவ்ருத்தி நிமித்தமான ஜீவபர ஸ்வரூபம் ஶரீரஶரீரியான ஐக்யத்தாலே ஒன்றென்னலாகை. விஶிஷ்டாத்₃வைத ப்ரகாஶகம் இந்த ஸம்ப₃ந்த₄ம்.

(8) தா₄ர்யதா₄ரக ஸம்ப₃ந்த₄மாவது - 1. ஸமாஸாந்தர ஸித்₃த₄மாய், 2. ஶரீரஶரீரி ஸம்ப₃ந்தை₄கலக்ஷணமாய், 3. அசித₃விஶேஷ ஸ்தி₂தி ஹேதுவாயிருப்பதொன்று.

1. ஸமாஸாந்தர ஸித்₃த₄மாகையாவது - நாராயண பத₃த்தில் தத்புருஷ ஸமாஸஸித்₃தை₄யான ப₃ஹிர்வ்யாப்தியாலே நாரபத₃வாச்யங்கள் தா₄ர்யமாய், அயநபத₃வாச்யன் தா₄ரகனாய்த் தோன்றுகை.

2. ஶரீரஶரீரி ஸம்ப₃ந்தை₄க லக்ஷணமாகையாவது- ஆதே₄யத்வ விதே₄யத்வ ஶேஷத்வரூபமான ஶரீர

லக்ஷணங்களிலும், ஆத₄ாரத்வ விதே₄யகத்வ ஶேஷித்வ ரூபமான ஶரீரிலக்ஷணங்களிலும், ப்ரதா₄னமான ஆதே₄யத்வ ஆத₄ாரத்வரூபலக்ஷணம் ஒன்றுயத் தோன்றுகை.

3. அசித₃விஶேஷ ஸ்தி₂திஹேதுவாகையாவது - **1."அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி"** என்று அந்தர்வ்யாப்தியாலே சேதநஸ்தி₂தி ப்ரதா₄ந மாகை யன்றிக்கே ப₃ஹிர் வ்யாப்தியாலே சேதநாசேதநங்க ளிரண்டினுடையவும் வ்யவஸ்தி₂தஸ்வரூபஸ்தி₂தி வ்யா பாரங்களுக்குக் காரணமாய்த் தோன்றுகை. சித₃சிந்நித்ய ஸ்தி₂திகாரணம் இந்த ஸம்ப₃ந்த₄ம்.

(9) போ₄க்த்ரு போ₄க்₃ய ஸம்ப₃ந்த₄மாவது - 1. சரம விப₄க்தி ஸித்₃த₄மாய், 2. பூர்வஸம்ப₃ந்த₄ ப்ரயோஜந ப்ர த₃ர்ஶகமாய், 3. ப்ரதிஸம்ப₃ந்தி₄போ₄க₃ாநுரூபமாயிருப்ப தொன்று.

1. சரமவிப₄க்தி ஸித்₃த₄மாகையாவது - (ஆய) என் கிற சதுர்த்தீ₂ விப₄க்தியிலே அநந்யார்ஹ ஶேஷபூ₄தனான மகாரவாச்யனுடைய ஸஹஜஶேஷவ்ருத்தி தோன்ற, அதில் கர்த்ருத்வ போ₄க்த்ருத்வங்கள் ஶரீரியான பரமஶேஷிக்கே யாய், ஶரீரமான ஶேஷபூ₄தனுக்கன்றென்றிருக்கை.

2. பூர்வஸம்ப₃ந்த₄ ப்ரயோஜந ப்ரத₃ர்ஶகமாகை யாவது-ஸர்ப்பவிஷவத்₃ தா₄ர்யதா₄ரகத்வங்கள் நிஷ்ப்ர யோஜநமாய் விடாதே, ரஸநாரஸவஸ்துவத்₃ தா₄ர்யதா₄ர கங்களுக்கு அநுகூல க்₃ராஹ்யக்₃ராஹகரூப ப்ரயோஜ நத்தைக் காட்டுமதாகை.

3. ப்ரதிஸம்ப₃ந்தி₄ போ₄க₃ாநுரூபமாகையாவது-கைங் கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄யான ஶேஷியினுடைய கைங்கர்ய ரஸாநுப₄வத்துக்கும், கைங்கர்யாஶ்ரயமான ஶேஷபூ₄த னுடைய ஶேஷிபோ₄க₃விருத்₃த₄ ரஸத்வராஹித்யத்துக்கும் இடமாயிருக்கை. ஶேஷித்வத்திலும் ஶேஷத்வத்திலும் மறுக்களைந்தது இந்த ஸம்ப₃ந்த₄ம்.

இதில், 1. விஶேஷண விஶேஷ்ய ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநம் பிறக்கவே காரணாந்தரஶங்கை அறும். 2. ரக்ஷ்யரக்ஷக ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநம் பிறக்கவே ரக்ஷகாந்தரஶங்கை அறும். 3. ஶேஷஶேஷிஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநம் பிறக்கவே ஶேஷ்யந்தரஶங்கை அறும். 4. ப₄ர்த்ருப₄ார்யாஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநம் பிறக்கவே அந்யார்ஹஶங்கை அறும். 5. ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநம் பிறக்கவே ஜ்ஞேயாந்தர ஶங்கை அறும். 6. ஸ்வஸ்வாமி ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநம் பிறக்கவே ஸ்வாதந்த்ர்யஶங்கை அறும். 7. ஶரீரஶரீரி ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநம் பிறக்கவே ஸ்வரூபைக்யஶங்கை அறும். 8. த₄ார்ய த₄ாரக ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநம் பிறக்கவே த₄ாரகாந்தர ஶங்கை அறும். 9. போ₄க்த்ரு போ₄க்₃ய ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநம் பிறக்கவே போ₄க்த்ருத்வஶங்கை அறும்.— ஆக, நவவித₄ ஸம்ப₃ந்த₄மு மறிந்து ஆநந்தி₃த்திருக்கவும்.

நவவித₄ ஸம்ப₃ந்த₄ம் முற்றிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## 2. யாத்₃ருச்சி₂கப்படி

### திருமந்த்ரப்ரகரணம்

யாத்₃ருச்சி₂க ப₄க₃வத் கடாக்ஷத்தாலே ப₄க₃வத₃ாபி₄முக்₂யம் பிறந்து ஸத₃ாசார்ய ஸமாஶ்ரயணம் பண்ணின முமுக்ஷுவுக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தே₄யம். அதில், ஸ்வரூபஶோத₄நார்த்த₂மாக ப்ரவ்ருத்தமாகையாலேப்ரத₂மத்திலே அநுஸந்தே₄யமான திருமந்த்ரம் - ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான பரமபுருஷார்த்த₂த்தையும் ப்ரதிபாதி₃க்கிறது.

அப்பரமபுருஷார்த்த₂த்துக்கு அநுரூபமான சரம ஸாத₄ந ஸ்வீகாரத்தை விதி₄க்கிறது - சரமஶ்லோகம்.

விஹிதோபாய பரிக்₃ரஹத்தையும், ஸப்ரகார புருஷார்த்த₂ ப்ரகாரத்தையும் ப்ரதிபாதி₃க்கிறது - த்₃வயம்.

அதில் திருமந்த்ரம் - எட்டுத் திருவக்ஷரமாய், மூன்று பத₃மாயிருக்கும். அதில் முதல்பத₃மான ப்ரணவம்-மூன்று

பத₃மாயிருக்கும். அதில் ப்ரத₂ம பத₃மான அகாரம் - ஸர்வ தே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் ஸர்வப்ரகாரத்தாலும் ஸர்வாத்மாக்களையும் ரக்ஷித்துக்கொண்டு போருகிற ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது. இரண்டாம் பத₃மாய் அவதா₄ரணார்த்த₂மான உகாரம் - வேறே சிலர்க்கு ஶேஷமன்றென்கிறது. மூன்றும் பத₃மாய், இருபத்தஞ்சாமக்ஷரமாய், ஜ்ஞாநவாசியாயிருந்துள்ள மகாரம் - கீழ்ச் சொன்ன அநந்யார்ஹஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயம் தே₃ஹாதி₃ விலக்ஷணமான ஆத்மவஸ்துவென்கிறது.

இரண்டாம் பத₃மான நமஸ்ஸு 'ந' - என்றும், 'ம:' என்றும் இரண்டு பத₃மாயிருக்கும். 'ந' என்றது - அன்றென்றபடி. 'ம:' என்றது - எனக்கென்றபடி. இரண்டும் கூடி எனக்கன்று என்றபடி. எனக்கன்று என்கையாவது- எனக்கு நான் கடவனல்லனென்றிருக்கை.

மூன்றும் பத₃மான நாராயணபத₃ம் - 'ஸர்வஶேஷியான நாராயணனுக்கு நித்யகைங்கர்யம் பண்ணவேணும்' என்று ப்ரார்த்தி₂க்கும்படியைச் சொல்லுகிறது. நாராயணனென்றது - நாரங்களுக்கு அயநமென்றபடி. நாரங்களாவன - நஶியாத வஸ்துக்களினுடைய திரள். அவையாவன - தி₃வ்யாத்மஸ்வரூபத்தையொழிந்த ஸர்வவஸ்துக்களும். அயநமென்றது - இவற்றுக்கு ஆஶ்ரயமென்றபடி. அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆஶ்ரயமாகவுடையன் என்னவுமாம். இத்தால் - மேன்மையும் நீர்மையும் சொல்லிற்றாய்த்து. இதில் சதுர்த்தி₂ - "ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் ஸர்வப்ரகார கைங்கர்யங்களையும் கொண்டருளவேணும்" என்று ப்ரார்த்தி₂க்கும்படியைச் சொல்லுகிறது.

ஆக, 'ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ்வரனுக்கு அநந்யார்ஹ ஶேஷபூ₄தனாய் எனக்குரியனன்றிக்கேயிருந்துள்ள நான், ஸர்வஶேஷியான நாராயணனுக்கே நித்யகைங்கர்யம் பண்ணப் பெறுவேனாக வேணும்' என்று ப்ரார்த்தி₂த்ததாய்த்து.

## சரமச்லோகப்ரகரணம்

**(ஸர்வத₄ர்மாந்)** கர்ம ஜ்ஞாந ப₄க்திகளை ஸப்ரகார மாக உபதே₃சிக்கக்கேட்ட அர்ஜுநன், அவற்றின் அருமை யாலும், தன் ஸ்வரூபத்துக்குச் சேராமையாலும், ஸாத்₄ய லாப₄ நிமித்தமாக சோகிக்க, 'நான் முன்பு உபதே₃சித்த வற்றை ஸவாஸநமாக விட்டு என்னையொருவனையுமே உபாய மாகப் பரிக்₃ரஹி, நான் உன்னுடைய ஸர்வவிரோதி₄களை யும் போக்குகிறேன், நீ சோகியாதே கொள்' என்று இவனுடைய சோகத்தை நிவர்த்திப்பிக்கிறான்.

**(ஸர்வத₄ர்மாந்)** எல்லா த₄ர்மங்களையும். கீழ்ச் சொன்ன ஸபரிகரங்களான எல்லா உபாயங்களையும். **(பரித்யஜ்ய)** ருசி வாஸனைகளோடு விட்டு. **(மாம்)** உன் கார்யத்திலே அதி₄கரித்துக்கொண்டு நிற்கிற என்னை. **(ஏகம்)** ஒருவனையுமே. **(சரணம்)** உபாயமாக. **(வ்ரஜ)** அத்₄யவஸி. **(அஹம்)** ஸர்வசக்தியான நான். **(த்வா)** என்னையொழிந்த உபாயோபேயங்களை விட்டிருக்கிற உன்னை. **(ஸர்வபாபேப்₄ய:)** என்னைக் கிட்டுகைக்கு விரோதி₄யாயிருந்துள்ளவை எல்லாவற்றில்நின்றும். **(மோக்ஷயிஷ்யாமி)** விடுவிக்கக்கடவேன், **(மாசுச:)** நீ சோகியாதேகொள்.

ஆக, 'ஸாங்க₃மான ஸர்வோபாயங்களையும் ஸவாஸந மாக விட்டு, வாத்ஸல்யாதி₃ கல்யாணகு₃ணவிசிஷ்டனான என்னை ஒருவனையுமே, நிரபேக்ஷஸாத₄நமாக ஸ்வீகரி, ஸர்வ சக்தித்வாதி₃ கல்யாணகு₃ணவிசிஷ்டனான நான், என் னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை, ஸமஸ்த ப்ரதிப₃ந்த₄கங்களில்நின்றும் முக்தனாக்குகிறேன், நீ சோகியாதேகொள்' என்று அர்ஜுநனுடைய சோகத்தை நிவர்த்திப்பிக்கிறான்.

## த்₃வயப்ரகரணம்

த்₃வயம், உபாய பரிக்₃ரஹத்தையும், உபேயப்ரார்த்த₂நத்தையும் ப்ரதிபாதி₃க்கிறது. இரண்டு அர்த்த₂த்தையும் ப்ரதிபாதி₃க்கையாலே இரண்டு வாக்யமாயிற்று. இரண்டு வாக்யமாகையாலே த்₃வயமென்று திருநாமமாயிற்று. இதில் பூர்வவாக்யம் மூன்று பத₃மாய், உத்தரவாக்யம் மூன்று பத₃மாய், ஆக ஆறுபத₃மாயிருக்கும்.

இதில் முதல்பத₃ம் - பெரியபிராட்டியாருடைய புருஷகார ப₄ாவத்தையும், ஈஶ்வரனுடைய வாத்ஸல்யாதி₃கு₃ண சதுஷ்டயத்தையும், தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹயோக₃த்தையும் சொல்லுகிறது.

இதில் ஸ்ரீஶப்₃த₃ம் - (ஸ்ரீயதே, ஶ்ரயதே) என்கிற வ்யுத்பத்தி த்₃வயத்தாலும், பெரியபிராட்டியாருடைய மாத்ருத்வப்ரயுக்தமான ப₃ந்த₄விஶேஷத்தாலே இவர்கள் குற்றம் பாராதே எல்லார்க்குமொக்க ஆஶ்ரயணீயையாயிருக்கும் இருப்பையும், பத்நீத்வமாகிற ப₃ந்த₄விஶேஷத்தாலே ஸ்வரூபஸித்₃த்₄யர்த்த₂மாகவும் சேதநரக்ஷணார்த்த₂மாகவும் ஈஶ்வரனை ஆஶ்ரயித்துக்கொண்டிருக்கும் இருப்பையும் சொல்லுகிறது. "**மதுப்**"பாலே - ஈஶ்வரனுக்கும் பிராட்டிக்குமுண்டான நித்ய ஸம்ப₃ந்த₄த்தைச் சொல்லுகிறது. "**நாராயண**" ஶப்₃த₃ம் - பிராட்டி தானே அபராத₄ங்களையிட்டு அகற்றப் பார்த்தாலும், a "என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" என்று நோக்கக்கடவனான ஈஶ்வரனுடைய வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப₄யங்களைச் சொல்லுகிறது. "**சரண**" ஶப்₃த₃ம் - ஸ்வரூபகு₃ணங்களிலுங்காட்டில் தானே கார்யஞ்செய்யக் கடவதான விக்₃ரஹவைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. (**ஶரணம்**) உபாயமாக. உபாயமாகிறது - அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தி

a பெரியாழ்திரு 4.9.2.

ஷையும் பண்ணித்தருமது. **(ப்ரபத்₃யே)** பற்றுகிறேன். பற்றுகையாவது - மாநஸாத்₄யவஸாயம்.

**(ஸ்ரீமதே)** பெரிய பிராட்டியாரோடே ஸம்ஶ்லிஷ்டனானவனுக்கு. இத்தால் - கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄ மிது₂நமென்னுமிடத்தைச் சொல்லுகிறது. **(நாராயணாய)** ஸர்வஶேஷியாயிருந்துள்ளவனுக்கு. இத்தால் - கைங்கர்யம் பண்ணுகைக்கு வகுத்த விஷயமென்கிறது. இதில் சதுர்த்தி₂ - தே₃ஶகாலாவஸ்தா₂ப்ரகார நியம விது₄ரமான நித்யகைங்கர்ய ப்ரார்த்த₂நத்தை ப்ரதிபாதி₃க்கிறது. **"நமஶ்"** ஶப்₃த₃ம் - கீழ்ச்சொன்ன கைங்கர்யத்தில் விரோதி₄ நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. கைங்கர்யத்துக்கு விரோதி₄யாகிறது - போ₄க்த்ருத்வ ப்ரதிபத்தியும், மதீ₃யத்வ ப்ரதிபத்தியும்.

ஆக, ஶ்ரிய:பதியாய் ஸர்வஸுலப₄னான நாராயணன் திருவடிகளையே அபி₄மதஸித்₃தி₄க்கும் தத்₃விரோதி₄ நிவ்ருத்திக்கும் உபாயமாக அத்₄யவஸிக்கிறேன், ஶ்ரிய:பதியாய் ஸர்வஸ்வாமியான நாராயணனுக்கு நித்யகைங்கர்யம் பண்ணப்பெறுவேனாக வேணும்; அதுக்கு விரோதி₄யான அஹங்கார மமகாரங்களும் நிவ்ருத்தமாகவேணும் என்று ஸப்ரகார ஸாத₄ந ஸ்வீகார பூர்வகமாக ஸ்வரூபாநுரூபமான நித்யகைங்கர்ய ப்ரார்த்த₂நத்தை ப்ரதிபாதி₃க்கிறது.

**யாத்₃ருச்சி₂கப்படி முற்றிற்று.**

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**



# 13. பரந்தபடி

## திருமந்த்ரப்ரகரணம்

### உபோத்,க,ாதம்

1. **"நித்யோ நித்யாநாம்"** என்றும், 2. **"ஜ்ஞாஜ்ஞௌ த்,வாவஜாவீஶநீஶௌ"** என்றும், 3. **"ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்,த்,யநாதீ,"** என்றும் சொல்லுகிறபடியே ஆத்மஸ்வரூபம் நித்யமாயிருக்கச்செய்தேயும், 4.**"அஸந்நேவ ஸ ப,வதி"** என்கிறபடியே - அநாதி,காலம் அஸத்,வ்யவஹாரத்துக்கு விஷயமாய்ப்போந்தது - ப,க,வத்,விஷய ஜ்ஞாநராஹித்யத்தாலேயாகையாலே, 4. **"ஸந்தமேநம்"** என்கிறபடியே ஸத்,வ்யவஹாரத்துக்கு விஷயமாம்போது ப,க,வத்,விஷய ஜ்ஞாநஸத்,ப,ாவத்தாலே ஆகவேணும்.

இப்படிப்பட்ட ஜ்ஞாநவிஶேஷமாகிறது ஈஶ்வரனுடைய ஶேஷித்வ விஷயஜ்ஞாநமும், உபாயத்வவிஷயஜ்ஞாநமும், உபேயத்வவிஷயஜ்ஞாநமுமிறே.

ஈத்,ருஶமான ஜ்ஞாந விஶேஷத்துக்கு உத்பாத,கமாயிருப்பது - அபௌருஷேயமாய், நித்யநிர்தோ,ஷமாய், ஸ்வத:ப்ரமாணமான வேத,ம்.

அந்த வேத,ந்தான், 5. **"அநந்தா வை வேதா,:"** என்கிறபடியே - அஸங்க்,யாதமாய் இருக்கையாலும், 6. **"அல்பஶ்ச காலः"** என்றும், 7. **"பூ,தஜீவிதமத்யல்பம்"** என்றும், a "நம்முடை நாள்" என்றுமித்யாதி,களிற் சொல்லுகிறபடியே - சேதநர் பரிமிதகாலவர்த்திகளாயிருக்கையாலும், உள்ள காலந்தன்னிலே வேத,த்திற் சொல்லுகிற அர்த்த,த்தை ஆராயவென்றிழிந்தால், 8. **"ஶ்ரேயாம்ஸி ப,ஹுவிக்,நாநி"** என்றும், 6. **"ப,ஹவஶ்ச விக்,நா:"** என்றும் சொல்லுகிறபடியே ஶ்ரேய:ப்ராப்தி ப்ரத்யூஹ ப,ாஹுள்யத்தாலும், அந்த வேத,த்தில் ஸார

---

a திருவாய் 1 3-7.

பூ₄தமான அர்த்த₂நிர்ணயம் பண்ணுகைக்கு யோக்₃யதை யற்றிருக்கும்.

ஆனபின்பு, **1. "யத்ஸாரபூ₄தம் தது₃பாஸிதவ்யம்"** என்கிறபடியே - வேத₃தாத்பர்ய பூ₄தமாயிருப்பதொன்றாலே வேத₃த்தில் நிர்ணீதமான அர்த்த₂த்தை அறியவேணும்.

அதில் **2. "ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததை₂வாऽத₂ர்வணாநி ச-ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்ஸ்த₂ம்"** என்கிறபடியே ஸகலவேத₃ தாத்பர்யபூ₄மியாயிருப்பதொரு மந்த்ரமாகையாலே, இம்மந்த்ரமுக₂த்தாலே ஶேஷஶேஷிபா₄வாதி₃ ஜ்ஞாநம் உபாதே₃யமாகக்கடவது.

**3. "யதா₂ ஸர்வேஷு தே₃வேஷு"** இத்யாதி₃ ப்ரக்ரியையாலே ஸகலதை₃வங்களிலும் ஸர்வேஶ்வரன் ப்ரதா₄நனாகிருப்போலே ஸகலமந்த்ரங்களிலும் இம்மந்த்ர விஶேஷம் ப்ரதா₄நமாயிருப்பதொன்று.

**4. "ஆஸ்தாம் தே கு₃ணராஶிவத்"** **5. "ப₃ஹவோ ந்ருப கல்யாணகு₃ணா: புத்ரஸ்ய ஸந்தி தே"** **6. "தவாநந்தகு₃ணஸ்யாபி ஷடே₃வ ப்ரத₂மே கு₃ணா:"** a "ஈறில வண்புகழ்" என்றும், **7. "ப₃ஹூநி மே வ்யதீதாநி"** b "எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" c "பிறப்பில் பல்பிறவிப் பெருமான்" என்றுமித்யாதி₃களிற் சொல்லுகிறபடியே - ஸர்வேஶ்வரனுடைய கு₃ணங்களும், கு₃ண பரீவாஹங்களான அவதாரங்களும் அஸங்க்₂யாதங்களாயிருக்குமாபோலே, அவற்றை அநுப₄ந்தி₄த்திருக்கும் மந்த்ர விஶேஷங்களும், **8. "ப₃ஹுபி₄ர் மந்த்ரை:"** என்கிறபடியே ப₃ஹுவித₄ங்களாயிருக்கும்.

இப்படி ப₃ஹுவித₄ங்களான மந்த்ரவிஶேஷங்களில் வைத்துக்கொண்டு, **9. "நாராயணாய வித்₃மஹே வாஸுதே₃வாய தீ₄மஹி தந்நோ விஷ்ணு: ப்ரசோத₃யாத்"** என்று

a திருவாய் 1-2-10. b திருவிருத்தம் 1. c திருவாய் 2.9-5.

விஷ்ணுகா₃யத்ரியிலே இம்மூன்று மந்த்ரத்தையும் ப்ராதா₄ந்யேந ப்ரதிபாதி₃க்கையாலே, வ்யாபகமந்த்ர த்ரயமும் ப்ரதா₄நமாகக்கடவது.

அந்த வ்யாபகமந்த்ரங்களில் வைத்துக்கொண்டு, ப்ரத₂மத்திலே நாராயணஶப்₃த₃த்தை ப்ராதா₄ந்யேந ப்ரதிபாதி₃க்கையாலும், மேல்தானும் வாஸுதே₃வ விஷ்ணு ஶப்₃த₃ங்களை அநாத₃ரித்துப் பலவிடங்களிலும் நாராயண ஶப்₃த₃த்தையிட்டு ப₄க₃வத்ஸ்வரூபாதி₃களை நிர்த்₃தே₃ஶிக்கையாலும், இப்படி வேத₃புருஷன் ஆத₃ரித்தவளவன்றிக்கே, வேதா₃ர்த்த₂விஶதீ₃கரண ப்ரவ்ருத்தரான வ்யாஸாதி₃ பரமருஷிகள் பலரும் வேதா₃ர்த்தோ₂பப்₃ரும்ஹணங்களாயிருக்கிற ஸ்வப்ரப₃ந்த₄ங்களிலே பலவிடங்களிலும் 1. "ஆர்த்தா விஷண்ணா:" 2. "ஆபோ நாரா:" 3. "மாபை₄ர்மாபை₄:" 4. "ஸர்வவேத₃ரஹஸ்யேப்₄ய:" 5. "ஏகோऽஷ்டாக்ஷரமேவாலம்" என்று ஸகலமந்த்ர ப்ரதா₄நதயா இத்தை ப்ரஶம்ஸிக்கையாலும், ஸ்வயத்ந ஸாத்₄யமான ப₄க₃வத் ப்ரஸாத₃த்தாலே லப்₃த₄ஸார்வஜ்ஞரான ருஷிகளைப்போலன்றிக்கே, a "மயர்வறமதிநல மருளினன்" என்கிறபடியே நிர்ஹேதுக ப₄க₃வத்கடாக்ஷத்தாலே ஸமதி₄க₃த ஸமஸ்தவஸ்து வாஸ்தவரான ஆழ்வார்கள் பலரும் ஸ்வப்ரப₃ந்த₄ங்களிலே பலவிடங்களிலும் இத்தையே ப்ரஶம்ஸிக்கையாலும், தத₃நுஸாரிகளான பூர்வாசார்யர்களும் இதர மந்த்ரங்களை அநாத₃ரித்து, இத்தையே தந்தாமுக்குத் தஞ்சமாக அநுஸந்தி₄த்து, உபதே₃ஶவேளையிலும் தந்தாமைப் பற்றினவர்களுக்கு இத்தையே உஜ்ஜீவந ஹேதுவாக உபதே₃ஶித்துப் போருகையாலும், தத₃நுயாயிகளான நமக்கும் இதுவே அநுஸந்தே₄யமாகக்கடவது.

b "விட்டுசித்தன் விரும்பியசொல்" என்கையாலேயிறே திருப்பல்லாண்டை நம் மனிச்சர் ஆத₃ரிக்கிறது.

---

a திருவாய் 1-1-1. b திருப்பல்லாண்டு 12.

வாச்யவைப₄வம் போலன்று வாசகவைப₄வம். அவன் தூ₃ரஸ்த₂னானாலும் இது ஸந்நிதி₄பண்ணிக் கார்யஞ்செய்யும். த்₃ரௌபதி₃க்கும் ப₂லஸித்₃தி₄யுண்டாயிற்றது திருநாம வைப₄வத்தாலேயிறே. 1. "**ஸாங்கேத்யம்**" என்கிற படியே, இதுதான் சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன்ஸ்வரூபங்கெடநில்லாது. a "ஓராயிரமாய்" என்கிற படியே, அவன் தனக்கும் ரக்ஷணபரிகரம் இதுவே. ஜ்ஞாந ஶக்த்யாதி₃களைப்போலே அல்லாத திருநாமங்கள்; ஜ்ஞாநா நந்த₃ங்களைப்போலேஇது. b "நாமமாயிரமேத்த நின்ற நாராயணா" c "நாமம் பலவுமுடை நாரணநம்பீ" என்னா நின்றதிறே. இதுதான் ஸர்வாதி₄காரம். ப்ரணவார்த்த₂த் துக்கு எல்லாரும் அதி₄காரிகள். இடறினவன் 'அம்மே' என்னுமாபோலே, இது சொல்லுகைக்கு எல்லாரும் யோக்₃யர்; ப்ராயஶ்சித்தாபேக்ஷையில்லை.

இதுதான் ப₂லப்ரத₃மாமிடத்தில், 2. "**ஐஹலௌகிகம் ஐஶ்வர்யம் ஸ்வர்க்கா₃த்₃யம் பாரலௌகிகம்। கைவல்யம் ப₄க₃வந்தஞ்ச மந்த்ரோऽயம் ஸாத₄யிஷ்யதி ||**" என்றும் 3. "**நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்த₂ஸாத₄க:**" என்றும், d "குலந்தரும் செல்வந்தந்திடும்" என்று மித்யாதி₃களிற் சொல்லுகிறபடியே ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வச்சரணார்த்தி₂களாகிற த்ரிவித₄ாதி₄காரிகளுக்கும், தத்தத்ஸ்வாபி₄மத ப₂லவிஶேஷங்களை ஸாதி₄த்துக் கொடுக்கக் கடவதாயிருக்கும். ப₄க₃வச்சரணார்த்தி₂களான அதி₄காரி களில், ப₄க்தியோக₃பரனுக்கு - கர்ம ஜ்ஞாநங்களினுடைய உத்பத்திக்கு ப்ரதிப₃ந்த₄கங்களாயிருக்கிற ப்ரப₃லகர்மங்களை நிவர்த்திப்பித்து, அவன் தனக்கு உத்தரோத்தரம் அபி₄ வ்ருத்₃தி₄களையும் பண்ணிக்கொடுத்து, தத்₃த்₃வாரா உபகாரக மாயிருக்கும். ப்ரபத்த்யதி₄க்ருதனுக்கு - ஆத்மயாதா₂த்ம்ய ஜ்ஞாநஜநகமாய், காலக்ஷேபஹேதுவாய், e "எனக்கென்றுந்

a திருவாய் 9-3-1. b நாச்-திரு 2-1. c பெரியதிரு 10.8.4.
d பெரியதிரு 1-1-9. e பெரியதிரு 6-10-6.

தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம்" என்கிற படியே, ப்ரதிபாத்₃ய வஸ்துவைப்போலே ஸ்வயம் போ₄க்₃யமுமாயிருக்கும்.

இப்படி அபேக்ஷித ப₂லஸாத₄கத்வமாத்ரமேயன்றிக்கே, 1. "ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த₂ம்" என்றும், ௨ "நின் திருவெட்டெழுத்துங்கற்று - மற்றெல்லாம் பேசிலும்" என்றுமித்யாதி₃களில் சொல்லுகிறபடியே, ஜ்ஞாதவ்யங்களான நிகி₂லத்ரய்யந்த ரஹஸ்யபூ₄த தத்வார்த்த₂ விஶேஷங்களையும் ஸாகல்யேந ஜ்ஞாபிக்கக்கடவதாயிருக்கும்.

ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த₂ங்களெல்லாம் இதிலே புஷ்கலமாக ப்ரதிபந்நமாகில், மற்றை ரஹஸ்ய த்₃வயமும் அநுஸந்தே₄யமாகாதோ? என்னில் - அது செய்யாது; இதிலே ஸங்க்₃ருஹீதங்களான அர்த்த₂ங்களை அவை விஸ்த்ருதங்களாக ப்ரதிபாதி₃க்கிறனவாகையாலே; ஸகலார்த்த₂மும் இதிலே கண்டோ₂க்தமாகிலிறே அவை அநுஸந்தே₄யங்களாவன; இதில் அஸ்பஷ்டங்களான அர்த்த₂ங்களை அவை விஸ்த்ருதங்களாக ப்ரதிபாதி₃க்கிறனவாகையாலே, அவற்றினுடைய அநுஸந்தே₄யதைக்குக் குறையில்லை. வித்₄யநுஷ்டா₂நரூபங்களாகையாலும்; அவற்றையொழியப் ப₂லஸித்₃தி₄யில்லாமையாலும் அவை அநுஸந்தே₄யங்கள். இதுதன்னிலே 'அவை அநுஸந்தே₄யங்களானபோது இதினுடைய நைரபேக்ஷ்யம் ப₄க்₃நமாகாதோ' என்கிற சோத்₃யமும் பரிஹ்ருதம்.

ஆக, இப்படி வேத₃ங்களோடு, வைதி₃கரான ருஷிகளோடு, ஆழ்வார்களோடு, ஆசார்யர்களோடு வாசியற எல்லாரும் இத்தையே ஆத₃ரிக்கையாலும், எல்லா அதி₄காரிகளுக்கும் நின்ற நின்ற நிலைகளிலே அபேக்ஷித ப்ரதா₄நம் பண்ணக்கடவதாயிருக்கையாலும், ஜ்ஞாதவ்யார்த்த₂ ஜ்ஞாபகமாகையாலும், இம்மந்த்ர விஶேஷம் எல்லாவற்றிலும் ப்ரதா₄நமாயிருக்கும்.

---

௨ பெரிய திரு 8-10-3.

இம்மந்த்ரந்தனக்கு ப்ராத₄ாந்யேந ப்ரதிபாத்₃யமான அர்த்த₂மாகிறது - ஈஶ்வரனுக்கும் ஆத்மாவுக்கும் உண்டான ஶேஷஶேஷிபா₄வ ஸம்ப₃ந்த₄மாகையாலே, ஆத்மபரமாத்ம ஸ்வரூப நிரூபணமும், விரோதி₄ஸ்வரூப நிரூபணமும், கைங்கர்ய ஸ்வரூப நிரூபணமும் இதுக்கு ஶேஷதயா வரக்கடவது. அந்த ஶேஷஶேஷிபா₄வ ஸம்ப₃ந்த₄ந்தான்-த்₃விநிஷ்ட₂மாயிருக்கையாலே, ப₄க₃வத் ஸ்வரூப நிரூபணமும், சேதநஸ்வரூப நிரூபணமும் அபேக்ஷிதமாகக்கடவது. இதுதான் ஸித்₃த₄மாவது - அதுக்கு விரோதி₄யான ஸ்வாதந்த்ர்யத்தினுடைய நிவ்ருத்தியுண்டானாலாகையாலே, விரோதி₄ நிவ்ருத்தி அபேக்ஷிதமாயிருக்கும். அதுதான் ஸப₂லமாவது - **1. "அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாऽநுபபத்தி:"** என்கிறபடியே கிஞ்சித்காரத்துக்கு அநந்தரமாகையாலே ஶேஷத்வவ்ருத்தி நிரூபணம் அபேக்ஷிதமாயிருக்கும்.

ஆக, பத₃த்ரயமும் - ஆத்ம பரமாத்ம ஸம்ப₃ந்த₄த்தையும், தத்ஸம்ப₃ந்த₄ விரோதி₄யான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தினுடைய நிவ்ருத்தியையும், தத்ஸாப₂ல்ய ஹேதுபூ₄தமான கிஞ்சித்காரத்தையும் ப்ரதிபாதி₃க்கிறது.

இதுதனக்கு - 'ஸ்வரூபஞ் சொல்லுகிறது' என்றும், 'ப்ராப்யஞ் சொல்லுகிறது' என்றும் வாக்யார்த்த₂ம். ஸ்வரூபஞ் சொல்லுகிற இதுக்கு - விரோதி₄ஸ்வரூபமும், உபாயஸ்வரூபமும், ப₂லஸ்வரூபமும், அதி₄காரிஸ்வரூபமும், ப₄க₃வத் ஸ்வரூபமுமாகிற அஞ்சு அர்த்த₂மும் சொல்லாநிற்கச் செய்தே, மற்றை நாலும் அதி₄காரிக்காகையாலே, அதி₄காரிஸ்வரூபமும் ப்ரத₂மத்திலே அபேக்ஷிதமாயிருக்கையாலும், ப்ரஸித்₃தி₄ப்ராசுர்யத்தாலும், 'ஸ்வஸ்வரூபத்தைச் சொல்லுகிறது' என்று பொருளாகக்கடவது.

இதில் ப்ரணவமொன்றிலுமன்றோ ஆத்மஸ்வரூபம் சொல்லுகிறது; நமஸ்ஸாலும் நாராயண பத₃த்தாலும் - உபாயஸ்வரூபத்தையும் உபேயஸ்வரூபத்தையும் சொல்லா

நிற்க, 'திருமந்த்ரம் முழுக்க ஸ்வரூபம் சொல்லுகிறது' என்று சொல்லும்படி எங்ஙனேயென்னில் - ப்ரணவத்தில் ப்ரதிபாதிக்கப்படுகிற பகவச்சேஷத்வம் ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகிருப்போலே, உத்தர பதத்திலும் ப்ரதிபாத்யமான பகவதேகஸாதநத்வமும் பகவதேகஸாத்யத்வமும் இவனுக்கு ஸ்வரூபமாயிருக்கையாலே, பதத்ரயமும் ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது என்னக் குறையில்லை.

நாராயண பதத்தாலே ப்ரதிபாதிக்கப்படுகிற ஶேஷவ்ருத்தி ப்ராப்யமாகிருப்போலே, முன்பு சொல்லுகிற பகவச்சேஷத்வமும், அந்யஶேஷத்வராஹித்யமும், ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியும், ஸித்தோபாய ஸ்வீகாரமும், ததீய ஶேஷத்வமும் இத:பூர்வம் அப்ராப்தமாய், மேல் ப்ராப்தமாயிருக்கையாலே, தத்ப்ரதிபாதகமான பதத்வயமும் ப்ராப்ய ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது என்னக் குறையில்லை.

ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூபஞ்சொல்லி, நாராயண பதத்தாலே ப்ராப்யஞ் சொல்லுகிறது என்னவுமாம்.

சதுர்த்த்யந்தமான ப்ரதமாக்ஷரத்திலே - ரக்ஷகத்வ ஶேஷித்வங்கள் சொல்லி, மத்யமாக்ஷரமான உகாரத்திலே - அந்யஶேஷத்வ நிவ்ருத்தியைச் சொல்லி, த்ருதீயாக்ஷரமான மகாரத்திலே - ப்ரக்ருதே:பரமான ஆத்ம ஸ்வரூபத்தினுடைய ஜ்ஞாநாநந்த லக்ஷணத்வஞ்சொல்லி, நமஸ்ஸாலே - விரோதி ஸ்வரூபத்தினுடைய த்யாஜ்யத்வஞ் சொல்லி, பகவச்சேஷத்வ பௌஷ்கல்ய ஹேதுவான பாகவதஶேஷத்வஞ்சொல்லி, ஶேஷத்வாநுரூபமான உபாயஸ்வரூபஞ்சொல்லி, நாராயண பதத்தாலே - ஸர்வாத்ம ஶேஷியான ஸர்வேஶ்வரன் ஸ்வரூபஞ்சொல்லி, சதுர்த்தியாலே - ஶேஷவ்ருத்தியை ப்ரார்த்தித்துத் தலைக்கட்டுகையாலே, ரக்ஷகத்வம் தொடங்கி ஶேஷவ்ருத்தி பர்யந்தமான நடுவுண்டான அர்த்தவிஶேஷங்களெல்லாம் பதார்த்தமாகக்கடவது.

ஈஶ்வரனுடைய ஶர்வஶேஷித்வ ஸர்வரக்ஷகத்வங்களும் நிரதிஶயபோ₄க்₃யத்வமும் தாத்பர்யார்த்த₂ம்.

இத்திருமந்த்ரந்தான் - அநாதி₃காலம் ஈஶ்வரனுக்கு ரக்ஷ்யபூ₄தருமாய் ஶேஷபூ₄தருமாயிருக்கிற சேதநர்பக்கலிலே ரக்ஷகத்வ ஶேஷித்வ பு₃த்₃தி₄பண்ணியும், ஜட₃மாய் இத₃ம்பு₃த்₃தி₄யோக்₃யமாயிருக்கிற ப்ரக்ருதி தத்வத்திலே-ப்ரக்ருதே:பரமாய், ஜ்ஞாநாநந்த₃ லக்ஷணமாயிருக்கிற ப்ரத்யகா₃த்ம ஸ்வரூபத்துக்குப் பண்ணக்கடவ அஹம் பு₃த்₃தி₄யைப் பண்ணியும், ஸ்வரூப விருத்₃த₄மான ஸ்வ ஸ்வாதந்த்ர்யத்தை ஏறிட்டுக்கொண்டு உபாயாபா₄ஸங்களிலே - உபாயபு₃த்₃தி₄யையும், ப்ராப்யாபா₄ஸங்களிலே - ப்ராப்யபு₃த்₃தி₄யையும் பண்ணி ஸம்ஸரித்துப் போந்த சேதநனுக்கு — ப₄க₃வத்₃வ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களினுடையவும் ரக்ஷ்யத்வ ஶேஷத்வ ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, ஆத்மஸ்வரூபம் ப்ரக்ருதே:பரமாய் ஜ்ஞாநாஶ்ரயமாயிருக்குமென்னுமிடத்தையும் அறிவித்து, ஸ்வரூப விரோதி₄யான ஸ்வஸ்வாதந்த்ர்யத்திலுடைய நிவ்ருத்தி பூர்வகமாக ப₄க₃வச்சே₂ஷத்வ பௌஷ்கல்யத்தைப் பிறப்பித்து, உபாயாபா₄ஸங்களில் உபாயத்வ பு₃த்₃தி₄ நிவ்ருத்தி பூர்வகமாக ஸம்யகு₃பாயமான ஸித்₃த₄ ஸாத₄நத்திலே யதா₂வத்₃ ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, புருஷார்த்தா₂ந்தர நிவ்ருத்தி பூர்வகமாக நிரஸ்தாதிஶயாஹ்லாத₃ ஸுக₂பா₄வைக லக்ஷணமான ப₄க₃வத் கைங்கர்யமே நிரதிஶய புருஷார்த்த₂ம் என்னுமிடத்தையும் அறிவிக்கிறது.

இத்திருமந்த்ரந்தான் - 1. ஸ்வஸ்வரூப, 2. பரஸ்வரூப, 3. விரோதி₄ஸ்வரூப, 4. புருஷார்த்த₂, 5. தது₃பாயங்களில் அந்யதா₂ப்ரதிபத்தி பண்ணிப்போந்த சேதநனுக்கு, யதா₂வத் ப்ரதிபத்தியைப் பிறப்பிக்கிறது.

1. ஸ்வஸ்வரூபமாகிறது — தே₃ஹேந்த்₃ரியாதி₃களிற் காட்டில் விலக்ஷணமாய், நித்யமாய், ஜ்ஞாநாநந்த₃ லக்ஷண

மான ஆத்மஸ்வரூபம். அதில் யதா₂வத் ப்ரதிபத்தியாவது- ப₄க₃வத₃நந்யார்ஹ ஶேஷபூ₄தமாய், ப₄க₃வதே₃கரக்ஷ்யமாய், ப₄க₃வதே₃க போ₄க்₃யமாயிருக்குமென்று அறிகை.

2. பரஸ்வரூபமாவது - ஹேயப்ரத்யநீகமாய், கல்யாண கு₃ணகரமாய், அப்ராக்ருத தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹ விஶிஷ்ட மான ப₄க₃வத் ஸ்வரூபம். அதில் யதா₂வத் ப்ரதிபத்தி யாவது - ஸர்வஶேஷியாய், ஸர்வரக்ஷகமாய், நிரதிஶய போ₄க்₃யமாயிருக்குமென்று அறிகை.

3. விரோதி₄ஸ்வரூபமாவது - ஸ்வஸ்வரூப பரஸ்வரூப யாதா₂த்ம்ய ஜ்ஞாந ஜநகவிரோதி₄யாய், யதா₂வத்₃ஜ்ஞாந ஜநகவிரோதி₄த்வ மாத்ரமேயன்றிக்கே, ரஜஸ்தமஸ்ஸுக்க ளாலே அந்யதா₂ஜ்ஞான விபரீதஜ்ஞாந ஜநகமாயிருக்கிற ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம். அதில் யதா₂வத்ப்ரதிபத்தியாவது - ஏததீ₃யங்களான ஶப்₃தா₃தி₃ விஷயங்கள் அல்பாஸ்தி₂ரத் வாதி₃ தோ₃ஷதூ₃ஷிதங்களாகையாலே ஜுகு₃ப்ஸா விஷயமாயிருக்குமென்றும், அவற்றை ஸ்வயத்நத்தாலே கழித்துக்கொள்ள வொண்ணாதாப்போலே ப₄க₃வதே₃க நிவர்த்யமாயிருக்குமென்றும் ப்ரதிபத்திபண்ணுகை.

4. புருஷார்த்த₂ஸ்வரூபமாகிறது - அநாதி₃கால கர்ம ப்ரவாஹ ப்ராப்த ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ விதூ₄நந பூர்வகமாக அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தாலே அப்ராக்ருத தி₃வ்யதே₃ஶத்தை ப்ராபித்து, ப₄க₃வத்₃கு₃ணைகதா₄ரகரான ஸூரிகளோடே ஒரு கோவையாய், ப₄க₃வத₃நுப₄வ ஜநிதஹர்ஷத்தாலே ப்ரேரிதனாய், **1. "காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்" 2. "ஸர் வேஷு லோகேஷு காமசாரோ ப₄வதி" 3. "யேந யேந தா₄தா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி"** இத்யாதி₃ப் படியே, ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் உசிதமாக ஸர்வப்ரகாரத்தாலும் பண்ணும் ஶேஷவ்ருத்தி. அதில் யதா₂வத்ப்ரதிபத்தியாவது - தானுகந்த கைங்கர்ய மாதல், தானும் அவனுமுகந்த கைங்கர்யமாதல் பண்ணுகை அபுருஷார்த்த₂மென்றும், **4. "தந்நியுக்த: கரிஷ்யாமி"**

1. **"க்ரியதாமிதி மாம் வத,"** ௨"முகப்பேக்ஷிப் பணிகொள்ளாய்" என்றும் இத்யாதி,களில் சொல்லுகிறபடியே-அவன் ஏவச்செய்கையே புருஷார்த்த,மென்றும், இப்படி செய்யாகின்றால் வேறேயொரு புருஷார்த்த,த்துக்கு ஸாத,ந தயா செய்கையன்றிக்கே ஈஶ்வரனுடைய முக,விகாஸமே ப்ரயோஜநமாகச் செய்யுமதென்றும் ப்ரதிபத்தி பண்ணுகை.

5. உபாயஸ்வரூபமாகிறது - ஜ்ஞாநஶக்த்யாதி, கல்யாணகு,ண விஶிஷ்டமாய், நித்யமங்க,ள விக்,ரஹோபேதமாய், து,ஷ்கரத்வாதி,தோ,ஷஸம்ப,ாவநாக,ந்த,ஶூந்யமாய், அந்திமஸ்ம்ருதி நிரபேக்ஷமாய், ஏகரூபமாய், பரம சேதநமாய், ஸ்வரூபாநுரூபமாயிருக்கிற ஸித்,த,ஸாத,நம்; அதில் யதா,வத்ப்ரதிபத்தியாவது - இதரோபாயத்யாக,பூர்வகமாக ஸ்வீகரிக்கவேணுமென்றும், ஸ்வீகார விஶிஷ்டமானபோது ப,லப்ரத,மாகாநிற்கச்செய்தே தந்நிரபேக்ஷமாயிருக்குமென்றும் ப்ரதிபத்தி பண்ணுகை.

அதில், ஸ்வஸ்வரூபஞ் சொல்லுகிறது - ப்ரணவம். பரஸ்வரூபஞ்சொல்லுகிறது - நாராயணபத,ம். விரோதி,ஸ்வரூபத்தையும், உபாயஸ்வரூபத்தையும் சொல்லுகிறது-நமஸ்ஸு. நாராயணபத,த்தில் சதுர்த்தி, - புருஷார்த்த,ஸ்வரூபத்தையும் சொல்லுகிறது.

இவ்வதி,காரிக்கு ஜ்ஞாதவ்யார்த்த, ப்ரகாஶகத்வேந அத்யந்தோபாதே,யமாயிருக்கிற ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக்கொண்டு, சரமஶ்லோகத்தாலும் த்,வயத்தாலும் ப்ரதிபாதி,க்கப்படுகிற உபாயோபேயங்களுக்கு முன்னே ஆத்மஸ்வரூப நிரூபணம் அபேக்ஷிதமாயிருக்கையாலே, ப்ரத,ம ரஹஸ்யமான திருமந்த்ரம் ப்ரத,மத்திலே அநுஸந்தே,யம்.

**அக்ஷரபத,விப,ாக,ாதி,கள்**

திருமந்த்ரந்தான், **2. "ஓமித்யேகாக்ஷரம்; நம இதி த்,வே அக்ஷரே; நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி । ஓமித்ய**

௨ திருவாய் 8-5-7.

க்₃ரே வ்யாஹரேத்; நம இதி புஃசாத்; நாராயணாயேத் யுபரிஷ்டாத் ||'' என்றும், a ''நின் திருவெட்டெழுத்துங்கற்று'' என்றும், b 'எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே'' என்றும் இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே எட்டுத் திருவக்ஷரமாய், மூன்று பத₃மாயிருக்கும்.

பத₃த்ரயமும் அர்த்த₂த்ரய ப்ரகாஶகமாயிருக்கும்

இதில், ப்ரத₂மபத₃ம் - ஸ்வரூபயாதா₂த்ம்ய ப்ரதிபாத₃ந பரமாயிருக்கும். மத்₄யமபத₃ம் - உபாயயாதா₂த்ம்ய ப்ரதிபாத₃ந பரமாயிருக்கும். உத்தரபத₃ம் உபேயயாதா₂த்ம்ய ப்ரதிபாத₃நபரமாயிருக்கும்.

ப்ரத₂மபத₃ம்-ஶேஷத்வ ப்ரகாஶகமாயிருக்கும். மத்₄யம பத₃ம் - பாரதந்த்ர்ய ப்ரகாஶகமாயிருக்கும். உத்தரபத₃ம் - கைங்கர்ய ப்ரகாஶகமாயிருக்கும்.

ஶேஷத்வாநுஸந்தா₄நத்தாலே — அந்யஶேஷத்வநிவ்ருத்தி பிறக்கும். பாரதந்த்ர்யாநுஸந்தா₄நத்தாலே - ஸ்வ ஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி பிறக்கும். கைங்கர்யாநுஸந்தா₄நத்தாலே - அப்ராப்தவிஷய கிஞ்சித்காரநிவ்ருத்தி பிறக்கும். ஈஶ்வரஶேஷித்வ ஜ்ஞாநத்தாலே - தே₃வதாந்தர பரத்வ ப்ரதிபத்தி நிவ்ருத்தி பிறக்கும். ஸ்வபாரதந்த்ர்யாநுஸந்தா₄நத்தாலே - ஸாத்₄யஸாத₄ந ஸம்ப₃ந்த₄நிவ்ருத்தி பிறக்கும். ஈஶ்வரபோ₄க்₃யதாநுஸந்தா₄நத்தாலே - ப்ராப்யாந்தர ஸம்ஸர்க்க₃ நிவ்ருத்தி பிறக்கும்.

அதில், ப்ரத₂மபத₃மான ப்ரணவம்-மூன்று அக்ஷரமாய், மூன்று பத₃மாய், மூன்று அர்த்த₂ப்ரகாஶகமாய், ஏகாக்ஷரமாய், ஏகபத₃மாய், ஏகார்த்த₂ ப்ரகாஶகமுமாயிருக்கும்.

அதில், ப்ரத₂மபத₃மான அகாரம் - ப₄க₃வத்₃வாசகமாயிருக்கும். மத்₄யமபத₃மான உகாரம்-அவதா₄ரணவாசியாயிருக்கும். த்ருதீயபத₃மான மகாரம்-ஆத்மவாசியாயிருக்கும்.

a பெரியதிரு 8-10-3. b திருச்சந்த 77.

ப்ரணவந்தான் - ஆத்மஸ்வரூபத்தையும் பரஸ்வரூபத்தையும் ப்ரகாஶிப்பியாநிற்கச்செய்தே, ஆத்மஸ்வரூபத்திலே தத்பரமாயிருக்கும். "**ராஜபுருஷ:** என்கிறவிடத்தில், ராஜாவும் ப்ரஸ்துதனாய், புருஷனும் ப்ரஸ்துதனாயிருக்கச் செய்தே, ஶப்₃த₃த்தாலே புருஷன் ப்ரதா₄நனாய், அர்த்த₂த: ராஜா ப்ரதா₄நனாயிருக்கும்; அப்படியே இவ்விடத்திலும் ஶப்₃த₃த்தாலே சேதனன் ப்ரதா₄நனாய், அர்த்த₂த்தாலே ஈஶ்வரன் ப்ரதா₄நனாயிருக்கும்" என்று ஆழ்வான் அருளிச் செய்யும். ஆகையாலே, ஶாப்₃த₃மான சேதநப்ராதா₄ந்யத்தைப்பற்ற, 1. **"ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத"** என்று ஆத்ம வாசகமாகச் சொல்லும்; ஆர்த்த₂மான ஈஶ்வர ப்ராதா₄ந்யத்தைப்பற்ற, 2. **"ஓங்காரோ ப₄க₃வாந் விஷ்ணு:"** என்றும், 3. **"ப்ரணவஸ்ஸர்வவேதே₃ஷு"** என்றும் இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே ப₄க₃வத்₃வாசகமுமாயிருக்கும்.

## அகாரார்த்த₂ாரம்ப₄ம்

அதில் ப்ரத₂மாக்ஷரமான அகாரம் - 4. **"அவ-ரக்ஷணே"** என்கிற தா₄துவிலே பத₃மாய் நிஷ்பந்நமாகையாலே, ரக்ஷகனான ஈஶ்வரனுக்கு வாசகமாகக் கடவது. தா₄த்வர்த்த₂ம் ரக்ஷணமாகையாலே, ரக்ஷணமாகிற த₄ர்மம் ஸாஶ்ரயமுமாய் ஸவிஷயமுமாயல்ல திராமையாலே, அதுக்கு ஆஶ்ரயதயா ப₄க₃வத்ஸ்வரூபந்தானே வந்து புகுந்தது. விஷயதயா ப₃த்₃த₄முக்த நித்யரூபமான த்ரிவிதா₄த்மவர்க்க₃மும் புகுரும். 5. **"ந ஹி பாலநஸாமர்த்₂யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்"** என்கிறபடியே - பாலநஸாமர்த்₂யம் ஸர்வேஶ்வரைக நிஷ்ட₂மாயிருக்கையாலே, ப₄க₃வத்ஸ்வரூபம் ப்ரஸ்துதமாய்த்து. 'இவன் இன்னார்க்கு ரக்ஷகன்' என்று வ்யவச்சே₂தி₃யாமையாலே, த்ரிவிதா₄த்ம வர்க்க₃மும் ப்ரஸ்துதமாம். 'இன்ன தே₃ஶத்திலே ரக்ஷகன்' என்று சொல்லாமையாலே, ஸர்வதே₃ஶரக்ஷகத்வம் சொல்லிற்று. 'ஒரு கால விஶேஷத்திலே ரக்ஷகன்' என்று சொல்லாமையாலே, ஸர்வகால ரக்ஷகத்வம் சொல்லிற்று. 'இன்ன

ப்ரகாரத்திலே ரக்ஷகன்' என்று சொல்லாமையாலே, ஸர்வ ப்ரகார ரக்ஷகத்வம் சொல்லிற்று. a "ஞாலத்தூடே நடந்தும் நின்றும்" இத்யாதி₃. ஜ்ஞாந ஶக்த்யாதி₃களில்லாத போது ரக்ஷகத்வம் அநுபபந்நமாகையாலே, ஜ்ஞாநஶக்த்யாதி₃ கு₃ணங்கள் ப்ரஸ்துதமாம். ஜ்ஞாநஶக்த்யாதி₃களுண்டானாலும், ப₃ந்த₄விஶேஷமும் காருண்யாதி₃களுமில்லாதபோது 'பட்டதுபடுகிறான்' என்றிருக்கலாமிறே; அது செய்யாதே, ரக்ஷிக்கும்போது இவை அபேக்ஷிதமாகையாலே, ஸ்வாமித்வாதி₃கள் ப்ரஸ்துதங்களாம். ரக்ஷிக்கும்போது கண்காண வந்து ரக்ஷிக்கவேண்டுகையாலே, தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹம் ப்ரஸ்துதமாம். ரக்ஷிக்கும் போது தி₃வ்யாயுத₄ங்கள் அபேக்ஷிதங்களாகையாலே, ரக்ஷணத்துக்கு ஏகாந்தமான பரிகரமும் அநுஸந்தே₄யமாகக் கடவது.

ரக்ஷணமாகிறதுதான்:— இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரரூபமாயிருக்கையாலே, இஷ்டமும் - தத்ப்ராப்தியும், அநிஷ்டமும்-தந்நிவ்ருத்தியும் அநுஸந்தே₄யம். இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரந்தான் அதி₄காராநுரூபமாகையாலே, ப₃த்₃த₄ர்க்கும், முமுக்ஷுக்களுக்கும், முக்தர்க்கும், நித்யர்க்கும், இஷ்டாநிஷ்டங்களான - வஸ்த்ராந்ந பாநாதி₃ போ₄க₃ங்களும், அப்ராக்ருத தி₃வ்யதே₃ஶ ப்ராப்தியும், உத்தரோத்தராநுப₄வமும், ப₄க₃வத₃நுப₄வஜநித ப்ரீதி காரித கைங்கர்யமும், ஶத்ருபீடா₃தி₃களும், ப்ரதிப₃ந்த₄க கர்மமும், அநுப₄வவிச்சே₂த₃ ஶங்கையும் அநுஸந்தே₄யம்.

த₄ர்மிஸ்வரூபம் புகுந்த விடத்திலே ஸ்வரூப நிரூபக த₄ர்மங்களும் ப்ரஸ்துதங்களாக ப்ராப்த மாகையாலே, **1"ஶ்ரீநிவாஸே"** என்றும், **2"ஶ்ரிய:பதி:"** என்றும், **3"நித்யஶ்ரீ:"** என்றும் இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே, ஜ்ஞாநாநந்த₃ங்களோபாதி ப₄க₃வத்ஸ்வரூபத்துக்கு அந்தரங்க₃

a திருவாய் 6.9-3.

நிரூபகமாயிருக்கிற பிராட்டி ஸ்வரூபமும் நிரூபகதயா ப்ரஸ்துதமாக ப்ராப்தமாகையாலே, லக்ஷ்மீஸம்ப₃ந்த₄மும் அநுஸந்தே₄யம்.

ஆக, இப்படி யாவை சில அர்த்த₂ விஶேஷங்கள் ஶாப்₃த₃மாகவும் ஆர்த்த₂மாகவும் இதினுடைய விவரண மான நாராயண பத₃த்திலே அநுஸந்தே₄யங்களாகிறன, அவையித்தனையும் தத்ஸங்க்₃ரஹமான இவ்வக்ஷரத்திலேயும் அநுஸந்தே₄யமாகக் கடவது.

ஆக, ப்ரத₂மாக்ஷரத்தாலே ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ் வரனுடைய ஸ்வரூபம் சொல்லப்பட்டது.

### லுப்தசதுர்த்த்₂யர்த்த₂ாரம்ப₄ம்

இதின்மேல் ஏறிக்கழிந்த விப₄க்த்யம்ஶம்—தத்ப்ரதி ஸம்ப₃ந்தி₄யான சேதனஶேஷத்வத்தை ப்ரதிபாதி₃க் கிறது. **1. "தா₃ஸபூ₄தாஸ் ஸ்வதஸ்ஸர்வே"** என்றும், **2. "யஸ்யாஸ்மி"** என்றும், **3. "பரவாநஸ்மி"** என்றும், **4. "தா₃ஸோऽஹம்"** என்றும் இத்யாதி₃ ப்ரமாணங்கள் சொல்லுகிறபடியே, ஸகலாத்மாக்களுக்கும் ஶேஷத்வமிறே ஸ்வரூபம்; ஸ்வாதந்த்ர்யம் ஔபாதி₄கமாய் த்யாஜ்ய மாயிறே இருப்பது.

**5. "ஸர்வம் பரவஶம் து₃:க₂ம்"** இத்யாதி₃களிற் படியே - லோகத்தில் ஶேஷத்வம் து₃:க₂ரூபமாய் ஸ்வா தந்த்ர்யம் ஸுக₂ரூபமாயன்றோ கண்டுபோருகிறது, லோக த்₃ருஷ்டிக்கு விருத்₃த₄மாக ஸுக₂ரூபமான ஸ்வாதந்த்ர் யத்தை த்யாஜ்யம் என்றும், து₃:க₂ரூபமான ஶேஷத் வத்தை உபாதே₃யமென்றும் சொல்லுகை அநுபபந்ந மன்றோ என்னவொண்ணாது. லோகத்தில் ஸ்வாதந்த்ர்ய மாகில் ஸுக₂ரூபமாய், பாரதந்த்ர்யமாகில் து₃:க₂ரூபமா யிருக்குமென்று ஒரு நியமமில்லாமையாலே. லோகத்தில் ஸ்வதந்த்ரனானவன் தனக்கே ஒரு வ்யக்தி விஶேஷத்-

திலே பாரதந்த்ர்யந்தானே போ₄க₃ரூபமாகக் காணாநின்றோமிறே. ஆகையாலே, ஶேஷத்வந்தானே ஸுக₂ரூபமாகில் உபாதே₃யமாகக்கடவது. ஸ்வாதந்த்ர்யந்தானே து₃:க்க₂ரூபமாகில் த்யாஜ்யமாகக் கடவது. 1. **"ஸேவா ஶ்வவ்ருத்திர் வ்யாக்₂யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்"** என்று நிஷேதி₄த்தது-நிஷித்₃த₄ஸேவையையும், அப்ராப்த விஷயத்தில் ஸேவையையும். ப்ராப்த விஷயத்தில் ஸேவையை, **2. "ஸா கிமர்த்த₂ம் ந ஸேவ்யதே"** என்றும், உ "சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்து" என்றும் உபாதே₃யமாகச் சொல்லாநின்றார்களிறே. ஈஶ்வரஶேஷத்வம் விஹிதமாய், **3. "தா₃ஸ்ய மஹாரஸஜ்ஞ:"** என்றும், **4. "தா₃ஸ்யஸௌக₂ஸங்கி₃நாம்"** என்றும் இத்யாதி₃களில் சொல்லுகிறபடியே போ₄க₃ரூபமாயிருக்கையாலே உபாதே₃யமாகக்கடவது.

### உகாரார்த்த₂ப்ரம்ப₄ம்

மத்₄யமாக்ஷரமான உகாரம், ஶேஷத்வ விரோதி₄யான அந்யஶேஷத்வத்தினுடைய நிவ்ருத்தியை ப்ரதிபாதி₃க்கிறது. சதுர்த்தீ₂விப₄க்தியாலே - ஈஶ்வரஶேஷத்வம் ப்ரதிபாதி₃தமாகச்செய்தே அந்யஶேஷத்வம் ப்ரஸ்துதமாமோவென்னில்; லோகத்₃ருஷ்ட்யா ஒரு அந்யஶேஷத்வ ஶங்கையுண்டு அநுவர்த்திப்பது. லோகத்திலே ஒருவனுக்கு ஶேஷமான க்₃ருஹ க்ஷேத்ர புத்ர தா₃ஸ தா₃ஸிகள் வேறேயும் சிலர்க்கு ஶேஷமாகக் காணாநின்றோம், அப்படிப்பட்ட அந்யஶேஷத்வம் இந்த ஸ்த₂லத்திலுமுண்டோ? என்றொரு ஶங்கை உதி₃க்குமிறே; ஆகையாலே, தாத்₃ருஶமான அந்யஶேஷத்வம் இங்கில்லை என்னுமிடத்தை ப்ரதிபாதி₃க்கிறது உகாரம். **5. "ததே₃வ பூ₄தம் தது₃ப₄வ்யமா இத₃ம்"** என்றும், **6. "ததே₃வாக்₃நிஸ் தத்₃வாயுஸ் தத்ஸூர்யஸ் தது₃ சந்த்₃ரமா:"** என்றும் இத்யாதி₃களிலே, ஏவகார ஸ்தா₂நத்திலே உகாரத்தை ப்ரயோகி₃க்கக் காண்கையாலே, இவ்வுகாரம்

உ திருப்பாவை 29.

ஸ்த₄ாநப்ரமாணத்தாலே அவத₄ாரணார்த்த₂ வாசகமாகக் கடவது. **1. "உகாரஶ்சைவகாரார்த்த₂:"** என்று அவத₄ாரணவாசகமென்னுமிடத்தை அருளிச்செய்தாரிறே ப₄ட்டர். க்₃ருஹ க்ஷேத்ர புத்ர களத்ராதி₃களினுடைய ஶேஷத்வம் போலே ஔபாதி₄கமாய், அநேக ஸாத₄ாரணமாய், அநித்யமாய், ப்ருத₂க்ஸித்₃த₄மாயிருக்கையன்றிக்கே, நிருபாதி₄கமாய், அநந்ய ஸாத₄ாரணமாய், நித்யமாய், அப்ருத₂க்ஸித்₃த₄மான ப₄க₃வச்சே₂ஷத்வத்தை ப்ரதிபாதி₃க்கிறது.

## மகாரார்த்த₂ாரம்ப₄ம்

ஏவம்வித₄ஶேஷத்வம் சித₃சித்ஸாத₄ாரணமாயிருப்பது. அதில், ஶேஷத்வ விஷயஜ்ஞாநம், தத்கார்யமாயிருக்கிற தத₃நுகு₃ண ஸாத₄நஸ்வீகாரம், தத்கார்யாநுகு₃ண ஸாத்₄யாநுப₄வம், தத₃நுப₄வவிரோதி₄ ப்ரதிப₃ந்த₄க நிப₃ர்ஹணம் தொடக்கமான ஶேஷத்வ கார்யங்கள் பிறக்கைக்கு யோக்₃யதையுண்டாயிருக்கிற ஜீவாத்மஸ்வரூபத்தை ப்ரத₄ாநதயா ப்ரதிபாதி₃க்கிற த்ருதீயாக்ஷரமான மகாரம்—**2. "மந-ஜ்ஞாநே"** என்கிற த₄ாதுவிலே பத₃மாய் நிஷ்பந்நமாகையாலே, ஜ்ஞாதாவான ப்ரத்யகா₃த்மாவினுடைய ஸ்வரூபஞ் சொல்லுகிறது. ஜ்ஞாநவாசகஶப்₃த₃ந்தானே ஜ்ஞாநைக நிரூபணீயனான ஆத்மாவை ப்ரதிபாதி₃க்கும் என்றும் சொல்லிற்றிறே, **3. "தத்₃கு₃ணஸாரத்வாத் து தத்₃வ்யபதே₃ஶ: ப்ராஜ்ஞவத்"** என்கிற ஸூத்ரத்திலே. அங்ஙனன்றியே, ககாராதி₃ ப₄காராந்தமான இருபத்துநாலு அக்ஷரமும், இருபத்துநாலு தத்வத்துக்கும் வாசகமாகச் சொல்லி, இருபத்தஞ்சாமக்ஷரமான மகாரத்தைப் பஞ்சவிம்ஶகனான ஆத்மாவுக்கு வாசகமாகச் சொல்லுகையாலே, மகாரம் ஆத்மவாசகமாகவுமாம். இம்மகாரம் ஜீவஸமஷ்டி வாசகமாகையாலே, கீழ்ச்சொன்ன அநந்யார்ஹ ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயமான ப₃த்₃த₄முக்த நித்யரூபமான த்ரிவித₄ாத்மவர்க₃மும் அநுஸந்தே₄யமாகக் கடவது. ஆத்மஸ்வரூபமும் ஜ்ஞாநாநந்த₃ லக்ஷணமா

யிருக்கும் என்கையாலே, ஜட₃மாய் து₃:க்க₂ரூபமாயிருக்கிற ப்ரக்ருதிதத்வத்திற்காட்டில் வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஜ்ஞாநாநந்த₃ங்களுக்கு முன்னே ப₄க₃வச்சே₂ஷத்வத்தை நிரூபகமாகச் சொல்லிற்றாகையாலே, அவற்றிற்காட்டில் இது அந்தரங்க₃ நிரூபகமாகக்கடவது. ஒளிக்கு ஆஶ்ரயமென்று மாணிக்கத்தை விரும்புமாபோலேயும், மணத்துக்கு ஆஶ்ரயமென்று புஷ்பத்தை விரும்புமாபோலேயும், ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயம் என்றிறே ஆத்மஸ்வரூபத்தை விரும்புகிறது. கீழ்ச்சொன்ன ஶேஷத்வம் உப₄யஸாத₄ாரணமாயிருக்கையாலே சேதநப்ரகாரமான அசித்தத்வமும் ப₄க₃வச்சே₂ஷத்வாஶ்ரயதயா இவ்விடத்திலே அநுஸந்தே₄யம்.

ஆக ப்ரணவத்தாலே, ஶேஷத்வ ப்ரதிஸம்ப₃ந்தி₄தயா ப்ரஸ்துதமான ஈஶ்வரனை ரக்ஷகத்வத₄ர்மத்தையிட்டு நிரூபித்து, அப்படிப்பட்ட ஈஶ்வரனுக்கு ஶேஷபூ₄தனான ஆத்மாவினுடைய ஜ்ஞாநாநந்த₃லக்ஷணத்வத்தைச்சொல்லி, 'ஸர்வஶேஷியான ஸர்வேஶ்வரனுக்கு அநந்யார்ஹஶேஷபூ₄தன் ஆத்மா' என்னுமிடத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

**நம:பதா₃ர்த்தா₂ரம்ப₄ம்**

இப்படி ஸ்வாபா₄விகமான ப₄க₃வச்சே₂ஷத்வத்தை அநாதி₃காலம் அபி₄பூ₄தமாம்படி பண்ணின விரோதி₄யினுடைய ஸ்வரூபத்தை உபாதா₃னம் பண்ணிக்கொண்டு தந்நிவ்ருத்தியை ப்ரதிபாதி₃க்கிறது - நமஸ்ஸு.

இதுதான் சதுர்த்த்₂யந்தமான அகாரத்திற்சொல்லுகிற ஈஶ்வர ஶேஷத்வத்துக்கு விரோதி₄யான அந்யஶேஷத்வத்தை நிவர்த்திப்பிக்கிற உகாரத்திலே அந்யதமதயா ப்ரஸ்துதமான ஸ்வஸ்வரூபத்தில் ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியை விவரிக்கிறது. இங்கே விஶேஷித்துச் சொல்லுகையாலே இத்தையொழிந்த அந்யஶேஷத்வ நிவ்ருத்தியைச் சொல்லுகிறதாகவுமாம்.

இதுதான் - 'ந' என்றும், 'ம:' என்றும் இரண்டு பத₃மாயிருக்கிறது. இதில் ப்ரத₂மப₄ாவியான நஞ்ஞாலே a "வீடுமின் முற்றவும்" என்னுமாபோலே த்யாஜ்யஸ்வரூப நிரூபணம் பண்ணுமதுக்கு முன்னே த்யாக₃த்தை ப்ரதிபாதி₃க்கிறது. ஆத்மஸ்வரூபம் ப₄க₃வதந₃ந்யார்ஹ ஶேஷத்வைக நிருபணீயமாயிருக்குமென்னுமிடந்தோற்ற - ப்ரணவத்திலே ஆத்மஸ்வரூபத்தை ப்ரதிபாதி₃ப்பதற்கு முன்பே ஶேஷத்வத்தை ப்ரதிபாதி₃த்தாற்போலே, இவ்விடத்திலும் விரோதி₄ஸ்வரூபம் நிஷித்₃த₄தைகநிருபணீயமாயிருக்குமென்னுமிடத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக - நிஷித்₃த₄ ஸ்வரூபப்ரதிபாத₃நத்துக்கு முன்பே நிஷேத₄ப்ரதிபாத₃நம் பண்ணுகிறது. 'ம:' என்கிற இது - ஷஷ்டி₂யாகையாலே எனக்கு என்றபடி. எனக்கு என்கிறது - தன்னையாதல், தன்னுடைமையையாதல். அநுஷங்க₃த்தாலே கீழ்ச்சொன்ன தன்னை எனக்கு என்கையாகிறது - நான் ஸ்வதந்த்ரன் என்கை. அத்₄யாஹாரத்தாலே தன்னுடைமையை எனக்கு என்கையாகிறது-நான் ஸ்வாமி என்கை. ஸ்வாதந்த்ர்யமாவது - அஶேஷத்வம். ஸ்வாமித்வமாவது - ஸ்வாந்யவிஷயமாயிருக்கும் தன்னை எனக்கு என்கிறது; ஸ்வஶேஷத்வமாகவுமாம். 'ந' என்கிற இது ப்ரதிஷேத₄த்₃யோதகமாகையாலே அத்தை நிஷேதி₄க்கிறது. ஈஶ்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துப₄த்தோபாதி ஸ்ப்ருஹாவிஷயமான ஆத்மஸ்வரூபம் அநாதி₃காலம் ஸம்ஸரித்துப்போந்தது-**1. "அஹங்க்ருதிர்யா பூ₄தாநாம்"** என்றும், **2. "அநாத்மந்யாத்மபு₃த்₃தி₄ர்யா"** என்றும் சொல்லுகிறபடியே அஹங்காரத்தாலும் மமகாரத்தாலுமாக அந்த ஸம்ஸார வ்ருத்தி பிறந்து; **3. "அஹமந்நம்"** என்கிறபடியே ஈஶ்வரனுக்கு போ₄க்₃யமாம்போது-**4. "அச்யுதாஹம் தவாஸ்மீதி"** என்றும், **5. "ந மமேதி ச ஶாஶ்வதம்"** என்றும் சொல்லுகிறபடியே அவையிரண்டும் நிவ்ருத்தமாகவேணும். b "நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்திறை சேர்மின்" என்கிறபடியே

a திருவாய் 1-2-1. b திருவாய் 1-2-3.

அஹங்கார மமகார ராஹித்யமில்லாதபோது ஈஶ்வர ஸம்ப₃ந்த₄ யோக்₃யதையில்லை. ஸ்வஸ்மிந் ஸ்வத்வாநு ஸந்த₄ாநமில்லாதபோது - ஸ்வாமிஸந்நிதி₄யில் நிற்கைக்கு அநர்ஹனாயிறேயிருப்பது. அஹங்காரமமகாரங்களிரண்டும் அந்யோந்யம் அவிநாபூ₄தமாகையாலே அஹங்காரம் வந்த விடத்தே மமகாரம் வந்து, மமகாரம் வந்தவிடத்தே அஹங் காரம் வரும்படியாயிருக்கையாலே அஹங்காரமமகாரங்க ளிரண்டும் ப்ரஸ்துதமாய், இரண்டினுடைய நிவ்ருத்தியும் இவ்விடத்திலே அநுஸந்தே₄யம். a "யானேயென்றனதே என்றிருந்தேன்" என்று அஹங்காரமமகாரங்கள் இரண் டையும் அநுஸந்தி₄த்தவர்தாமே, a "யானே நீயென்னுடை மையும் நீயே" என்று, அநந்தரத்திலே அவற்றினுடைய நிவ்ருத்தியையும் அநுஸந்தி₄த்தாரிறே. 1. **"யல்யைதே தஸ்ய தத்₂த₄நம்"** என்கிறபடியே அஹங்காரம்போனவாறே மமகாரம்போமிறே. அஹங்காரமமகார நிவ்ருத்திமாத்ரமே யன்றிக்கே, 2. **"ப₄க₃வத ஏவாஹமஸ்மி"** என்றும், 3. **"தேஷாமபி நமோ நம:"** என்றும், 4. **"த்வதீ₃யத₃ர்ஶநே ப்யேவம் ப₄வேத்"** என்றும், b "உற்றதுமுன்னடியார்க் கடிமை" என்றும், c "அடியார்க்காட்படுத்தாய்" என்றும், d "அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்" என்றும் இத்யாதி₃யிற்படியே ப₄க₃வத்பாரதந்த்ர்யமும், தத்காஷ்டா₂ பூ₄மியான பா₄க₃வதபாரதந்த்ர்யமும் அநுஸந்தே₄யமாகக் கடவது.

ததீ₃யஶேஷத்வாநந்யார்ஹஶேஷத்வங்கள் இரண்டி னுடையவும் பரஸ்பர விரோத₄நிப₃ந்த₄நமாக ஏகத்ர ஸமாவேஶாக₄டநத்தாலே அந்யதரபரித்யாக₃ம் ப்ர ஸங்கி₃க்கும் என்று சொல்லவொண்ணாது; ததீ₃யஶேஷத்வ விஷயாந்யத்வாபா₄வ ப்ரயுக்தமான பரஸ்பர விரோத₄ ராஹித்யமடியாக வருகிற ஏகத்ரஸமாவேஶோபபத்தி

a திருவாய் 2-9-9. b பெரியதிரு 8-10-3.
c திருப்பள்ளி 10. d அமலனாதி 1.

யாலே உபாயஸ்வீகாரம் அவிருத்தமாகையாலே. இப்படி த்ர்மத்வயத்தினுடையவும் விரோதஹேதுவான அந்ய ஶப்தார்த்த ததீயஶப்தார்த்தத்தை ப்ரதிக்ஷேபித்துக் கொண்டு உபயத்துக்கும் ஏகத்ரஸமாவேஶத்தை அங்கீகரித்து, அவ்வழியாலே அந்யதரபரித்யாக ப்ரஸங்கத்தைப் பரிஹரிக்கும்போது பகவச்சேஷத்வாபாவத்தை யொழிய அந்யஶப்தார்த்தவ்யக்திக்கு அந்யத்வம் கூடியாமையாலே த்ருதீயாக்ஷரவாச்யரான ஜீவர்களிலே சிலருக்கு பகவச்சேஷத்வமின்றிக்கேயொழியாதோ ? என்னில்:— இங்கு விவக்ஷிதமான ததீயத்வமாகிறது பாகவத ஶேஷத்வ பர்யந்தமான மிதுனஶேஷத்வஜ்ஞாநாவஸ்தையாகையாலும், அந்யத்வமாகிறது - ஈத்ருஶஜ்ஞாநவிஶேஷ ராஹித்யமாகையாலும், (சிலருக்கு ஶேஷத்வமாய்) சிலருக்கு ஶேஷத்வமின்றிக்கேயொழியாது. இத்தால், 'பகவச்சேஷத்வஜ்ஞாநாவஸ்தா மாத்ரம் ததீய(ஶேஷ)த்வம்' என்று ஶங்கித்துப் பண்ணும் அதிப்ரஸங்கமும் பரிஹ்ருதம்.

இந்த நமஸ்ஸுதான் - ப்ரணவத்துக்கும் நாராயண பதத்துக்கும் நடுவே கிடக்கையாலே இரண்டு பதத்துக்கும் அபேக்ஷிதமான விரோதி நிவ்ருத்தியைச் சொல்லக்கடவது. ஆகையாலே ஸ்வரூபவிரோதியும், ஸாதநவிரோதியும், ப்ராப்யவிரோதியுமாகிற விரோதித்ரயத்தினுடையவும் நிவ்ருத்தியை இப்பதத்திலே அநுஸந்திக்கக்கடவது. "பூர்வோத்தர பதத்வயத்திலும், ஸ்வரூபமும் ப்ராப்யமும் ப்ரதிபாதிதமாகையாலே தத்விரோதிநிவ்ருத்தி இப்பதத்திலே அநுஸந்தேயமாக ப்ராப்தம்; ஸாதநஸ்வரூபம் அப்ரஸ்துதமாயிருக்க, தத்விரோதிநிவ்ருத்தி இவ்விடத்திலே அநுஸந்தேயமாம்படி என்?" என்னில் - கீழில்பதத்தில் ஸாதநஸ்வரூபம் ப்ரஸ்துதமாகையாலே தத்விரோதி நிவ்ருத்தியை அநுஸந்திக்கக்குறையில்லை. மேலிற்பதத்திலே ஶாப்தமாகச்சொல்லும். இப்பதத்திலே நிஷேத்

யதயா ப்ரஸ்துதமான ஸ்வாதந்த்ர்யம் ப₄க₃வதே₃க ஶாத₃ந ஸைதகவேஷமான ஸ்வஸ்வரூபத்துக்கு விரோதி₄யாய், ஸ்வ ரக்ஷணத்தில் ஸ்வாந்வயத்துக்கு ஹேதுபூ₄தமாயிருப்ப தொன்றிறே. தாத்₄ருஶமான ஸ்வாதந்த்ர்யம் நிவ்ருத்த மாகையாகிறது—'ஸ்வரக்ஷணத்தில் ஸ்வாந்வயம் ஸ்வரூப ஹாநி' என்றறிகையிறே. ஸ்வஸ்வரூபம் - ஈஶ்வரனைக் குறித்து அத்யந்த பரதந்த்ரமாயிருக்கையாலே, ஸ்வரக்ஷ ணத்தில் தனக்கு அந்வயமுண்டானால் ஈஶ்வரனைக்குறித்துத் தனக்கு அத்யந்த பாரதந்த்ர்யமின்றிக்கேயொழியுமாகை யாலே, ஈஶ்வரைகபரதந்த்ரதாவிரோதி₄யான ஸ்வரக்ஷணத் தில் ஸ்வாந்வயம் நிவ்ருத்தமானால், பின்னை அந்வயமுள்ளது அகாரத்திலே ஸ்வரக்ஷகதயா ப்ரஸ்துதமான ஈஶ்வரனுக்கே யாகையாலே அவனுடைய உபாயபா₄வம் இவ்வழியாலே இதிலே ப்ரஸ்துதமாம்; ஸ்வரக்ஷணத்திலே தான் அதி₄க ரித்தாலிறே ஈஶ்வரன் கைவாங்கியிருப்பது. தன்னுடைய ரக்ஷணத்திலே தான் கைவாங்கினால் க₃ஜேந்த்₃ரரக்ஷணம் பண்ணினாற்போலே த்வரித்துக்கொண்டு இவனுடைய ரக்ஷணத்திலே அதி₄கரிப்பான் ஈஶ்வரனிறே. இப்படி ஆர்த்த₂மாக ஈஶ்வரனுடைய உபாயபா₄வம் ஸித்₃தி₄க்கை யன்றிக்கே, 1. **"நமஶ்சக்ருர் ஜநார்த₃நம்"** என்கிறபடியே ஸ்த₂ாநப்ரமாணத்தாலே நமஶ்ஶப்₃த₃த்துக்கு ஶரணஶப்₃த₃ பர்யாயத்வமுண்டாகையாலே ஶாப்₃த₃மாக ஈஶ்வரனுடைய உபாயபா₄வம் ஸித்₃தி₄க்கும்.

இப்படி நமஶ்ஶப்₃த₃ம் உபாயஸ்வரூபத்தை ப்ரதி பாதி₃க்கையாலே தத்₃விரோதி₄நிவ்ருத்தியும் இப்பத₃த்திலே அநுஸந்தே₄யம். ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய ஹேதுபூ₄தமான ஸ்வஸ்வாதந்த்ர்யம் நிவ்ருத்தமாகை ஸாத₄நவிரோதி₄ நிவ்ருத்தி பிறக்கையாகிறது.

அந்யார்ஹ ஶேஷத்வத்துக்குப் ப₂லம் - ஶேஷிவிஷய கிஞ்சித்காரமாகையாலே, ஶேஷத்வாநுஸந்தா₄நத்துக்கு அநந்தரபா₄வியாயிருப்பது ஶேஷவ்ருத்திப்ரார்த்த₂னையன்றோ;

ஆனால் ஶேஷத்வ வாசகமான பத₃த்துக்கநந்தரம் ஶேஷவ்ருத்தி ப்ரார்த்த₂நாப்ரதிபாத₃கமாயிருக்கிற உத்தரபத₃ம் அநுஸந்தே₄யமாக ப்ராப்தமாயிருக்க, அதுக்கு முன்பே நமஸ்ஸு அநுஸந்தே₄யமாவானென்? என்னில்; அப்பத₃த்தில் ப்ரதிபாதி₃தமான கைங்கர்யகரணம் விரோதி₄நிவ்ருத்தி பூர்வகமாயிருக்கையாலும், ஶேஷவ்ருத்தி ப்ரார்த்த₂நைக்கு ஶேஷத்வஜ்ஞாநபௌஷ்கல்யம் பிறக்கவேண்டுமாகையாலே உபேயஸித்₃தி₄க்கு உபாயாநந்தரபா₄வித்வமுண்டாகையாலும், விரோதி₄நிவ்ருத்த்யாதி₃களுக்கு ப்ரதிபாத₃கமான இந்தப் பத₃ம் நாராயணபத₃த்துக்கு முன்னே அநுஸந்தே₄யம். உபேயஸித்₃தி₄க்கு உபாயாநந்தர பா₄வித்வமுண்டாகையாலேயிறே உத்தரவாக்யத்துக்கு முன்னே பூர்வவாக்யம் அநுஸந்தே₄யமாகிறது. ஈஶ்வரனுடைய உபாயபா₄வாநுஸந்தா₄நத்துக்கு - ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வாநுஸந்தா₄நம் ஸ்வஶேஷத்வாநுஸந்தா₄நம் தொடக்கமானவை அபேக்ஷிதங்களாகையாலே, நமஸ்ஸுக்கு முன்னே தத்ப்ரதிபாத₃கமான ப்ரணவம் அநுஸந்தே₄யம். இப்படியாகாதபோது, நமஸ்ஸு உகாரவிவரணமன்றிக்கேயொழியுமிறே.

## நாராயணபதா₃ர்த்தா₂ரம்ப₄ம்

ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூப ஶோத₄நமும், உபாயஶோத₄நமும் பண்ணப்பட்டது; இனிமேல், சதுர்த்₂யந்தமான நாராயணபத₃ம் உபேயஶோத₄நம் பண்ணுகிறது. கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄தயா உதி₃க்கும் ப₄க₃வத் ஸ்வரூபமும் உப₄யவிபூ₄தி விஶிஷ்டமாயிருக்கையாலே, உப₄யவிபூ₄தியோக₃த்தையும் சொல்லுகிறது. "**நாராயண**" பத₃ம் "**நர: நார: நாரா:**" என்று நித்யபதா₃ர்த்த₂த்தையும், அதினுடைய ஸமூஹத்தையும், ஸமூஹபா₃ஹுள்யத்தை யும் சொல்லுகிறது. ப்ரக்ருதி புருஷ காலங்களோடு, பரமபத₃த்தோடு, முக்த நித்யவர்க்க₃த்தோடு, ச₂த்ர சாமர

ப்ரமுக₂மான பரிச்ச₂த₃ங்களோடு, ஆயுதா₄ப₄ரணங்களோடு, பெரியபிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமாரோடு, தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தோடு, ஜ்ஞாநஶக்த்யாதி₃கு₃ணங்களோடு வாசியற ஸர்வத்தையும் நாரஶப்₃த₃ம் ப்ரதிபாதி₃க்கிறது. a "எண்பெருக்கந்நலத்தொண்பொருள்" என்றும், b "நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்" என்றும் அருளிச்செய்கையாலே, சேதநாசேதநங்களிரண்டும் நாரஶப்₃த₃வாச்யமாகக்கடவது. a "ஈறிலவண்புகழ் நாரணன்" என்றும், c "வாழ்புகழ்நாரணன்" என்றும் அருளிச்செய்கையாலே, கு₃ணங்களும் நாரஶப்₃த₃வாச்யமாகக் கடவது. d "செல்வநாரணன்" என்றும், e "திருநாரணன்" என்றும் சொல்லுகையாலே பிராட்டி ஸ்வரூபமும் நாரஶப்₃த₃வாச்யமாகக் கடவது. f "காராயினகாளநன்மேனியினன் நாராயணன்" என்கையாலே தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹமும், ஆயுதா₄ப₄ரணங்களும், காந்திஸௌகுமார்யாதி₃ கு₃ணங்களும் நாரஶப்₃த₃வாச்யமென்னுமிடம் ஸூசிதம்.

அயநஶப்₃த₃ம், 'இவற்றுக்கு இருப்பிடமாயிருக்கும்' என்று ஈஶ்வரனை ப்ரதிபாதி₃க்கிறது. 1. **"நாராணுமயநம்"** என்கிற தத்புருஷஸமாஸத்தில் நித்ய பதா₃ர்த்த₂ங்களெல்லாவற்றுக்கும் ஈஶ்வரன் இருப்பிடமென்று பொருள்.

2. **"நாரா: அயநம் யஸ்ய"** என்கிற ப₃ஹுவ்ரீஹிஸமாஸத்தில் 'நாரங்களை ஈஶ்வரன் இருப்பிடமாகவுடையன்' என்னும் அர்த்த₂த்தைச் சொல்லுகிறது. அயநஶப்₃த₃ம் - ப்ராப்யத்துக்கும் வாசகமாய், ப்ராபகத்துக்கும் வாசகமாயிருந்ததேயாகிலும், இவ்விடத்தில் ப்ராப்யபரமாயிருக்கும். ப₃ஹுவ்ரீஹிஸமாஸத்தில், அயநஶப்₃த₃ம் - தி₃வ்யாத்மஸ்வரூபத்தையொழிந்த ஸகல வஸ்துக்களுக்கும் வாசகமாயிருக்கும்; ஷஷ்டீ₂ஸமாஸத்தில் தி₃வ்யாத்மஸ்வரூபமொன்

a திருவாய் 1-2-10. b டி 2.7.2. c டி 10.9.1. d டி 1.10.8. e டி 4.1.1. f டி 9.3.1.

றுக்கும் வாசகமாயிருக்கும். ஈஶ்வரனுடைய ஸர்வாத்மத்வ-அபஹதபாப்மத்வ - பரமபத₃ நிலயத்வத்₃யோதகமாம் கு₃ண விஶேஷங்களெல்லாம் இப்பத₃த்திலே அநுஸந்தே₄யங்க ளாகக் கடவது.

### வ்யக்தசதுர்த்தி₂யின் அர்த்த₂ம்

இதில் சதுர்த்தி₂ - ப்ரணவத்திற்சொன்ன அநந்யார்ஹ ஶேஷத்வத்தினுடையவும், நமஸ்ஸிற்சொன்ன உபாய ஸ்வீகாரத்தினுடையவும் ப₂லரூபமான கைங்கர்யப்ரார்த்த₂ நத்தை ப்ரதிபாதி₃க்கிறது. தே₃ஶகாலாவஸ்தா₂ ப்ரகார விஶேஷவிது₄ரமாக ப்ரார்த்தி₂க்கையாலே, ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களுக்கும் உசிதமான ஸகல ஶேஷவ்ருத்தியையும் சொல்லுகிறது.

### திருமந்த்ரார்த்த₂ நிக₃மநம்

ப்ரத₂மாக்ஷரமான அகாரத்தாலே - ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வம் சொல்லி, சதுர்த்த்₂யம்ஶத்தாலே-ஜீவாத்மாக்க ளுடைய ஶேஷத்வம் சொல்லி, உகாரத்தாலே - அந்ய ஶேஷத்வ நிவ்ருத்திசொல்லி, மகாரத்தாலே ஶேஷத் வாஶ்ரயமாய், ப்ரக்ருதே:பரமான ஆத்மஸ்வரூபத்தினுடைய ஜ்ஞாநாஶ்ரயத்வத்தை ப்ரதிபாதி₃த்து, நமஸ்ஸாலே - அநாதி₃காலம் ஏவம்வித₄ ஶேஷத்வத்துக்குத் திரோதா₄யக மாய்ப்போந்த விரோதி₄ஸ்வரூபத்தை நிவர்த்திப்பித்து, பா₄க₃வதஶேஷத்வ ப்ரதிபாத₃நத்₃வாரா ப₄க₃வச்சே₂ஷத் வத்தை ஸ்தி₂ரமாக்கி, ஶேஷத்வாநுரூபமான ஸித்₃த₄ஸாத₄ந ஸ்வீகாரத்தைச்சொல்லி, நாராயணபத₃த்தாலே-நித்யவஸ்து ஸமூஹபா₄ஹுள்யம் சொல்லி, ததா₃ஶ்ரயமான ப₄க₃வத் ஸ்வரூபத்தினுடைய ஸர்வஶேஷித்வ ஸர்வரக்ஷகத்வ நிரதிஶயபோ₄க்₃யத்வ நிருபாதி₄கபாந்த₄வ நியந்த்ருத்வ தா₄ரகத்வ ப்ரமுக₂மான கு₃ணவிஶேஷங்களைச் சொல்லி; சதுர்த்த்₂யம்ஶத்தாலே - நிரதிஶயாநந்த₃ரூபமான ஸஹஜ கைங்கர்யத்தினுடைய ஆவிர்பா₄வ ப்ரார்த்த₂நத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

ஆக, திருமந்த்ரத்தாலே-ஈஶ்வரனுக்கும் ஆத்மாவுக்கும் உண்டான ஸம்ப₃ந்த₄த்தையும், ஸம்ப₃ந்தா₄நுரூபமான உபாயஸ்வீகாரத்தையும், ஸ்வீகாராநுகு₃ணமான உபேய ப்ரார்த்த₂நத்தையுஞ்சொல்லித் தலைக்கட்டுகிறது.

a "விடையேழன்றடர்த்த" என்கிற பாட்டும், b "மூன்றெழுத்ததனை" என்கிற பாட்டும் ப்ரணவார்த்த₂மாக அநுஸந்தே₄யம். c "யானே" என்கிற பாட்டு, நமஶ்ஶப்₃தா₃ர்த்த₂மாக அநுஸந்தே₄யம். d "எம்பிரானெந்தை" என்கிற பாட்டு, நாராயணஶப்₃தா₃ர்த்த₂மாக அநுஸந்தே₄யம். e "ஒழிவில் காலமெல்லாம்" என்கிற பாட்டு சதுர்த்த்₂யர்த்த₂மாக அநுஸந்தே₄யம். 1. **"அகாரார்த்தா₂யைவ"** என்கிற ஶ்லோகம், பத₃த்ரயத்துக்கும் அர்த்த₂மாக அநுஸந்தே₄யம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## சரமஶ்லோகப்ரகரணம்

### உபோத்₃கா₄தம்

திருமந்த்ரத்தில் மத்₄யமபத₃த்தாலும் நாராயண பத₃த்தாலும் ஆர்த்த₂மாக ப்ரதிபாதி₃க்கப்பட்ட அர்த்த₂ த்₃வயத்தையும், சரமஶ்லோகத்தில் அர்த்த₂த்₃வயம் ஶாப்₃த₃மாக ப்ரதிபாதி₃க்கிறது. ஸங்க்₃ரஹமான பத₃ த்₃வயத்துக்கும் பூர்வாபரநியமமுண்டாயிருக்கிறப்போலே விவரணபத₃மான இதுவும் பூர்வாபரபா₄வேந நியதமாயிருக்கும். திருமந்த்ரம் அநேகார்த்த₂ங்களை ப்ரதிபாதி₃யாநிற்கச்செய்தே ப்ராப்யப்ரதிபாத₃நபரமாயிருக்கிறப்போலே, இதுவும் அநேகார்த்த₂ங்களை ப்ரதிபாதி₃த்ததேயாகிலும், ப்ராபக ப்ரதிபாத₃நபரமாயிருக்கும்.

தே₃ஹாத்மாபி₄மாநியாய், ஆத்மபரமாத்மவிவேக ஶூந்யனுயிருக்கிற அர்ஜுநனைக்குறித்து, f "அமலங்களாக

a பெரியதிருமொழி 8-9-3. b பெரியாழ்திரு4-7-10. c திருவாய்2.9.9.
d பெரியதிருமொழி 1.1-6. e திருவாய் 3.3.1. f திருவாய் 1-9.9.

விழிக்கும்'' என்கிறபடியே - ஸகலபாபக்ஷபணநிபுணங்களா யிருக்கிற தி₃வ்யகடாக்ஷங்களாலும், அம்ருதநிஷ்யந்தி₃யான வசநவிஶேஷங்களாலும், முமுக்ஷுத்வவிரோதி₄களான ஸகலப்ரதிப₃ந்த₄கங்களையும் நஶிப்பித்து, மோக்ஷருசியை யுண்டாக்கி, 1. **''தே தம் பு₄க்த்வா ஸ்வர்க₃லோகம் விஶாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி''** இத்யாதி₃யாலே-ஐஶ்வர்யம் அல்பாஸ்தி₂ரத்வாதி₃ தோ₃ஷதூ₃ஷிதமா யிருக்கும் என்னுமிடத்தை அருளிச்செய்து, 2. **''ஜராமரண மோக்ஷாய''** இத்யாதி₃யாலே - கைவல்யம் க்லேஶஸாத்₄ய த்வாதி₃தோ₃ஷது₃ஷ்டமென்னுமிடத்தை அருளிச்செய்து, 3. **''மாமுபேத்ய து கௌந்தேய''** இத்யாதி₃யாலே-ஸ்வப்ராப்தி லக்ஷணமான மோக்ஷமே நிரதிஶயபுருஷார்த்த₂மென்னு மிடத்தை அருளிச்செய்து, 4. **''தஸ்மாத₃ஸக்தஸ்ஸததம்''** இத்யாதி₃யாலே - கர்மஜ்ஞாநப₄க்திகளை தத்ப்ராப்திஸாத₄ந மாக அருளிச்செய்ததைக்கேட்டு, அர்ஜுநன் - ஸர்ப்பாஸ்ய க₃தமான ஜந்துவைப்போலேயிருக்கிற தன்னுடைய து₃ர்க₃தியையும், 5. **''மம மாயா து₃ரத்யயா''** என்கிற படியே-தன்னால் கழித்துக்கொள்ளவொண்ணாதபடி விரோதி₄ யம்ஶம் அதிப்ரப₃லமாயிருக்கிறபடியையும் விஹிதோபாய விஶேஷம் து₃ரநுஷ்டா₂நமாயிருக்கிறபடியையும் அநு ஸந்தி₄த்து ப்ராப்ய லாப₄நிமித்தமாக ஶோகாவிஷ்டனாக, அநந்தரத்திலே, 'து₃ஷ்கரங்களான ஸாத₄ந விஶேஷங்களை ஸவாஸநமாக த்யஜித்து, நிரபாயஸாத₄நபூ₄தனான என்னையே நிரபேக்ஷஸாத₄நமாக ஸ்வீகரி; ப்ராப்தி ப்ரதிப₃ந்த₄கங்களை நிஶ்ஶேஷமாக நானே போக்குகிறேன்; ஆனபின்பு ப்ராப்யலாப₄நிமித்தமாக ஶோகத்தைப் பொகட்டு நிர்ப₄ரனாயிருக்க' என்று அர்ஜுநனுக்கு ஶோகத்தை நிவர்த்திப்பிக்கிறான்.

ஸகலஶாஸ்த்ரங்களிலும் இப்ரப₃ந்த₄ந்தன்னில் இஶ் ஶ்லோகத்துக்குக் கீழடங்கலும் மோக்ஷஸாத₄நங்களாக விஹிதங்களாய், வைதி₃க புருஷர்களாலே அத்யாத₃ரேண

அநுஷ்டி₂தங்களாய்ப் போருகிற ஸாத₄ந விஶேஷங்களைப் பரக்க விதி₄யாநிற்க, இஸ்லோகத்திலே தத்த்யாக₃ பூர்வக மாக உபாயாந்தரவித₄ாநம் பண்ணுகை விருத்₃த₄மென்று நினைத்து, விரோத₄ பரிஹாரார்த்த₂மாகப் பல பொருள்களைச் சொன்னார்கள்.

பரமாப்தனான க்ருஷ்ணன் அருளிச்செய்த வார்த்தை யாகையாலும், **1. "க்₃ராவாண: ப்லவந்தே"** என்றும், **2. "அக்₃நிநா ஸிஞ்சேத்"** என்றும் இத்யாதி₃யான வைதி₃க லௌகிக வாக்யம்போலே அநந்விதமாயிருக்கையன்றிக்கே அந்விதமாய்க்கொண்டு அர்த்த₂ப்ரத்யாயகமாயிருக்கை யாலும், ப்ரமிதிஜநகமன்றென்றும், அநேகப்ரமாண விருத்₃த₄மாயிருக்கையாலே தத்ப்ரதிபாதி₃தமான அர்த்த₂ம் அப்ராமாணிகமாய், பரீக்ஷகாநநுஷ்டே₂யமாயிருக்குமென்றும் சொல்லவொண்ணாது. ஆகையால் கர்மப₂லபரித்யாக₃ பூர்வகாங்க₃ப்ரபத்திவித₄ாநபரம் இஸ்லோகமென்று சிலர் சொன்னார்கள்;

கர்மங்களினுடைய லக்ஷண-புநருக்தி-அஸந்நித₄ாநங்க ளாலே அந்தப்பக்ஷம் து₃ஷ்டம்;

உபாஸநம் - த்ரைவர்ணிக விஷயமாக விஹிதமாகிறது; ப்ரபத₃நம் - தத்₃வ்யதிரிக்த விஷயமாக விதி₄க்கப்படுகிறது; இப்படி வ்யவஸ்தி₂த விஷயமாகையாலே, உபாயத்₃வய வித₄ாநம் அவிருத்₃த₄மென்று சிலர் சொன்னார்கள்.

அந்தப் பக்ஷம், ப்ரபத்தியினுடைய ஸர்வாதி₄காரத்வ ஶ்ருதியாலும், த்ரைவர்ணிகோபதே₃ஶ்யதாநுபபத்தியாலும், அநுஷ்ட₂ாந விரோத₄த்தாலும் அநுபபந்நம்.

ஜ்ஞாநயோக₃ஸாத₄ந கர்மத்யாக₃ பூர்வகாங்க₃ப்ரபத₃ந வித₄ாநம் பண்ணுகிறதென்கிற பக்ஷம், த₄ர்மஶப்₃த₃த்தி னுடைய அஸங்குசித வ்ருத்தித்வத்தாலும், ஜ்ஞாநயோக₃ வாசகஶப்₃த₃ாஸந்நித₄ாநத்தாலும் து₃ஷ்டம்.

த₄ர்மஶப்₃த₃த்தினுடைய அப்ரஸ்துத ப்ராயஶ்சித்த விஷயத்வஸங்குசிதவிஷயத்வ ப்ரஸங்க₃த்தாலும், அர்ஜுநன் விநஷ்டகர்மயோக₃ப்ரதிப₃ந்த₄கனுகையாலும், ப்ராயஶ்சித்த வித₄ாநபக்ஷமும் அநுபபந்நம்.

ஶோகநிவ்ருத்த்யநுபபத்தியாலே ப்ரஶம்ஸாபரமென்கிற பக்ஷமும் அநுபபந்நம்.

பூர்ணஹூதித்₃ருஷ்டாந்தமுக₃த்தாலே ஶரணாக₃த்யநுஷ்ட₂ாநமாத்ரத்திலே தாத்பர்யம், த்யாக₃த்தில் தாத்பர்யமில்லை என்கிற பக்ஷமும், ஸாத₄நாந்தரபரித்யாக₃லக்ஷணங்க₃வைது₄ர்யத்தில் ப்ரபத்த்யுபாயம் அநநுவர்த்திதமாகையாலே அஸங்க₃தம்.

கர்மயோக₃ாதி₃ப்ரச்யுதி ஸம்ப₄ாவனையிலே தத்ப்ராயஶ்சித்ததயா ப்ரபத்திவித₄ாநம் பண்ணுகிறதென்கிற பக்ஷம், **1. "நேஹாபி₄க்ரமநாஶோऽஸ்தி"** என்று ப்ராயஶ்சித்த நைரபேக்ஷ்ய ப்ரதிபாத₃கமான பூர்வவசநத்தோடே விரோதி₄க்கையாலே அஸங்க₃தம்.

மோக்ஷஸாத₄ந கர்மவிரோதி₄ ஸ்வர்க்க₃ாதி₃ காம்யகர்ம பரித்யாக₃ ப்ரதிபாத₃கமென்கிற பக்ஷமும், மோக்ஷஸாத₄ந கர்மவித₄ாந த₃ஶையிலே காம்யகர்மம் ப்ரதிஷித்₃த₄மாகையாலும், " மாமேகம் ஶரணம் வ்ரஜ " என்கிற வாக்யம் கர்மப்ரதிபாத₃கமல்லாமையாலும் து₃ஷ்டம்.

1. பூர்வோக்த ஸாத₄நங்களுக்கு ஶோகஜநகத்வமில்லாமையாலும், 2. ஶோகந்தான் ஶ்ருதமல்லாமையாலும், 3. ப₄க்தித்யாக₃த்தில் தத்ப்ரதிபாத₃க ஶாஸ்த்ராந்தரத்துக்கும் இந்த ப்ரப₃ந்த₄ந்தன்னில் பூர்வவசநங்களுக்கும் வையர்த்₃யம் ப்ரஸங்கி₃க்கையாலும், 4. ப்ரபத்த்யுபாயத்துக்கு ஸ்வதந்த்ர ஸாத₄நத்வ ஶ்ரவணம் இல்லாமையாலும், 5. ஸுகரமார்க்க₃முண்டானால் வத்ஸலதரமான ஶாஸ்த்ரம் து₃ஷ்கரமார்க்கோ₃பதே₃ஶம் பண்ணக்கூடாமையாலும், 6. நிரங்க₃த்வேந ஸாத₄நத்வம் அக₄டிதமாகையாலும்,

விஹிதோபாய பரித்யாக₃ பூர்வகமாக உபாயாந்தர விதா₄நம் பண்ணுகிறதென்கிற பக்ஷம் அநுபபந்நமென்று சிலர் சொன்னார்கள்.

1. இப்ரப₃ந்த₄ந்தன்னில் ப்ரத₂மத்திலே, ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் ஸ்வரூபவிரோதி₄த்வேந ப்ரகாஶிக்கும்படி ஆத்மஸ்வரூபத்தை அத்யந்த பரதந்த்ரமாக உபதே₃ஶிக்கக் கேட்டபடியாலும், ஸததக₃தியான வாயுவினுடைய நிரோத₄ம்போலே விஷயாந்தர ஸஞ்சாரியான மநஸ்ஸினுடைய நிக்₃ரஹம் து₃ஷ்கரமாயிருக்கையாலும், 'அப்படிப்பட்ட மநஸ்ஸு தன்னை ப்ரத்யக்ப்ரவணமாக்கப் பார்த்தாலும் அதுக்கு யோக்₃யதையில்லாதபடி, இந்த்₃ரியங்கள் தந் தாம் வழியிலே இழுத்துக்கொண்டு நலியாநின்றது' என்று இந்த்₃ரிய ப்ராப₃ல்யஜநிதபீ₄தி அநுவர்த்திக்கையாலும், 'ஸகலஜக₃த்தினுடையவும் ஸத்தாஸ்தி₂த்யாதி₃கள் மத₃ தீ₄நங்களாய் நடக்கிறது' என்றும், 'உபாஸநஸாத₄நஜ்ஞா நாதி₃களுக்கும் நானே ப்ரவர்த்தகன்' என்றும் அருளிச் செய்யக் கேட்கையாலும், ஸர்வாவஸ்தை₂களுக்கும் ப்ரபத்தி யொழியப் புகலில்லையென்னுமிடம் நிழலெழும்படி இந்த்₃ரிய நியமநாதி₃ஸாத₄நத்வேந பலவிடங்களிலும் ப்ரபத்தி ஶ்ருதையாகையாலும், விஹிதஸாத₄நங்கள் ப₃ஹுதர ஜந்மஸாத்₄யத்வ ஸாபேக்ஷத்வ ஸாபாயத்வாத்₃யநேக தோ₃ஷாவஹங்களாயிருக்கையாலும், விரோத்₄யம்ஶம் ஸ்வ நிவர்த்யமல்லாதபடி அவன் கையிலே கிடக்கிறபடியை அநுஸந்தி₄த்தால் ஜ்ஞாநவானாயிருக்கிற இவனுக்கு ஶோகவேக₃ம் பிறக்கை ஸம்பா₄விதமாகையாலே பூர்வோக்த ஸாத₄நங்களுக்கு ஶோகஜநகத்வமில்லையென்கிற பக்ஷம் து₃ஷ்டம்.

2. இவ்விடத்திலே ஶோகம் ஶ்ருதமன்றேயாகிலும், 'மாஶுச:' என்கிற ஶோகநிஷேத₄வசநத்தாலே ஶோகம் அநுமேயமாகக்கடவது.

3. தத்தச்சூாஸ்த்ரங்கள்தன்னிலே ஸாத₄நாந்தர பரித்யாக₃பூர்வகமாக ஸித்₃த₄ஸாத₄நஸ்வீகாரம் விஹித மாகையாலும், இதுதான் ஏகாதி₄கார விஷயமன்றிக்கே பி₄ந்நாதி₄கார விஷயமாகையாலும், ப்₃ரஹ்மசர்யக₃ார்ஹ ஸ்த்₂ய வாநப்ரஸ்த₂ாத்₃யாஶ்ரமங்களிலே பூர்வபூர்வாஶ்ரம விஹிதகர்மாநுஷ்ட₂ாந பரித்யாக₃பூர்வகமாக உத்தரோத்தர ஆஶ்ரமவிஹிதத₄ர்மம் அநுஷ்டே₂யமாகிறுப்போலே, இவ்வி டத்திலும் பூர்வோபாய பரித்யாக₃பூர்கமாக உத்தரோபாயம் அநுஷ்டி₂தமாகை அவிருத்₃த₄மாகையாலும், ஶாஸ்த்ராந்தர விரோத₄மும் பூர்வவசநவிரோத₄மும் பரிஹ்ருதம்.

4. **1. "அநந்யஸாத்₄யே ஸ்வாபீ₄ஷ்டே" 2. "அஹம ஸ்ம்யபராத₄நாமாலய:" 3. "தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாம்" 4. "முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்₃யே" 5. "ஶரணம் த்வாம் ப்ரபந்நா யே"** இத்யாதி₃களிலே ஸ்வ தந்த்ரோபாயத்வேந ஶ்ருதமாகையாலே, ஸ்வதந்த்ரஸாத₃ந த்வாநுபபத்தியை த்₃வாரமாகக்கொண்டு த்யாகோ₃பாய விதா₄நபரத்வம் அர்த்த₂மன்று என்கிற பக்ஷம் து₃ஷ்டம்.

5. இதுதன்னிலே ஏகப₂லவிஷயமாக ஸுகர து₃ஷ்கர மார்க்க₃த்₃வய விதா₄நாநுபபத்தி ரூபமான சோத்₃யமும் பரிஹ்ருதம். இங்ஙனே கொள்ளாதபோது ஏகப₂லவிஷய மான ஸமாவர்த்தநாதி₃ கர்மவிதா₄யக ஶாஸ்த்ரங்களுக்கும் விரோத₄ம் ப்ரஸங்கி₃க்கும். **6."க்ருஷ்ணாநுஸ்மரணாதி₃"**களும் விருத்₃த₄ம்.

6. "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்று-ஸாங்க₃ப்ரபத₃நம் விஹிதமாகையாலே சரமபக்ஷம் து₃ஷ்டம்.

ஸ்வரூபாநுரூபமான இந்த உபாயத்தையே ப்ரத₂மத் திலே உபதே₃ஶியாதே உபாயாந்தரங்களை உபதே₃ஶித்து அவற்றுக்கு அநந்தரமாக இத்தை உபதே₃ஶிப்பானென்?

என்னில், த்ரைகு₃ண்ய விஷயமான ஶாஸ்த்ரம் - ப்ரத₂மத்திலே ரஜஸ்தம:ப்ரசுரராய் து₃ர்ஜ்ஞாந து₃ர்வ்ருத்த ஸம்ருத்₃த₄ரான சேதநருடைய அநீதியைக்கண்டு நெகிழ விடமாட்டாதபடி அத்யந்தவத்ஸலமாகையாலே சேதநருடைய ஸத்வாதி₃கு₃ணாநுகு₃ணமாக ஶத்ருநிரஸநவர்ஷ த₄நலாப₄புத்ரபஶ்வந்ந ஸ்வர்க்கா₃தி₃ புருஷார்த்த₂ங்களையும் தத்ஸாத₄நமான அபி₄சார காரீர்யாதி₃ ஸாத₄நவிஶேஷங்களையும் உபதே₃ஶித்துப் பரமபுருஷார்த்த₂லக்ஷண மோக்ஷ தத்ஸாத₄ந ஶ்ரவணத்துக்கு யோக்₃யனான அவஸ்தை₂யில் அத்தை உபதே₃ஶிக்கவேணுமென்று நினைத்து, ப்ரத₂மத்திலே, நாஸ்திகனாய், பரஹிம்ஸைகபோ₄க₃னாய், அத்யந்த ந்ருஶம்ஸனாய் வர்த்திக்கிற ஸமயத்திலே, அபி₄சார கர்மத்தை உபதே₃ஶித்து, அவற்றை ஸப₂லமாகக்கண்டு, ஶாஸ்த்ரவிஶ்வாஸம் பிறந்த ஸமயத்திலே தே₃ஹாத்மாபி₄மானியாயிருக்கிறவனுக்கு தே₃ஹாது₃த்தீர்ணமான ஸ்வரூபத்தை அறிவிக்கைக்காக, ஸ்வர்க்கா₃த்₃யாமுஷ்மிகஸாத்₄ய ஸாத₄நபூ₄த ஜ்யோதிஷ்டோமாதி₃களை விதி₄த்து, ஸ்வ ஸ்வாதந்த்ர்ய ப்ரதிபத்தி கழன்றவளவிலே ப₄க₃வத் பாரதந்த்ர்ய ஜ்ஞாநம் பிறக்கும்படி ப₄க₃வத்கைங்கர்ய லக்ஷணமான மோக்ஷத்தை உபதே₃ஶித்து, தத்ஸாத₄நப₄க்தியையும் விதி₄த்து, பாரந்தந்த்ர்ய யாதா₂த்ம்ய ஜ்ஞாநார்த்த₂மாக அநந்தரத்திலே ப்ரபத்த்யுபதே₃ஶம் பண்ணுமாபோலே, இவனும் ப₃ந்து₄வத₄பீ₄தியாலே யுத்₃த₄நிவ்ருத்தனான அர்ஜுநனைக்குறித்து, ப்ரத₂மத்திலே ஸ்வாநுப₄வ லக்ஷணமான பரமபுருஷார்த்த₂த்தையும் தத்ஸாத₄நமான ப்ரபத்தியையும் உபதே₃ஶிக்கச் சேராமையாலே, க்ரமத்திலே தே₃ஹாதி₃ விலக்ஷணமான வஸ்துவிஷய ஜ்ஞாநத்தையும் தத₃ந்தர்யாமியான தன்னுடைய ஸ்வரூபாதி₃விஷய ஜ்ஞாநத்தையும் ஸ்வப்ராப்தி லக்ஷணமான மோக்ஷவிஷய ஜ்ஞாநத்தையும் ஜநிப்பித்து, தத்ஸாத₄நமான ப₄க்த்யுபாயத்தை விதி₄த்து, 'பூர்வோக்த ஸாத₄நங்களில் ருசிவிஷயமான ஸாத₄நத்தை அநுஷ்டி₂த்து, நம்மை ப்ராபி; இவ்வுபாய விஶேஷங்களை

யொழிய நம்மை ப்ராபிக்கைக்கு உபாயங்களில்லை, இவற்றிலே அந்யதமத்தை அநுஷ்டி₂த்து, நம்மைப்பெறப்பார்' என்று சொன்னால், அநந்தரத்திலே இவனுக்குப் பிறந்த அவஸ்தைக்கு அநுரூபமாக ஸித்₃தே₄பாயத்தை உபதே₃ஶிக்க வேண்டுகையாலே, ப்ரத₂மத்திலே உபதே₃ஶித்திலன்.

இவ்விடந்தன்னில் த்யாஜ்யமாகச்சொல்லுகிறது ஸர்வத₄ர்மஸ்வரூபத்தை என்னவொண்ணாது; அஶக்யமாகையாலும், உத்தரகாலத்தில் அநுஷ்டா₂நம் அநுபபந்நமாகையாலும், ப₂லத்யாக₃மாகமாட்டாது; பௌநருக்த்யப்ரஸங்க₃த்தாலும், ப்ரபத்த்யுபதே₃ஶம் கூ₃டியாமையாலும், ஸ்வதந்த்ரஸாத₄நத்வம் ஸித்₃தி₄யாமையாலும், அவை விருத்₃த₄மாகையாலும், உபாயத்வ பு₃த்₃தி₄த்யாக₃ம் என்னவொண்ணாது; ப்ரபத்திக்கு த₄ர்மாங்க₃த்வமும் அகிஞ்சநாதி₄காரத்வஹாநியும் உத்தரகாலாநுஷ்டே₂ய கர்மங்களில் கைங்கர்யரூபத்வஹாநியும் ப்ரஸங்கி₃க்கையாலே. ஆகையாலே த₄ர்மத்யாகோ₃பதே₃ஶம் அநுபபந்நமன்றோவென்னில்;

அது சொல்லவொண்ணாது. இவ்விடத்தில் த்யாஜ்யதயா உபதி₃ஷ்டையாகிறது ஸாத₄நத்வ ப்ரதிபத்தியாகையாலே என்றும், ஸ்வர்க₃ார்த்த₂மான ஜ்யோதிஷ்டோமாதி₃களைப்போலே பு₃த்₃தி₄விஶேஷ விஶிஷ்டத்தாலே கர்மாந்தரத்வம் உபபந்நமாகையாலே ஸ்வரூபத்தை த்யாஜ்யமாகச் சொல்லவுமாம் என்றும் சொல்லுவர்கள்.

நிஷ்க்ருஷ்ட ஸத்த்வநிஷ்ட₂னாய், பரமாத்மநி ரக்தனாய், அபரமாத்மநி வைராக்₃யமுடையனாய், ப்ரமாணபரதந்த்ரனாய், ப₄க₃வத்₃ வைப₄வம் ஶ்ருதமானால் அது உபபந்நமென்னும்படியான விஸ்ரம்ப₄பூ₄ஹுன்யமுடையனாய், ஆஸ்திகாக்₃ரேஸரனாயிருப்பானொருவனுண்டாகில், அவனே இந்த ஶ்லோகார்த்த₂ ஶ்ரவணாநுஷ்டா₂நத்துக்கு அதி₄காரி. ஸர்வாதி₄காரமாயிருக்கச்செய்தே அதி₄க்ருதாதி₄காரமாயிறே யிருப்பது. இங்குச் சொல்லுகிற பரித்யாக₃ம் ஸ்வீகாராங்

க₃தயா உத்₃தே₃ஶ்யமென்று ப்ரதிபத்தி பண்ணினபோது உஜ்ஜீவநஹேதுவாம். ஸ்வரூபேண உபாதே₃யமென்று ப்ரதிபத்திபண்ணினல் அநர்த்த₂ஹேதுவாம். ஆகையாலே அதி₄காரி து₃ர்லப₄த்வத்தாலும் அர்த்த₂கெ₃ளரவத்தாலும் இத்தை வெளியிடாதே மறைத்துக்கொண்டு போந்தார்கள் எம்பெருமானுர்க்கு முன்புள்ளார். ஸம்ஸாரிகள் து₃ர்க்க₃தியைப் பொறுக்கமாட்டாதபடி க்ருபை கரை புரண்டிருக்கையாலே அர்த்த₂த்தின் சீர்மை பாராதே அநர்த்த₂த்தையே பார்த்து வெளியிட்டருளினுர் எம்பெருமானுர்.

தத்த்வநிர்ணயம் பண்ணின உய்யக்கொண்டார் விஷயமாக அருளிச்செய்தருளின வார்த்தையும், நஞ்சீயர் வீராணத்து அருளாளப்பெருமாளுக்கு அருளிச்செய்தருளின வார்த்தையும் தொடக்கமான பூர்வாசார்ய வசநங்கள் இவ்விடத்தே அநுஸந்தே₄யங்கள்.

உபாயவிதி₄ப்ரகரணமாய், கீழே அநேக ஸாத₄நங்களை விதி₄த்துக்கொண்டுபோந்ததுக்கு அநந்தரமாக ஸித்₃தோ₄பாய பரிக்₃ரஹத்தை விதி₄த்து அதுக்குமேல் ஒரு உபாய விஶேஷத்தை விதி₄யாதே இவ்வளவிலே பர்யவஸித்து விடுகையாலே இத்தைச் சரமஶ்லோகம் என்கிறது. இப்படியாகாதபோது அதிப்ரஸங்க₃முண்டாமிறே.

'ஸாங்க₃மான ஸகல த₄ர்மங்களையும் ஸவாஸநமாக த்யஜித்து ஸெளலப்₄யாதி₃ கல்யாணகு₃ணவிஶிஷ்டனுயிருக்கிற என்னையே இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவாரணத்துக்கும் நிரபேக்ஷ ஸாத₄நமாக ஸ்வீகரி; ஜ்ஞாநஶக்த்யாதி₃ கல்யாணகு₃ணக₃ண விஶிஷ்டனுயிருக்கிற நான், என்னையே நிரபேக்ஷ ஸாத₄நமாக ப்ரதிபத்தி பண்ணின உன்னை, அவித்₃யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ங்களாகிற விரோதி₄களினின்றும் முக்தனுக்குகிறேன், நீ உன்காரியம் சுட்டி ஶோகிக்கவேண்டா' என்று உபாயாந்தர த₃ர்ஶநத்தாலே ஶோகாவிஷ்டனுன அர்ஜுநனுடைய ஶோகத்தை நிவர்த்திப்பிக்கிருன்.

இதில் பூர்வார்த்த₄த்தாலே-ப்ரபத்தாவினுடைய க்ருத்யம் சொல்லுகிறது; உத்தரார்த்த₄த்தாலே ப்ரபத்தவ்யனுடைய க்ருத்யம் சொல்லுகிறது. ப்ரபத்தாவுக்கு க்ருத்யம்-உபாய ஸ்வீகாரம்; ப்ரபத்தவ்யனுக்கு க்ருத்யம்-விரோதி₄நிவர்த்தநம். ஈஶ்வரனுக்குக் கைங்கர்யத்தில் அந்வயமில்லாதாப்போலே, இவனுக்கு விரோதி₄நிவ்ருத்தியில் அந்வயமில்லை. இவனுக்கு ஶேஷித்வத்தில் அந்வயமில்லாதாப்போலே, அவனுக்கும் உபாயஸ்வீகாரத்தில் அந்வயமில்லை.

**ஸர்வத₄ர்மஶப்₃த₃ார்த்த₂ம்**

(1) **"ஸர்வத₄ர்மாந்"** — த₄ர்மமாகிறது - ஶாஸ்த்ர விஹிதங்களான இஷ்டஸாத₄நங்கள். 1. இவ்விடத்தில் இஷ்டஸாத₄நமாகச் சொல்லுகிற த₄ர்மமாகிறது - ஸ்வர்க்₃காதி₃ ஸாத₄நமான ஜ்யோதிஷ்டோமாதி₃களாதல், 2. உபாஸநாங்க₃மாய், பாபபநோத₃ந ஸாத₄நமான த₄ர்ம மாதல், 3. அங்கி₃யான உபாஸநந்தானாதல், 4. அவ்யவஹித ஸாத₄நமான ஸித்₃த₄ த₄ர்மமாதலிறே. இவையித்தனையும் அனுபபந்நங்கள்.

1. ஜ்யோதிஷ்டோமாதி₃களை த்யாஜ்யமாகச் சொல்ல வொண்ணாது, அவை அப்ரஸ்துதங்களாகையாலும், அதி₄ காரிக்குப் ப₂லாந்தராபி₄லாஷையில்லாமையாலும்.

2. பாபாபநோத₃ந ஸாத₄நமான த₄ர்மத்தை த்யாஜ்ய மாகச் சொல்லுகிறதென்னவொண்ணாது; வக்ஷ்யமான த₄ர்மத்துக்கு அங்க₃த்வம் ப்ரஸங்கி₃க்கையாலும், **"ஸர்வ பாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி"** என்கிறது சேராமையாலும்.

3. அங்கி₃யான உபாஸநத்தை த்யாஜ்யமாகச் சொல்லுகிறதென்னவொண்ணாது:— ஸர்வஶப்₃த₃த்துக்கு நைரர்த்த₂யம் ப்ரஸங்கி₃க்கையாலும், அது ஸார்த்த₂ மாச்சுதேயாகிலும் அவைதி₃கத்வ ப்ரஸங்க₃மும் அதிப்ர ஸங்க₃மும் து₃ஷ்பரிஹரமாகையாலும்.

4. பரஸ்பர விரோத₄த்தாலே அந்வயமில்லாமை யாலே, சதுர்த்த₂பக்ஷமும் உபபந்நமன்று.

ஆனபின்பு. இங்குச் சொல்லுகிற த₄ர்மத்யாக₃ம் ஸங்க₃தமாக மாட்டாதேயென்னில்;— ப்ரத₂ம த்₃விதீய சதுர்த்த₂விகல்பங்கள் அப்₄யுபக₃தங்களல்லாமையால் நிர ஸ்தங்கள். இங்கு த்₄யாஜ்யமாகச் சொல்லுகிறது - ஸகல ஶாஸ்த்ரங்களிலும் இப்ரப₃ந்த₄ந்தன்னில் இஶ்லோகத் துக்குக் கீழடங்கலும் விஸ்த்ருதமாக ப்ரதிபாதி₃க்கப்பட்ட மோக்ஷஸாத₄நமான உபாஸநரூபத₄ர்மத்தை.

ஸர்வஶப்₃த₃ார்த்த₂ம் யோக்₃யதாபாத₃கங்களாகை யாலே நைரர்த்₂யமில்லை. நிமித்தாந்தரத்தாலே அநுஷ் ட₂ாநமுண்டாகையாலும், விஹிததயா அவர்ஜநீயங்களாகை யாலும், அவைதி₃கத்வாதி₃தோ₃ஷமில்லை. ஆகையால் இங்குச் சொல்லுகிற த₄ர்மத்யாக₃ம் உபபந்நமென்றும் ஸமாத₄ாநம் பண்ணினார்கள்.

ப₃ஹுவசநத்தாலே - அவதார ரஹஸ்யஜ்ஞாநம், புரு ஷோத்தமவித்₃யை, தே₃ஶவாஸம் தொடக்கமானவற்றைச் சொல்லுகிறது. ஸத்₃வித்₃யாதி₃பே₄த₃த்தாலே வந்த ப₃ஹுத்வத்தைச் சொல்லுகிறதென்னவுமாம். [a] "நெறி யெல்லாமெடுத்துரைத்த" என்கிறபடியே அருளிச்செய்த உபாயங்கள் அநந்தங்களாயிறேயிருப்பது.

ஆக, த₄ர்மஶப்₃த₃த்தாலும், ப₃ஹுவசநத்தாலும் - ஸாங்க₃மான, த₄ர்மங்களையும் அதினுடைய ப₃ஹுத்வத் தையும் சொல்லுகிறது.

ஸர்வஶப்₃த₃த்தால் - உபாஸநாதி₄காரிகளெல்லாருக்கும் பொதுவாய், முன்புசொன்ன ஸாத₄நாநுஷ்ட₂ாநத்துக்கு யோக்₃யதாஸம்பாத₃கங்களாய், ஶ்ருதிஸ்ம்ருதி ஸித்₃த₄ங்க ளாயிருக்கிற த₄ர்மவிஶேஷங்களைச் சொல்லுகிறது. யோக்₃ யதாஸம்பாத₃க த₄ர்மத்யாக₃ம் ஸாத₄நத்யாக₃த்தில் அந்தர்ப் பூ₄தமாயிருக்கச் செய்தேயும் ஸர்வஶப்₃த₃ப்ரயோக₃ம் பண்ணுகிறது ப்ரபத₃நாத்மக த₄ர்மத்தினுடைய ஸர்வாதி₄ காரத்வ ஜ்ஞாபநார்த்த₂மாக. அங்ஙனே கொள்ளாதபோது,

[a] திருவாய் 4-8-6.

ஸ்த்ரீஶூத்₃ராதி₃களுக்கு அதி₄காரமின்றிக்கேயொழியுமிறே. இதரோபாயங்களுக்கு யோக்₃யதை அத்யந்தாபேக்ஷிதமாயிருக்கிறப்போலே, இவ்வுபாயத்துக்குத் தாத்₃ருஶ யோக்₃யதா நிவ்ருத்தி அத்யந்தாபேக்ஷிதமாயிறே இருப்பது. ஈத்₃ருஶ யோக்₃யதாநிவ்ருத்தியில்லாமையாலே, ஶரண்ய ஶரணாக₃தி நிஷ்ப₂லையாயிற்று.

ஆக, **"ஸர்வத₄ர்மாந்"** என்கிற பத₃த்தாலே மோக்ஷ ஸாத₄நமாக விஹிதங்களாய், ஸாங்க₃ங்களாயிருக்கிற ஸகல த₄ர்மங்களையும் சொல்லிற்று.

## பரித்யஜ்யபதா₃ர்த்த₂ம்

(2) **"பரித்யஜ்ய"** என்கிற பத₃த்தாலே - அவற்றினுடைய த்யாக₃த்தைச் சொல்லுகிறது. இங்குச் சொல்லுகிற த்யாக₃மாகிறது மோக்ஷஸாத₄நத்வப்ரதிபத்தியைப் போகடுகை என்று ப்ரவேஶத்திலே சொன்னோமிறே. ஆகையால், அநுஷ்டா₂நவிரோத₄மில்லை. மேல் பரிக்₃ரஹிக்கப்படுகிற ஸித்₃த₄ த₄ர்மம் - ஸாத்₄யத₄ர்ம நிரபேக்ஷமாகையாலும், இவற்றை ஸஹியாமையாலும், இவைதான் து₃ரநுஷ்டா₂நங்களாயிருக்கையாலும், ப்ராப்யவிஸத்₃ருஶங்களாயிருக்கையாலும், ப₄க₃வதே₃கஸாத₄நதைகவேஷமான ஸ்வஸ்வரூபத்துக்கு அநநுரூபங்களாயிருக்கையாலும், விளம்ப₃ஸஹங்களாகையாலும், கீழ்ச்சொன்ன த₄ர்ம விஶேஷங்கள் த்யாஜ்யங்களாயிருக்கும்.

இது-ப்ராப்தமுமாய், ஸித்₃த₄முமாய், ஸர்வஶக்தியுக்தமுமாயிருக்கையாலே, ஸாத்₄யத₄ர்மநிரபேக்ஷமாயிருக்கும். சணற்கயிறு கண்ட ப்₃ரஹ்மாஸ்த்ரம்போலே வேறேயொன்றைக்காணில் நெகிழநிற்குமதாகையாலே, உபாய ஸ்வரூபத்தைப் பார்த்தால் ஸாத்₄யத₄ர்மங்கள் சேராதபடியாயிருக்கும். ஸகலப்ரவ்ருத்திகளிலும் ஸஹாயாந்தர நிரபேக்ஷமுமாய் ஸஹாயாந்தராஸஹமுமாயிறே வஸ்து ஸ்வரூபமிருப்பது. ஆகையாலேயிறே இவ்வுபாயபரிக்₃ரஹம் பண்ணுமதி₄காரி ஆகிஞ்சந்யத்தைப் புரஸ்கரித்துக்கொண்டு

இழிகிறது. ஸ்வரக்ஷணத்தில் ஸ்வாந்வயராஹித்யமாகிறது—ப₄க₃வத்₃ரக்ஷகத்வப்ரதிப₃ந்த₄க ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி பிறக்கையிறே. அபாயப₃ஹுளங்களாயிருக்கையாலும், சிரகால ஸாத்₄யங்களாயிருக்கையாலும், து₃ரநுஷ்ட₂ாநங்களாயிருக்கும். ப்ராப்யஸ்வரூபத்தைப் பார்த்தால் அநந்ய ஸாத்₄யமாயிருக்கையாலே அதுக்கு விஸத்₃ருஶமாயிருக்கும். **1. "ஶரைஸ்து ஸங்குலாம்"** இத்யாதி₃யிற்படியே - ஶக்தியுண்டேயாகிலும் லங்கைக்குள்ளே பிராட்டியிருந்தாற்போலே, ஸ்வப்ரவ்ருத்தியில் பராங்முக₂னாய், ஈஶ்வரன் பக்கலிலே ஸமர்ப்பித்த ஸர்வப₄ரனாயிருக்கையிறே அதி₄காரிக்கு ஸ்வரூபம். ஆகையால், அதி₄காரி ஸ்வரூபத்தைப் பார்த்தால் அநுரூபமன்றிக்கேயிருக்கும். **2. "காலேஷ்வபி ச ஸர்வேஷு"** இத்யாதி₃ப்படியே – ப்ரதிக்ஷணம் அஞ்சவேண்டும்படியாயிறே உபாயாந்தர ஸ்வரூபத்தை ஆராய்ந்தால் இருப்பது ப்₄ராந்தித₃ஶையிலும் ஸாத₄நாந்தர ஸத்₃பா₄வப்ரதிபத்தி ரஹிதனாயிருக்குமவனுக்கிறே இஸ் ஸாத₄நவிஶேஷம் கார்யகரமாவது. **3. "அத₂ பாதக பீ₄தஸ்த்வம்"** என்று த₄ர்மதே₃வதை த₄ர்மபுத்ரனைக்குறித்துப் பாதகத்வேந உபதே₃ஶித்ததிறே. ஸ்வப்ரவ்ருத்தியாலே ஈஶ்வரனைக்கிட்டவேணுமென்று நினைக்கிறது, ப₄க₃வத்₃ விஷயத்துக்கு என்றும் புறம்பாகைக்குறுப்பாமித்தனையிறே. அவனுடைய ப்ரவ்ருத்தியாலே அவனைக்கிட்ட நினைத்திருந்தாலிறே கரைமரஞ்சேரலாவது. ஸ்ருஷ்ட்யவதாராதி₃ முக₂த்தாலே a எதிர்சூழல் புக்கு இவனைச் சேர்த்துக்கொள்ளுகைக்கு யத்நம்பண்ணித் திரிகிறவனுடைய அநுக்₃ரஹ விஶேஷத்தாலே அவனைப் பெறுகையிறே உசிதம். b "என்னான் செய்கேன்" இத்யாதி₃ப்படியே - ததே₃க ஸாத₄நனாயிருக்கையிறே இவனுக்கு ஸ்வரூபம். ப₄க₃வத₃த்யந்த பாரதந்த்ர்யமாகிற உத்₃தே₃ஶ்யத்துக்கு விரோதி₄யாயிருக்கையாலே அத₄ர்மஶப்₃த₃வாச்யங்களாகச்சொல்ல

---

a திருவாய் 2-7-6. b திருவாய் 5.8.3.

ப்ராப்தங்களாயிருக்கிற உபாயாந்தரங்களை த4ர்மஶப்3த3 ப்ரயோக3ம் பண்ணுகிறது அர்ஜுநாபி4ப்ராயத்தாலே. து3ஷ்கரங்களாய், **1. "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு"** என்னும்படி இருக்குமவையாகையாலே விளம்ப3ஸஹங்களாயிருக்கும்.

இவைதான் ஓராகாரத்தாலே த்யாஜ்யங்களாய், ஓராகாரத்தாலே உபாதே3யங்களாயிருக்கும். கர்மாநுஷ்டா2நம் தே3ஹயாத்ரையிலே அந்தர்பூ4தமாயிருக்கும். ஸ்வஸ்வரூபஜ்ஞாநத்திலே அந்விதமாயிருக்கும்-ஜ்ஞாநயோக3ம். போ4ஜநத்துக்கு க்ஷுத்துபோலே கைங்கர்யத்துக்குப் பூர்வக்ஷணத்திலே அநுவர்த்திக்கக்கடவதான ருசிவிஶேஷத்திலே அந்வயித்திருக்கும்-ப4க்தி. இருவர்பக்கலிலும் அநுஷ்டா2நம் ஸமாநமாயிருக்கச்செய்தே ஹேதுவைஷம்யமுண்டாயிருக்கும். ஸாத4நத்வபு3த்3தி4 அநுவர்த்திக்கும் உபாஸகனுக்கு. ஸாத்4யத்வபு3த்3தி4 அநுவர்த்திக்கும் ப்ரபன்னனுக்கு. விஹிதகர்மாநுஷ்டா2நத்துக்கு முக்2யாதி4காரி ஸித்3த4ஸாத4நநிஷ்ட2ன். ஸாத்4யாந்தரநிஷ்ட2ன் ஸ்வர்க்க3ாதி3ஸாத4நமாக நினைத்திருக்கும். ஸாத4நாந்தரநிஷ்ட2ன் மோக்ஷஸாத4நமாக நினைத்திருக்கும். ஸித்3த4ஸாத4நநிஷ்ட2ன் ஸ்வயம் ப்ரயோஜநமாக நினைத்திருக்கும்.

நிவ்ருத்திரூபத4ர்மங்கள் வ்யாபாராத்மகங்களுமாய், ஸ்வரக்ஷணஹேதுக்களுமாயிருக்கையாலே நிஷேத4விதி4 ஸ்வீகாரத்தில் ஸ்வரக்ஷணார்த்த2மான வ்யாபாரம் பரித்யக்தமல்லாமையாலே ப்ரபத்தியில் அந்வயம் ப3லியாமையாலும், "ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிற வார்த்தையோடு சேராமையாலும் நிஷேத4விதி4த்யாக3ம் அவஶ்யம் கர்த்தவ்யமன்றோ? என்னவொண்ணாது—நியமவிஶேஷாதி3 விஶிஷ்டவ்யதிரேகேண ஸாமாந்யேந நிஷித்3த4நிவ்ருத்திமாத்ரத்துக்கு த4ர்மஶப்3தா3ர்த்த2த்வமில்லாமையாலும் விஶேஷணாம்ஶத்தையொழிய விஶேஷ்யாம்ஶத்துக்கு த்யாக3விஷயராஹித்யத்தாலே நிஷேத4விதி4ஸ்வீகாரத்தில்

ஸ்வரக்ஷண ஹேதுவான ஸ்வயத்நமில்லாமையாலும், ப்ரபத்த்யநந்வயமுண்டாகவதுவும் "ஸர்வபாபேப்₄யோ மோக்ஷ யிஷ்யாமி" என்கிற இதுவும் சேரச்சொழிவதும் நிஷேத₄ விதி₄த்யாக₃த்தில் ஆகையாலும், நிஷித்₃த₄ம் ஸர்வாதி₄ காரிகளுக்கும் அகர்த்தவ்யமாயிருக்கையாலே இவ்வதி₄காரி களுக்கும் அநநுஷ்டே₂யமாயிருக்கையாலும், அநந்யஸாத்₄ய மாய், அநந்யஸஹாயமான வஸ்துவைப்பற்றியிருக்கிறவ னுக்கு இது கூடாமையாலும், அதிப்ரஸங்க₃ம் வருகை யாலும், விஶேஷ நிஷேத₄ விதி₄ப₂லத்தாலும், நிஷித்₃த₄ நிவ்ருத்திமாத்ரம் - ஸர்வஶப்₃தா₃ர்த்த₂மாகுலும் வித்₄யந்தர விஹிதங்களான ப்ரவ்ருத்திரூப த₄ர்மங்களே இங்கு ஸர்வஶப்₃தா₃ர்த்த₂ங்களாக விவக்ஷிதங்களாகையாலும், நிஷேத₄விதி₄த்யாக₃ம் வித்₄யந்தரத₄ர்மத்யாக₃த்தோபாதி கர்த்தவ்யமன்று.

ஆகையாலே நிஷேத₄விதி₄ த்யாஜ்யமன்று, பரித்யா ஜ்யமாகச் சொல்லுகிறது-உபாயதாபே₄த₃த்தை. ஆகை யாலே த்யாஜ்யமென்னவுமாம்.

"பரி" - என்கிற உபஸர்க்க₃ம் - வாஸநாருசி ஸஹித மான த்யாக₃த்தைச் சொல்லுகிறது.

அவை கிடக்குமாகில் மேல் பரிக்₃ரஹிக்கப்படுகிற ஸாத₄நத்தில் அந்வயமின்றிக்கேயொழியும். a "மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்னுமாபோலே யிருக்கவேணும். ஸ்வஸ்வரூபத்திற்போலே உபாயத்தில் ஸ்வஸ்பர்ஶமும் விரோதி₄யாயிருக்கும். b "என்னுன் செய்கேன் யாரே களைகண்" என்றுரிறே. "'அநாதி₃காலம் அநுபாயங்களிலே உபாயபு₃த்₃தி₄ பண்ணிப்போந்தோம்' என்று லஜ்ஜாபுரஸ்ஸரமான த்யாக₃த்தைச் சொல்லு கிறது" என்று ஆழ்வான் பணிக்கும். ஸாத்₄யதா ப்ரதிபத்தி பண்ணவேண்டுமதிலேயிறே ஸாத₄நத்வபு₃த்₃தி₄

a நாச்சியார்திருமொழி 1-5. b திருவாய் 5 8-3.

பண்ணிப்போந்தது, ஶுக்லமான ஶங்க₂த்திலே பீதத்வ பு₃த்₃தி₄ பண்ணுமாபோலே. ஸ்வீகாரத்துக்கு "ஏக"பத₃ம் போலே த்யாக₃த்துக்கு இந்த உபஸர்க்க₃ம். அது உபாய பௌஷ்கல்ய ப்ரதிபாத₃கமாயிருக்கும். இது த்யாக₃ பௌஷ்கல்ய ப்ரதிபாத₃கமாயிருக்கும். இப்ரதிபத்தியி னுடைய அத்யந்தாப₄ாவமிறே குஞயவாவது. ப்ரத்₄வம் ஸாப₄ாவமுண்டானால் அதுவும் தே₃ாஷாயவாம்படியிறே யிருப்பது. த்யாக₃ந்தன்னிலும் அந்வயமில்லாதபடியானு லாயிற்று ஸ்வரூப பூர்த்தியுள்ளது. 'அங்க₃மான உபாயாந்தராநந்வயம் அத்யந்தாப₄ாவத்திலுமுண்டாகை யாலே அங்க₃த்தில் அந்வயமில்லாமையால் அங்கி₃யில் அந்வயமில்லை என்று சொல்லப்பெறாது' என்று நஞ்ஜீயர் அருளிச்செய்வர். இவ்விடத்தில் அப்படி சொல்லவேண்டு கிறது ப்ரஸக்தமாகையாலேயிறே. இவ்வாகாரமில்லாமை யாலே உபாயாந்தர பரித்யாக₃விது₄ரமாக ப்ரபத₃நமாத்ரமே த்₃வயத்தில் ப்ரதிபாதி₃தமாயிற்று.

'த்யாக₃ம் ஸ்வீகாராங்க₃மாகையாலே த்யாக₃ஸாபேக்ஷ தையாலே ஈஶ்வரனுடைய நைரபேக்ஷ்யம் குலையும்' என்கிற சோத்₃யமும் பரிஹ்ருதம். அங்கி₃ஸ்வரூபந்தானும் நைர பேக்ஷ்யத்துக்குக் குறையின்றியிலேயிருக்க, தத₃ங்கம் நைர பேக்ஷ்யத்துக்கு ப₄ஞ்ஜகமாகப் புகுகிறதன்றிறே. நிரபேக்ஷ னன ஈஶ்வரனுக்கு த்யாக₃ஸ்வீகாராதி₃களில் வருகிற ஸாபேக்ஷதை தே₃ாஷாயவாகாது.

ஆக, இந்த ல்யப்பாலே உபாயாந்தர பரித்யாக₃ம் ஸித்₃தே₄ாபாயஸ்வீகாரத்துக்கு அங்க₃மென்னுமிடத்தைச் சொல்லுகிறது. 'ப்ரபத்தியாவது-ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றுகை' என்று அநந்தாழ்வான் வார்த்தை. இந்த ல்யப்பு **1. "பு₄க்த்வா சாந்த்₃ராயணம் சரேத்"** என்கிறது போலன்றிக்கே, **2. "ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத"** என்கிறது போலேயாய், த்யாக₃த்தில் அந்வயமில்லாதபோது ஸ்வீகா ரத்தில் அநந்வயத்தை ஸூசிப்பிக்கிறது.

ஆக, இரண்டு பத₃மும் த்யாஜ்யபௌஷ்கல்யத்தையும் த்யாக₃பௌஷ்கல்யத்தையும் சொல்லுகிறது.

### 'மாம்'பத₃ார்த்த₂ம்

(3) மேல் பத₃ம் ஸ்வீகார்ய ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. (மாம்) — த்யாஜ்யங்களான த₄ர்மத்திற்காட்டில் ஸ்வீகார்யமான த₄ர்மத்துக்குண்டான வ்யா₂வ்ருத்தியைச் சொல்லுகிறது.

அவை — ஆப₄ாஸத₄ர்மங்களுமாய், அநித்யங்களுமாய், அநேகங்களுமாய், ஸாத்₄யங்களுமாய், து₃ர்லப₄ங்களுமாய், ஸ்வரூபவிரோதி₄களுமாய், ஸாபேக்ஷங்களுமாய், அசேதநங்களுமாய், ஸாபாயங்களுமாய், து₃ர்லப₄ப்ரமாணங்களுமாய், அஶக்தங்களுமாய், அதி₄க்ருதாதி₄காரங்களுமாய், விளம்ப₃ப₂லப்ரத₃ங்களுமாயிருக்கும்.

இது—ஸாக்ஷாத்₃த₄ர்மமுமாய், நித்யமுமாய், ஏகமுமாய், ஸித்₃த₄முமாய், ஸுலப₄முமாய், ஸ்வரூபாநுரூபமுமாய், நிரபேக்ஷமுமாய், சேதநமுமாய், நிரபாயமுமாய், ப்ரப₃ல ப்ரமாணமுமாய், ஶக்தமுமாய், ஸர்வாதி₄காரமுமாய், அவிளம்ப₃ப₂லப்ரத₃முமாயிருக்கும்.

வாக்யத்₃வயத்தில் ப்ரத₂மபத₃த்திற்சொன்ன அர்த்த₂ விஶேஷங்களெல்லாம் இவ்விடத்தே அநுஸந்தே₄யம். அதாகிறது - ஶ்ரிய:பதித்வமும், வாத்ஸல்யாதி₃கு₃ணசதுஷ்டயமும், தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹமும்.

1. "ஏஷ நாராயண: ஶ்ரீமாந்" என்று க்ருஷ்ணனும் வந்து அவதீர்ணனானவன் ஶ்ரிய:பதியாகையாலே, பூர்வாபராத₄க்ஷாமணம்பண்ணி புருஷகாரபூ₄தையாய் நின்று சேர்ப்பிக்கக்கடவ பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தி அநுஸந்தே₄யம்.

அத₄ர்மப்₃த்₃தி₄யாலே ஸ்வத₄ர்மத்தில் நின்றும் நிவ்ருத்தனாய் அஸ்தா₂ந ஸ்நேஹகாருண்ய த₄ர்மாத₄ர்மதி₄யாகுலனான அர்ஜுநனுக்கு பு₃பு₄த்ஸிதங்களான ஸ்வஸ்வரூபாதி₃களைத் தன்பேராக அருளிச்செய்கையாலே, வாத்ஸல்யம் அநுஸந்தே₄யம்.

1. **"மத்த: பரதரம் நாந்யத்"** இத்யாதி₃களாலே தன்னுடைய ஸர்வஸ்மாத்பரத்வத்தைப் பலவிடங்களிலும் அருளிச்செய்தவளவன்றிக்கே, அர்ஜுநன் தான் பல ப்ரகாரங்களாலும் அபரோக்ஷிக்கும்படி பண்ணுகையாலே, ஸ்வாமித்வம் அநுஸந்தே₄யம்.

2. **"ஹே க்ருஷ்ண ஹே யாத₃வ ஹே ஸகே₂தி"** என்று இவன்தானே சொல்லும்படி தே₃வதே₃வனான தன்னுடைய உத்கர்ஷத்தையும், இவனுடைய நிகர்ஷத்தையும் பார்த்து நெகிழவிடாதே இவனோடே ஏகரஸனாய்க்கலந்து பரிமாறுகையாலும், 3. **"ஆஸ்யே க்₃ருஹீத்வா துரக₃ஸ்ய ப₃ந்த₄நந்"** இத்யாதி₃யில் சொல்லுகிறபடி இவனுக்கு இழிதொழில் செய்கையாலும் ஸௌசீல்யம் அநுஸந்தே₄யம்.

அப்ராக்ருதமான தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தைச் சக்ஷுர்விஷயமாம்படி பண்ணுகையாலே, ஸௌலப₄யம் அநுஸந்தே₄யம்.

4. **"கம் ப்₃ரஹ்ம க₂ம் ப்₃ரஹ்ம"** 5. **"ரஸோ வை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வாநந்தீ₃ ப₄வதி"** 6. **"ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ"** என்று சொல்லுகிறபடியே நிரதிஶயபோ₄க்₃யங்களான ஸ்வரூபகு₃ணங்களைப் பரிச்சே₂தி₃க்கிலும் பரிச்சே₂தி₃க்கவொண்ணாதபடியான, 7. **"தத₃ நியமிதகண்டூ₃ந் பாண்ட₃வஸ்யந்த₃நாஶ்வாநநுதி₃நமபி₄ஷிஞ்சந்நஞ்ஜலிஸ்தை₂: பயோபி₄: । அவது விததகா₃த்ரஸ்தோத்ரஸம்ஸ்யூதமௌலிர் த₃ஶநவித்₄ருதரஶ்மிர் தே₃வகீ புண்யராஶி: ॥"** 3. **"ஆஸ்யே க்₃ருஹீத்வா துரக₃ஸ்ய ப₃ந்த₄நந்"** 8. **"ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி"**

a "போதார் தாமரையாள்" இத்யாதி₃. போ₄க்₃யதா ப்ரகர்ஷத்தையுடைத்தாய், அவற்றிற்காட்டிலும் திருவுள்ளத்துக்கு மிகவும் அபி₄மதமாய், இச்சா₂க்₃ருஹீதமாய், அணைந்த நாய்ச்சிமாரையும் b "அகலகில்லேன்" என்னும்படி பண்ணக்கடவதாய், அப்ராக்ருதமாய், அகாலகால்யமாய், **1. "யுவாகுமார:"** c "அரும்பினையலரை" என்கிற திருமேனியையும், d "சென்னிநீண்முடி" என்றும், **2. "ஸ்ரக்₃வீ ரத்நகிரீட"** என்றும், e "மெய்யமர்பல்கலன்" என்றும் இத்யாதி₃யில் சொல்லுகிறபடியே கிரீடாதி₃நூபுராந்தமாக அஸங்க்₂யேயமாயிருக்கிற தி₃வ்யாப₄ரணவர்க்க₃த்தையும், **3. "ப்ரியோஸி மே"** என்று தான் அருளிச்செய்தபடியே தனக்கு ப்ரியவிஷயமான அர்ஜுநனுக்கு யதா₂வத் ப்ரகாஶிப்பித்தபடியை "மாம்" என்று நிர்த்தே₃ஶிக்கிறான். ஆகையாலே தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹமநுஸந்தே₄யம். **4. "க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்" 5. "ஶரண்யம் ஶரணஞ்ச த்வாமாஹு:" 6. "அம்ருதம் ஸாத₄நம் ஸாத்₄யம்" 7. "யோகே₃ா யோக₃வித₃ாம் நேதா"** f "வைப்பாம் மருந்தாமடியரை வல்வினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக்கொடானவன் - எப்பாலவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்தப்பாலவன் எங்களாயர் கொழுந்தே" என்றும் இத்யாதி₃யில் சொல்லுகிறபடியே, ஸநாதநத₄ர்மமான ஸித்₃த₄ ஸாத₄நஸ்வரூபம் சொல்லுகிறது.

### ஏகபதா₃ர்த்த₂ம்

(4) "ஏகம்"— இவ்வுபாய விஶேஷத்தைச் சொல்லுகிற பலவிடத்திலும் அவதா₄ரண ப்ரயோக₃முண்டாகையாலே. உகாரம்போலே இந்த ஏகஶப்₃த₃மும் ஸ்தா₂நப்ரமாணத்தாலே அவதா₄ரண வாசகமாயிருக்கிறது. **8. "மாமேவ யே ப்ரபத்₃யந்தே" 9. "தமேவ ஶரணம் க₃ச்ச₂"** என்றும் இத்யாதி₃யான ப்ரபத்தி ப்ரகரணத்திலே தானே ஸாவ

a பெரியதிருமொழி 6-2-9. b திருவாய் 6-10-10. c பெரியதிருமொழி 7-10-1. d திருவாய் 5-5-9. e திருவாய் 6-6-7. f திருவாய் 1-7-2.

தூ₂ாரணமாக அருளிச்செய்தானிறே. a "சரணே சரண்" என்றும், b "நின்பாதமே சரணாக" என்றும் இத்யாதி₃யாலே ஆழ்வார் அருளிச்செய்தார்.

இதுதனக்கு உபாயாந்தரங்கள் வ்யாவர்த்யமாக மாட்டாது; பௌநருக்த்யம் ப்ரஸங்கி₃க்கையாலே. அநேகம் ஔஷத₄ங்கூடி ஒன்றாகவேண்டுமாபோலே அனேகங்கூடி ஒரு ஸாத₄நமாகவேண்டும் உபாயாந்தர வ்யாவ்ருத்தி ஏக வசநத்தாலே சரிதார்த்த₂ம். தே₃வதாந்தர வ்யாவ்ருத்த பரத்வம் சொல்லவொண்ணாது, தூ₃ரதோ நிரஸ்தமாகை யாலே. மத்₄யமபுருஷனில் ப்ரதிபாத்₃யமான ஸித்₃த₄ ஸாத₄ந ப்ரதிபத்தியில் ஸாத₄நத்வபு₃த்₃தி₄வ்யாவ்ருத்தியாக மாட்டாது; ஸாத₄நத்துக்கு யோக்₃யதையில்லாமையாலே. உண்டாகில் உபாயாந்தர துல்யத்வம் ப்ரஸங்கி₃க்கும். யோக்₃யதாவைது₄ர்யத்தில் இத:பூர்வமேவ கார்யகரத்வம் ப்ரஸங்கி₃யாதோ? என்ன ஒண்ணாது; அகார்ய கரத்வம் அதி₄கார்யபா₄வ ப்ரயுக்தமாகையாலே. அதி₄காரி ஸாபேக்ஷத்வம் தோ₃ஷாயவன்று. ஆகையாலே ஏகபத₃ம் நிரர்த்த₂கமாகவிருந்ததே என்னில்; — உபாயாந்தரமும், தே₃வதாந்தரமும், அநேகத்வமும் வ்யாவர்த்யமன்றேயாகி லும், ஸித்₃த₄ஸாத₄ந(ஸ்வீகார)த்தில் ஸாத₄நத்வபு₃த்₃தி₄ வ்யா வர்த்யமாகலாம்; அந்வயவ்யதிரேகத்தாலே ஸாத₄நமென்று நினைக்கலாயிருக்கையாலே. ஆனால் ஸாத₄நத்வம் ப்ரஸங்கி₃ யாதோ? என்னவொண்ணாது, ஸாத₄நத்வமுண்டாம்போது உபாயாந்தரவ்யாவ்ருத்தி குலைகையாலே. ஆனாலும் ப்ர பத்தி அபேக்ஷிதையாகையாலே ஸித்₃த₄ஸாத₄நத்வ பு₃ங்க₃முண்டாகாதோ? என்னில்: — உண்டாகாது, உபா யம் நைரபேக்ஷ்யமாகையாலே. தத₃கோபாயத்வ ப்ரதிபத்தியாலே அதி₄காரியினுடைய உபாஸகவ்யா வ்ருத்திக்கும் குறையில்லை. அதி₄கார்யபேக்ஷ யாலே இதுக்குமுன்பு கார்யகரமின்றிக்கே போருகிறது;

a திருவாய் 5.10.11. b திருவாய் 5.7.10.

ப்ரார்த்த₂னை என்செய்ய? என்னில்; ப₂லத₃ஶையிற்போலே இங்கு ப்ரார்த்த₂னையுண்டு. ப₂லத₃ஶையில் புருஷார்த்த₂ தாஸித்₃த்₄யர்த்த₂மாக ப்ரார்த்த₂னம் அபேக்ஷிதமாகக் கடவது. பாரதந்த்ர்யம் நித்யமாகிறவோபாதி பரதந்த்ரமான வஸ்துதான் சித்₃வஸ்துவாகையாலே, சைதந்யகார்யமான அந்த ப்ரார்த்த₂னாவிஶேஷமும் நித்யஸித்₃த₄மாயிருக்கும். இது த்யாஜ்யகோடியிலும் அந்வயியாது. உபாயகோடியிலும் அந்வயியாது க "அதுவுமவனதின்னருளே" என்கையாலே ப்ரதிபத்திவிஶேஷத்துக்கு உபாய கார்யத்வமுண்டித்தனையல்லது உபாயத்வமில்லை. ஈஶ்வரன் உபாயமாகையாலே இத்தை உபாயமென்னவொண்ணாது. உபாயாங்க₃மென்ன வொண்ணாது, உபாய பூ₄தமான ஈஶ்வரஸ்வரூபம் ஸித்₃த₄மாய், பரமசேதநமாய், ஸர்வஶக்தியுக்தமாயிருக்கையாலே. அங்க₃த்வம் கொள்ளில், ஈஶ்வரனுக்கு உத்பாத்₃யத்வாநித்யத்வாநேக ரூபத்வங்களாதல், அசைதந்யாஸாமர்த்₂யஸாபேக்ஷதை களாதல் உண்டாம். அப்போது, உபாயாந்தரவ்யாவ்ருத்தி ரூபமான ஸித்₃த₄த்வம், ஏகரூபத்வம், பரமசேதநத்வம், ஸர்வ ஶக்தியோக₃ம், ஙிரபேக்ஷ்யம் தொடக்கமான த₄ர்மங்களும் குலையும். இவ்வுபாயவிஶேஷம் ஸ்வவ்யதிரிக்தமாயிருப்ப தொன்றை ஸஹியாமையாலேயிறே ஆநுகூல்யஸங்கல் பாதி₃களுக்கு உபாயாங்க₃த்வமின்றிக்கே அவக₄தஸ்வேத₃ம் போலே ஸம்ப₄விதஸ்வப₄வத்வமுண்டாகிறது. ப்ரபத்த வ்யக₃தங்களான ரக்ஷகத்வாதி₃கள்போலே ப்ரபந்நக₃தமான இப்ரதிபத்திவிஶேஷம் ஸ்வரூபாநுப₃ந்தி₄யாய்க் கிடக்கு மித்தனை. த்யாக₃த்துக்கு உபாயாந்தர்ப₄ாவமுண்டாம் போதாய்த்து இது உபாயத்தில் அந்தர்பூ₄தமாவது. இவ்வதி₄காரியினுடைய ஜ்ஞாநகார்யமாய், ராக₃ப்ராப்தமாய், ஸ்வரூபநிஷ்ட₂மாய், ப்ராப்யகோடிக₄டிதமாயிருக்குமத்தனை. பரித்யக்தங்களான த₄ர்மங்கள்போலே ஸ்வீகார்யமான இந்த த₄ர்மமும் ஸாத₄நமாகில் ஸாங்க₃மாக விருக்கவேண்டாவோ?

---

க திருவாய் 8-8-3.

என்னில்; ஸாத₄நபூ₄தங்களுக்கெல்லாம் ஸாங்க₃த்வ நியம மில்லை. ப₄க்தியோக₃த்திலே அங்க₃ஸாபேக்ஷதை கண்டோமே என்னில்; அது ஸாத₄நத்வப்ரயுக்தமன்று, ஸாத்₄யத்வப்ரயுக்தம். இந்த த₄ர்மவிஶேஷம் ஸநாதந த₄ர்மமாகையாலே ஜ்ஞாநகர்மஸாத்₄யமான த்யாஜ்யத₄ர்மம் போலே த்யாக₃ஸ்வீகாரஸாத்₄யமாயிராது; ஆனால் ஈஶ்வர ஸாபேக்ஷமாயிருக்கக் குறையென்? என்னில்; அதுவு மில்லை, ஈஶ்வரவ்யதிரேகமில்லாமையாலே. ஆனாலும் அங்க₃ஸாபேக்ஷதை வேணுமென்னில்; அது உபாயாந்தர பூ₄தம். ஸித்₃த₄த₄ர்மம்போலே ஸாத்₄யத₄ர்மமும் ஆகார த்₃வயவிஶிஷ்டமாயிருக்கும்; இதில் ஸாத்₄யத₄ர்மத்தில் ஓர் ஆகாரம் த்யாஜ்யமாயும் ஓர் ஆகாரம் உத்₃தே₃ஶ்யமாயு மிருக்கும்; ஸித்₃த₄த₄ர்மத்தில் இரண்டும் உத்₃தே₃ஶ்யமா யிருக்கும்.

## 'ஶரண'பதா₃ர்த்த₂ம்

(5) [ஶரணம்]—கீழ் ஸ்வீகார்யவஸ்துவைச் சொல் லிற்று; இது ஸ்வீகார ப்ரகாரத்தைச் சொல்லுகிறது. த்₃வயத்தில் ஶரணஶப்₃த₃ம்போலே இதுவும் உபாயவாசக மாயிருக்கிறது. "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்கிற துக்கு அநந்தரமாக ப்ரயுக்தமான ஶரணஶப்₃த₃மாகை யாலே, ரக்ஷிதாவைச் சொல்லுகிறதாகமாட்டாது; உபாயாந்தர பரித்யாக₃த்துக்கு பஶ்சாத்₃பா₄வியாய், பாப விமோசநத்துக்குப் பூர்வபா₄வியாயிருக்கையாலே உபாய வாசகமாயித்தனை.

இவ்வஸ்துவுக்கு ப்ராப்யதயா ஸ்வீகார்யத்வமுமுண்டு. இதில் ப்ராப்யதயா ஸ்வீகார்யத்தை வ்யவச்சே₂தி₃க்கிறது. ப்ராபக ஸமயத்திற்போலே ப்ராப்ய ஸமயத்திலும் ப்ராப காந்தர பரித்யாக₃ம் ஸமாநமாகையாலே, தத்₃விஶிஷ்டமே யாகிலும் ஸ்வீகாரமாத்ரம் வ்யவச்சே₂தி₃க்கமாட்டாதென்றும் சொல்லுவர்கள்.

ஆக, ஶரணஶப்₃த₃ம் இஷ்ட ப்ராப்திக்கும் அநிஷ்ட நிவ்ருத்திக்கும் அவ்யவஹிதமான ஸாத₄நபா₄வத்தைச் சொல்லுகிறது.

**'வ்ரஜ'பத₃ார்த்த₂ம்**

(6) [வ்ரஜ]—கீழ் ஸ்வீகார ப்ரகாரத்தைச் சொல்லிற்று; இதில் ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது. கீழ் பரித்யாஜ்யங்களாகச் சொல்லப்பட்ட த₄ர்மங்கள் ஸாதநத₄ர்மவ்யதிரிக்த த₄ர்மங்களாகையாலும், இந்த த₄ர்மந்தான் அவற்றில் அந்தர்பூ₄தமானாலும் பரித்யாக₃விஷயமாவது மோக்ஷ ஸாத₄நத்வவேஷமன்றிக்கே ஸாத₄நாங்க₃த்வமாகையாலும், ஸர்வத₄ர்மபரித்யாக₃ப்ரதிபாத₃நத்வத்துக்கும் ஸித்₃த₄ த₄ர்ம ஸ்வீகார வித₄ாநத்துக்கும் பரஸ்பர விரோத₄மில்லை.

[வ்ரஜ] என்றது - "பு₃த்₄யஸ்வ" என்கிறபடி. இந்த பு₃த்₃தி₄யாகிறது - த்யாஜ்யகோடியிலுத்தீர்ணமாய், உபாய கோடியில் அநநுப்ரவிஷ்டமாய், ப்ராபகாந்தர பரித்யாக₃ பூர்வகமாய், ப₄க₃வத்₃ரக்ஷகத்வாநுமதிரூபமாய், சைதந்ய கார்யமாய், ப்ரார்த்த₂நாக₃ர்ப்ப₄மாய், ப₄க₃வந்முக₂விகாஸ ஹேதுவாய், ஸ்வரூபாநுரூபமாய், வ்யபி₄சார விளம்ப₃ விது₄ரமாயிருப்பதொரு அத்₄யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷம். இதில் ஸாராம்ஶம் விஸ்ரம்ப₄விஶேஷமென்றும், விஸ்ரம்ப₄விது₄ரமானபோது அகார்யகரமென்னுமிடமும் த்₃வயத்திலே சொன்னோம். உபாயாந்தர பரித்யாக₃ பூர்வகத்வமும், ஸ்வஸ்மிந் உபாயத்வ ப்ரதிபத்தி ராஹித்யமும், வாத்ஸல்யாதி₃கு₃ண விஶிஷ்ட வஸ்துவிஷயத்வமும் தொடக்கமானவை இப்ரதிபத்தி விஶேஷத்துக்கு ஸ்வரூபம். "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்கிறதுதானே ப்ரமாணம். பரித்யக்தஸாத₄யஸாத₄நனாய் ஸ்வீகாரத்தில் உபாயத்வ ப்ரதிபத்திக்கு அயோக்₃யனாயிருக்குமவன் இதுக்கு அதி₄காரி. இந்த பு₃த்₃தி₄விஶேஷம் ஏககரணயுக்த மாகவுமாம், கரணத்ரயயுக்தமாகவுமாம். இதில் உபாயத்வ மில்லாமையாலே ப₂லத்துக்கு வ்யபி₄சாரமில்லை என்னு மிடமும் த்₃வயத்திலே சொன்னோம்.

ஸௌலப்₄யாதி₃ கு₃ணவிஶிஷ்ட வஸ்துகோ₃சரத்வம் இரண்டிலுமுண்டு. த்யாக₃விஶிஷ்டத்வமும் நைரபேக்ஷ்யமும் இங்கு அதிரிக்தமான அர்த்த₂ம்.

ஆக, பூர்வார்த்த₄த்தாலே-1. த்யாஜ்யஸ்வரூபத்தையும், 2. தத்₃ப₃ாஹுள்யத்தையும், 3. த்யாக₃த்தையும், 4. தத்ப்ரகாரத்தையும், 5. அதினுடைய அங்க₃த்வத்தையும், 6. ஸ்வீகார்யவஸ்து ஸ்வரூபத்தையும், 7. இதினுடைய நைரபேக்ஷ்யத்தையும், 8. ஸ்வீகாரப்ரகாரத்தையும், 9. ஸ்வீகாரத்தையும் சொல்லிற்று.

## 'அஹம்'பத₃ார்த்த₂ம்

(7) இனிமேல், ப்ரபத்தவ்யக்ருத்யத்தையும், ப்ரபந்நக்ருத்யத்தையும் சொல்லுகிறது. விரோதி₄நிவர்த்தகத்வம் ப்ரபத்தவ்யக்ருத்யம்; நிர்ப்ப₄ரத்வம் ப்ரபந்நக்ருத்யம். [அஹம்]—ஸர்வஜ்ஞத்வாதி₃கு₃ணவிஶிஷ்டனான நான். கீழ், உபாயபரிக்₃ரஹத்துக்கு ஏகாந்தங்களான கு₃ணவிஶேஷங்களைச் சொல்லிற்று; இங்கு, கார்யகரத்வத்துக்கு ஏகாந்தமான கு₃ணவிஶேஷங்களைச் சொல்லுகிறது. வாத்ஸல்யாதி₃களில்லாதபோது உபாயபரிக்₃ரஹமின்றிக்கேயொழியுமாபோலே, ஜ்ஞாநாதி₃களில்லாதபோது கார்யகரமன்றிக்கேயொழியும். அசித்தும் சேதநனும் சேதநாந்தர்யாமித்வமும் பரத்வமும் வ்யூஹமும் தொடக்கமானவைகளல்ல வ்யாவர்த்யம்; விப₄வாந்தரங்களும் இவ்விப₄வந்தன்னில் முன்னும்பின்னும் வ்யாவர்த்யம். தே₃ஹேந்த்₃ரியமந:ப்ராணாதி₃களிலே ஆத்மபு₃த்₃தி₄பண்ணியிருக்குமவனுடைய 'அஹம்'ஶப்₃த₃ப்ரயோக₃ம் தத்தத்₃வஸ்துமாத்ரபர்யவஸிதமாயிருக்கும்; தே₃ஹாது₃த்தீர்ண வஸ்துமாத்ரவிஷயஜ்ஞாநவானுடைய அஹம்ஶப்₃த₃ப்ரயோக₃ம் சேதநமாத்ரபர்யவஸிதமாயிருக்கும்; ஈஶ்வரனுடைய அஹம்ஶப்₃த₃ப்ரயோக₃ம் உப₄யவ்யாவ்ருத்தமாயிருக்கும்.

ஜ்ஞாநமும் ஶக்தியும் ஶேஷித்வமும் பூர்த்தியும் இவ்விடத்தே அநுஸந்தே₄யம். இவையில்லாதபோது மேல்

சொல்லுகிற விரோதி₄நிவ்ருத்தி கூடாது. இங்கு ஶக்தியாக நினைக்கிறது:—a "யானும்...இசைந்து" என்றும், b "இசைவித்தென்னை" என்றும் சொல்லுகிறபடியே சேதநனுடைய அவிவாத₃ஜநநத்துக்கும் ஸம்ஸாரவிமோசநத்துக்குமடியான ஸாமர்த்₂யத்தை. அத்தைப்பற்ற ப்ரளயாபத்₃விமோசநமும், ஸர்வஸௌலப்₄யமும், ஸர்வவஸ்துக்களிலும் பரிஸமாப்ய வ்யாபநவ்ருத்தியும் தொடக்கமானவை அத்யந்த ஸுலப₄கங்கள் என்னும்படியிருக்கும். இதில் சொல்லுகிற கு₃ணவிஶேஷங்கள் சேதநனுடைய அநந்யஸாத₄நத்வத்துக்கும் ஈஶ்வரனுடைய ப₂லப்ரதா₃த்ருத்வத்துக்கும் உபயுக்தங்களாயிருக்கும். (மாம்) என்று - 1. "உத்₃த்₄ருதாதி₃ சரண:" என்கிறபடியே இவன்கால் தன் தலையிலே பட நிற்கும் நிலையைச் சொன்னான்; (அஹம்) என்று-தன்கால் அவன்தலையிலே பட நின்ற நிலையைச் சொல்லுகிறான். c "தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தானாகிலும் - தார்மன்னர் தங்கள் தலைமேலான் சாழலே" என்றதிறே. (மாம்) என்று- கையுமுழவுகோலுமாய்நின்ற வேஷத்தைக் காட்டினான். [அஹம்] என்று-கையுந்திருவாழியுமாய்நின்ற வேஷத்தைக் காட்டுகிறான். d செழுந்தார்விசயனிறே. e "பற்றலர் வீயக்கோல் கையிற்கொண்டு" f "சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன்" என்னுநின்றதிறே. (மாம்) என்று த₄ர்மங்களைக் குலைக்கும் நிலையைக் காட்டினான்; அஹமென்று - அத₄ர்மங்களைக் குலைக்கும் நிலையைக்காட்டுகிறான். 'மாம்' என்கிறது உக்திக்கு விபரீதமான நிலையை; அஹமென்கிறது - அநுஷ்டா₂நத்துக்கு விபரீதமான நிலையை.

### 'த்வா'பதா₃ர்த்த₂ம்

(8) (த்வா)—ஸாத்₄யமான ஸாத₄நங்களை ஸவாஸநமாக த்யஜித்து ஸித்₃தோ₄பாயஸ்வீகாரம்பண்ணியும், தே₃ஹாத்மப்₄ரமந்தன்னையும், தே₃ஹாநு₃த்தீர்ணமான ஆத்ம

a பெரியதிருவந்தாதி26. b திருவாய்5-8-9. c பெரியதிருமொழி11-5.8. d பெரியாழ்திரு 1-8 6 e பெரியதிருமொழி 2-3.1. f திருப்பாவை 14.

வஸ்துவில் ஸ்வாதந்த்ர்யபு₃த்₃தி₄யையும், அந்யஶேஷத்வ ப்ரதிபத்தியையும், தச்சே₂ஷத்வமாத்ர பு₃த்₃தி₄யையும், ஸாத்₄யாந்தரங்களில் ஸாத்₄யதா பு₃த்₃தி₄யையும், ஸாத₄நாந்தரங்களில் ஸாத₄நத்வ பு₃த்₃தி₄யையும், ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரத்தில் உபாயத்வ பு₃த்₃தி₄யையும், க்ஷுத்₃ரஸாத்₄யங்களகப்பட ப்ரவ்ருத்தி ஸாத்₄யமாயிருக்க து₃ர்லப₄மான மோக்ஷபுருஷார்த்த₂த்துக்கு நிவ்ருத்தி ஸாத்₄யத்வம் அக₄டிதமென்கிற பு₃த்₃தி₄விஶேஷம் தொடக்கமானவற்றையும் ஸவாஸநமாக த்யஜித்திருக்கிற உன்னை.

கீழிற்பத₃த்தில் ஈஶ்வரஸ்வரூபஞ் சொல்லிற்று; இப்பத₃ம் அதி₄காரிஸ்வரூபத்தை ப்ரதிபாதி₃க்கிறது. அங்கு, ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வங்களும் ப்ராப்தியும் நைரபேக்ஷ்யமும் சொல்லப்பட்டது; இங்கு, அஜ்ஞாநாஶக்திகளையும் அப்ராப்தியையும் ஆகிஞ்சந்யத்தையும் சொல்லுகிறது. ஸ்வீகாரத்தில் உபாய பு₃த்₃தி₄யிலுமகப்படச் சோம்பனாயிருக்கிற உன்னை. இந்த ப்ரதிபத்தி விஶேஷத்திலும் உபாயத்வபு₃த்₃தி₄ அநுவர்த்திக்குமாகில் உபாயாந்தரத்தோடொக்குமித்தனை. ஈஶ்வரனே உபாயமென்கிற அத்₄யவஸாய விஶேஷத்தில் ஸாத₄நத்வபு₃த்₃தி₄யும் அஸக்ருத்கரணமுமுண்டானபோது தத₃கோபாயத்வமில்லை. ஆக எல்லாங்கூட, த்யாக₃ஸ்வீகார விஶிஷ்டனான உன்னையென்றபடி.

**'ஸர்வபாப'பதா₃ர்த்த₂ம்**

(9) "ஸர்வபாபேப்₄ய:"—கீழ் நிவ்ருத்திக்கு ஏகாந்தமான கு₃ணவிஶேஷங்களைச் சொல்லிற்று; இது நிவர்த்யஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. பாபமாகிறது; — இஷ்டவிரோதி₄யாயிருக்குமதுவும், அநிஷ்டஹேதுவாயிருக்குமதுவும். மோக்ஷப்ரகரணமாகையாலே இவ்விடத்தில் இஷ்டவிரோதி₄களாகிறன-ப₄க₃வல்லாப₄விரோதி₄கள். ஜ்ஞாநவிரோதி₄யும், ருசிவிரோதி₄யும், உபாயவிரோதி₄யும் பண்டே நிவ்ருத்தமாய்த்து; இனி ப்ராப்திவிரோதி₄யிறே உள்ளது;

அத்தை ப்ரதிபாதி₃க்கிறது இப்பத₃ம். 1. "புண்யபாபே விதூ₄ய" என்றும், a "சார்ந்த இருவல்வினைகளும் சரித்து" என்றும் இத்யாதி₃களிலே - பாபத்தோபாதி புண்யமும் த்யாஜ்யமாகச் சொல்லிற்றிறே; ஆகையாலே, புண்ய பாபங்களிரண்டையும் பாபஶப்₃த₃த்தாலே சொல்லுகிறது.

ப₃ஹுவசநத்தாலே - அவற்றினுடைய பா₃ஹுள்யத் தைச் சொல்லுகிறது. அதாவது - b "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிற படியே-அஜ்ஞாநம் தொடங்கி ஶரீரஸம்ப₃ந்த₄மெல்லையாக உண்டானவை.

ஶரீரபாதஸமயத்தில் ஈஶ்வரஸ்ம்ருதிக்கு விஷயபூ₄தனும் படியும், வாங்மநஸாதி₃லயப்ரகாரமும் உத்க்ரமணப்ரகார மும், ஹார்த்₃தா₃நுக்₃ரஹ கார்யமான மார்க்₃விஶேஷ ப்ரகாஶமும், ஹ்ருத₃ய கு₃ஹாநிர்க₃மநமும், ஸூக்ஷ்மஶரீர ஸம்ஸர்க்₃மும், அர்ச்சிர் வாஸர ஶுக்லபக்ஷோத்தராயண ஸம்வத்ஸர வாயு ப₄ாஸ்கர சந்த்₃ர வித்₃யுத்₃ வருணேந்த்₃ர ப்ரஜாபதிகளாகிற ஆதிவாஹிகர்களுடைய ஶ்லாக₄ா விஶேஷங்களும், அண்ட₃ாவரணதிக்ரமணமும், ப்ரக்ருதி லங்க₄நமும், விரஜாப்ராப்தியும், ஸூக்ஷ்மஶரீரவிஶ்லேஷமும், அமாநவகரஸ்பர்ஶமும், அகாலகால்ய தி₃வ்யதே₃ஶ ப்ராப்தியும், அபஹதபாப்மத்வாதி₃ கு₃ணக₃ணப்ராது₃ர்ப₄ாவ மும், ப₄க₃வத்ஸங்கல்ப கல்பித தி₃வ்யதே₃ஹ ப்ரவேஶமும், அப்ராக்ருத ஸரஸ்ஸம்ஸர்க₃மும், தி₃வ்யாப்ஸரஸ்ஸங்க₄ஸத் காரமும், அப்ராக்ருதமண்ட₃லப்ராப்தியும், ப₄க₃வத்ஸௌர ப்₄யாதி₃ஸம்ஸர்க₃மும், அப்ராக்ருத கோ₃புரப்ராப்தியும், ஸூரிபரிஷத் ப்ரத்யுத்₃க₃மநமும், ராஜமார்க்₃க₃மநமும், ப்₃ரஹ்மவேஶ்ம ப்ரவேஶமும், ஸூரிபரிஷந் மண்டப ப்ராப்தியும், ஸபத்நீகஸர்வேஶ்வர த₃ர்ஶநமும், ஸ்துதி ப்ரணமாஞ்ஜலி ப்ரமுக₂ஸம்ப்₄ரமாநுவர்த்தநமும், பரமாத்ம

a திருவாய் 1-5-10. b திருவிருத்தம் 1.

ஸமீபப்ராப்தியும், பாத₃பீட₂பர்யங்காரோஹணமும், ப₄க₃வ து₃த்ஸங்க₃ஸங்க₃மும், ஆலோகநாலாபாலிங்க₃நாத்₃யநுப₄வமும் ஸ்வஸ்வரூபகு₃ண விக்₃ரஹாத்₃யநுப₄வஜநித ப்ரீதி ப்ரகர்ஷமும், நாநாவித₄விக்₃ரஹபரிக்₃ரஹபூர்வகஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோ₂சிதமான ஸர்வப்ரகார கைங்கர்ய கரணமுமாகிற ப்ராப்திவிஶேஷங்கள் இதுக்கு அநந்தரத்திலே அநுஸந்தே₄யங்கள்,

ஸர்வஶப்₃த₃த்தாலே - "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்று த்யாஜ்யங்களாக விஹிதங்களாய் பே₄ாக்₄யபு₃த்₃த்₄யா அநுஷ்டே₂யங்களாயிருக்கிற த₄ர்மங்களில் உபாயத்வ பு₃த்₃தி₄யையும், அபு₃த்₃தி₄பூர்வகமாக அநுஷ்டி₂தமான உத்தராக₄த்தையும், ப்ராரப்₃த₄த்தையும், லோகஸங்க்₃ர ஹார்த்த₂மாக அநுஷ்டே₂யங்களான த₄ர்மவிஶேஷங்களில் ஸ்வார்த்த₂தா பு₃த்₃தி₄யையும், ஆவ்ருத்த ப்ரபத்தியையும், ப₄க₃வத்₃பா₄க₃வத விஷயங்களில் உபசாரபு₃த்₃த்₄யா பண்ணும் அபசாரங்களையும், (பரி) என்கிற உபஸர்க்க₃த்தாலும் (ஏக) ஶப்₃த₃த்தாலும் சொன்னவற்றினுடைய அநுவ்ருத்தியையும் சொல்லுகிறது.

அதி₄காரி குறையாலேயாதல் உபாயபூ₄தனான ஈஶ்வரன் குறையாலேயாதலிறே பாபங்களில் சிறிது கிடப்பது. உபாயாந்தரபரித்யாக₃மும் ஸித்₃தோ₄பாய பரிக்₃ரஹமும் புஷ்கலமாகையாலே, அதி₄காரி பக்கல் குறையில்லை. ஜ்ஞாநஶக்த்யாதி₃ புஷ்கலமாகையாலே, உபாயபூ₄தனான ஈஶ்வரன்பக்கல் குறையில்லை.

### 'மோக்ஷயிஷ்யாமி' பதா₃ர்த்த₂ம்

(10) "மோக்ஷயிஷ்யாமி" கீழில் மூன்று பத₃மும், நிவர்த்தக ஸ்வரூபத்தையும், நிவர்த்யாஶ்ரயத்தையும், நிவர்த்யத்தையும், தத்₃பா₃ஹுள்யத்தையும் சொல்லிற்று. இந்தப் பத₃ம், நிவ்ருத்தியையும் நிவ்ருத்திப்ரகாரத்தையும் சொல்லுகிறது.

a "சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" என்கிறபடியே - அநாதி,கால ஸஞ்சிதங்களான கர்மவிஶேஷங்களெல்லாம் உன்னைக்கண்டு கூசி, தானே விட்டுப்போம்படி பண்ணுகிறேன். b"வானோ மறிகடலோ" என்றும் c "யானுமென் நெஞ்சுமிசைந்தொழிந்தோம்" என்றும் சொல்லுகிறபடியே, வேறு சிலருடைய இசைவு கொண்டு ப,ஹுப்ரயாஸத்தாலே போக்கவேண்டாதே, தன்னடையே விட்டுப்போம்படி பண்ணுகிறேன். பூர்வாக,த்தோடு உத்தராக,த்தோடு வாசியற ப்ரதிப,ந்த,ங்களெல்லாம், அக்,நிஸ்ப்ருஷ்டமான இஷீகதூலம்போலே d ஆயர்குலத்தினில் தோன்றும் மணிவிளக்கைக் கிட்டினால் d "தீயினில் தூசாகும்" என்கிறபடியே பிணமுங்காணவொண்ணாதபடி த,க்,த,மாய்ப்போமிறே. பாபங்களாகிறன:- குப்பையில் ஆமணக்குபோலே உயரவெழுந்து பாம்புபோலே மிடற்றைப் பிடிப்பதொன்றன்றே. சேதநன் பண்ணின கர்மங்கள் க்ஷணத்,வம்ஸிகளாகையாலே அப்போதே நஶித்துப்போம். அஜ்ஞனாகையாலே கர்த்தாவான இவனும் மறந்துபோம். ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான ஈஶ்வரன் ஒன்றொழியாமே உணர்ந்துகொண்டிருந்து ப்ராப்த காலங்களிலே தப்பாமே நிறுத்து அநுப,விப்பிக்கும். ஆகையாலே கர்மங்களாகின்றன - அவனுடைய நிக்,ரஹங்கள். 'இக் கர்மங்களைப் பண்ணிப்போருகிற சேதநன், ஸத்த்வம் தலையெடுத்து ஒருகால் அவன் திருவடிகளிலே தலைசாய்த்தால், விலக்காமை பற்றாக ரக்ஷணஸ்வப,ாவனாயிருக்கும் ஈஶ்வரன் இவ்வளவும் பெற்றால் விடானிறே. ஆகையாலே, இவனுடைய பூர்வாக,த்தை க்ஷமித்து உத்தராக,த்தில் அவிஜ்ஞாதாவாயிருக்கும். இனி யாரைக் கைக்கொண்டு அவை ஜீவிப்பது? உணர்ந்தபோது இவன்பக்கல் வ்யாமோஹாதிஶயத்தாலே e "நன்று செய்தார்" என்று அவைதன்னை கு,ணமாகக் கொள்ளுமாகையாலே, இவ்வதி,காரிக்கு ஒரு

a பெரியாழ்திரு 5-4-3. b பெரியதிருவந்தாதி 54. c ஷ 26.
d திருப்பாவை 5. e பெரியாழ்திரு 4-9-2.

ப்ரகாரத்தாலும் அநாதி₃காலார்ஜிதங்களான கர்ம விஶேஷங்களைக் குறித்து அஞ்சவேண்டா. "மோக்ஷ யிஷ்யாமி" என்கிற வார்த்தை தப்பாது என்று விஶ்வ ஸ்தனாயிருக்குமத்தனை வேண்டுவது' என்று, நஞ்ஜீயர் அருளிச்செய்வர்.

a "போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடிறப் பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கித் தன்தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யுஞ் சேமத்தையெண்ணித் தெளிவுற்று" b "தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கின்பக்கதி செய்யும்" என்று கீழ் அருளிச்செய்த வார்த்தையறிந்த வர்களுக்கு அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான இஷ்டப்ராப்தி யன்றோ ப₂லம்; ஆயிருக்க, அநிஷ்டநிவ்ருத்தி மாத்ரத் தையே ப₂லமாகச் சொல்லுவானென்? ப₄க₃வல்லாப₄ விது₄ரமாக அநிஷ்ட நிவ்ருத்தி மாத்ரமே ப₂லமாயிருப்பது கேவலனுக்கன்றோ, முமுக்ஷுவான இவ்வதி₄காரிக்கு இரண்டும் ப₂லமாய், அதுதன்னில் இஷ்டப்ராப்தி ப்ரதா₄ந மான ப₂லமாயிருக்கும். அத்தைச் சொல்லாதே தத₃ங்க₃ தயா உபாதே₃யமான ப்ரதிப₃ந்த₄க நிவ்ருத்திமாத்ரத்தையே ப₂லமாகச் சொல்லி விடுவானென்? என்னில்; விரோதி₄ நிவ்ருத்தியும் ப₄க₃வத் ப்ராப்தியுமாகிற ப₂லத்₃வயத்திலும் வைத்துக்கொண்டு ஒரு ப₂லத்தைச் சொன்னால் ப₂லாந் தரம் தன்னடையே வருகையாலே சொல்லிற்றில்லை. 1. "**மாமேவைஷ்யஸி ஸத்யம் தே**" என்று கீழில் உபாயத் துக்குச் சொன்ன ப₂லந்தானே இவ்வுபாயத்துக்குப் ப₂ல மாகையால் வேறு இதுக்குப் ப₂லமின்றிக்கேயொழிகை யாலே, ப₂லகத₂நம் பண்ணிற்றில்லை என்னவுமாம்.

ஆனால் விரோதி₄நிவ்ருத்திதன்னைச் சொல்லுவா னென்? என்னில்; 1. "**மாமேவைஷ்யஸி**" என்று ஸ்வ ப்ராப்தி லக்ஷணமான ப₂லத்தையாய்த்து அங்குச் சொல்

---

அ—25 a திருவாய் 7-5-10. b திருவாய் 7-5-11.

லிற்று; அதுக்குப் பூர்வபா₄வியாய் ப்ரதிப₃ந்த₄க நிவ்ருத்தி பூர்வகமாயிருக்கிற ப₂லவிஶேஷம் அங்கு அநுக்தமாகை யாலே தாத்₃ருஶமான ப₂லவிஶேஷம் இவ்வதி₄காரிக்கு அதி₄கமாகையாலும் இங்குச் சொல்லிற்று. இவனுக்கு அபி₄லஷிதமாய் ப₄க₃வத₃நுப₄வாதி₃ரூபமாயிருக்கிற ப்ரதா₄ந ப₂லம் — திரோஹிதங்களாயிருக்கிற மணித்₃யுமணிதீ₃பாதி₃ களினுடைய ப்ரகாஶாதி₃களைப்போலே ஸ்வதஸ்ஸித்₃த₄ மாய் ப்ரதிப₃ந்த₄க நிவ்ருத்திமாத்ரஸாகாங்க்ஷமாயிருக்கை யாலே, நிவ்ருத்தப்ரதிப₃ந்த₄கனான இவனுக்கு ஸ்வத ஏவ ஆவிர்பா₄வமாயிருப்பதொன்றாகையாலே தனித்துச் சொல்லவேண்டாவிறே. a "வழித்தங்கு வல்வினையை" என்றும், b "கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தை யமுதை நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடம்பி லிட்டு" என்றும் இத்யாதி₃களில் சொல்லுகிறபடியே தே₃ஹஸம்ப₃ந்த₄ப்ரமுக₂மான ப்ரதிப₃ந்த₄கவர்க₃ம் ஔபாதி₄கமாயிறேயிருப்பது ; ஆகையாலே, வந்தேறியான விரோதி₄ கழிந்தால் தன்னடையே வருகையாலே சொல்லிற்றில்லை.

## 'மாஶுச₁' ஶப்₃தா₃ர்த்த₂ம்

(11) (மாஶுச:) கீழெல்லாங்கூட, ஶோகநிவ்ருத்திக்கு வேண்டும் பரிகரங்களை விஸ்த்ருதமாகச் சொல்லிற்று; இப்பத₃ம் ஶோகநிவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஸாத₄நாந்தர ஸம்ப₃ந்த₄மும், ஸுகரஸாத₄நாத₃ர்ஶநமும், விரோதி₄ஸமூஹாநுவ்ருத்தியுமிறே ஶோககாரணம்.

து₃ஷ்கரங்களான ஸாத₄நாந்தரங்களை வாஸநாஸஹித மாக த்யஜிக்கச் சொல்லுகையாலே, ஸாத₄நாந்தர நிப₃ந்த₄நமாக ஶோகிக்கவேண்டா. ஸர்வஸுலப₄னாய், நிருபாதி₄கவத்ஸலனாய், ஸர்வஸ்வாமியாய், ஶீலவானாய், நிரபேக்ஷஸாத₄நபூ₄தனாய், பரமகாருணிகனாயிருக்கிற தன்னை

a பெரியதிருவந்தாதி 57. b திருவாய் 5-1-5.

நிரபேக்ஷ ஸாத₄நமாக ஸ்வீகரிக்கச் சொல்லுகையாலே, ஸுகரஸாத₄நாத₃ர்ஶநத்தாலே ஶோகிக்கவேண்டா. 'ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ப்ராப்தனாயிருக்கிற நான், ஸாம்ஸாரிக ஸகல து₃ரிதங்களையும் ஸவாஸநமாகப்போக்கி, நிரதிஶயாநந்த₃ யுக்தனும்படி பண்ணுகிறேன்' என்கையாலே விரோதி₄பா₃ஹுள்யத்தை அநுஸந்தி₄த்து ஶோகிக்கவேண்டா. உபாயஸ்வரூபத்தை அநுஸந்தி₄த்தாலும் ஶோகிக்க யோக்₃யதையில்லை. அதி₄காரிஸ்வரூபத்தை அநுஸந்தி₄த்தாலும் ஶோகிக்க யோக்₃யதையில்லை. ப₂லஸ்வரூபத்தை அநுஸந்தி₄த்தாலும் ஶோகிக்க யோக்₃யதையில்லை. உபாயம் ஸுஶகமாகையாலே உபாயத்தினுடைய து₃ஷ்கரத்வ நிப₃ந்த₄நமாக ஶோகமில்லை. அதி₄காரிக்குக் கர்த்தவ்யமில்லாமையாலே தந்நிப₃ந்த₄நமாக ஶோகிக்கவேண்டா. ஸர்வபாபமோக்ஷத்தைப் ப₂லமாகச் சொல்லுகையாலே ப₂லஸ்வரூபப்ரயுக்தமாக ஶோகிக்கவேண்டா. த்யாஜ்யங்களில் கிடப்பதொன்றில்லாமையாலே ஶோகிக்கவேண்டா. கர்த்தவ்யம் மாநஸவ்யாபாரமாத்ரமாகையாலே ஶோகிக்கவேண்டா. ப்ரதிப₃ந்த₄கம் நிஶ்ஶேஷமாக நிவ்ருத்தமாகையாலே தந்நிமித்தமாக ஶோகிக்க யோக்₃யதையில்லை.

உபாயாந்தர ஶ்ரவணத்தில் ஶோகியாதொழிகைக்கு யோக்₃யதையில்லாதாப்போலே இவ்வுபாயஶ்ரவணத்தில் ஶோகிக்க யோக்₃யதையில்லை. ஸாத₄நாந்தர ஶ்ரவணத்தில் ஶோகாநுவ்ருத்தியும் ஜ்ஞாத்ருத்வ கார்யம். ஸித்₃த₄ ஸாத₄நஶ்ரவணத்தில் ஶோகாபா₄வமும் ஜ்ஞாத்ருத்வ கார்யம். உபாயாந்தரஶ்ரவணத்தில் ஶோகாபா₄வமுண்டாய்த்தாகில் த்யாக₃ஸ்வீகாரங்களில் அந்வயமில்லை; ப்ரபத்த்யுபாய பரிக்₃ரஹத்துக்குப் பின்பு ஶோகாநுவ்ருத்தியுண்டாய்த்தாகிலும் த்யாக₃ ஸ்வீகாரங்களில் அந்வயமில்லை. ஸ்வாமிக்காய்த்து ப₂லித்வமுள்ளது; ப₂லியாயிருக்குமவனுக்காய்த்து உபாயாநுஷ்டா₂த்ருத்வமுள்ளது. ஸ்வாமி ஸ்வம்

மான வஸ்துவையிழந்தால் ஶோகிக்கும், ப₂லி ப₂லமில்லாதபோது ஶோகிக்கும், அநுஷ்டா₂தா அநுஷ்டா₂ந விரோத₄ம் பிறந்தால் ஶோகிக்கும்; மூன்றிலும் உனக்கு அந்வயமில்லாமையாலே ஶோகிக்க ப்ராப்தியில்லை. முன்பு ஶோகித்திலனாகில் உபாயாதி₄காரமில்லை, பின்பு ஶோகித்தானாகில் உபேயாதி₄காரமில்லை. முன்பு ஶோகித்திலனாகில் உபாயாந்தரதோ₃ஷம் அறிந்திலனும், பின்பு ஶோகித்தானாகில் உபாயகு₃ணம் அறிந்திலனும். ஶோகநிவ்ருத்திக்கு ஹேது உபாயஜ்ஞாநம்.

ஆக ஶோகநிவ்ருத்தியையும், ஸர்வபாபவிமோசநத்தையும், அப்பாபங்களுக்கு ஆஶ்ரயமான சேதநனுடைய ஸ்வரூபத்தையும், அவற்றுக்கு நிவர்த்தகனான ஈஶ்வரனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி₃கு₃ணவிஶேஷங்களையும், அவை கார்யகரமாம்படி பண்ணக்கடவதாய் சேதநக₃தமாயிருக்கிற பு₃த்₃தி₄விஶேஷத்தையும், பு₃த்₃தி₄விஶேஷ ப்ரகாரத்தையும், பு₃த்₃தி₄விஶேஷத்தில் உபாயத்வபு₃த்₃தி₄ராஹித்யத்தையும், பு₃த்₃தி₄விஶேஷவிஷயத்தையும், அதுக்கு அங்க₃பூ₄தமான பு₃த்₃த்₄யந்தர தத்பரிகரபரித்யாக₃த்தையும், அதுக்கு யோக்₃யதாபாத₃கங்களான ததி₃தரங்களினுடைய த்யாக₃த்தையும் சொல்லித் தலைக்கட்டுகிறது.

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

## 3. த்₃வயப்ரகரணம்

### உபோத்₃கா₄தம்

திருமந்த்ரத்தாலே ஸூசிதமான ப₄க₃வத₃நந்யார்ஹ ஶேஷத்வஜ்ஞானத்தையுடையனும், சரமஶ்லோகத்தாலே ப₄க₃வத்ப்ராப்திக்கு ப்ரபத்தி வ்யதிரேகேண விளம்ப₃ விது₄ரமாய் ஸ்வரூபாநுரூபமாயிருப்பதொரு ஸாத₄நவிஶேஷமில்லையென்று நிர்ணயித்து, ப்ராபகஸ்வீகாரபூர்வகமாக

ப்ராப்யத்தை லபி₄க்கவேணுமென்கிற கௌதுகத்தை யுடையனாயிருக்கும் அதி₄காரிக்கு, ஸ்வஶேஷத்வாநுரூப மான உபாயோபேயங்களை ப்ரதிபாதி₃க்கிறது த்₃வயம்.

ஜ்ஞானத்துக்குப் ப₂லம் தத₃நுரூபமான அநுஷ்டா₂ந மாகையாலே ரஹஸ்யத்₃வயத்திலும் ப்ரதிபாதி₃தமான உபாயோபேய விஷய ஜ்ஞாநம் அநுஷ்டா₂நஶேஷமாயிறே இருப்பது.

ஆகையாலே உபாயவிஷய ஜ்ஞாநத்திநுடைய ஸாப₂ல்யஹேதுபூ₄தமான உபாயாநுஷ்டா₂நத்தை ப்ரதி பாதி₃க்கிறது பூர்வவாக்யம்; உபேயவிஷயஜ்ஞாநஸாப₂ல்ய ஹேதுவாயிருக்கிற உபேயாநுஷ்டா₂நத்துக்குப் பூர்வபா₄வி யாயிருக்கிற உபேயப்ரார்த்த₂நத்தை ப்ரதிபாதி₃க்கிறது உத்தரவாக்யம்.

இதில் ப்ரதிபாதி₃தமான உபாயாநுஷ்டா₂நமும் உபேய ப்ரார்த்த₂நையும் இல்லாதபோது இவ்வதி₄காரிக்கு ஸாத₄க வ்யாவ்ருத்தியும் ஸாத்₄யாந்தர நிஷ்டா₂தி₃ வ்யாவ்ருத்தியு மின்றிக்கேயொழியக் கடவது.

ஆகையாலே, ஸ்வரூபாநுரூபமான ஸாத₄நஸாத்₄யங்க ளிரண்டையும் ப்ரதிபாதி₃க்கிற வாக்யத்₃வயமும் அநுஸந்தே₄யமாயிருக்கும்.

பூர்வவாக்யாநுஸந்தா₄நமில்லாதபோது ப₄க₃வதே₃க ஸாத₄நத்வலாப₄மில்லை; உத்தரவாக்யாநுஸந்தா₄நமில்லாத போது ப₄க₃வதே₃கஸாத்₄யத்வலாப₄மில்லை. உத்தரவாக்யாநு ஸந்தா₄நம் ஸாத₄கனுக்கும் ஸாதா₄ரணமாயிருக்கும்; பூர்வ வாக்யாநுஸந்தா₄நம் அதி₄காரித்ரயஸாதா₄ரணமாயிருக்கும்; ஆகையாலே, உப₄யாநுஸந்தா₄நமுண்டானாலாய்த்து அதி₄ காரித்ரய வ்யாவ்ருத்தியுமுண்டாவது.

வாக்யத்₃வயத்திலும் ப்ரதிபாதி₃க்கப்படுகிற ஸாத₄நஸாத்₄ யங்களையொழிந்த இதர ஸாத₄நஸாத்₄யங்களிரண்டுக்கும் ஸ்வரூபாநுரூபத்வம் அவிஶிஷ்டமாயிருக்குமாகையாலே,

அவை த்யாஜ்யங்களாகக்கடவன. இவை இவனுக்கு ஸ்வரூபத்துக்கு அநுரூபங்களாயிருக்கையாலே அத்யந்தம் உபாதே,யங்களாகக்கடவது. ஸ்வரூபாநுரூபமாயிருக்கிற இந்த உபாயோபேயங்களிறே வேத,தாத்பர்யவிஷயம்.

**1. "தஸ்மாத,பி வத்,யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்ச,ந்தி" 2. "தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" 3. "ந்யாஸ ஏவாத்யரேசயத்" 4. "யோ ப்,ரஹ்மாணம்" 5. "தமேவ ஶரணம் க,த:" 6. "ஸக்ருதே,வ ப்ரபந்நாய" 7. "ப,த்,த,ாஞ்ஜலிபுடம்" 8. "மஹத்யாபதி, ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்ய:" 9. "நமஶ்சக்ருர்ஜநார்த்த,நம்" 10. "அநந்ய ஸாத்,யே ஸ்வாபீ,ஷ்டே" 11. "யேந யேந த,ாதா க,ச்ச,தி" 12. "அநுஸஞ்சரந்" 13. "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" 14."க்ரியதாம் இதி மாம் வத," 15."தந்நியுக்த: கரிஷ்யாமி"** என்று இத்யாதி,களிற் சொல்லுகிறபடியே இந்த உபாயோபேயங்கள்தான் ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸாதி, ஸித்,த,ங்களான அளவன்றிக்கே, a "கழல்களவையே சரணாகக்கொண்ட" b "நாகணை மிசை நம்பிரான் சரணே சரண்" c "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" d "நாயேன் வந்தடைந்தேன்" e "உலகமளந்த பொன்னடியே யடைந்துய்ந்தேன்" **16. "த்வத்பாத,மூலம் ஶரணம் ப்ரபத்,யே" 17. "அநந்யஶரண: ஶரணமஹம் ப்ரபத்,யே"** f "வழுவிலா அடிமைசெய்யவேண்டுநாம்" g "அடியேனை யாட்கொண்டருளே" **18. "ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" 19. "நித்யகிங்கரோ ப,வாநி"** என்னுமித்யாதி,களிற் சொல்லுகிறபடியே-ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அநுஷ்டி,த்ததும் ப்ரார்த்தி,த்ததும் இவற்றையேயாகையாலே நமக்கும் இவையே உபாதே,யங்கள்.

ப்ராமாணிகத்வமுண்டேயாகிலும் ஆசார்யருசி பரிக்,ருஹீதத்வமில்லாதபோது ஆத,ரணீயத்வமில்லையிறே.

---

a திருவாய் 5-8-11. b ஷை 5-10-11. c ஷை 6-10-10. d பெரியதிரு 1-9-1. e பெரியதிரு 5-8-9. f திருவாய் 3-3-1 g பெரியதிரு 1-9-2.

ப்ராமாணிகத்வமுண்டாயிருக்கச்செய்தேயும் ஶிஷ்டர்களுடைய அநுஷ்டா₂நராஹித்யத்தாலேயிறே அஷ்டகையில் பஶு₂விஶஸநம் அகர்த்தவ்யமாகிறது.

1. **"ஆசார்யவாந் புருஷோ வேத₃"** 2. **"ப₄வத: பரமோ மத:"** 3. **"த₄ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்"** 4. **"ஆசார்ய நிஷ்டா₂மந்விஷ்ய"** இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே - ஆஶ்ரயணீயதைக்கு ப்ரதா₄நஹேதுவான ஆசார்யருசி பரிக்₃ரஹம் இவற்றுக்குக் கனத்திருக்கையாலே இவையே ஆத₃ரணீயங்கள்.

பிள்ளை, ஜீயரை, 'ப்ரபத்திக்கு ரிஷிச்ச₂ந்தோ₃ தே₃வதாதி₃கள் அநுஸந்தே₄யங்கள் அன்றிக்கேயொழிவானென்? ப்ரமாணம் சுருங்கியிருப்பானென்? அதி₄காரி சுருங்கியிருப்பானென்' என்று கேட்க; 'இதில் அர்த்த₂த்துக்குக் கூட்டுவேண்டிலன்றே இதுக்குக் கூட்டு வேண்டுவது, 5. **"ருஷ்யாதீ₃ம்ஶ்ச கரந்யாஸமங்க₃ந்யாஸஞ்ச வர்ஜயேத்"** என்றதிறே ப்ரமாணம்; 6. **"யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்"** 7. **"நாராயண பரம் ப்₃ரஹ்ம தத்த்வம் நாராயண: பர:"** 8. **"ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ"** 9. **"தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:... ந்யாஸ இத்யாஹுர்மநீஷிண:"** ஏவமாதி₃ப்ரமாணங்களுமுண்டு. என்பக்ஷத்தால் இதுக்கு ப்ரமாணாபேக்ஷையில்லை. ஸம்ஸாரி கீழ்க்கழிந்ததுமறியான், மேல்வருவதுமறியான்; வர்த்தமானத்திலும் பூ₄தாம்ஶமறியான், ப₄விஷ்யத₃ம்ஶமறியான்; இது இவனிலை; 10. **"யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்"** 11. **"ஆநந்தோ₃ ப்₃ரஹ்ம"** 12. **"ஸமஸ்த கல்யாணகு₃ணாத்மகோऽஸௌ"** என்று நிர்தோ₃ஷப்ரமாணத்தாலே கேட்டிருக்கும் ஈஶ்வரனபடி இது. இருவர் ஸ்வபா₄வமும் ப்ரத்யக்ஷத்தாலும் நிர்தோ₃ஷ ஶாஸ்த்ரத்தாலும் அறிந்தபின்பு அவனை இவன்பற்றுகைக்கு 13. **"நிதி₃த்₄யாஸிதவ்ய:"** என்றாப்போலே ஒரு விதி₄ வேணுமோ? இருவருடையவும் த₄ர்மிக்₃ராஹக ப்ரமாணமே

அமையும். 1. "அவ-ரக்ஷணே" 2. "மந-ஜ்ஞாநே" a "மால் தேடியோடும் மனம்" b "நோக்குமுணர்வு". து₃ர்ப₃லனா யிருப்பானொருவன் அமிழ்ந்தானென்றால் ப₃லவானாயிருப்பா னொருவன் அருகே நின்றால் அவனை இவன்பற்றுகைக்கு ஒருத்தர் சொல்லவேணுமோ? முமுக்ஷுக்கள் அதி₄காரிகளா கையாலே அதி₄காரிகள் சுருங்கிற்று' என்றருளிச்செய்தார்.

ஒருவன் வெட்டத் தொடர்ந்து வாராநின்றால், அவன் ஶரணம் புக ரக்ஷித்திலனாகில் 'க₄ாதுகன்' என்று லோக மடைய க₃ர்ஹியாநின்றது; ரக்ஷித்தானாகில் 'ஒருவன் நீர்மையே!' என்று லோகமாக கௌ₃ரவியாநின்றது.

ரகு₄ராக்ஷஸஸம்வாத₃ம், நஹுஷப்₃ருஹஸ்பதி ஸம் வாத₃ம், வ்யாக்₄ரவாநர ஸம்வாத₃ம், மறவன் "முயல் குட்டியை விட்டுப்போந்தேன்' என்ன - அதுகேட்டு ப₄ட்ட ரருளிச்செய்த வார்த்தையும், ப்₄ாஷ்யகாரர் சரமஸமயத்திலே 'த்₃வயத்தை எப்போதும் அநுஸந்தி₄க்கை எனக்கு ப்ரியம்' என்று அருளிச்செய்த வார்த்தையும், பெரியகோயில் நாராயணரைக் குறித்து ஶபத₂பூர்வமாக 'த்₃வயமொழியத் தஞ்சமில்லை' என்று அருளிச்செய்த வார்த்தையும், ஸசேல ஸ்நாநபூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நனை சிறியாத் தானுக்கு 'த்₃வயமொழியத் தஞ்சமில்லை' என்று எம்பார் அருளிச்செய்த வார்த்தையும், 'திருமந்த்ரத்திலே பிறந்து த்₃வயத்திலே வளர்ந்து த்₃வயநிஷ்ட₂ராவீர்' என்று நஞ் ஜீயரைக் குறித்து ஆநந்தாழ்வான் ப்ரஸாதி₃த்த வார்த்தை யும், 'மந்த்ராந்தரங்களைச் சொல்லிவிடுமித்தனையன்றே' என்ன, நஞ்ஜீயர் த்₃வயத்தையும் உபதே₃ஶித்துப் பிள்ளைக்கு அருளிச்செய்த வார்த்தையும், அம்மங்கியம்மாள் திரு நாராயணபுரத்திலே காணச்செல்ல, உடையவர் அருளிச் செய்த வார்த்தையும் தொடக்கமான பூர்வாசார்ய வசநங்கள். ருசிவிஶ்வாஸங்களுக்குறுப்பாக இவ்விடத்திலே அநுஸந்தே₄யங்கள்.

---

a இரண்டாந்திருவந்தாதி 27. b முதல்திருவந்தாதி 67.

இங்கு ப்ரதிபாதி₃க்கிற உபாயோபேயங்களை, ஆசார்ய ருசிபரிக்₃ருஹீதமான இஶ்ஶப்₃த₃ விஶேஷத்தையொழிய ஶப்₃தா₃ந்தரத்தாலே அநுஸந்தி₄க்கலாகாது.

'மெய்க்கன்றுக்கு இரங்கிப்போந்த வாஸனையாலே தோற்கன்று மடுத்தாலும் ஸுரபி₄யானது இரங்கிப் பால் சுரக்குமாபோலே, பொய்யான தமக்கும் இரங்குவது இஶ் ஶப்₃த₃விஶேஷத்தைக் கேட்டாலாய்த்து; ஆகையாலே இதுவே அநுஸந்தே₄யம்' என்று பிள்ளைக்கு ஜீயரருளிச் செய்த வார்த்தை,

ஆகையாலே, த்₃வயம் ஆத₃ரணீயம். பூர்வாசார்யர்கள் ரஹஸ்யத்ரயத்தையும் தங்களுக்கு த₄நமாக நினைத்துப் போரச்செய்தேயும், ஸர்வாதி₄காரமாகையாலும், ஆசார்ய ருசிபரிக்₃ருஹீதமாகையாலும், பு₃த்₃தி₄பூர்வகமான அப சாரத்துக்கும் பரிஹாரமாகையாலும், கர்மாவஸாநத்திலே யன்றிக்கே ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாகையாலும் த்₃வயத்தை மிகவும் தஞ்சமாக நினைத்துப் போருவர்கள்.

சக்ரவர்த்தித்திருமகனோடு காகவிபீ₄ஷணாதி₃களோடு வாசியற எல்லாருக்கும் அதி₄காரமாயிருக்கையாலே ஸர்வாதி₄காரமாயிருக்கும்; 1."ரோகி₃ணமௌஷத₄ம் யதா₂" என்கிறபடியே.

திருமந்த்ரம் ஶாஸ்த்ரருசிபரிக்₃ருஹீதம்; சரமஶ்லோகம் ஶரண்யருசிபரிக்₃ருஹீதம்; த்₃வயம் ஆசார்யருசிபரி க்₃ருஹீதம்.

இம்மூன்றுக்கும் மூன்றும் உண்டாயிருக்கச் செய்தே யும் இப்படி சொல்லுகிறது ஊற்றத்தைப்பற்ற.

த்₃வயம், கட₂வல்லியிலே அதீ₄தமாகையாலே ஶாஸ்த்ர ருசிபரிக்₃ருஹீதம்; ப்₃ரஹ்மாதி₃களைக் குறித்து ஸர்வேஶ்வரன் அருளிச்செய்தானென்னுமிடம் ப₄க₃வச்சா₂ஸ்த்ர ஸித்₃த₄ மாகையாலே ஶரண்யருசிபரிக்₃ருஹீதம்; ஆசார்யருசி-

பரிக்₃ருஹீதம் என்கைக்கு, கீழே ஆசார்யவசநங்கள் சொன்னோம்.

'புருஷகார பூர்வகமாக அபராத₄க்ஷாமணத்திலேயிழிந்தால், பூர்வாபராத₄ங்களில் ஈஶ்வரன் அவிஜ்ஞாதாவாயிருக்கையாலே, க்ஷமித்தோமென்கிற உக்திக்கும் 1. "ந க்ஷமாமி"க்கும் விரோத₄மில்லை ப்ரபத்த்யுத்தரகாலம் ப்ராமாதி₃கங்களையொழிய பு₃த்₃தி₄பூர்வகமாக அபசாரம் கூடாது. ப₄க₃வத்ப்ரபா₄வத்தைப் பார்த்தால், காத₃ாசித்கமாக வரும் பு₃த்₃தி₄பூர்வகமான அபசாரத்துக்கும் பரிஹாரமாம். அபசாரத்துக்கு அநந்தரம் அநுதாபம் பிறந்ததில்லையாகில், ஜ்ஞாநம் பிறந்ததுமில்லை' என்று ஜீயர் எண்ணாயிரத்துத் திருவரங்குலத்தாழ்வானைக் குறித்து அருளிச்செய்தார். உ"குன்றனைய குற்றஞ் செய்யினும் குணங்கொள்ளும்".

உபாஸகனுக்கு, மோக்ஷத்துக்கு ஸாத₄நமாகத் தான் அநுஷ்டி₂க்கிற உபாஸநம் பக்வமாய், அநந்தரத்திலே கர்மக்ஷயம் பிறந்து முக்தனாகவேண்டுமாகையாலே, கர்மாவஸாநத்திலே மோக்ஷமாகக்கடவது; ப்ரபந்நனுக்கு, உபாயதயா கர்த்தவ்யமில்லாமையாலும், உபாயபூ₄தனான ஈஶ்வரனுக்கு ஜ்ஞாந ஶக்தியில் வைகல்யமில்லாமையாலும், வர்த்தமான ஶரீரத்தையொழிய ஆக₃ாமிஶரீரத்தில் இச்சை₂யில்லாமையாலும், ப்ரபத்த்யுத்தரகாலம் இஶ்ஶரீரத்தினுடைய ஸ்தி₂திக்கு ஹேது தீவ்ரஸம்வேக₃ராஹித்யமாகையாலும், ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாகக்கடவது.

ஸூக்ஷ்மஶரீரம்போலே இஶ்ஶரீரமும் ஈஶ்வராநுக்₃ரஹத்தாலேயிருக்கிறதென்னில், அது விரஜையளவும் க₃மநஸாத₄நமாயிருக்கிறது; இஶ்ஶரீரஸ்தி₂திக்கு ப்ரயோஜநமில்லை; ஸம்வேக₃த்தரமாகவிருந்தானாகில் ப₄க₃வத₃நுக்₃ரஹத்தாலே என்னலாம், அல்லாமையாலே அவனுக்கு வைஷம்ய நைர்க்₄ருண்யங்கள் ப்ரஸங்கி₃க்கும். ஆகை

உ முதல்திருவந்தாதி 41.

யாலே, ஶரீரஸ்தி₂திக்கு ப்ராரப்₃த₄ஶேஷமே ஹேது. ப்ரபத₃நாநந்தரம் ஶரீரமோக்ஷமுண்டாவது பரமார்த்தி யுண்டாகில்; கூ₃ர்ப்ப₄நரகப்ரவேஶாதி₃களில் அஸஹ்யதை யொழிய வர்த்தமாந ஶரீரத்தில் அஸஹ்யதையில்லை; ஆகையாலே வைத்தருளும். அப்போதே ஶரீரவிஶ்லேஷம் பிறக்கில் நச்சுப்பொய்கையென்று பீ₄தராய் இழிவாரில்லை. இவன் ஒரு க்ஷணகாலமிருக்க அநேகாவதாரங்களில் கிடை யாத ப₂லம் ஸித்₃தி₄க்கும். சரமதே₃ஹமாகையாலே ஈஶ்வரனுக்கு அதிலே ஆத₃ரணீயதை கடக்கும். இவை அவாந்தரப₂லங்கள். து₃:க்கோ₂த்தரமாயிருக்கச்செய்தே விட மாட்டாதவன் ஸாநுகூ₃லவமுண்டாகில் இதிலே வேர்பற்று மென்று ஈஶ்வரன் ஹிதகாமனாகையாலே 'ஶரீராவஸாநத் தளவும் கர்மப₂லம் அநுப₄வித்திடுவான்' என்று உதா₃ ஸீநனாயிருக்கும். ஆகையாலே ப்ரபந்நனுக்கு ப்ராரப்₃த₄ கர்மாவஸாநம் பார்த்திருக்கவேண்டா.

திருமந்த்ரத்திலும் சரமஶ்லோகத்திலும் அர்த்த₂ ஜ்ஞாநத்தாலும் து₃ஸ்ஸாத்₄யமான ப₂லம் இதில் ஶப்₃ தோ₃ச்சாரணத்தாலே ஸுலப₄மாம்.

பூர்வாசார்யர்கள் மற்றையிரண்டிலும் அர்த்த₂த்தை மறைத்துக்கொண்டு போருவர்கள்; இதில் ஶப்₃தா₃ர்த்த₂ங்க ளிரண்டையும் மறைத்துக்கொண்டு போருவர்கள். மந்த்ர ஶ்லோகங்களிரண்டிலும் ஶப்₃த₃த்தை வெளியிட்டு அர்த்த₂த்தை மறைத்துக்கொண்டு போருவர்கள்; த்₃வயத் தில் இரண்டையும் மறைத்துக்கொண்டு போருவர்கள். **1. "கு₃ஹ்யாநாம் கு₃ஹ்யமுத்தமம்"** என்றதிறே.

வாச்யம் ஸக்ருத்கர்த்தவ்யமானாற்போலே, வாசகோச் சாரணமும் ஸக்ருத்கர்த்தவ்யம். **2. "தஸ்மாத் ஸக்ருத் க்ருதே நைவ கர்மணா யேந மாநவ:। ஸக்ருஜ்ஜப்தேந மந்த்ரேண க்ருதக்ருத்யஸ் ஸுகீ₂ ப₄வேத்॥"** என்று ப்ரஶம்பண்ண, **3. "மந்த்ரோ ஹி வித்₃யதே யேந ஸக்ருது₃ச்சாரிதேந வை।**

**புருஷோ ஜீவலோகேऽஸ்மிந் க்ருதக்ருத்யோ ப₄விஷ்யதி"** என்று ப்ரதிவசநம் பண்ணுகையாலே. இவ்வர்த்த₂ம் கட₂வல்லியிலும் சொல்லிற்று. இத்தையறிய எல்லா மந்த்ர ப₂லங்களும் ஸித்₃தி₄க்கும். **1. "ஸர்வமந்த்ர ப₂லாந்யஸ்ய விஜ்ஞாநேந ப₄வந்தி வை"** என்கையாலே. **2. "ஏதந்மந்த்ர மவிஜ்ஞாய"** என்கையாலே இத்தையறியாதபோது ஸம்ஸாரநிவ்ருத்திக்கு உபாயமில்லை. **3. "வாசிகம் மாநஸம்"** இத்யாதி₃யாலே உச்சாரணமொழிய ஸ்ம்ருதிமாத்ரத்தாலே த்ரிவித₄கரணத்தாலும் பண்ணின பாபங்கள் போமென்று சொல்லும். " 'அபி₄ஜநவித்₃யாவ்ருத்தங்கள் மூன்றுமுடையவனேயாகிலும், த்₃வயத்துக்கு அதி₄காரியன்றிக்கேயொழியுமாகில், அவனைக்கண்டால் விலங்கவேணும்' என்று ஶாஸ்த்ரஞ்சொல்லிற்று. இம்மூன்றுமில்லையேயாகிலும் த்₃வயோச்சாரணம் பண்ணினவன் பூஜ்யதமனென்றும் சொல்லிற்று. ரக்ஷகன் க்ருதாத்மாவாகையாலே அஹ்ருத₃யோக்தியையும் பு₃த்₃தி₄பூர்வோக்தியோடொக்க நினைத்திருக்கும் ஆநுகூல்யத்தில் தாரதம்யங்கொண்டு த்யாக₃பரிக்₃ரஹம் பண்ணுவது அபரிபூர்ணனாகையாலே. ஆபி₄முக்₂யஸூசகமொன்றுமிறே வேண்டுவது. a 'பொய்யே கைம்மைசொல்லி' என்றும் b 'புறனுரையேயாகிலும்' என்றும் நிரர்த்த₂கமான ஸமுத்₃ர கோ₄ஷத்தைக் காட்டில் ஸார்த்த₂கங்களான க₂டபடாதி₃ ஶப்₃த₃ங்கள் ஶ்ரேஷ்ட₂ங்கள். அவற்றிற்காட்டில் தே₃வதாந்தர நாமங்கள் ஶ்ரேஷ்ட₂ங்கள். அவற்றிற்காட்டில் ப₄க₃வந்நாமங்கள் ஶ்ரேஷ்ட₂ங்கள். அவற்றில் வைத்துக் கொண்டு மூலமந்த்ரம் ஶ்ரேஷ்ட₂ம். மூலமந்த்ரம் ஸமுத்₃ர கோ₄ஷஸ்தா₂நீயமாம்படி த்₃வயம் ஶ்ரேஷ்ட₂ம். அதுக்கடி மூலமந்த்ரத்தில் ஆர்த்த₂மான அர்த்த₂ம் த்₃வயத்திலே வாசகமாகை. வாச்யங்களில் ஸர்வேஶ்வரனுக்கு அவ்வருகில்லாதாப்போலே, வாசகங்களிலும் இதுக்கு அவ்வருகில்லை, இதுவே ஸித்₃தா₄ந்தம்" என்று ஜீயர் அருளிச்செய்வர்.

---

a திருவாய் 5-1-1. b முதல்திருவந்தாதி 41.

திருமந்த்ரம் ஆத்மபாரதந்த்ர்ய ப்ரதா₄நம்; சரமஶ்லோகம் ப₄க₃வத் ஸ்வாதந்த்ர்ய ப்ரதா₄நம்; த்₃வயம் ப₄க₃வத் பாரதந்த்ர்ய ப்ரதா₄நம். திருமந்த்ரம் ப்ராப்ய ப்ரதா₄நம்; சரமஶ்லோகம் ப்ராபகப்ரதா₄நம்; த்₃வயம் உப₄யப்ரதா₄நம். திருமந்த்ரம் மந்த்ரரூபம்; சரமஶ்லோகம் விதி₄ரூபம்; த்₃வயம் அநுஷ்டா₂நரூபம். இதுக்கு அதி₄காரி திருமந்த்ரத்தில் த்ருதீயபத₃த்திலும், சரமஶ்லோகத்தில் ப்ரத₂மபத₃த்திலும், த்₃வயத்திலும் நிஷ்டை₂யுடையவன். இதுக்கு த்₃வயமென்று திருநாமமாய்த்து ஸாத₄நத்₃வயங்களைச் சொல்லுகையாலே. இதொழிய நாலஞ்சு ஹேதுக்களைச் சொல்லுவர்கள்.

இதுதான், பூர்வவாக்யம் மூன்றுபத₃மும், உத்தர வாக்யம் மூன்றுபத₃மும், ஆக ஆறுபத₃மாயிருக்கும். இதில் பூர்வவாக்யம் உபாயத்தை ப்ரதிபாதி₃க்கிறது; உத்தர வாக்யம் உபேயத்தை ப்ரதிபாதி₃க்கிறது. a "நாளுநின்றடு நம பழமை அங்கொடுவினையுடனே மாளும்" என்றும் b "புலனைந்து மேயும் பொறியைந்து நீங்கி" என்றும் 1. **"ப்₃ரஹ்மவித₃ப்நோதி பரம்"** என்றும் இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே ஜ்ஞப்தித₃ஶையில் உபாயத்துக்கு உபேயாநந்தரபா₄வித்வம் உண்டாயிருந்ததேயாகிலும், 2. **"மாமேகம் ஶரணம் வ்ரஜ-அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி"** என்றும் c "திருநாரணன் தான் காலம் பெறச் சிந்தித்துய்ம்மினோ" என்றும் இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே || வ்யுத்பத்தித₃ஶையில் உபேயம் உபாயாநந்தரபா₄வியாயிருக்கையாலே உபாயப்ரதிபாத₃கமான பூர்வவாக்யம் முற்பட அநுஸந்தே₄யமாய், உபேய ப்ரதிபாத₃கமான உத்தரவாக்யம் பிற்பட அநுஸந்தே₄யமாயிருக்கும். ஆகையாலேயிறே திருமந்த்ரத்தில் நமஸ்ஸுக்குப் பின்பு நாராயண பத₃மாச்சுது. இதில் பத₃த்ரயாத்மகமான பூர்வவாக்யத்தில், ப்ரத₂மபத₃ம் ஸ்வீகார்ய

a திருவாய் 1.3.8. b திருவாய் 2.8.4. c திருவாய் 4.1.1.
|| 'அநுஷ்டா₂நத₃ஶையில்' என்று இருக்கவேண்டும்.

வஸ்துவை ப்ரதிபாதி₃க்கிறது. த்₃விதீயபத₃ம் ஸ்வீகார ப்ரகாரத்தை ப்ரதிபாதி₃க்கிறது. த்ருதீயபத₃ம் ஸ்வீகாரத்தை ப்ரதிபாதி₃க்கிறது.

## ஶ்ரீமச்ச₂ப்₃தா₃ர்த்த₂ம்

(1) அதில் ஶ்ரீமத் என்கிற அம்ஶத்தாலே - புருஷகாரத்தையும், புருஷகாரத்திலுடைய நித்யஸந்நிதி₄யையும் சொல்லுகிறது. ஶ்ரீஶப்₃த₃ம் 1. **"ஶ்ரீயதே, ஶ்ரயதே"** என்கிற வ்யுத்பத்தி த்₃வயத்தாலும் பிராட்டியுடைய புருஷகார பா₄வத்துக்கு உபயுக்தங்களான கு₃ணவிஶேஷங்களைச் சொல்லுகிறது. அக்கு₃ணவிஶேஷமாகிறது உப₄யஸம்ப₃ந்த₄ம். அதில் கர்மணி வ்யுத்பத்தி, சேதநனோடுண்டான ப₃ந்த₄விஶேஷத்துக்கு ப்ரகாஶகமாயிருக்கும்; கர்த்தரிவ்யுத்பத்தி, ஈஶ்வரனோட்டை ஸம்ப₃ந்த₄த்துக்கு ப்ரகாஶகமாயிருக்கும். சேதநனோடே மாத்ருத்வலக்ஷணப₃ந்த₄ம் உண்டாயிருக்கும்; ஈஶ்வரனோடே மஹிஷீத்வலக்ஷணப₃ந்த₄ம் உண்டாயிருக்கும். மாத்ருத்வலக்ஷணப₃ந்த₄த்தாலே புருஷகாரநிரபேக்ஷமாக ஸகலசேதநர்க்கும் ஆஶ்ரயணீயையாயிருக்கும்; மஹிஷீத்வ ப்ரயுக்தமாக ஈஶ்வரனோடே நித்யஸம்யுக்தையாயிருக்கை யாலே புருஷகாரநிரபேக்ஷமாக ஈஶ்வரனை ஸேவியாநிற்கும். 2. **"யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணம்"** இத்யாதி₃யாலே-வ்யுத்பத்தித்₃வயத்தாலும் உண்டான அர்த்த₂த்தை ஆழ்வான் அருளிச்செய்தார். 3. **"ஶ்ருணோதி, ஶ்ராவயதி"** என்கிற நிருக்திவிஶேஷத்தாலே - 1. **"ஶ்ரீயதே, ஶ்ரயதே"** என்கிற வ்யுத்பத்தி த்₃வயத்தாலும் ப₂லிதமான அர்த்த₂விஶேஷத்தைச் சொல்லுகிறது. 3. **"ஶ்ருணோதி"** என்றது - கேளாநிற்கும் என்றபடி; 3. **"ஶ்ராவயதி"** என்றது கேட்பியாநிற்கும் என்றபடி.

ப்ரதீ₃ப்தஶரணத்தில் பொருந்தாதாப்போலே ஸம்ஸாரம் அடிக் கொதித்து ப₄க₃வத்₃விஷயத்தைக் கிட்டியல்லது த₄ரிக்கமாட்டாதபடியான த₃ஶாவிஶேஷத்தையுடையனாய்,

ப,கவத் ஸமாஶ்ரயணோந்முக,னான சேதநன், 1. "யத், ப்,ரஹ்மகல்ப" இத்யாதி,ப்படியே காலதத்த்வமுள்ளதனையும் அநுப,வியாநின்றாலும் சிறிது வரையிட்டுக் காட்டக்கடவ தல்லாதபடி க்ரூரங்களாயிருக்கிற அக்ருத்யகரண க்ருத்யா கரணப்ரமுக,ங்களான அபராத,விஶேஷங்களைக் கரணத்ரயத் தாலும் அநாதி,காலம் கூடுபூரித்து ஈஶ்வரனுடைய 2. "க்ஷிபாமி" 3. "நக்ஷமாமி" என்கிற வெட்டிய சொற்க ளுக்கு விஷயபூ,தனாய்ப் போந்தானொருவனாகையாலே, அநாதி,காலார்ஜிதங்களான தன்னுடைய அபராத, விஶேஷங்களையும் ஈஶ்வரனுடைய நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யத் தையும் அநுஸந்தி,த்து பீ,தனாய், பிராட்டியுடைய நிரவதி,கமான காருண்யாதி, கு,ணங்களையும் தன்னோடு அவளுக்குண்டான ஸம்ப,ந்த,விஶேஷத்தையும் புரஸ்கரித்து 'ஸாபராத,னாய் அநந்யஶரணனாயிருக்கிற எனக்கு அபராத, நிவ்ருத்திமாத்ரத்திலே ப்ரஸந்நையாய் அஶரண்யஶரண்யை யாயிருக்கிறவள் திருவடிகளொழியப் புகலில்லை' என்று இவன் விண்ணப்பஞ்செய்யும் வார்த்தையைத்தானே கேளாநிற்கும். ஈஶ்வரனைக் குறித்து விண்ணப்பஞ்செய்யும் வார்த்தையை அவன் கேட்கும்படி பண்ணாநிற்கும்.

இச்சேதநனுக்கு இருவரோடும் ஸம்ப,ந்த,முண்டாயிருக்க அவனுக்கு அவள் புருஷகாரமாகவேண்டுகிறதென்? என்னில்; மாத்ருத்வநிப,ந்த,நமான வாத்ஸல்யாதிரேகத்தாலும், ஈஶ்வரனோபாதி காடி,ந்யமார்த்த,வங்கள் கலந்திருக்கை யன்றிக்கே கேவலமார்த்த,வமேயாய், ஸாபராத,ரான சேதநரை அபராதா,நுகு,ணமாக நியமிக்குமிடத்தில் 4. "மர்ஷயாமீஹ து,ர்ப,லா" என்கிறபடியே அஶக்தையா யிருக்கையாலும், 5. "த்வம் நீசஶஶவத் ஸ்ம்ருத:" என்கிறபடியே தன் திருவாயாலே இப்படி புல்லிதான வார்த்தையை அருளிச்செய்யவேண்டும்படி விபரீதபு,த்,தி, யாய், தன் திறத்திலே தீரக்கழிய அபராத,த்தைப்பண்ணி 6. "ராவணோ லோகராவண:" என்கிறபடியே, இருந்ததே

குடியாகக் கையெடுத்துக் கூப்பிடவேண்டும்படி பரஹிம்ஸையே யாத்ரையாகவுடையனுயிருக்கிற ராவணனுடைய தண்ணிமை-யைப் பாராதே, அவனைக்குறித்து 1. **"தேந மைத்ரீ ப,வது"** என்றும் 2. **"மித்ரமௌபயிகம் கர்த்தும்"** என்றும் ஹிதோபதே,ஶம் பண்ணுகையாலும், ராக்ஷஸிகள், ராவணன் பராஜிதனுகவும் பெருமாள் விஜயிகளாகவும் ஸ்வப்நங்கண்டு அத்தாலே பீ,தபீ,தைகளாக - த்ரிஜடை, 3. **"அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோ ப,யாத்"** என்று நாம் விடாதேயிருந்து தர்ஜநப,ர்த்ஸநங்களைப்பண்ணி நலிய, நம்மாலே நலிவுபடுகிறவள்தானே நமக்கு ஆபத்துண்டான காலத்திலே நம்மைக் கைவிடாதே ரக்ஷிக்கும் என்று சொல்லுகையாலும், இப்படி பிறர் சொன்னவளவன்றிக்கே பிராட்டிதானும் இவர்கள் நோவுடுகிற ஸமயத்திலே 4. **"ப,வேயம் ஶரணம் ஹி வ:"** என்று 'நீங்கள் நோவுபடுகிற ஸமயத்துக்கு நானிருந்தேன், நீங்கள் அஞ்சவேண்டா' என்று அப,யப்ரதா,நம்பண்ணுகையாலும், இப்படி வ்யவஹாரமாத்ரமேயாய் அநுஷ்டா,நம் விபரீதமாயிருக்கையன்றிக்கே, திருவடிவந்து 'ராவணன் பட்டான், பெருமாள் விஜயிகளானர்' என்று விண்ணப்பஞ்செய்த வார்த்தையைக் கேட்டு இவன் பண்ணின உபகாரத்துக்கு ஸத்,ருஶப்ரத்யுபகாரங்காணுதே தடுமாறுகிற அவஸ்தை,யிலே "பத்துமாஸம் தேவரீரைத் தர்ஜநப,ர்த்ஸநங்கள் பண்ணி நலிந்துபோந்த இப்பெண்பயல்களை நான் நினைத்த வகைகளிலே நலியும்படி அவர்களைக் காட்டித்தரவேணும், நான் முன்பு தேவர்திருவடிகளிலே வந்தபோது இவர்கள் பண்ணின நலிவைப் பொறுக்கமாட்டாதே நொந்துபோனேன், இப்போது இவர்களை நிரஸிக்கைக்கு ஒரு ப்ரதிப,ந்த,கமில்லை, இவர்களை ஐம்பது அறுபது வகைகளாலே கொல்லும்வகை சொல்லாநின்றேன், 'இவனுக்கு நாம் பரிசிலாகக் கொடுக்கலாவதென்?' என்று தடுமாறவேண்டா, இவர்களை நிரஸிக்கும்படி என்கையிலே காட்டித் தருமதொழிய எனக்குப் பண்ணும் ப்ரத்யுபகாரம்

வேறில்லை" என்று விண்ணப்பஞ்செய்ய, திருவடி பண்ணின உபகாரத்தையும் ராக்ஷஸிகள் பண்ணின அபகாரத்தையும் பாராதே அப்போது அவர்களுடைய அச்சமொன்றுமே திருவுள்ளத்தே பட்டு, அவர்களுடைய கண்குழிவு காணமாட்டாதபடியான மார்த்த₃வத்தாலே, **1. "ந கஶ்சிந்நாபராத்₄யதி"** என்றும், **2. "க: குப்யேத்"** என்றும், **3."து₃ர்ப்ப₃லா"** என்றும் திருவடியோடே மன்றாடி ஆர்த்₃ராபராதை₄களான ராக்ஷஸிகளை ரக்ஷிக்கையாலும், இளைய பெருமாள் காட்டுக்கு எழுந்தருளுகிறபோது பெருமாள் நிறுத்திப் போகத்தேடினவளவிலே, **4. "ஸீதாமுவாச"** என்று பிராட்டி புருஷகாரமாகப் பெருமாளோடு கூடப் போகையாலும், ஸ்ரீவிபீ₄ஷணப்பெருமாள் **5. "ப்ரதீ₃யதாம் தா₃ஶரத₂ாய மைதி₂லீ"** என்று 'ஜீவிக்கவேண்டியிருந்தாயாகில் பெருமாள் தம்முடைமையும் தாமுமாகச் சேரவிருக்கும்படி பண்ணப்பார்' என்று ராவணனைக் குறித்துப் பெருமாளும் பிராட்டியும் சேரவிருக்கைக்குறுப்பான வார்த்தைகளைச் சொல்லியும், த்ரிஜடையைப் பிராட்டிக்கு வ்யஸநங்களில் உசாத்துணையாக வைத்தும், இப்படி பிராட்டி முன்னாகப் பெருமாளை ஶரணம் புகுகையாலும், மஹாராஜர் திருவாப₄ரணம் முன்னாகப் பெருமாளைப் பற்றுகையாலும், காகம் அபராத₄த்தைப் பண்ணி வைத்துப் பிராட்டி ஸந்நிதி₄யிலே தலையறுப்புண்ணாதே பிழைக்கையாலும், ராவணனுக்கு அத்தனை அபராத₄மின்றிக்கேயிருக்க, பிராட்டி ஸந்நிதி₄யில்லாமையாலே தலையறுப்புண்கையாலும், பின்னையும் இளையபெருமாளைக் குறித்துப் பிராட்டி தன்னை வநத்திலே விட்டுப்போகாநிற்க 'தம்பிமாரோடொக்க நாட்டை ரக்ஷிக்க விண்ணப்பஞ்செய்யும்' என்று அருளிச்செய்கையாலும், மற்றுமிவை தொடக்கமான ஸ்வபா₄வவிஶேஷங்களெல்லாவற்றாலுமாக, ஈஶ்வரனை ஆஶ்ரயிக்கும்போது இவள் புருஷகாரபூ₄தையாகக்கடவள்.

முக்யமாக, எம்பெருமானை ஆச்ரயிக்கையாவது—பிராட்டி முன்னாக ஆச்ரயிக்கை.

ஆச்சி, சிறியாத்தானுக்கு 'பகவச்சேஷமாய் அவற்றை நெடுங்காலம் அகன்றுபோந்த இவ்வாத்மாவை எம்பெருமானோடே இணைக்கைக்குப் புற்றுசாக நமக்குப் பிராட்டியுளள் என்று நிர்பரனாயிரு' என்று அருளிச்செய்தார்.

ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாயிருக்கும் ஈச்வரன் a "உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறிதி" என்கிற படியே — ஹ்ருதிஸ்தனாய்க்கொண்டு சேதநர் பண்ணும் அபராதங்களைக் குறித்து அவற்றுக்கீடாக நியமிக்கையாலே, ஸாபராதரான சேதநர் சரணோக்தியை ப்ரயோகித்தால் அதுவும் அபராதகோடிகடிதமாயிருக்குமிறே.

ஆகையாலே, அநாதிகாலம் தான் பண்ணிப்போந்த அபராதங்களைப் பொறுத்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்யும்போது அந்த:புரபரிகரமாய்நின்று விண்ணப்பஞ் செய்யவேண்டுகையாலே, ஸர்வஜ்ஞனை ஈச்வரனையுங் கூட நிருத்தரனும்படி பண்ணவற்றான தன்னுடைய உக்தி விசேஷங்களாலும், b "பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" என்றும், c "மலராள் தனத்துள்ளான்" என்றும், d "மாமலர் மங்கை மணநோக்கமுண்டான்" என்றும், e "அல்லிமலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்" என்றும், தன்னுடைய போக்யதாப்ரகர்ஷத்தாலும் மற்றுமுண்டான உசிதோபாய விசேஷங்களாலும் சேதநனுடைய அபராதங்கள் ஈச்வரன் திருவுள்ளத்தில் படாதபடிபண்ணி அநாதிகாலம் அகன்று போந்த இருவரையும் சேர்க்கக் கடவதாயிருக்கிற பிராட்டி ஸ்வரூபம் சொல்லிற்று.

---

a திருமாலை 34.
b திருநெடுந்தாண்டகம் 18.
c மூன்-திருவ 3.
d பெரியதிருமொழி 8.10.1.
e திருவாய்மொழி 3.10.8.

**மதுப,ர்த்த,ம்**

(2) மதுப்பாலே — புருஷகாரபூ,தையான பிராட்டியுடைய நித்யயோக,ம் சொல்லுகிறது. 1. "**நித்யாநபாயிநீம்**" என்றும், a "அகலகில்லேன்" என்றும், 2. "**விஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ**" என்றும், 3. "**ப,ாஸ்கரேண ப்ரப,ா யதா,**" என்றும், b "தன்னோடும் பிரிவிலாத்திருமகள்" என்றும் சொல்லுகிறபடியே ஈஶ்வரனோடே நித்யஸம்ஶ்லிஷ்டையாயிருக்கையாலே ஆஶ்ரயணோந்முக,னான சேதநன், தன்னுடைய அபராத,ங்களையும் ஈஶ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் அநுஸந்தி,த்துப் பிற்காலிக்குமா போலே, புருஷகாரபூ,தையான பிராட்டியினுடைய அஸந்நிதி,யை அநுஸந்தி,த்துப் பிற்காலிக்கவேண்டாதே, ருசி பிறந்தபோதே ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கும்.

4. "**ந ச ஸீதா த்வயா ஹீநா**" என்கிறபடியே - அரைக்ஷணம் விஶ்லேஷித்தால் ஸத்தாஹாநி பிறக்கும்படியாயிருக்கையாலும், தன்னைப் பிரிந்தபோது, 5. "**ஜக,த் ஸஶைலம்**" என்கிறபடியே - நாடு குடிகிடவாதென்றறிந்திருக்கையாலும், பரத்வத்தோடு வ்யூஹத்தோடு விப,வத்தோடு அர்ச்சாவதாரத்தோடு அந்தர்யாமித்வத்தோடு வாசியற எல்லாவிடத்திலும் பிரியாதேயிருக்கும்.

/ [ c "திருமால் வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்" d "பாவைபூமகள் தன்னொடுமுடனே வந்தாய்" e "என் மனத்தே புகுந்தாய்" f "சேர்ந்த திருமால்" இத்யாதி,]

இவளுக்கும் ஈஶ்வரனுக்குமுண்டான சேர்த்தியும் நித்யமாய், அநுப,வமும் நித்யமாய், தத்கார்யமான ஹர்ஷமும் என்றுமுண்டாகையாலே, இச்சேதநனுக்குப் பிராட்டி அஸந்நிதி,ப்ரயுக்தமாக ஆஶ்ரயணவைமுக்,யம் பிறக்கையன்றிக்கே, இப்ரதிபத்திமாத்ரமேயாய்த்து அபேக்ஷிதம். இதுண்டானபோது ஸர்வகாலமும் ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கும்.

---

a திருவாய்6-10-10. b பெரியதிரு4-5.5. c திருவாய்10-8.1. d பெரியதிரு 7-7.2. e டி 3-5-6. f மூன்-திருவ30. /[ ] சில கோஶங்களில் இல்லை.

ஆக, ஶ்ரீமச்ச₂ப்₃த₃த்தாலே—1."அஸ்யேஶாநா ஜக₃த₃:" **2. "த்வம் மாதா ஸர்வலோகாநாம்" 3. "அகி₂ல ஜக₃ந் மாதரம்"** என்றித்யாதி₃களிற் சொல்லுகிறபடியே - ஜக₃த்துக்குப் பூஜ்யையாய், **1. "விஷ்ணுபத்நீ"** என்றும், **4. "விஷ்ணோஶ்ஶ்ரீ:"** என்றும், **3. "தே₃வதே₃வதி₃வ்ய மஹிஷீம்"** என்றுமித்யாதி₃களிற் சொல்லுகிறபடியே ஈஶ்வரனுக்கு மஹிஷியாய், அவனுக்கு அத்யந்தபரதந்த்ரையாய், அவனுடைய ஸ்வரூப ரூப கு₃ணாதி₃களைப்போலே அபரிச்சே₂த்₃யமாயிருக்கிற தன்னுடைய போ₄க்₃யதா ப்ரகர்ஷத்தாலே எப்போதுமொக்க அவன் திருவுள்ளத்தைத் தன்பக்கலிலே துவக்கிக்கொண்டிருக்கக்கடவளாய், ஈஶ்வரன் வைஶ்வரூப்யமெல்லாங்கொண்டு ஸர்வகாலமும் தன்னை அநுப₄வியாநின்றாலும் தன்னுடைய கு₃ணரூபவிலாஸ சேஷ்டிதங்களாலே அபூர்வவத்₃விஸ்மயங்களைப் பண்ணக்கடவளாய், இப்படியிருக்கிற தான் ௧ "இறையும் அகலகில்லேன்" என்கிறபடியே-விக்₃ரஹைகதே₃ஶத்திலே காலதத்வமுள்ளதனையும் ஆழங்காற்பட வேண்டும்படி நிரவதி₄க போ₄க்₃யதாப்ரகர்ஷத்தை உடையனாயிருக்கிற ஈஶ்வரனை க்ஷணகாலமும் விஶ்லேஷிக்கில் ஸத்தாஹாநி பிறக்கக்கடவளாய், **5. "யத்ர நாந்யத் பஶ்யதி"** என்னும் படியான விஷயத்தை ஸர்வகாலமும் அநுப₄வியாநிற்கச் செய்தேயும், ப்ரஜைகளுடைய ரக்ஷணத்தில் எப்போதும் திருவுள்ளங்கிடந்து தே₃வதே₃வ தி₃வ்யமஹிஷியான தன்னுடைய மேன்மை ப்ரஜைகள்பக்கல் நடையாடாதே மாத்ருத்வநிப₃ந்த₃நமான ப₃ந்த₄மே அநுவர்த்திக்கக் கடவதாய், ஸர்வலோகஜநநீத்வரூபமான ப்ராப்திவிஶேஷமன்றிக்கே, **3. "அஶரண்ய ஶரண்யாம்"** என்கிறபடியே - ஜந்ம வ்ருத்த ஜ்ஞாநங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே ரிபூணாமபி வத்ஸலனாய், ஸர்வபூ₄தஸமனாய், ஸ்ருஷ்ட்யவதாராதி₃முக₂த்தாலே ஜக₃த்₃ரக்ஷணத்திலே தீ₃க்ஷிதனாயிருக்கிற ஈஶ்வரன் **6."க்ஷிபாமி" 7."ந க்ஷமாமி"** என்று தள்ளிக்

---

௧ திருவாய் 6-10-10.

கதவடைத்தாலும் தன் திருவடிகளிலே வந்து விழலாம்படியான விஶேஷ ப்ராப்தியையுடையளாய், ஈஶ்வரன் ஸ்வாதந்த்ர்யத்தையும், தந்தாமுடைய அபராதத்தையும் பார்த்துத் தடுமாறின அவஸ்தையில் ஈஶ்வரன் முகத்தைப் பார்த்து, "ஸர்வஜ்ஞராய் ஸர்வஶக்திகராய் உபயவிபூதி நிர்வாஹகராயிருக்கிற தம்முடைய பெருமையையும், அஜ்ஞாநாஶக்திகளால் புஷ்கலராய், a "சிறுமாநிடவர்" என்னும்படியிருக்கிற இவர்களுடைய சிறுமையையும் பார்த்தால், பர்வதபரமாணுவுக்குச் சேர்த்தியில்லாதாப்போலே, உமக்கும் இவர்களுக்கும், 1."க்வ மாஸ்த் ஸமாகம:" என்கிறபடியே - ஒரு ப்ரகாரத்தாலும் சேர்த்தியற்றன்றோ இருக்கவடுப்பது; ஸப்ரயோஜநகடாக்ஷம்பண்ணி இவர்களை அங்கீகரிக்கைக்கு யோக்யதையில்லாதபடி நீர் அவாப்த ஸமஸ்த காமராயிருந்தீர்; உம்முடைய தரத்துக்கீடான பச்சை இவர்களாலிடப்போகாது; ஆனபின்பு, இருவருடைய ஸ்வரூபத்தைப் பார்த்தாலும் இரண்டுதலையையும் சேர்க்கைக்கு யோக்யதையில்லை; இவர்களை அநாதரித்தால் உம்முடைய நாராயணத்வமும் ஒருவாய்ப்போய், ஸர்வரக்ஷகனான உம்முடைய ரக்ஷகத்வமும் விகலமாய், ஶீலாதிகுணங்களும் முடங்கப்பட்டு, உம்முடைய ஸ்வாதந்த்ர்யமே தலையெடுத்து இவர்கள் உம்முடைய சீற்றத்துக்கு இலக்காய், நஶித்துப்போமத்தனையாயிருந்தது; உமக்கும் இவர்களுக்குமுண்டான ஸம்பந்தவிஶேஷத்தைப் பார்த்தால், b "உறவேல் நமக்கிங் கொழிக்கவொழியாது" என்கிறபடியே குடநீர்வழித்தாலும் போகாததொன்றாயிருந்தது; ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே c எதிர்சூழல்புக்குத் திரிகிற உம்முடைய பேற்றுக்கு நானிரக்கவேணுமோ? உம்முடைய ஸ்வரூபஸித்த்யர்த்தமாக இவர்களை ரக்ஷிக்கவேண்டாவோ? 2. "**அதிக்ராமந்நாஜ்ஞாம்**" என்கிறபடியே நம்முடைய ஆஜ்ஞாதிலங்கநம்பண்ணி நம்முடைய சீற்றத்துக்கு அநாதிகாலமிலக்காய்ப் போந்தவர்களை, இவர்கள்பண்ணின

a நாச்சியார் திருமொழி 10-10. b திருப்பாவை 28. c திருவாய் 2-7-6.

அபராத,த்துக்கு உசிதத,ண்ட,ம்பண்ணுதே, இவர்கள் செய்த தப்புக்களைப் பொறுத்து இவர்களை ரக்ஷித்தால், இவர்கள் அநாதி,காலம் ஶாஸ்த்ரமர்யாதா,திலங்க,நம் பண்ணினாற்போலே நாமும் அநந்தகாலம் ஶாஸ்த்ர மர்யாதா,திலங்க,நம் பண்ணினோமாகோமோ? அஜ்ஞனான இவன் தப்புச்செய்தான் என்ன, ஸர்வஜ்ஞனான நாமும் தப்புச்செய்யவோ? இரண்டு தலையும் தப்புச் செய்வதில் ஒரு தலையே அத்தை அநுஷ்டி,த்துவிட அமையாதோ? ஒரு தலையில் தப்பை மாற்றக்கடவதாகத் தொடங்கி இரண்டு தலைக்கும் தப்புண்டாக்குகிறாயன்றோ? இவர்களை ரக்ஷித்தால் ஶாஸ்த்ரமர்யாதை,குலையாதோ?' என்றன்றோ திருவுள்ளத் திலோடுகிறது; இவர்களை ரக்ஷணம்பண்ணுதே அபராதா,நு கூலமாக்கி நியமித்தால் உம்முடைய க்ருபாதி,கு,ணங்கள் ஜீவிக்கும்படியென்? நியமியாதேபோனால் ஶாஸ்த்ரம் ஜீவியாதாப்போலே ரக்ஷியாதபோது கு,ணங்கள் ஜீவியாதே. ஆனபின்பு, க்ருபாதி,கு,ணங்கள் ஜீவிக்கைக்காக இவர்களுடைய ரக்ஷணம் பண்ணவேண்டாவோ? ரக்ஷணத்தில் ஶாஸ்த்ரம் ஜீவியாதென்று சொல்லவேண்டா; ஶாஸ்த் ரத்தை விமுக,ர் விஷயமாக்கினால், கு,ணங்களை அபி,முக,ர் விஷயமாக்கினால் இரண்டும் ஜீவிக்கும். ஆனபின்பு, இவர்களை ரக்ஷித்தருளவேண்டாவோ?" என்று இச்சேதநனை அபராத,ங்கள் பாராதே ஈஶ்வரன் விஷயீகரிக்கும்படியான பாசுரங்களைச் சொல்லி, விளக்குப் பொன்போலே நடுவே நின்று இரண்டுதலையையும் சேர்க்கக்கடவளாயிருக்கிற பிராட்டியாருடைய நித்யயோக,த்தை ப்ரதிபாதி,க்கிறது.

## நாராயணபதா,ர்த்த,ம்

(3) நாராயணபத,ம், இப்புருஷகாரபூ,தையாயிருக்கிற பிராட்டிதானே தான் சேர்த்த இவனை ஈஶ்வரன் கைவிடும் படியான பாசுரங்களைச் சொன்னாலும், 1."தோ,ஷோ யத்,யபி தஸ்ய ஸ்யாத்" என்றும், ௨ "செய்தாரேல் நன்றுசெய்தார்"

௨ பெரியாழ்திரு 4-9-2.

என்றும் சொல்லுகிறபடியே - அவளோடே மறுதலைத்து நோக்கும்படியான வாத்ஸல்யாதி₃கு₃ணங்களை ப்ரதிபாதி₃க்கிறது.

இப்பத₃த்தில் ப்ரதிபாதி₃க்கப்படுகிற வாத்ஸல்யாதி₃ கு₃ணங்களாகிறன - புருஷகாரபூ₄தையான பிராட்டியாலே உத்₃ப₄விக்கப்பட்டு, (ப்ரபத்₃யே) என்கிற பத₃த்திற்சொல்லப்படுகிற ஸ்வீகாரத்துக்கு உபயுக்தங்களாயிருப்பன சில.

வாத்ஸல்யமாவது - வத்ஸத்தின்பக்கல் தே₄நு இருக்குமிருப்பு. அதாகிறது - அதினுடைய தோ₃ஷத்தை போ₄க்₃யமாகக் கொள்ளுகையும், க்ஷீரத்தைக் கொடுத்து வளர்க்கையும் எதிரிட்டவர்களைக் கொம்பிலும் குளம்பிலும் கொண்டு நோக்குகையுமிறே. அப்படியே ஈஶ்வரனும், a "செய்தாரேல் நன்று செய்தார்" என்று - தோ₃ஷத்தை போ₄க்₃யமாகக்கொண்டு, b "பாலே போல் சீர்" என்கிற கு₃ணங்களாலே த₄ரிப்பித்து, 1. "கத₂ஞ்சந-ந த்யஜேயம்" என்றும், 2. "அப₄யம் ஸர்வபூ₄தேப்₄ய:" என்றும் அநுகூலர் நிமித்தமாகவும் ப்ரதிகூலர் நிமித்தமாகவும் நோக்கும்.

ஸ்வாமித்வமாகிறது-உடையவனாயிருக்குமிருப்பு; அதாகிறது - சேதநர் தன்னையழித்துக்கொள்ளுமன்று விடமாட்டாதே இவன் பக்கலிலே ப்ரவணனாய், கர்ஷகன் பயிர்த்தலையிலே குடில் வளைத்து நோக்குமாபோலே இவர்களுடைய ரக்ஷணார்த்த₂மாக நித்யஸந்நிதி₄ பண்ணி, விடாதே நோக்குகைக்கு அடிப்பான ஸம்ப₃ந்த₄விஶேஷம்; அத்₃வேஷம் தொடங்கி கைங்கர்யமெல்லையாக நடுவுண்டான அவஸ்தா₂விஶேஷங்களெல்லாமுண்டாக்குகிறது இந்த ஸம்ப₃ந்த₄ விஶேஷமடியாகவிறே.

ஸௌஶீல்யமாவது-நித்யஸூரி நிர்வாஹகத்வத்தாலும் உப₄யவிபூ₄தியோக₃த்தாலும் பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியாலும் நிரங்குஶமான வைப₄வத்தையுடையனாயிருக்கிற ஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும்,

a பெரியாழ்வார் திருமொழி 4-9-2. b பெரியதிருவந்தாதி 58.

a "சிறுமானிடவர்" என்கிற தங்கள் சிறுமையையுங்கண்டு, b "அவனெவ்விடத்தான் யானார்" என்னும்படியிருக்குமிறே; அப்படி அவன் மேன்மையையும் தங்கள் சிறுமையையும் பார்த்து ஆஶ்ரயணவைமுக்₂யம் பிறவாதபடி, தன் பெருமையையும் பாராதே இவர்கள் சிறுமையையும் பாராதே எல்லாரோடுமொக்க மேல்விழுந்து புரையற ஸம்ஶ்லேஷிக்கையும், இப்படி ஸம்ஶ்லேஷியாநின்றால் இவர்கள் கார்யம் செய்தானன்றிக்கே தன்பேறாக நினைத்துத் தன்னுடைய மேன்மை திருவுள்ளத்தில் நடையாடாதபடியிருக்கையும்.

ஸௌலப்₄யமாவது-அதீந்த்₃ரியனான தன்னைச் சேதநன் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி நயநவிஷயதாங்க₃தனாகை; அதினுடைய பூர்த்தியுள்ளது அர்ச்சாவதாரத்திலே; 1.**"மாம்"**என்று காட்டின ஸௌலப்₄யம் பரத்வமென்னும்படியிறே அர்ச்சாவதார ஸௌலப்₄யம். 1. **"மாம்"** என்று கையும்உழவுகோலும் பிடித்த சிறுவாய்க்கயிறுமாய்க் கொண்டு ஸாரதி₂யாய்நின்ற நிலையையிறே பற்றச் சொல்லிற்று; அங்குத்தை ஸௌலப்₄யம், 2. **"மய்யாஸக்த மநா: பார்த்த₂,"** என்று - தன்பக்கலிலே ஆஸக்தமான மநஸ்ஸையுடைய அர்ஜுநன் ஒருவனுக்குமாயிருக்கும். அர்ச்சாவதார ஸௌலப்₄யம் ஸர்வவிஷயமாயிருக்கும்; 'நீயே நமக்கு வேண்டா' என்றவர்களையும் விடமாட்டாத ஸௌலப்₄யமிறேயிது; அந்த ஸௌலப்₄யம் காதா₃சித்கமாயிருக்கும்; இந்த ஸௌலப்₄யம் ஸார்வகாலிகமாயிறேயிருப்பது. ஸ்வீகாரத்துக்கு உபயுக்தங்களான கு₃ண விஶேஷங்களோபாதி, உபாயத்வோபயோகி₃களான கு₃ண விஶேஷங்களும் இவ்விடத்தே அநுஸந்தே₄யங்கள். ப்ரத₂ம பாதா₃நந்தரத்தில் அஸ்மச்ச₂ப்₃த₃த்துக்குப்போலே இதுக்கு ஸங்கோசமில்லாமையாலே, அஸ்மச்ச₂ப்₃த₃த்₂வயார்த்த₂மும் இவ்விடத்திலே அநுஸந்தே₄யம்.

---

a நாச்சியார் திருமொழி 10-10. b திருவாய்மொழி 5-1-7.

**சரணபத₃ார்த்த₂ம்**

(4) சரணௌ — கீழ்ச்சொன்ன கு₃ணங்களை யொழிய வும் தானே விரோதி₄நிவர்த்தகமுமாய் அபி₄மதப்ராபகமு மாக வல்ல விக்₃ரஹவைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. a "தெரிவைமாருருவமே மருவி" என்கிறபடியே இதர விஷயங்களினுடைய பொரிபுறந்தடவின வடிவிலே அகப் பட்டுப் போருகிற சேதநனுக்கு, b "தன்பாலாதரம் பெருகவைத்த" என்கிறபடியே-தன் பக்கலிலே ப்ரேமத்தை யுண்டாக்கி இதர விஷயங்களில் ருசியை மாற்றி, பின்பு தானே உபாயமாய், ஒரு தே₃ஶவிஶேஷத்திலே போனா லும், 1. "**ஸதா₃ பஶ்யந்தி**" என்கிறபடியே ப்ராப்யமும் தானேயாகையாலே ஸ்வரூபகு₃ணங்களிற்காட்டில் விக்₃ரஹ மிறே உபாதே₃யமாயிருப்பது. 2. "**ஜிதந்தே புண்ட₃ரீ காக்ஷ**" என்றும், 3. "**சரணத்₃வந்த்₃வம் வ்ரஜாமி**" என்றும், 4. "**ந ஜாநே ஶரணம் பரம்**" என்றும், 5. "**த்வத் பாத₃கமலாத₃ந்யத்**" என்றும், 6. "**பாத₃யோஸ்ஸ்தி₂தம்**" என்றும், விக்₃ரஹத்தினுடைய ருசிஜநகத்வத்தையும், உபாயோபேயத்வங்களையுமிறே ஜிதந்தையில் அடைவே ப்ரதிபாதி₃க்கிறது.

இவ்விடத்தில் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தைச் சொல்லு கிறதாகில், விக்₃ரஹவாசகமான ஶப்₃த₃த்தை ப்ரயோகி₃ யாதே விக்₃ரஹைகதே₃ஶமான திருவடிகளுக்கு வாசகமான சரணஶப்₃த₃த்தை ப்ரயோகி₃ப்பானென்னென்னில்; மேல் ப்ரபத₃நம் பண்ணப்புகுகிற அதி₄காரி நாராயண பத₃த் திலே ஈஶ்வரனுடைய ஸ்வாமித்வத்தையும் ஶேஷித்வத் தையும் அநுஸந்தி₄த்தவனாகையாலும், மாதாவினுடைய இதராவயவங்களிற்காட்டில் க்ஷீரஸ்யந்தி₃யான ஸ்தநத்திலே ப்ரஜைக்கு விஶேஷஸ்நேஹமும் ப்ராப்தியுமுண்டாயிருக்கு மாபோலே, இவனுக்கும், அம்ருதஸ்யந்தி₃யான திருவடி களிலே விஶேஷப்ராப்தியும் ஸ்நேஹமும் கிடக்கக்கடவ

---

 a பெரியதிரு 1.1.3. b திருமாலை 16.

தாகையாலும், பாத₃க்₃ரஹணத்தில் க்ருபை அதிஶயித் திருக்கையாலும், சரணஶப்₃த₃ப்ரயோக₃ம் பண்ணுகிறது. a "நாளுநம் திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி" என்றும், b "திருநாரணன்தாள்காலம்பெறச் சிந்தித்துய்ம் மினோ" என்றும் இத்யாதி₃களிற்படியே உபதே₃ஶஸமயத் திலும் திருவடிகள் ரக்ஷகமென்று உபதே₃ஶித்து, c "கழல் களவையே சரணாகக்கொண்ட" என்றும், d "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும், e "அடிக்கீழ மர்ந்து புகுந்தேனே" என்றும் இத்யாதி₃களில் சொல்லு கிறபடியே - அநுஷ்டா₂நத₃ஶையிலும் திருவடிகளையே ரக்ஷகமாக அத்₄யவஸித்தாரிறே நம்மாழ்வாரும். மற்று முள்ள ஆழ்வார்களும், பலவிடங்களிலும் திருவடிகளை உபாயமென்று அருளிச்செய்தார்களிறே. f. "ஸப்₄ராதுஶ் சரணௌ கா₃ட₄ம் நிபீட்₃ய" என்று ஆழ்வார்க்கு அடி யான இளையபெருமாளும் திருவடிகளையிறே உபாயமாக அத்₄யவஸித்தது. ப்ராப்யமும் ஸ்வரூபமும் ஸூரிகளோடு ஸமாநமாயிருக்குமாபோலே, ப்ராபகமும் ஸூரிஸமாநமா யிறே இருப்பது.

ஆக கீழேசொன்ன ஶ்ரீமத்தையும், நாராயணத்வமும் அகிஞ்சித்கரமான அவஸ்ததை₂யிலும் தானே கார்யம் செய்ய வற்றான விக்₃ரஹவைலக்ஷண்யம் சொல்லுகிறது.

### ஶரணபதா₃ர்த்த₂ம்

(5) ஶரணம் — உபாயமாக. கீழ் ஸ்வீகார்யவஸ்து வைச் சொல்லிற்று; இங்கு ஸ்வீகாரப்ரகாரத்தைச் சொல்லு கிறது. e "அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா" என்றும், f "கோலத்திருமாமகளோடுன்னைக் கூட" என்றும் இத்யாதி₃களில் சொல்லுகிறபடியே லக்ஷ்மீ பரிஷ்வங்கி₃யான வஸ்துவுக்கு ப்ராபகதயா வரணீயத்வமும்

---

a திருவாய் 1-3-8. b திருவாய் 4.1.1. c திருவாய் 5-8-11.
d திருவாய் 5-10-11. e திருவாய் 6-10-10. f திருவாய் 6-9-9.

ப்ராப்யதயா வரணீயத்வமும் உண்டாயிறேயிருப்பது; இதுவேயிறே வாக்யத்₂வயத்துக்கும் அர்த்த₂ம். இதில் பூர்வவாக்யத்துக்கு ப்ராபகதயா வரணீயத்வம் அர்த்த₂மென்னுமிடத்தைச் சொல்லுகிறது; க்ஷீரம் பத்₂யமுமாய், போ₄க்₃யமுமாயிருக்கிருப்போலே, 1. **"நிர்வாணம் பே₄ஷஜம்"** 2. **"அம்ருதம் ஸாத₄நம் ஸாத்₄யம்"** a "மருந்தும் பொருளும் அமுதமுந்தானே" இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே ப்ராப்யப்ராபகங்களிரண்டும் ஏகமாயிறேயிருப்பது.

உபாயமாகிறது - அநிஷ்ட நிவாரகமுமாய், இஷ்டப்ராபகமுமாயிருக்குமது; அநிஷ்டமாவது - b "வீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து" என்றும், 3. **"அநாத்மந்யாத்மபு₃த்₃தி₄ர்யா"** என்றும் சொல்லுகிறபடியே அநாத்மந்யாத்மபு₃த்₃தி₄ரூபமாயும், அஸ்வே ஸ்வப்ரதிபத்திரூபமாயுமிருக்கிற அவித்₃யையயும், அவித்₄யாகார்யமான ராக₃த்₃வேஷங்களும், கரணத்ரயத்தாலும் கூடுபூரித்து வைக்கும் தத்கார்யங்களான புண்யபாபரூபகர்மங்களும், கர்மத்₃வயத்தினுடைய ப₂லபோ₄க₃ார்த்த₂மாகப் பரிக்₃ரஹிக்கும் தே₃வதிர்யக₃ாதி₃யான நாநாவித₄ ஶரீரங்களும், அஶ்ஶரீரங்களைப் பரிக்₃ரஹித்து அநுப₄விக்கும் ஆத்₄யாத்மிகாதி₃ து₃:க்க₂பரம்பரைகளும் தொடக்கமானவை.

இஷ்டமாகிறது — புண்யபாபகர்மவிதூ₄நநப்ரகாரமும், ஹார்த்த₃மார்க்க₃விஶேஷப்ரகாரமும், ஹ்ருத₃யகு₃ஹாநிர்க்க₃மநமும், அர்சிர்வாஸரோத்தராயண ஶுக்லபக்ஷாத்₃யாதிவாஹிக ஸத்காரமும், ஸலில த₃ஹந பவநாத்₃யாவரண ஸப்தகாதிலங்க₄நமும், த்ரிகு₃ணாதிக்ரமணமும், விரஜாக்₃யா ப்ராக்ருதநதீ₃விஶேஷாவகா₃ஹநமும், ஸூக்ஷ்ம ஶரீர விமோசநமும், அமாநவகரஸ்பர்ஶமும், அபஹதபாப்மத்வாதி₃கு₃ணக₃ண தத₃ாஶ்ரய ஸ்வரூபப்ரகாஶமும், பஞ்சோபநிஷந்மயமான தி₃வ்யவிக்₃ரஹபரிக்₃ரஹமும், ஐரம்மதீ₃ய

a மூன்-திருவ 4. b திருவாய் 1-2.3.

தி₃வ்யஸர:ப்ராப்தியும், தி₃வ்யாப்ஸரஸ்ஸங்க₃ஸத்கார மும், ப்₃ரஹ்மாலங்காராலங்கரணமும், ப்₃ரஹ்மக₃ந்த₃ரஸ தேஜ:ப்ரவேஶமும், தி₃வ்யகோ₃புரப்ராப்தியும், ஸூரி ஸங்க₃ஸத்காரமும், ராஜமார்க்க₃க₃மநமும் ப்₃ரஹ்மவேஶ்ம ப்ரவேஶமும், தி₃வ்யமண்டபப்ராப்தியும், தி₃வ்யபர்யங்க நிரீக்ஷணமும், ஸபத்நீகஸர்வேஶ்வரத₃ர்ஶநமும், ஆநந்த₃ மயபரமாத்மஸமீபஸ்தி₂தியும், பாத₃பீட₂பர்யங்கோத்ஸங்கா₃ ரோஹணமும், ஆலோகாலாபாலிங்க₃நாத்₃யநுப₄வமும், ஸ்வரூபகு₃ணவிக்₃ரஹாத்₃யநுப₄வஜநித ப்ரீதிப்ரகர்ஷமும், நாநாவித₄விக்₃ரஹபரிக்₃ரஹபூர்வகஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோ₂சித ஸர்வப்ரகார கைங்கர்யகரணமும். இதில் ப்ரதா₄நமான இஷ்டமாயிருப்பது கைங்கர்யம், அதுக்கு உபயுக்தங்களாகையாலே இஷ்டங்களாயிருக்கும் மற்று முள்ளவை.

ஆக, இப்படிக்கொத்த அநிஷ்டத்தை நிவர்த்திப்பித்து இஷ்டப்ராப்தியைப் பண்ணுகை உபாயமாகையாகிறது.

### 'ப்ரபத்₃யே' பதா₃ர்த்த₂ம்

(6) "ப்ரபத்₃யே" — கீழ், ஸ்வீகாரப்ரகாரத்தையும் ஸ்வீகார்ய வஸ்துவையும் சொல்லிற்று; இதில், ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது. பிராட்டியுடைய புருஷகாரபா₄வமும் ஈஶ்வரனுடைய உபாயபா₄வமும் கார்யகரமாம்போது, இவனுடைய ப்ரதிபத்தி வேணுமிறே; இந்த ப்ரதிபத்தி ராஹித்யத்தாலேயிறே, நித்யங்களாயிருக்கிற இவை இத:பூர்வம் அகிஞ்சித்கரங்களாய்த்து. ஆகையாலே, அவை யிரண்டையும் கார்யகரமாம்படி பண்ணக்கடவதான இவனுடைய ப்ரதிபத்திவிஶேஷத்தைச் சொல்லுகிறது.

'பத்₃லு-க₃தௌ' என்கிற தா₄துவுக்கு அர்த்த₂ம்-க₃தி. இவ்விடத்தில் க₃தியாக நினைக்கிறது—1. **"க₃த்யர்த்தா₂: பு₃த்₃த்₄யர்த்தா₂:"** என்கிற பு₃த்₃தி₄விஶேஷத்தை. இந்த பு₃த்₃தி₄விஶேஷமாகிறது— அநந்யார்ஹஶேஷத்வ ஜ்ஞாநத்₃

யநந்தரபாவியாய், ஸாத்ய ஸாதந வ்யாவ்ருத்தமாய், தேவாநாம் குஹ்யமாய் பகவத்ரக்ஷகத்வாநுமதிரூபமாய், ஸக்ருத்நுஷ்டேயமாய், அவிளம்ப்ய பலப்ரதமாய், ஸர்வாதிகாரமாய், ஸ்வரூபாநுரூபமாய், நியமவிதுரமாய், அந்திமஸ்ம்ருதி நிரபேக்ஷமாய், ஸுலபமாய், யாச்ஞா கர்ப்பமாய், த்ருடாத்யவஸாயமுமாயிருப்பதொரு ஜ்ஞாந விஶேஷம். இந்த ஜ்ஞாநவிஶேஷத்தில் ப்ரயோஜநாம்ஶமாயிருப்பது ஒரு விஶ்வாஸம். 1."**கிரயோ வர்ஷதாராபி:**" என்கிறபடியே - திரைமேல் திரையாகப் பொறுக்கவொண்ணாதபடி வந்து மேலிடுகிற வ்யஸநபரம்பரைகளாலும், யுக்த்யாபாஸவசநாபாஸங்களாலும், ஈஶ்வரன் பரீக்ஷை தொடக்கமானவற்றாலும், இவ்வத்யவஸாயவிஶேஷம் அப்ரகம்ப்யமானபோதிறே பலஸித்தியுள்ளது.

இப்ரபதநம் கரணத்ரயத்தாலுமுண்டாகவுமாம், ஏககாரணத்தாலுமுண்டாகவுமாம், பலஸித்திக்குக் குறையில்லை. அதிகாரிபூர்த்திக்குக் கரணத்ரயம்வேணும்; பலஸித்திக்கு ஏககரணமே அமையும். உபாயபூர்த்திக்கு ஸ்ரிய:பதித்வமும் வாத்ஸல்யாதிகுணயோகமும் திவ்யமங்களவிக்ரஹமும் அபேக்ஷிதமாயிருக்கிறாப்போலே, அதிகாரிபூர்த்திக்குக் கரணத்ரயமும் அபேக்ஷிதமாயிருக்கும்; உபாயவரணத்துக்கு ஏகாந்தமான அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநமும் ப்ராப்ய ருசியும் தொடக்கமான குணவிஶேஷங்கள் இன்னார்க்குப் பிறக்கக்கடவதென்கிற நியமமில்லாமையாலும், இங்குப் பிறக்கிற ப்ரதிபத்திவிஶேஷந்தனக்கு இதர ஸாதநங்கள் போலே அங்கவித்யாஸாபேக்ஷதையில்லாமையாலும், உபாஸநம்போலே த்ரைவர்ணிகர்க்கே அதிகாரமாயிருக்கையன்றிக்கே ஸர்வாதிகாரமாயிருக்கையாலே ஆஶ்ரயணவிதுரமாய்க் கிடக்கிறது.

'ப்ரபத்யே' என்கிற வர்த்தமாந நிர்த்தேஶத்தாலே- a "நாட்கடலைக்கழிமின்" என்று இருக்கும் நாள், காலம்

a திருவாய் 1-6-7.

செல்ல விட அரிதாயிருக்கையாலும், ஸம்ஸாரத்தினுடைய தோ₃ஷத்தையும் ப₄க₃வத்₃விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தையும் அநுஸந்தி₄த்தால் இப்போதே ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மற்று ப₄க₃வத்₃விஷயத்தை லபி₄க்கவேணும் என்னும்படியான த்வராதிரேகம் பிறக்கக்கடவதாகையாலும், இவ்வுபாயவிஶேஷந்தான் 1. **"அநந்யாஶ் சிந்தயந்த:"** என்கிறபடியே - நிரதிஶயப்ரீதிரூபமான உபாஸநத்தள வன்றிக்கே ... அதிலுங்காட்டில் அத்யர்த்த₂ப்ரீதிரூபமாயிருக்குமாகையாலும், 2. **"த்₃வயமர்த்த₂ாநுஸந்தா₄நேந ஸஹ"** என்கிறபடியே, யாவச்ச₂ரீரபாதம் அநுவர்த்திக்கும் என்னுமிடம் ஸூசிதமாகிறது. ப₂லஸித்₃தி₄க்கு ஸக்ருத் கரணம் அமையும், காலக்ஷேபாதி₃களுக்கு அஸக்ருத் கரணம் அபேக்ஷிதமாயிருக்கும். இப்படி கொள்ளாதபோது, 3. **"ஸக்ருதே₃வ ப்ரபந்நாய"** என்கிற ப்ரமாணத்தோடு விரோதி₄க்குமிறே,

ஆக, பூர்வவாக்யத்தாலே - ஸ்வீகாரத்தையும், ஸ்வீகார ப்ரகாரத்தையும், ஸ்வீகார்யவஸ்து விஶேஷத்தையும் ப்ரதிபாதி₃க்கிறது.

## உத்தரவாக்யார்த்த₂ாரம்ப₄ம்

உத்தரவாக்யம் — ஸ்வீகாரத்தினுடைய ப₂லரூபமாய், ஶ்ரிய:பதியாய், ஸர்வஸ்வாமியாயிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே இச்சேதநன் பண்ணும் வ்ருத்தி விஶேஷத்தினுடைய ப்ரார்த்த₂நத்தை ப்ரதிபாதி₃க்கிறது. பூர்வவாக்யத்தில் ப்ரதிபாதி₃தமான ஸாத₄நவிஶேஷம் ப₂லசதுஷ்டயஸாத₄ாரணமாயிறேயிருப்பது. அதில் இவ்வதி₄காரிக்கு அபி₄லஷிதமான ப₂லவிஶேஷம் இன்னதென்னுமிடத்தை ப்ரகாஶிப்பிக்கிறது இவ்வாக்யம். இவனுக்கு அபி₄லஷிதமான ப₂லமாகிறது-விரோதி₄நிவ்ருத்தியும், அபி₄மதப்ராப்தியும். அதில் அபி₄மதப்ராப்திரூபமாயிருக்கிற ப₂லத்தை முன்பே ப்ரதிபாதி₃க்கிறது.

இரண்டு ப₄லமும் இவனுக்கு அபி₄மதமாயிருக்குமாகில் இரண்டையும் ப்ரார்த்தி₂யாதே ஒன்றே ப்ரார்த்தி₂ப்பானென்? என்னில்; ப₄லத்₂வயமும் அபி₄லஷிதமாயிருந்ததேயாகிலும் ப்ரத₄ாநப₄லமாயிருப்பது அபி₄மதப்ராப்தி. விரோதி₄நிவ்ருத்தியுண்டாலல்லது அபி₄மதம் ஸித்₃தி₄யாமையாலே விரோதி₄நிவ்ருத்தி தத₃ர்த்த₂மாக அபேக்ஷிதமாயிருக்குமத்தனை. அங்ஙன் கொள்ளாதபோது, தத₃ேக ஸாத்₄யத்வம் அஸித்₃த₄மாம்; ஆகையாலே, விரோதி₄நிவ்ருத்தியிற்காட்டில் கைங்கர்யத்துக்குண்டான ப்ராத₄ாந்யத்தைப்பற்ற கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கிறது. இதில் சரமபத₃ம், கைங்கர்யவிரோதி₄ நிவ்ருத்தியை ப்ரதிபாதி₃க்கிறது; மத்₄யமபத₃ம், கைங்கர்யத்தையும் கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄யையும் ப்ரதிபாதி₃க்கிறது.

## 'ஸ்ரீமதே' பத₃ார்த்த₂ம்

(7) ப்ரத₂மபத₃ம் கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி விஶிஷ்டமென்னுமிடத்தை ப்ரதிபாதி₃க்கிறது. ஶேஷத்வப்ரதிஸம்ப₃ந்தி₄ மிது₂நமாயிருக்குமாபோலே, கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄யும் மிது₂நமாயிறேயிருப்பது. a "கோலத் திருமாமகளோடுன்னைக் கூடாதே" என்றும், b "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்றும் நம்மாழ்வாரும் மிது₂நமே ப்ராப்யமென்று அருளிச்செய்தார், அவர்தமக்கு அடியான இளையபெருமாளும் 1. "ப₄வாந்து ஸஹ வைதே₃ஹ்யா" என்று கிஞ்சித்காரத்துக்கு விஶிஷ்டவேஷமே விஷயமென்று அருளிச்செய்தார். அவர் தம்முடைய பூர்வாவஸ்தை₂யிலும் c "திருமாற்கரவு" என்கிறபடியே கிஞ்சித்கார ப்ரதிஸம்ப₃ந்தி₄ விஶிஷ்டமாயிறேயிருப்பது. இவர்கள் இத்தனைபேரையும் அடிபொற்றின பரமாசார்யர், 2. "ப்ரஹர்ஷயந்தீம் மஹிஷீம் மஹாபு₄ஜம்" என்றும், 3. "ஶ்ரியஶ்ஶ்ரியம்" என்றும், விஶிஷ்டவேஷத்தை அருளிச்செய்து, 4. "ஐகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி"

a திருவாய் 6 9-3. b திருவாய் 4-9-10. c இரண்டாம் திருவ 53.

என்று தத்₃விஷயமான ஆர்த்திவிஶேஷத்தை ப்ரார்த்தி₂த்தார். அவர் திருவுள்ளத்தைப் பின்சென்ற ஸ்ரீ பா₄ஷ்யகாரரும், 1. "ஸ்ரீவல்லப₄" என்று - விஶிஷ்டவேஷத்தை ப்ராப்யமாக அருளிச்செய்தார். ஆகையாலே - தனித்து இவர்களுக்கு ப்ராப்யத்வமில்லை. இருவரையும் பிரித்து விரும்பினால் ராவண ஶூர்ப்பணகி₂களுக்குப்போலே நாஶமே ப₂லமாயிருக்கும். இருவரையும் பற்றினால் ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானைப்போலே உஜ்ஜீவநமே ப₂லமாயிருக்கும்.

a "அல்லி மாமலராள் தன்னொடு மடியேன் கண்டுகொண்டல்லல் தீர்ந்தேன்" என்றும் b "வாரணிமுலையாள மலர்மகளோடு மண்மகளுமுடன்நிற்ப........காரணிமேகம் நின்றதொப்பானைக் கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேன்" என்றும் சொல்லுகிறபடியே - சேர்த்தியிலே பற்றினாலிறே ஸ்வரூபோஜ்ஜீவநமுள்ளது.

ஆக, கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄ மிது₂நமாயிருக்கையாலே, ஸ்ரீமச்ச₂ப்₃த₃ம் பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியைச் சொல்லுகிறது. பூர்வவாக்யத்தில் ஸ்ரீமச்ச₂ப்₃த₃ம், சேதநனுடைய அபராத₄த்தையும் ஈஶ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையுங்கண்டு இவர்கள் அவனுடைய க்ரோத₄த்துக்கு விஷயபூ₄தராய் நஶித்துப்போகாதே இவனைக் கிட்டி உஜ்ஜீவித்துப்போகவேணுமென்று ஸாபராத₄ரான சேதனரை ஈஶ்வரனோடே சேர்க்கைக்காக என்றுமொக்க விடாதேயிருக்குமிருப்பைச் சொல்லுகிறது. இங்குத்தை ஸ்ரீமச்ச₂ப்₃த₃ம் கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄த்வத்தைப்பற்றவும் அவர்கள் பண்ணும் கைங்கர்யத்தை ஈஶ்வரன் திருவுள்ளத்தே ஒன்றுபத்தாகப் படுத்துகைக்காகவும், அநுப₄வ விச்சே₂த₃த்தில் தனக்கு ஸத்தாஹாநி பிறக்கும்படியிருக்கையாலே நிரந்தர ஸம்ஶ்லேஷத்துக்காகவும் அவனை க்ஷணகாலமும் பிரியாதே ஸர்வகாலமும் ஸம்ஶ்லிஷ்டையாயிருக்குமிருப்பைச் சொல்லுகிறது.

a பெரியதிரு 4-3-6. b பெரியதிரு 4-3-1.

**1. "மாத்ருதே₃வோ ப₄வ-பித்ருதே₃வோ ப₄வ"** என்கிற படியே - மாதாபிதாக்களைச் சேர்த்துக் கிஞ்சித்கரித்தாலிறே புத்ரனுக்கு ஸ்வரூபஸித்₃தி₄யுள்ளது; அப்படி **2. "த்வம் மாதா ஸர்வலோகாநாம் தே₃வதே₃வோ ஹரி: பிதா"** என்கிற படியே - நேரே மாதாபிதாக்களாயிருக்கிற பிராட்டியையும் ஈஶ்வரனையும் சேரவைத்துக் கிஞ்சித்கரித்தாலிறே இவனுக்கு ஸ்வரூபஸித்₃தி₄யுள்ளது.

**நாராயணபத₃ார்த்த₂ம்**

(8) இப்படி கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யான பிராட்டியோட்டைச் சேர்த்தியளவன்றிக்கே, கு₃ணவிக்₃ரஹ விபூ₄திகளோடே கூடியிருக்கும் ஆகாரம் கைங்கர்யவர்த்த₄கதயா அநுப₄ாவ்யமாயிருக்கையாலே ஜ்ஞாநஶக்த்யாதி₃கல்யாண கு₃ணங்களோடும் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தோடும் உப₄ய விபூ₄தியோக₃த்தோடும் கூடியிருக்கிற ப₄க₃வத் ஸ்வரூபத்தை ப்ரதிபாதி₃க்கிறது - நாராயணபத₃ம்.

**3. "ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந்"** என்றும், **4. "ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:"** என்றும் இத்யாதி₃களில் சொல்லுகிற படியே - கு₃ணவிக்₃ரஹாதி₃களும், **5. "ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வாநந்தீ₃ ப₄வதி"** என்கிற ஸ்வரூபத்தோபாதி கைங்கர்யவர்த்த₄கமாய் போ₄க்₃யங்களாயிறேயிருப்பது. ஜ்ஞாந ஶக்த்யாதி₃கு₃ணங்களோடு வாத்ஸல்யாதி₃ கு₃ணங்களோடு ஸௌஶீல்யாதி₃கு₃ணங்களோடு வாசியற எல்லா கு₃ணங்களும் அநுப₄ாவ்யங்களாயிருக்கையாலே பூர்வ வாக்யத்தில் நாராயணபத₃த்தில் உபாயவரணத்துக்கு உபயுக்ததயா அநுஸந்தே₄யங்களான கு₃ணவிஶேஷங்களும் இப்பத₃த்திலே ப்ராப்யதயா அநுஸந்தே₄யங்கள். ஆஶ்ரயமான ஸ்வரூபவிஶேஷத்துக்கு ஆகாரத்₃வய முண்டாகிறாப்போலே, ஆஶ்ரயிகளான கு₃ணவிஶேஷங்களுக்கும் ஆகாரத்₃வயமுண்டாயிறேயிருப்பது. அநுப₄ாவ்ய

த்வம் அவிஶிஷ்டமாகையாலே ஸகல ஶ்ருதிகளும் ப்ரதிபாதிதமாயிருந்ததேயாகிலும் சதுர்த்யந்தத்தில் சொல்லுகிற வ்ருத்திவிஶேஷத்துக்கு மிகவும் அந்தரங்கமாயிருப்பது ஸ்வாமித்வமாகையாலே, கீழ் ஶேஷத்வ ப்ரதிபாதநத்திலே சொன்னாற்போலே இங்கு ஸ்வாமித்வ ப்ரதிபாதநத்திலே நோக்காகக்கடவது.

## சதுர்த்தியினர்த்தம்

(9) இப்பதத்திலே ஏறிக்கிடக்கிற சதுர்த்தீவிபக்தி, ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரன் பக்கல் இச்சேதநன் பண்ணும் வ்ருத்திவிஶேஷ ப்ரார்த்தநையை ப்ரதிபாதிக்கிறது. இங்கு ப்ரார்த்தநீயமான வ்ருத்தி விஶேஷமாகிறது— அல்பமாய் அஸ்திரமாய் துஸ்ஸாதமாய் து:க்கமிஶ்ரமாய் ஸ்வரூபவிருத்தமாயிருக்கிற ஐஶ்வர்யபுருஷார்த்தம் போலன்றிக்கே, நிரஸ்தாதிஶயாஹ்லாத ஸுகபாவைகலக்ஷணமாய், விஷயத்தோடு ஆஶ்ரயத்தோடு தேஶத்தோடு தன்னோடு வாசியற யாவத்காலம் அநுவர்த்திக்கக்கடவதாய், அஞ்ஜலிமாத்ரலப்யமாய், து:க்கக்ந்தரஹிதமாய், ஸ்வரூபாநுரூபமாய், a "இறப்பதற்கே யெண்ணாது" என்றும், b "இறுகலிறப்பு" என்றும் சொல்லுகிறபடியே ஆத்மவிநாஶரூபமாயிருக்கிற கைவல்யத்திற்காட்டில் அத்யந்தவ்யாவ்ருத்தமாய், புண்யபாப விமோசநம் தொடங்கி பகவதநுபவஜநிதஹர்ஷமெல்லையாக நடுவுண்டான தேஹவிமோசநம் பரமபதப்ராப்தி ஸ்வரூபப்ராப்தி ஸாம்யாபத்தி தொடக்கமாகச்சொல்லுகிற புருஷார்த்தவிஶேஷங்களுக்கும் அவ்வருகாய், 1. "மம ஸஹஜகைங்கர்ய விதய:" என்கிறபடியே ஆத்மாவுக்கு நித்யஸித்தமாய், பகவந்முகவிகாஸத்துக்கு ஹேதுவாயிருக்கிற பகவதநுபவஜநிதப்ரீதிகாரிதகைங்கர்யம்.

---

a திருநெடுந்தாண்டகம் 1.

b திருவாய் 4-1-10.

இக்கைங்கர்யம், ஏககரணத்தாலே அநுஷ்டே$_2$யமாயிருக்கையன்றிக்கே, 1. **"ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந்"** என்றும், 2. **"ஸாம கா$_3$யந்நாஸ்தே"** என்றும், 3. **"நம இத்யேவ வாதி$_3$ந:"** என்றும், 4. **"சா$_2$யா வா ஸத்த்வமநுக$_3$ச்சே$_2$த்"** என்றும், 5. **"யேந யேந தா$_4$தா க$_3$ச்ச$_2$தி தேந தேந ஸஹ க$_3$ச்ச$_2$தி"** என்றும் இத்யாதி$_3$களில் சொல்லுகிறபடியே கரணத்ரயத்தாலும் அநுஷ்டே$_2$யமாயிருக்கும். a"ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி-வழுவிலா அடிமை செய்யவேண்டுநாம்" என்றும், 6. **"ஸர்வேஷு லோகேஷு காமசாரோ ப$_4$வதி"** என்றும், 7. **"ந ச புநராவர்த்ததே"** என்றும், b"புணைக்கொடுக்கிலும் போகவொட்டார்" என்றும், c"சென்றால்குடையாமிருந்தாற் சிங்காசனமாம்" என்றும் இத்யாதி$_3$களில் சொல்லுகிறபடியே இவ்வதி$_4$காரியினுடைய ஸ்வரூபாநுரூபமாய் நிரதிஶயபோ$_4$க்$_3$யமுமாய் தா$_4$ரகமுமாயிருக்கிற கைங்கர்யத்தினுடைய அபி$_4$நிவேஶாதிஶயத்தாலே தே$_3$ஶ கால ப்ரகாராவஸ்தா$_2$தி$_3$கார நியம வித$_4$ரமாக ப்ரார்த்தி$_2$க்கக்கடவனாயிருக்கையாலே, ஸர்வ தே$_3$ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை$_2$களிலும் ஸர்வப்ரகாரத்தாலும் பண்ணும் வ்ருத்திவிஶேஷத்தை ப்ரதிபாதி$_3$க்கிறது.

இச்சதுர்த்தி$_2$க்குத் தாத$_3$ர்த்$_2$யம் அர்த்த$_2$மானாலோ? கைங்கர்யம் அர்த்த$_2$மாகவேண்டும் நிர்ப$_3$ந்த$_4$மென்? என்னில்; இதுக்குக் கைங்கர்யம் அர்த்த$_2$மாகாதே தாத$_3$ர்த்$_2$யம் அர்த்த$_2$மானபோது பூர்வவாக்யாநுஸந்தா$_4$நம் நிரர்த்த$_2$கமாய், வ்யாக்$_2$யாதாக்களுடைய வசநங்களோடும் விரோத$_4$ம் ப்ரஸங்கி$_3$க்கும். ஆகையாலே, தாத$_3$ர்த்$_2$யப$_2$லரூபமான கைங்கர்யமே அர்த்த$_2$மாகக்கடவது. கைங்கர்யம் அர்த்த$_2$மாகிறது, ப்ரார்த்த$_2$நை வந்தபடியென்? என்னில்; கைங்கர்ய ப்ரதிஸம்ப$_3$ந்தி$_4$யான விஷயம் உத்துங்க$_3$மாயிருக்கையாலும், ஆஶ்ரயபூ$_4$தனான சேதநன் அத்யந்தபரதந்த்ரனாயிருக்கையாலும், ப்ரார்த்த$_2$நா விஶேஷமில்லாதபோது கைங்கர்யம் ஸித்$_3$தி$_4$யாமை

a திருவாய் 3.3-1. b பெரியதிரு 4.5-2. c முதல்திருவ 53.

யாலே விஷயஸ்வபா₄வத்தாலும் ஆஶ்ரயஸ்வபா₄வத்தாலும் ப்ரார்த்தி₂க்கக்கடவது.

ஆக, இந்த விப₄க்த்யம்ஶத்தாலே - புருஷார்த்தா₂பா₄ஸங்களான ஐஶ்வர்ய கைவல்யங்கள் இரண்டிற்காட்டில் வ்யாவ்ருத்தமாய், ஶ்ரிய:பதியாய் ஸர்வஸ்வாமியாயிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளை விஷயமாக உடைத்தாய், 1. "க்ரியதாம்" என்றும், a "கூவிப்பணிகொள்ளாய்" என்றும், b "ஏவமற்றமரர் ஆட்செய்வார்" என்றும் அவனுடைய நியோக₃கார்யமாய், ஸ்வநிர்ப₄ந்த₄வித₄ரமாய், வாங்மந:காயரூபமான கரணத்ரயத்தாலும் பண்ணும் வ்ருத்தி விஶேஷத்தைச் சொல்லுகிறது. ஈத்₃ருஶ வ்ருத்திவிஶேஷமாகிறது. நிரதிஶயபோ₄க்₃யமான ப₄க₃வத்₃விஷயத்தை விஷயீகரித்திருக்கையாலும், நிரஸ்தஸாம்ஸாரிகஸகலப்ரதிப₃ந்த₄கமாயிருக்கிற ஸ்வஸ்வரூபத்தை ஆஶ்ரயமாக உடைத்தாயிருக்கையாலும், கர்த்தாவாயிருக்கிற சேதநனுக்கு அத்யந்தப்ரீதிரூபமாயிறேயிருப்பது

## நமஶ்ஶப்₃த₃ார்த்த₂ம்

(10) பரதந்த்ரனை இவனுக்குப் பிறக்கும் போ₄க₃ம் பாரதந்த்ர்யாவிரோதி₄யானலல்லது புருஷார்த்த₂மல்லாமையாலே இதனுடைய புருஷார்த்த₂தா ஹேதுவான ப₄க₃வத்ப்ரீதிஜநகத்வ ப்ரதிபத்தியையொழிய ஸ்வயம் போ₄க்₃யமாயிருக்கும் ஆகாரம் விரோதி₄யாயிறேயிருப்பது; தாத்₃ருஶமான விரோதி₄யை நிவர்த்திப்பிக்கிறது நமஸ்ஸு. ப₄க₃வந்முகவிகாஸமே நமக்கு போ₄க்₃யம். அதுக்கு ஹேதுவாகையாலே இது நமக்கு ஆஶ்ரணீயமென்று பிறக்கும் ப்ரதிபத்தியொழிய இப்போ₄க₃விஶேஷத்தில் மதீ₃யத்வ ப்ரதிபத்தியும் ஸஞ்சரிக்குமாகில் இவனுக்கு அபுருஷார்த்த₂மாயிறேயிருப்பது. ஆகையாலே இந்த நமஸ்ஸு 'கைங்கர்யத₃ஶையில் ஈத்₃ருஶமான ப்ரதிபத்திவிஶேஷம் விரோதி₄'

a திருவாய் 8-5-7. b திருவாய் 8-1-1.

என்னுமிடத்தை ப்ரதிபாதி₃க்கிறது. கீழிரண்டு பத₃மும், விஷயவைலக்ஷண்யத்தையும் விஷயியினுடைய வைலக்ஷண்யத்தையும் சொல்லுகிறது; இப்பத₃ம் ஆஶ்ரய வைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது.

ஸ்வரூபவிரோதி₄யென்றும், ஸாத₄நவிரோதி₄யென்றும், ப்ராப்திவிரோதி₄யென்றும், ப்ராப்யவிரோதி₄யென்றும், சதுஷ்டயமாயிருக்கும் விரோதி₄. அதில் திருமந்த்ரம், ஸ்வரூபவிரோதி₄நிவ்ருத்தியை ப்ரதிபாதி₃க்கிறது; சரமஶ்லோகம், அர்த்த₂த்₃வயத்தாலும் ஸாத₄நவிரோதி₄ நிவ்ருத்தியையும் ப்ராப்திவிரோதி₄நிவ்ருத்தியையும் ப்ரதிபாதி₃க்கிறது. இது, ப்ராப்யவிரோதி₄ நிவ்ருத்தியை ப்ரதிபாதி₃க்கிறது.

ஆக, (1) கைங்கர்ய விரோதி₄நிவ்ருத்தியையும், (2) கைங்கர்யத்தையும், (3) கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄யையும், (4) கைங்கர்யப்ராப்திக்கு ஹேதுபூ₄தமான ஸ்வீகாரத்தையும், (5) ஸ்வீகார்யமான ப்ராபகஸ்வரூபத்தையும், (6) அதுக்கு ஏகாந்தங்களான கு₃ணவிஶேஷங்களையும், (8) அக்கு₃ண விஶேஷங்களுக்கு உத்₃பா₄வகமான புருஷகாரத்தையும் சொல்லித் தலைக்கட்டுகிறது. / [புருஷகாரஸ்வரூபத்தையும், உபாயஸ்வரூபத்தையும், உபாயாத்₄யவஸாயத்தையும், கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄யையும், கைங்கர்யத்தையும், தத்₃ விரோதி₄நிவ்ருத்தியையும் சொல்லிற்று.]

**அஷ்டாக்ஷர மஹா வித்₃யா தாத்பர்யமகி₂லம் க்ரமாத்।**
**ஸூநுநா க்ருஷ்ணமிஶ்ராணாம் லோகாசார்யேண த₃ர்ஶிதம்॥**

**ஆரண நூல் வாழ்க அருளிச்செயல் வாழ்க**
**தாரணியும் விண்ணுலகந்தான் வாழ்க—பூர்ணமாய்ப்**
**பின்னுமுன்னோர் தான்வாழ்க பிள்ளை யுலகாரியனே**
**யின்னமொரு நூற்றாண்டிரும்.**

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

பரந்தபடி முற்றிற்று.

/ [ ] சில ஸ்ரீகோஶங்களில் இல்லை.

# 14. / ஶ்ரிய: பதிப்படி

## 1-வது திருமந்த்ரப்ரகரணம்

### உபோத்₃கா₄தம்

ஶ்ரிய:பதியாய் ஸர்வஸ்வாமியாயிருந்துள்ள ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும், அவனுக்கு அநந்யஶேஷமான தந்தாமுடைய ஸ்வரூபத்தையும் யதா₂ரவஸ்தி₂தமாக ப்ரதிபத்திபண்ணி, நித்யமுக்தரைப்போலே ஸ்வரூபாநுரூபமான பரிமாற்றத்திலே அந்வயித்து வாழப்பெறாதே, இருவருடைய ஸ்வரூபத்தையும் விபரீதமாக ப்ரதிபத்தி பண்ணி, விபரீத வ்ருத்த ப்ரவ்ருத்தராய், ஸ்வரூபவிரோதி₄யான ப்ராக்ருதபோ₄க₃த்திலே மண்டி, தாபத்ரயதப்தராய்ப் போருகிற ப₃த்₃த₄ாத்மாக்களிலே ஆரேனுமொருவனுக்கு நிர்ஹேதுக ப₄க₃வத்கடாக்ஷமடியாக அந்யதா₂ஜ்ஞாந விபரீத ஜ்ஞாநஜநகமான ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலைசாய்ந்து யதா₂ர்த்த ஜ்ஞாந ஜநகமான ஸத்த்வம் தலையெடுத்து ஸத்த்வகார்யமான வெளிச்சிறப்புப் பிறந்து த்யாஜ்யோபாதே₃ய ஜ்ஞாநத்திலே கௌதுகமுண்டாய், அதடியாக ஸதா₃சார்யோபஸத்தி பிறந்து அவனுடைய ப்ரஸாத₃த்தாலே மூலமந்த்ரலாப₄முண்டானால், த்யாஜ்யோபாதே₃ய விபா₄க₃த்தைப் பரிபூர்ணமாக அறிவிக்கக்கடவுதான ப்ரத₂மரஹஸ்யம் ப்ரத₂மத்திலே அநுஸந்தே₄யமாயிருக்கும்.

உபாயாநுஷ்டா₂நத்துக்கும் உபேய ப்ரார்த்த₂நைக்கும் முன்பே, அவற்றுக்கு ஆஶ்ரயமாய் ஜ்ஞாதவ்யமான ஆத்மஸ்வரூபத்தைப் பூர்ணமாக அறிவிக்கையாலே இத்தை ப்ரத₂மரஹஸ்யமென்று சொல்லுகிறது.

இதுதான், த்ரிவர்க்க₃த்துக்கும், கைவல்ய கைங்கர்யரூபமான அபவர்க்க₃த்₃வயத்துக்கும், ஸ்வரூபயாதா₂த்ம்ய ஜ்ஞாநத்துக்கும் ௧தெளிவிசும்பிற்போலே இங்கேயிருந்து பரிபூர்ண ப₄க₃வத₃நுப₄வம் பண்ணுகைக்கும் அமோக₄ஸாத₄நமாய், வ்யாபக வ்யதிரிக்தங்களிலும் வ்யாபகாந்தரங்

/'ஶ்ரிய:பதி' எனத் தொடங்கும் ரஹஸ்யம் ஶ்ரிய:பதிப்படி.

௧ திருவாய் 9.7-5.

களிலும் வ்யாவ்ருத்தமாய், வேத₃வைதி₃கருசி பரிக்₃ருஹீத மாயிருக்கும்.

இதுக்கு அந்தர்யாமியான நாராயணன் ரிஷி; தே₃வீ கா₃யத்ரீ ச₂ந்த₃ஸ்ஸு; பரமாத்மாவான நாராயணன் தே₃வதை; ப்ரணவம் பீ₃ஜம். ஆய ஶக்தி;; ஶுக்லவர்ணம்; மோக்ஷத்திலே விநியோகம். இதுதான், எட்டுத்திருவக்ஷரமாய் மூன்று பத₃மாயிருக்கும். இதில் முதல்பத₃மான ப்ரணவம், மூன்று பத₃மாயிருக்கும். முதல்பத₃மான அகாரம் ப₄க₃வத்₃வாசகம்; இரண்டாம்பத₃மான உகாரம் அவதா₄ரண வாசகம்; மூன்றும் பத₃மான மகாரம் ஆத்மவாசகம்.

## அகாரார்த்த₂ம்

அகாரம் 1. "அவ-ரக்ஷணே" என்கிற தா₄துவிலே பத₃மாய் முடிகையாலே, ரக்ஷகனுன எம்பெருமானைச் சொல்லுகிறது. ரக்ஷணந்தனக்கு ஸங்கோசமில்லாமையாலே, ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் ஸர்வாத்மாக்களுக்கு ஸர்வப்ரகாரத்தாலும் பண்ணும் ரக்ஷணத்தைச் சொல்லுகிறது.

ஜ்ஞாநாநந்த₃ங்களிலுங் காட்டில் ஈஶ்வரஸ்வரூபத்துக்கு அந்தரங்க₃நிரூபகமாகையாலும், மேல் சொல்லுகிற ஶேஷித்வத்துக்கு விஷயம் மிது₂நமாகையாலும், இதில் சொல்லுகிற ரக்ஷணத்துக்குப் பிராட்டி ஸந்நிதி₄ வேண்டுகையாலும், இதிலே லக்ஷ்மீஸம்ப₃ந்த₄ம் அநுஸந்தே₄யம்.

## லுப்தசதுர்த்₂யர்த்₂ம்

இதில் ஏறிக்கழிந்த சதுர்த்தி₂, தா₃ர்த்₂யத்தைச் சொல்லுகிறது. விவரணம் சதுர்த்₂யந்தமாகையாலே, இதுவும் சதுர்த்₂யந்தமாகக்கடவது. 2. "ப்₃ரஹ்மணே த்₃யா மஹஸ.. ஓமிதி".

## உகாரார்த்த₂ம்

அவதா₄ரணவாசகமான உகாரம், கீழ்ச்சொன்ன ப₄க₃வச்சே₂ஷத்வத்துக்கு விரோதி₄யான அந்யஶேஷத்

வத்தினுடைய நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஒரு வஸ்து அநேகர்க்கு ஶேஷமாக லோகத்திலே காண்கையாலே லோகத்₃ருஷ்டாந்தப்ரக்ரியையாலே ஶங்கிதமான அந்ய ஶேஷத்வத்தினுடைய நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. தே₃வபோ₄க்₃யமான அந்நத்துக்கு ஶ்வஸ்பர்ஶம்போலே ஈஶ்வர போ₄க்₃யமான ஆத்மவஸ்துவுக்கு தே₃வதாந்தர ஸ்பர்ஶம். a "வானிடை வாழும்" இத்யாதி₃.

மகாரார்த₂ம்

த்ருதீயபத₃மான மகாரம்—1. "மந ஜ்ஞாநே" என்கிற தா₄துவிலேயாதல், 2. "மநு-அவபோ₃த₄நே" என்கிற தா₄து விலேயாதல் பத₃மாய் நிஷ்பந்நமாகையாலே, ஜ்ஞாதாவாய் b "சென்று சென்று பரம்பரமாய்" என்கிறபடியே - தே₃ஹேந்த்₃ரியங்களிற் காட்டில் விலக்ஷணமான ஆத்மா வைச் சொல்லுகிறது.

அன்றிக்கே ககாராதி₃ப₄காராந்தமான இருபத்து நாலக்ஷரமும் இருபத்துநாலு தத்வத்துக்கு வாசகமாய், இருபத்தஞ்சாமக்ஷரமான மகாரம் இருபத்தஞ்சாம் தத்வ மான ஆத்மாவுக்கு வாசகமாகையாலே, மகாரம் ஆத்ம வாசகமென்னவுமாம்.

ஸர்வாத்மாக்களும் ஈஶ்வரனுக்கு அநந்யார்ஹஶேஷ பூ₄தராகையாலே, ஆத்மஸமஷ்டியைச் சொல்லுகிறது. சேதந ப்ரகாரமான அசித்தத்வமும் ப₄க₃வச்சே₂ஷமாக இப்பத₃த்திலே அநுஸந்தே₄யம் உகாரத்திலேயென்றும் சொல்லுவர்கள்.

ப்ரணவந்தன்னில் ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லி, பின்பு ப₄க₃வச்சே₂ஷத்வத்தைச் சொல்லாதே, முற்பட ப₄க₃வச் சே₂ஷத்வத்தைச்சொல்லி,பின்பு ஆத்மஸ்வரூபத்தைச் சொல் லுகையாலே 3. "ந சாத்மாநம்" என்கிறபடியே ஶேஷத்வ முண்டானபோது ஆத்மா உபாதே₃யனும், அல்லாதபோது அநுபாதே₃யன் என்னுமிடத்தை ப்ரகாஶிப்பித்து நிற்கிறது.

a நாச்சியார் திருமொழி 1.5. b திருவாய் 8-8-5.

ஆக, ப்ரணவம், ப₄க₃வச்சே₂ஷத்வத்தையும் அந்ய ஶேஷத்வ நிவ்ருத்தியையும், ஶேஷத்வாஶ்ரயமான வஸ்து ஸ்வரூபத்தையும் சொல்லிற்று.

## நம:பதா₃ர்த்த₂ம்

கீழ்ச்சொன்ன ஸ்வாப₄ாவிகமான ப₄க₃வச்சே₂ஷத்வத்தை அநாதி₃காலம் அபி₄பூ₄தமாம்படி பண்ணின விரோதி₄யினுடைய நிவ்ருத்தியைச் சொல்லுகிறது நமஸ்ஸு. இதுதான், [ந] என்றும், [ம:] என்றும் இரண்டு பத₃மாயிருக்கும். [ந] என்றது - அன்றென்றபடி. [ம:] என்றது - எனக்கென்றபடி. இரண்டுங்கூட எனக்கன்று என்று அநுஷங்க₃த்தாலே அஹங்காரநிவ்ருத்தியைச் சொல்லுகிறது. அஹங்காரம் கழியுண்டவாறே அதடியாக வருகிற மமகாரமும் கழியுண்ணும். அன்றிக்கே, இதுதான் அத்₄யாஹாரத்தாலே மமகாரநிவ்ருத்தியைச் சொல்லுகிறதென்னவுமாம்.

இப்படி அஹங்காரமமகாரநிவ்ருத்திமாத்ரமேயன்றிக்கே, ப₄க₃வச்சே₂ஷத்வமும், அதினுடைய காஷ்டா₂பூ₄மியான பா₄க₃வத ஶேஷத்வமும், இப்பத₃த்திலே அநுஸந்தே₄யம். இதில், கீழில் அஹங்காரம் ஶேஷத்வவிரோதி₄யான அஹங்காரமன்றிக்கே ஈஶ்வரனே உபாயம் என்கிற ப்ரதிபத்திக்கு விரோதி₄யான அஹங்காரமாய், அது கழியுண்டால் ஈஶ்வரனே உபாயோபேயம் என்கிற ப்ரதிபத்தி பிறக்கக்கடவதாகையாலே ஆர்த்த₂மாக ஈஶ்வரனுடைய உபாயபா₄வத்தைச் சொல்லுகிறதென்னவுமாம்.

அன்றிக்கே, 1. **"நமஶ்சக்ரு:"** என்கிறபடியே ஸ்தா₂ந ப்ரமாணத்தாலே நமஶ்ஶப்₃த₃ம் ஶரணஶப்₃த₃பர்யாயமாய், ஶாப்₃த₃மாக ஈஶ்வரனுடைய உபாயபா₄வத்தைச் சொல்லுகிறதென்னவுமாம்.

மேற்சொல்லுகிற கைங்கர்யத்துக்கு விரோதி₄யான அஹங்கார மமகாரநிவ்ருத்தியும், கைங்கர்யப்ரார்த்த₂நையும் இப்பத₃த்திலே அநுஸந்தே₄யம்.

இதுதான் அகாரநாராயணபத₃ங்கள்போலே சதுர்த்த்₂யந்தமன்றிக்கே ஷஷ்ட்₂யந்தமாயிருக்கையாலே, ஒரு ப்ரகாரத்தாலும், தன்னோடு தனக்கு அந்வயமில்லை என்கிறது. அன்றிக்கே, இஷ்ஷஷ்டி₂தனக்கு தாத₃ர்த்₂ய மர்த்தமுமாம்.

## நாராயண ஶப்₃த₃ார்த்த₂ம்

சதுர்த்த்₂யந்தமான நாராயணபத₃ம், கீழ்ச்சொன்ன ப₄க₃வத₃நந்யார்ஹஶேஷத்வத்துக்கும் த்தே₃கோபாயத்வத்துக்கும் அநுகு₃ணமான கைங்கர்ய ப்ரார்த்த₂நத்தைச் சொல்லுகிறது. அதில் ப்ரக்ருத்யம்ஶம், கைங்கர்ய ப்ரதி ஸம்ப₃ந்தி₄யைச் சொல்லுகிறது; ப்ரத்யயம் கைங்கர்ய ப்ரார்த்த₂நையைச் சொல்லுகிறது. இதுதான் ஷஷ்டி₂ ஸமாஸமாகவுமாம், ப₃ஹுவ்ரீஹி ஸமாஸமாகவுமாம். ஷஷ்டி₂ஸமாஸத்தில், நாரங்களுக்கு ஈஶ்வரன் அயநமென்று அர்த்த₂ம்; ப₃ஹுவ்ரீஹி ஸமாஸத்தில், நாரங்கள்தான் ஈஶ்வரனுக்கு அயநமென்று அர்த்த₂ம். நாரமாவது - நஶியாத வஸ்துக்களினுடைய திரள். நரஶப்₃த₃ம், நஶியாத வஸ்துவைச் சொல்லுகிறது. [ர] என்றது - 1. "ரிங்-க்ஷயே" என்கிற தா₄துவிலே பத₃மாகையாலே, நரஶப்₃த₃ம் - நஶியாத வஸ்துவைச் சொல்லுகிறது. ஸமூஹார்த்த₂த்திலே அண்ப்ரத்யயமாகையாலே, நாரஶப்₃த₃ம் நஶியாத வஸ்துக்களினுடைய திரளைச்சொல்லுகிறது. அதாகிறது-ஜ்ஞாநாநந்தா₃மலத்வாதி₃களும், ஜ்ஞாநஶக்த்யாதி₃கல்யாணகு₃ணங்களும், தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹமும், பூ₄ஷணாயுத₄மஹிஷிகளும், ச₂த்ரசாமராதி₃ பரிச்ச₂த₃ங்களும், நித்யரும், முக்தரும், பரமபத₃மும், ப்ரக்ருதிபுருஷகாலங்களும். அன்றிக்கே, நாரஶப்₃த₃ம், நித்யத்வத்தாலேயாதல் நியந்த்ருத்வத்

தாலேயாதல் (நைமித்திகத்வத்தாலேயாதல்) நரஶப்₃த₃ வாச்யனான ஈஶ்வரன்பக்கலிலே நின்றும் பிறந்த வஸ்துக்களைச் சொல்லுகிறதென்னவுமாம்.

அயநமென்றது - இருப்பிடமென்றபடி; ப்ராப்யமென்னவுமாம்? ப்ராபகமென்னவுமாம்.

### வ்யக்த சதுர்த்த்₂யர்த்த₂ம்

இதில் சதுர்த்தி₂, ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் ஸர்வப்ரகாரத்தாலும் பண்ணும் கைங்கர்யத்தையும் அதினுடைய ப்ரார்த்த₂நத்தையும் சொல்லுகிறது.

அகாரத்திலும் நாரஶப்₃த₃த்திலும், பிராட்டி ஸ்வரூபஞ் சொல்லிற்று; அகாரத்தில் ஆத்மாக்களுக்கு ஸ்வாமிநீ என்றது; நாரஶப்₃த₃த்தில், ஈஶ்வரனுக்கு ஶேஷபூ₄தை என்றது. அகாரத்திலும் அயநஶப்₃த₃த்திலும் ஈஶ்வரனைச் சொல்லிற்று. அகாரத்தில் ரக்ஷகனென்றது; அயநஶப்₃த₃த்தில், தா₄ரகனென்றது. பத₃த்ரயத்தாலும், ஆத்மாவைச் சொல்லிற்று. ப்ரணவத்தில், அநந்யார்ஹஶேஷத்வத்தையும் ஜ்ஞாத்ருத்வத்தையும் சொல்லிற்று; நமஸ்ஸில், ஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியைச் சொல்லிற்று; மேல்பத₃த்தில், நித்யத்வ பூ₄ஹுத்வங்களைச் சொல்லிற்று.

### நிக₃மநம்

ஆக, திருமந்த்ரம் — ஈஶ்வரனுக்கும் ஆத்மாவுக்கும் உண்டான ஸம்ப₃ந்த₄த்தையும், ஸம்ப₃ந்தா₄நுருபமான. உபாயஸ்வரூபத்தையும், இரண்டுக்கும் அநுகு₃ணமான உபேய ப்ரார்த்த₂நத்தையும் சொல்லித் தலைக்கட்டுகிறது

அகாரத்தாலே-ஸர்வரக்ஷகத்வம் சொல்லிற்று; அதிலே ஏறிக்கழிந்த சதுர்த்தி₂யாலே - அவனுக்கு ஶேஷமென்னுமிடம் சொல்லிற்று; உகாரத்தாலே - அவனையொழிந்தவர்களுக்கு ஶேஷமன்றென்றது; மகாரத்தாலே இப்படி

அநந்யார்ஹஶேஷமான வஸ்து ஜ்ஞாநாஶ்ரயமான ஆத்மா வென்னுமிடம் சொல்லிற்று; நமஸ்ஸாலே - ஶேஷத்வ விரோதி₄யான அஹங்கார மமகார நிவ்ருத்தியையும், பா₄க₃வதஶேஷத்வ பர்யந்தமான ப₄க₃வச்சே₂ஷத்வத்தை யும், ஈஶ்வரனுடைய உபாயபா₄வத்தையும் சொல்லிற்று; நாரஶப்₃த₃ம் வ்யாப்யங்களான சேதநாசேதநங்களைச் சொல்லிற்று; அயநஶப்₃த₃ம், வ்யாபகமான ப₄க₃வத் ஸ்வரூபத்தைச் சொல்லிற்று; சதுர்த்தி₂, கைங்கர்ய ப்ரார்த்த₂நத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

a "விடையேழன்றடர்த்து" என்கிற பாட்டு, ப்ரண வார்த்த₂மாக அநுஸந்தே₄யம். b "யானே" என்கிற பாட்டு, நம:பதா₃ர்த்த₂மாக அநுஸந்தே₄யம். c "எம்பிரா னெந்தை" என்கிற பாட்டு, நாராயணஶப்₃தா₃ர்த்த₂மாக அநுஸந்தே₄யம். d "ஒழிவில் காலமெல்லாம்" என்கிற பாட்டு, சதுர்த்த்₂யர்த்த₂மாக அநுஸந்தே₄யம்.

ஸ்வஸ்வரூபத்தை யதா₂வாக அநுஸந்தி₄யாமையாலே ஶா₄ந்தி பிறக்கிறதில்லை; புருஷார்த்த₂த்தை யதா₂வாக அநுஸந்தி₄யாமையாலே ருசி பிறக்கிறதில்லை; ஸாத₄நத்தை யதா₂வாக அநுஸந்தி₄யாமையாலே விஶ்வாஸம் பிறக்கிற தில்லை; விரோதி₄யை யதா₂வாக அநுஸந்தி₄யாமையாலே ப₄யம் பிறக்கிறதில்லை.

**பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே ஶரணம்.**

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

## 2-வது சரமஶ்லோகப்ரகரணம்

### உபோத்₃கா₄தம்

ஸகல ஶாஸ்த்ர தாத்பர்யபூ₄மியான திருமந்த்ரத்தில் சொன்ன புருஷார்த்த₂ ஸ்வரூபத்துக்கு அநுரூபமான ஸாத₄நவிஶேஷத்தை ஸப்ரகாரமாக ப்ரதிபாதி₃க்கிறது சரமஶ்லோகம்.

---

a பெரியதிரு 8-9-3. b திருவாய் 2-9-9. c பெரியதிரு 1-1-6.
d திருவாய் 3-3-1.

தேஹாத்மாபிமாநியான அர்ஜுநனைக்குறித்து, a "அமலங்களாக விழிக்கும்" என்கிறபடியே - ஸகல பாபக்ஷபண நிபுணங்களான திவ்யகடாக்ஷங்களாலும் அம்ருதஷ்யந்திகளான வசநவிசேஷங்களாலும் மோக்ஷருசிக்கு விரோதியான ஸகல ப்ரதிபந்தகங்களையும் நசிப்பித்து மோக்ஷருசியை உண்டாக்கி மோக்ஷஸாதநமான கர்மஜ்ஞாநபக்திகளைப் பரக்க க்ருஷ்ணன் அருளிச்செய்ய, அத்தைக்கேட்ட அர்ஜுநன், ஸர்ப்பாஸ்யகதமான ஜந்துவைப்போலேயிருக்கிற தன்னுடைய துர்க்கதியையும், விரோதி தன்னால் கழித்துக்கொள்ளவொண்ணாதேயிருக்கிறவிருப்பையும், விஹிதோபாயம் துஶ்ஶகமாயிருக்கிற இருப்பையும் அநுஸந்தித்து, 'நாமிவனை இழந்து போவோமித்தனையாகாதே' என்று சோகிக்க, 'நான் முன்பு உபதேசித்த ஸாதநவிசேஷங்களை ஸவாஸநமாக விட்டு என்னையே நிரபேக்ஷஸாதநமாகப்பற்று; நானே எல்லா விரோதிகளையும் போக்குகிறேன்; நீ சோகியாதே கொள்' என்று அர்ஜுநனுடைய சோகத்தை நிவர்த்திப்பிக்கிறான்.

(1) கீழ்ச்சொன்ன உபாயாந்தரங்கள் சோகஜநகங்களல்லாமையாலும், (2) அவற்றை விடச் சொன்னால் சாஸ்த்ராந்தரங்களுக்கும் இச்சாஸ்த்ரத்தில் முன்புத்தை வசநங்களுக்கும் வையர்த்யம் வருகையாலும், (3) ப்ரபத்தி ஸ்வதந்த்ர ஸாதநமல்லாமையாலும், (4) எளிய வழியுண்டாயிருக்க அரிய வழியை வத்ஸலதரமான சாஸ்த்ரம் உபதேசிக்கக் கூடாமையாலும், கீழ்ச்சொன்ன உபாயத்தை யொழிய உபாயாந்தரத்தை விதிக்கிறான் என்கிற பக்ஷம் சேராதென்று சிலர் சொன்னார்கள்.

(1) உபாயாநுஷ்டாநத்துக்கு அயோக்யமாம்படி ஆத்மஸ்வரூபத்தை அத்யந்தம் பரதந்த்ரமாக உபதேசிக்கக்

a திருவாய் 1.9.9.

கேட்கையாலும், 'உபாயாந்தரங்களுக்கும் நானே ப்ரவர்த்தகன்' என்று அருளிச்செய்யக் கேட்கையாலும், இந்த்₃ரிய ப்ராப₃ல்யத்தை அநுஸந்தி₄த்து அஞ்சுகையாலும், எல்லா அவஸ்தை₂களிலும் ப்ரபத்தியையொழிய உபாயமில்லையென்னுமிடம் நிழலெழும்படி அருளிச்செய்யக் கேட்கையாலும், உபாயாந்தரங்கள் அநேக தோ₃ஷங்களோடே கூடியிருக்கையாலும், விரோதி₄ தன்னால் கழித்துக் கொள்ளவொண்ணாமையாலும், ஜ்ஞானவானாயிருக்கிற இவனுக்கு ஶோகம்பிறக்கை ஸம்ப₄விதமாகையாலே உபாயாந்தரங்கள் ஶோகஜநகங்களன்று என்கிறது அர்த்த₂மன்று.

(2) ஶாஸ்த்ராந்தரங்கள் தன்னிலே 'உபாயாந்தரங்களை விட்டு ப்ரபத்தியைப் பண்ணுவான்' என்று சொல்லுகையாலும், இதுதான் பி₄ந்நாதி₄காரி விஷயமாகையாலும், ஶாஸ்த்ராந்தரங்களுக்கும் பூர்வவசநங்களுக்கும் வையர்த்₂யமில்லை.

(3) 1. "**அநந்யஸாத்₄யே**" 2. "**அஹமஸ்ம்யபராத₄நாமாலய:**" இத்யாதி₃ ப்ரமாணங்கள் மோக்ஷஸாத₄நமாகச் சொல்லுகையாலே, ப்ரபத்தி ஸ்வதந்த்ர ஸாத₄நமன்று என்கிற இதுவும் அர்த்த₂மன்று.

(4) இவ்வுபாயந்தான் து₃ஶ்ஶகமாயிருக்கையாலும், ஶாஸ்த்ரம் இவன் நின்ற நின்றவளவுகளுக்கீடாகவல்லது உபதே₃ஶியாமையாலும், அரிய வழியை உபதே₃ஶிக்கக் கூடாதென்று அர்த்த₂மன்று.

அர்ஜுநன் ப்ரத₂மத்திலே ஶரணம் புகுருகையாலும், ப₄க்தியோக₃ம் கேட்ட அநந்தரம் கண்ணும் கண்ணநீருமாய், கையில் வில்லோடே கூடச் சோர்ந்து விழுகையாலே அவனையுளனாக்கவேண்டுமாகையாலும், த்₃ரௌபதி₃ குழலை முடித்துத் தன் ஸ்வரூபம் நிறம்பெற வேண்டுகையாலும் பரமரஹஸ்யத்தை மறையாமல் வெளியிட்டான்.

ப்ரதமத்திலே இத்தை உபதேஶியாதே உபாயாந்தரத்திலே பர்ந்த்து இவன் நெஞ்சை ஶோதிக்கைக்காக.

இதுக்கு அதிகாரி - இது கேட்பதற்கு முன்பு அஞ்சுமவனும், பின்பு அஞ்சாதவனும்.

இதில் பூர்வார்த்தம், அதிகாரி க்ருத்யத்தைச் சொல்லுகிறது; உத்தரார்த்தம், ஈஶ்வரக்ருத்யத்தைச் சொல்லுகிறது.

### ஸர்வதர்மஶப்தார்த்தம்

(1) "ஸர்வதர்மாந்"—எல்லா தர்மங்களையும். தர்மமாவது - ஶாஸ்த்ர விஹிதமுமாய், பலஸாதநமுமாயிருப்பதொன்று. இங்கு, மோக்ஷபலஸாதநமான கர்மஜ்ஞாந பக்திகளைச் சொல்லுகிறது. ஸர்வஶப்தம், அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான தர்மங்களைச் சொல்லுகிறது. ஸாதநத்யாகத்திலே யோக்யதாபாதக தர்மத்யாகமும் அந்தர்பூதமாயிருக்கச்செய்தே தனித்துச் சொல்லுகிறது— ப்ரபத்திக்கு இவை வேண்டாவென்று தோற்றுகைக்காக. அல்லாதபோது, ஸ்த்ரீஶூத்ராதிகளுக்கு அதிகாரமில்லையாமிறே. பஹுவசநத்தாலே அவதாரரஹஸ்யம், புருஷோத்தமவித்யை, தேஶவாஸம், திருநாமஸங்கீர்த்தநம் தொடக்கமானவற்றைச் சொல்லுகிறது.

### பரித்யஜ்யபதார்த்தம்

(2) "பரித்யஜ்ய"—விட்டு. பரிஶப்தம், வாஸநாருசிகளோடே கூட விடவேணுமென்னுமிடத்தைச் சொல்லுகிறது. அவை கிடக்குமாகில் மேற்சொல்லுகிற ஸாதந விஶேஷத்தில் அத்வ்யமின்றிக்கேயொழியக் கூடாது. 'அநாதிகாலம் அநுபாயங்களிலே உபாயபுத்திபண்ணினோமென்று லஜ்ஜாபுரஸ்ஸரமான த்யாகத்தைச் சொல்லுகிறது' என்று ஆழ்வான் பணிக்கும். த்யஜித்தோமென்கிற புத்தியும் த்யாகத்தோடொக்கும். ல்யப்பு - உபாயாந்தர

த்யாக₃ம் மேல்பற்றப்புகுகிற உபாயத்துக்கு அங்க₃மென்னு மிடத்தைச் சொல்லுகிறது. 'ப்ரபத்தியாவது-ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றுகை' என்று அனந்தாழ்வான் வார்த்தை.

## மாம்பதா₃ர்த்த₂ம்

(3) "மாம்"—என்னை. த்₃வயத்தில் ப்ரத₂மபத₃த்திலே சொல்லுகிற அர்த்த₂விஶேஷங்களெல்லாம் இப்பத₃த்திலே அநுஸந்தே₄யங்கள். அதாவது - ஶ்ரிய:பதித்வமும், வாத்ஸல்யாதி₃கு₃ண சதுஷ்டயமும், தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹமும். 1. "ஏஷ நாராயண: ஶ்ரீமாந்" என்கையாலே ஶ்ரிய:பதித்வம் அநுஸந்தே₄யம். அத₄ர்மபு₃த்₃தி₄யாலே த₄ர்மத்திலே நின்றும் நிவ்ருத்தனான அர்ஜுநன் குற்றம் பாராதே அபேக்ஷிதார்த்த₂ங்களைத் தானே அருளிச்செய்கையாலே வாத்ஸல்யம் அநுஸந்தே₄யம். தன்னுடைய பரத்வத்தைப் பலகாலும் அருளிச்செய்தவளவன்றிக்கே, அர்ஜுநன் ப்ரத்யக்ஷிக்கும்படி பண்ணுகையாலே ஸ்வாமித்வம் அநுஸந்தே₄யம். 2. "ஹே க்ருஷ்ண ஹே யாத₃வ" என்று - அர்ஜுநன் தானே சொல்லும்படி அவனோடே கலந்து பரிமாறுகையாலே ஸௌஶீல்யம் அநுஸந்தே₄யம். அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணுக்கிலக்காம்படி பண்ணுகையாலே ஸௌலப்₄யம் அநுஸந்தே₄யம். [மாம்] என்று காட்டுகிறது ஸாரத்₂யவேஷத்தோடே நிற்கிற நிலையாகையாலே, தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹம் அநுஸந்தே₄யம்.

## ஏகபதா₃ர்த்த₂ம்

(4) "ஏகம்"—இவ்வுபாயத்தைச் சொல்லுமிடமெல்லாம் அவதா₄ரணப்ரயோக₃ம் உண்டாகையாலே, ஸ்தா₂ந ப்ரமாணத்தாலே, உகாரம்போலே இதுவும் அவதா₄ரண வாசகமாய், [வ்ரஜ] என்கிற பத₃த்தில் சொல்லப்புகுகிற ஸ்வீகாரத்தில் உபாயபு₃த்₃தி₄நிவ்ருத்தியைச் சொல்லுகிறது,

உபாயாந்தரோபகாரஸ்ம்ருதியும், உபாயபரிக்₃ரஹமும் உபாயாந்தரத்தோடொக்கும். ' ஏகஶப்₃த₃ம் உபாயோபேயங்களினுடைய ஐக்யத்தையும் உபாயப்ராத₄ாந்யத்தையும் சொல்லுகிறது' என்றும் சொல்லுவர்கள்.

### ஶரணஶப்₃தா₃ர்த்த₂ம்

(5) "ஶரணம்" — உபாயமாக. உபாயமாகிறது-அநிஷ்டநிவாரகமுமாய் இஷ்டப்ராபகமுமாயிருக்குமது.

### வ்ரஜஶப்₃தா₃ர்த்த₂ம்

(6) "வ்ரஜ"—பு₃த்₃தி₄பண்ணு. இந்த பு₃த்₃தி₄யாகிறது-த்யாஜ்யகோடியிலும் அந்வயியாதே, ப்ராபகாந்தரபரித்யாக₃ பூர்வகமாய் ப₄க₃வத்₃ ரக்ஷகத்வாநுமதிரூபமாயிருப்பதொரு அத்₄யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷம். இதுதான் உபாயாந்தரங்கள்போலே அஸக்ருத்கரணீயமன்று; கந்யகாப்ரதா₃நாதி₃கள்போலே ஸக்ருத்கரணீயம். அல்லாதபோது, முன்புத்தையது கார்யகரமன்றிக்கேயொழியும்.

### அஹம் பதா₃ர்த்த₂ம்

(7) "அஹம்"—ஸர்வஜ்ஞத்வாதி₃கு₃ணவிஶிஷ்டனான நான். "மாம்" என்கிறவிடத்தில், வாத்ஸல்யாதி₃கு₃ணங்களைச் சொல்லிற்று; இதில், ஜ்ஞாநஶக்த்யாதி₃கு₃ணங்களைச் சொல்லுகிறது. வாத்ஸல்யாதி₃களில்லாதபோது உபாயபரிக்₃ரஹமின்றிக்கேயொழிகிறப்போலே, ஜ்ஞாநஶக்த்யாதி₃களில்லாதபோது விரோதி₄நிவ்ருத்தியின்றிக்கேயொழியும். இங்குச் சொல்லுகிற ஶக்தியாவது - சேதநனுடைய அவிவாத₃ ஜநகத்துக்கும் விரோதி₄நிவ்ருத்திக்கும் அடியான ஸாமர்த்₂யம்.

### த்வா பதா₃ர்த்த₂ம்

(8) "த்வா"—உபாயாந்தரங்களைவிட்டு என்னையே உபாயமாகப்பற்றியிருக்கிற உன்னை. கீழில் பத₃த்தில் ஜ்ஞாநஶக்திகளும், ப்ராப்தியும், ஸைரபேக்ஷ்யமும் சொல்

லிற்று. இங்கு, அஜ்ஞாநஶக்திகளும், அப்ராப்தியும், ஆகிஞ்சந்யமும் சொல்லுகிறது.

**ஸர்வபாபஶப்₃தா₃ர்த்த₂ம்**

(9) "ஸர்வபாபேப்₄ய:"—எல்லாப் பாபங்களில்நின்றும். இங்கு பாபங்களாகச் சொல்லுகிறது - ப₄க₃வல்லாப₄ விரோதி₄களை. a "சார்ந்தவிருவல்வினைகளும்" என்று - முமுக்ஷுவுக்குப் பாபத்தோபாதி புண்யமும் த்யாஜ்யமாகச் சொல்லுகையாலே, புண்யபாபங்களிரண்டையும் பாப ஶப்₃த₃த்தாலே சொல்லுகிறது. ப₃ஹுவசநத்தாலே - அவற்றினுடைய பன்மையைச் சொல்லுகிறது. அதாகிறது - அவித்₃யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ங்கள். ஸர்வஶப்₃த₃த்தாலே - கீழே த்யாஜ்யமாக விஹிதங்களாய் போ₄க்₃யதாபு₃த்₃தி₄யாலே அநுஷ்டே₂யமான த₄ர்மங்களில், ஸ்வார்த்த₂தாப்ரதிபத்தியையும், உபாய பு₃த்₃தி₄யையும், ஆவ்ருத்த ப்ரவ்ருத்தியையும், ப்ராரப்₃த₃த்தையும், லோக ஸங்க்₃ரஹார்த்த₂மாக அநுஷ்டே₂ய மான கர்மங்களில் ஸ்வார்த்த₂தாப்ரதிபத்தியையும், ப₄க₃வத்₃ பா₄க₃வதவிஷயங்களில் உபசாரபு₃த்₃த்₄யா பண்ணுகிற அபசாரங்களையும், 'பரி' என்கிற உபஸர்க்க₃த்தாலும் ஏக ஶப்₃த₃த்தாலும் த்யாஜ்யமாகச் சொன்னவற்றினுடைய அநுவ்ருத்தியையும், அவஶிஷ்டமான உத்தராக₄த்தையும் சொல்லுகிறது. இப்படி கொள்ளாதபோது "மாஶுச:" என்கிறவிது சேராது. பாபங்களிலே சிறிது கிடப்பது, அதி₄காரி குறையாலேயாதல், ஈஶ்வரன் குறையாலே யாதலிறே. த்யாக₃ஸ்வீகாரங்கள் பூர்ணமாகையாலே அதி₄காரிபக்கல் குறையில்லை, ஜ்ஞாநஶக்திகள் பூர்ணமாகையாலே ஈஶ்வரன்பக்கல் குறையில்லை.

**மோக்ஷயிஷ்யாமியின் அர்த்த₂ம்**

(10) "மோக்ஷயிஷ்யாமி"—முக்தனும்படி பண்ணக் கடவேன். b "சும்மெனாதே கைவிட்டோடி" c "காணே

a திருவாய் 1.5-10. b பெரியாழ்திரு 5-4.3. c பெரியதிருவ 54.

வொருங்கிற்றுக்கண்டிலமால்" என்கிறபடியே - அநாதி₃ காலார்ஜிதமான கர்மங்கள் உன்னைக்கண்டு அஞ்சி, போன இடம் தெரியாதபடி தன்னடையே விட்டுப்போம்படி பண்ணுகிறேன். விரோதி₄நிவ்ருத்தியும் அபி₄மதப்ராப்தியும் இரண்டும் ப₂லமாயிருக்க ஒன்றைச் சொல்லுவானென்? என்னில்; ஒன்றைச் சொன்னால் மற்றையது தன்னடையே வருகையாலே சொல்லிற்றில்லை. 1. "மாமேவைஷ்யஸி" என்று கீழில் உபாயத்துக்குச் சொன்ன ப₂லமொழிய இவ்வுபாயத்துக்கு வேறு ப₂லமில்லாமையாலே சொல்லிற்றில்லை என்னவுமாம். ஆனால் விரோதி₄நிவ்ருத்தி தன்னைச் சொல்லுவானென்னென்னில்; அது அதி₄கமாகையாலே சொல்லிற்று. விரோதி₄நிவ்ருத்தி பிறந்தால் ப₂லம் ஸ்வதஸ்ஸித்₃த₄மாகையாலே தனித்துச்சொல்ல வேண்டாவிறே.

### மாஶுசஸ்ஸப்₃த₃ார்த்த₂ம்

(11) "மாஶுச:"—ஶோகியாதேகொள். உபாயாந்தரங்களை விடுகையாலும், என்னையே உபாயமாகப் பற்றுகையாலும், விரோதி₄யை நேராகப் போக்குகிறேன் என்கையாலும், உனக்கு ஶோகிக்க ப்ராப்தியில்லை. உனக்குக் கர்த்தவ்யமில்லாமையாலே உன்னைப்பார்த்து ஶோகிக்கவேண்டா; எனக்கு ஜ்ஞாந ஶக்தி கருணாதி₃களில் வைகல்யமில்லாமையாலே என்னைப்பார்த்து ஶோகிக்க வேண்டா. விரோதி₄யாகிறது - என்னுடைய நிக்₃ரஹமாகையாலும் அதில் கிடப்பதொன்றில்லாமையாலும் அத்தைப் பார்த்து ஶோகிக்கவேண்டா. அநாதி₃காலம் ஶோகியாதிருந்தாற்போலே இருப்பதொன்று - இப்போது நீ ஶோகிக்கையாவது. நீ ஶோகித்தாயாகில் உன் கார்யத்திலே நீ அதி₄கரித்தாயாவுதி. ஶேஷபூ₄தனுடைய பேறு ஶேஷியது; பேறுடையவனது இழவு; இழவுடையவனுக்கு ஶோகமுள்ளது; ஆனபின்பு நீ ஶோகிக்கக் கடவையோ? த₄நத்தையிழந்தால் த₄நவானன்றோ ஶோகிப்

பான்; த₄நந்தான் ஶோகிக்குமோ? 'ஸர்வப்ரகாரத்தாலும் நானுன்னைக் கைவிடேன்; அச்சங்கெட்டிரு' என்று, a "வாரேற்றிளமுலையாய் வருந்தேலுன் வளைத்திறமே" என்கிறபடியே அர்ஜுநன் கண்ணீரைத் துடைக்கிறான்.

b "வார்த்தையறிபவர்" என்கிற பாட்டும், c "அத்தனாகி" என்கிற பாட்டும் இதுக்கு அர்த்த₂மாக அநுஸந்தே₄யம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## 3-வது த்₃வயப்ரகரணம்
### உபோத்₃கா₄தம்

அபௌருஷேயமாய் நித்யநிர்த்₃தோ₃ஷமாயிருந்துள்ள வேத₃த்திலும் வேதா₃ர்த்த₂த்தை உபப்₃ரும்ஹிக்கக்கடவதான ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலும் அவிக்₃தமாக ப்ரஸித்₃த₄மாய், எம்பெருமானுடைய ஸர்வஸ்வம்மாய், ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் த₄நமாய், ப₄க₃வத₃நந்யார்ஹ ஶேஷபூ₄தமான ஆத்மஸ்வரூபத்துக்கு அத்யந்தம் அநுரூபமாயிருந்துள்ள ஸாத₄நவிஶேஷத்தையும் ஸாத்₄யவிஶேஷத்தையும் அடைவே வாக்யத்₃வயமும் ப்ரதிபாதி₃க்கிறது.

பூர்வாசார்யர்கள் ரஹஸ்யத்ரயத்தையும் தங்களுக்கு த₄நமாக நினைத்துப்போருவர்கள்.

அதில் ப்ரத₂மரஹஸ்யமான திருமந்த்ரம் ப்ராப்ய ஸ்வரூபத்தை ப்ரதிபாதி₃க்கிறது; சரமஶ்லோகம் ப்ராபக ஸ்வரூபத்தை ப்ரதிபாதி₃க்கிறது; அவை இரண்டிலும் ருசியுடையனான அதி₄காரி அவற்றை விஶத₃மாக அநுஸந்தி₄க்கிறபடியைச் சொல்லுகிறது த்₃வயம். இம்மூன்றையும் தஞ்சமாக நினைத்துப்போராநிற்கச்செய்தேயும், ஸர்வாதி₄காரமாகையாலும், ஆசார்யருசி பரிக்₃ருஹீதமாகையாலும்,

a திருவிரு 69. b திருவாய் 7-5-10. c திருச்சந்த 115.

இத்தையே மிகவும் தஞ்சமாக நினைத்துப்போருவர்கள். பு₃த்₃தி₄பூர்வகமான அபசாரங்களுக்கும் பரிஹாரமாகை யாலும், கர்மாவஸாநத்திலன்றிக்கே ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாகையாலும், இதுவே தஞ்சம்.

ரகு₄ராக்ஷஸ ஸம்வாத₃ம், வ்யாக்₄ரவாநர ஸம்வாத₃ம், கஹூஷப்₃ருஹஸ்பதி ஸம்வாத₃ம், கபோதோபாக்₂யாநம், மறவன் 'முசல்குட்டியை விட்டுப்போந்தேன்' என்ன அது கேட்டு ப₄ட்டர் அருளிச்செய்த வார்த்தையும், ஸ்ரீப₄ாஷ்ய காரர் சரமஸமயத்திலே 'எப்போதும் த்₃வயத்தை அநு ஸந்தி₄க்கை எனக்கு ப்ரியம்' என்று அருளிச்செய்த வார்த்தையும், பெரியகோயில் நாராயணரைக் குறித்து ஶபத₂புரஸ்ஸரமாக 'த்₃வயமொழியத் தஞ்சமில்லை' என்று அருளிச்செய்த வார்த்தையும், ஸசேலஸ்நாந பூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நனான சிறியாத்தானுக்கு ஆஜ்ஞை யிட்டு; 'த்₃வயமொழியத் தஞ்சமில்லை' என்று எம்பார் அருளிச்செய்த வார்த்தையும், 'திருமந்த்ரத்திலே பிறந்து த்₃வயத்திலே வளர்ந்து த்₃வயநிஷ்ட₂ராவீர்' என்று நஞ்ஜீய ரைக் குறித்து அனந்தாழ்வான் ப்ரஸாதி₃த்த வார்த்தையும் தொடக்கமான பூர்வாசார்ய வசநங்கள், ருசி விஶ்வாஸங் களுக்குறுப்பாக இவ்விடத்திலே அநுஸந்தே₄யங்கள்.

இதுதான், பூர்வவாக்யம் மூன்றுபத₃மும், உத்தரவாக்யம் மூன்றுபத₃மும் ஆக ஆறுபத₃மாயிருக்கும். அதில் முதல்பத₃ம், புருஷகாரபூ₄தையான பிராட்டியுடைய நித்யயோக₃த்தையும், ஆஶ்ரயணீயனான எம்பெருமானுடைய கு₃ணவிக்₃ரஹங் களையும் சொல்லுகிறது; இரண்டாம்பத₃ம், அத்திருவடிகள் உபாயமென்னுமிடத்தைச் சொல்லுகிறது; மூன்றாம்பத₃ம் அத்திருவடிகளை உபாயமாகப் பரிக்₃ரஹிக்கும்படியைச் சொல்லுகிறது; நாலாம்பத₃ம், உபாயபரிக்₃ரஹப₂லமான கைங்கர்யத்துக்கு விஷயம் மிது₂நமென்னுமிடத்தைச் சொல்லுகிறது; அஞ்சாம்பத₃ம் அவ்வஸ்து ஸர்வஸ்வாமி என்னுமிடத்தையும் கைங்கர்யப்ரார்த்த₂நையையும் சொல்லு

கிறது; ஆரும்பத,ம், கைங்கர்யவிரோதி,நிவ்ருத்தியைச் சொல்லுகிறது.

**ஸ்ரீஶப்,த,ார்த்த,ம்**

(1) அதில் ப்ரத,மபத,த்தில், ஸ்ரீஶப்,த,ம், 1. **"ஸ்ரீயதே. ஶ்ரயதே"** என்கிற வ்யுத்பத்தித்,வயத்தாலும் - பிராட்டி சேதநனுக்கு ஆஶ்ரயணீயையாயிருக்குமிருப்பையும், ஈஶ்வரனை எப்போதுமொக்க ஆஶ்ரயித்துக்கொண்டிருக்குமிருப்பையும் சொல்லுகிறது. 1. **"ஸ்ரீயதே"** என்றது - ஆஶ்ரயிக்கப்படாநின்றாள் என்றபடி. 1. **"ஶ்ரயதே"**என்றது- ஆஶ்ரயியாநின்றாள் என்றபடி. புருஷகாரமாம்போதைக்கு இருவரோடும் ஸம்ப,ந்த,முண்டாகவேணும். சேதநரோடே மாத்ருத்வஸம்ப,ந்த,முண்டாயிருக்கும்; ஈஶ்வரனோடே மஹிஷீத்வஸம்ப,ந்த,முண்டாயிருக்கும்.

2. **"ஶ்ருணோதி-ஶ்ராவயதி"** என்கிற நிருக்தி விஶேஷங்களாலே - 1. **"ஸ்ரீயதே. ஶ்ரயதே"** என்கிற வ்யுத்பத்தித்,வயத்தாலும் ப,லிதமான அர்த்த,த்தைச் சொல்லுகிறது.

2. **"ஶ்ருணோதி"** என்றது - கேளாநிற்கும் என்றபடி; 2. **"ஶ்ராவயதி"** என்றது - கேட்பியாநிற்கும் என்றபடி. ஆஶ்ரயிக்கவிழிந்த சேதநன், தன்னபராத,த்தையும் ஈஶ்வர ஸ்வாதந்தர்யத்தையும் நினைத்து அஞ்சி,இரண்டுக்கும் பரிஹாரமாக, பிராட்டியுடைய காருண்யாதி, கு,ணங்களையும் தன்னோடு அவளுக்குண்டான ஸம்ப,ந்த,விஶேஷத்தையும் முன்னிட்டுக்கொண்டு, 'ஈஶ்வரன் பக்கல் புகலறுத்துக் கொண்ட எனக்கு அஶரண்யஶரண்யையான தேவரீர் திருவடிகளொழியப் புகலில்லை' என்று இவன் விண்ணப்பஞ் செய்யும் வார்த்தைகளைக் கேளாநிற்கும்; ஸர்வஜ்ஞனை ஈஶ்வரனையுங்கூட நிருத்தரனும்படி பண்ணவற்றான தன்னுடைய உக்திவிஶேஷங்களாலும் தன்னுடைய போ,க்,யதாப்ரகர்ஷத்தாலும் மற்றுமுண்டான உசிதோபாயங்களாலும், இவன் இவனபராத,ங்களை அவன் திருவுள்ளத்

திலே படாதபடிபண்ணி இவன் விண்ணப்பஞ்செய்யும் வார்த்தையைக் கேட்கும்படி பண்ணுகிற்கும். சேதநனுக்கு இருவரோடு ஸம்ப₃ந்த₄முண்டாயிருக்கச்செய்தேயும், மாத்ரு த்வநிப₃ந்த₄நமான வாத்ஸல்யாதிரேகத்தாலும், ஈஶ்வரனோபாதி காடி₂ந்யமார்த்₃வங்கள் கலந்திருக்கையன்றிக்கே, இவள் பக்கலுள்ளது மார்த்₃வமேயாய் இத்தலையில் கண் குழிவு காணமாட்டாதபடியிருக்கையாலும், தன் பக்க லிலே தீரக் கழிய அபராத₄த்தைப் பண்ணின ராவணனுக்கு மகப்பட ஹிதோபதே₃ஶம் பண்ணும்படி குற்றங்கள் திரு வுள்ளத்தில் படாதபடியிருக்கையாலும், ராக்ஷஸிகள் அபராத₄த்தில் நின்றும் மீளாதிருக்கச்செய்தே அவர்கள் அஞ்சின அவஸ்தை₂யிலே 1. "ப₄வேயம் ஶரணம் ஹி வ:" என்று அப₄யப்ரதா₃நம் பண்ணும்படியிருக்கையாலும், திருவடியோடே மன்றாடி அவர்களை ரக்ஷித்துத் தலைக் கட்டுகையாலும், நில்லென்ன பெருமாள் தாமே, பிராட்டி முன்னிலையாகப் பற்றுகையாலே, இளையபெருமாளைக் கூடக்கொண்டு போருகையாலும், ஸ்ரீவிபீ₄ஷணப்பெருமாள் குடும்ப₃த்₃வாரா பிராட்டிக்கு ஆநுகூல்யத்தைப்பண்ணிப் பெருமாளை ஶரணம் புகுருகையாலும், காகம் அபராத₄த்தைப் பண்ணிவைத்துப் பிராட்டி ஸந்நிதி₄யாலே தலைபெற்றுப் போகையாலும், அத்தலையபராத₄மின்றிக்கேயிருக்க இவள் ஸந்நிதி₄யில்லாமையாலே ராவணன் தலையறுப்புண்ணக் காண்கையாலும், மற்றுமிவை தொடக்கமான ஸ்வபா₄வ விஶேஷங்கள் எல்லாவற்றாலும், ஈஶ்வரனை ஆஶ்ரயிக்கும் போது பிராட்டி புருஷகாரபூ₄தையாகக்கடவள்.

## மதுப்பின் அர்த்த₂ம்

(2) மதுப்பு—புருஷகாரபூ₄தையான பிராட்டியுடைய நித்யயோக₃த்தைச் சொல்லுகிறது. a "அகலகில்லேன் இறையும்" என்கிறபடியே - இவளென்றுமொக்க ஈஶ்வரனைப் பிரியாதிருக்கையாலே, ஆஶ்ரயிக்கவிழிந்த சேதநனுக்கு இவள் ஸந்நிதி₄யில்லையென்று பிற்காலிக்கவேண்டாதே ருசிபிறந்தபோதே ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கும்.

a திருவாய் 6-10-10.

## நாராயணபதா₃ர்த்த₂ம்

(3) "நாராயண" பத₃ம் — சேர்க்கக்கடவ பிராட்டி தானே சிதகுரைத்தாலும், a "செய்தாரேல் நன்றுசெய் தார்" என்று அவளோடே மறுதலைத்து நோக்கும் எம் பெருமானுடைய வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்₄யங்களாகிற கு₃ணங்களைச் சொல்லுகிறது.

வாத்ஸல்யமாவது - வத்ஸத்தின் பக்கல் தே₄நு இருக்கு மிருப்பு; அதாகிறது - அதினுடைய தோ₃ஷத்தை போ₄க்₃ய மாகக் கொள்ளுகையும், க்ஷீரத்தைக் கொடுத்து வளர்க்கை யும், எதிரிட்டவர்களைக் கொம்பிலும் குளம்பிலுங்கொண்டு நோக்குகையுமிறே; அப்படியே, ஈஶ்வரனும் இவனுடைய தோ₃ஷத்தை போ₄க்₃யமாகக்கொண்டு, b "பாலேபோல் சீர்" என்கிறபடியே - கு₃ணங்களாலே த₄ரிப்பித்து, **1. "அப₄யம் ஸர்வபூ₄தேப்₄ய:"** என்கிறபடியே - அநுகூலர் நிமித்தமாகவும் ப்ரதிகூலர் நிமித்தமாகவும் நோக்கும்.

ஸ்வாமித்வமாவது - இவன் விமுக₂னான த₃ஶையிலும் விடாதே நின்று ஸத்தையை நோக்கிக்கொண்டு போரு கைக்கு ஹேதுவாயிருப்பதொரு ஸ₃ம்ப₃ந்த₄விஶேஷம்; அதா கிறது - உடையவனாயிருக்குமிருப்பு; அத்₃வேஷந்தொடங்கி கைங்கர்ய பர்யந்தமாகவுண்டான ஸ்வபூ₄ர்வவிஶேஷங்களை யெல்லாம் உண்டாக்குகிறது இந்த ஸ₃ம்ப₃ந்த₄விஶேஷ மடியாகவிறே.

ஸௌஶீல்யமாவது - உப₄யவிபூ₄தியோக₃த்தாலும் பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியாலும் நிரங்குஶ ஸ்வ தந்த்ரனாயிருக்கிற ஈஶ்வரனுடைய மேன்மையையும் தங்கள் சிறுமையையும் பார்த்து c "அவனெவ்விடத்தான் யானார்" என்று பிற்காலியாமே எல்லாரோடுமொக்க மேல்விழுந்து புரையறக்கலக்கையும், அது தன்பேறாகவிருக்கையும், எதிர்த் தலையில் அபேக்ஷயின்றிக்கேயிருக்கக் கலக்கையும்.

---

a பெரியாழ்திரு 4-9-2. b பெரியதிருவ 58. c திருவாய் 5.1.7.

ஸௌலப்₄யமாவது - கண்ணுக்கு விஷயமின்றிக்கே யிருக்கிற தான் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி எளியனாகை.

அதினுடைய பூர்த்தியுள்ளது அர்ச்சாவதாரத்திலே யிறே; (மாம்) என்று காட்டின ஸௌலப்₄யம் பரத்வம் என்னும்படியிறே அர்ச்சாவதார ஸௌலப்₄யமிருக்கும்படி. அர்ஜுநனொருவனுக்குமேயாய்த்து அந்த ஸௌலப்₄யம். நீ எனக்கு வேண்டாவென்கிறவர்களையும் விடமாட்டாத ஸௌலப்₄யமிறே இது. அது காதா₃சித்கம்; இது எப்போதுமுண்டு.

### சரணஶப்₃த₃ார்த்த₂ம்

(4) "சரணௌ" - திருவடிகளை. ருசிஜநகமுமாய் ப்ராப்யமுமாயிருக்கிறப்போலே ப்ராபகமுமாயிருப்பது திருமேனியிறே. திருமேனியைச் சொல்லுகிறதாகில் திருவடிகளுக்கு வாசகமான ஶப்₃த₃த்தாலே சொல்வானென்? என்னில்; மேல் ப்ரபத்தி பண்ணப்புகுகிற அதி₄காரி அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநத்தை உடையவனாகையாலே, ஸ்வாமி ஸந்நிதி₄யில் இவன் பாசுரம் இப்படியல்லதிராமை யாலே சொல்லுகிறது. a "திருநாரணன்தாள்" b "திருவுடையடிகள்தம் நலங்கழல்" c "கழல்களவையே சரணாகக் கொண்ட" d "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்" e "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று சொல்லுகிறபடியே - திருவடிகளிறே உபாயமாயிருப்பது.

### ஶரணஶப்₃த₃ார்த்த₂ம்

(5) "ஶரணம்" - உபாயமாக. உபாயமாகிறது - அநிஷ்டத்தைப்போக்கி இஷ்டத்தைப் பண்ணித்தருமது. அநிஷ்டமாகிறது - அவித்₃யையயும், அவித்₃யாகார்யமான

a திருவாய் 4-1-1. b ஷை 1-3-8. c ஷை 5-8-11. d ஷை 5-10-11. e ஷை 6-10-10.

ராக₃த்₃வேஷங்களும், புண்யபாபரூபமான கர்மங்களும், தே₃வாதி₃ சதுர்வித₄ ஶரீரங்களும், ஆத்₄யாத்மிகாதி₃ து₃:க்க₂பரம்பரைகளும்; இஷ்டமாகிறது-புண்யபாபநிவ்ருத்தியும், ஶரீரவிஶ்லேஷமும், அர்ச்சிராதி₃மார்க்க₃க₃மநமும், பரமபத₃ப்ராப்தியும், பரமாத்மத₃ர்ஶநமும், கு₃ணாநுப₄வ கைங்கர்யங்களும். அதில் ப்ரத₄ாநமாக இஷ்டமாயிருப்பது கைங்கர்யம்; அதுக்குறுப்பாகையாலே இஷ்டங்களாயிருக்கும் மற்றுள்ளவை.

## " ப்ரபத்₃யே " - பத₃ார்த்த₂ம்

(6) "ப்ரபத்₃யே"-பற்றுகிறேன். "பத₃-க₃தௌ" என்கிற தா₄துவுக்கு அர்த்த₂ம்-க₃தி; இங்கு க₃தியாக நினைக்கிறது - பு₃த்₃தி₄விஶேஷத்தை. இந்த பு₃த்₃தி₄விஶேஷமாகிறது - அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநகார்யமாய், இதரோபாய வ்யாவ்ருத்தமாய், ப₄க₃வத்₃ரக்ஷகத்வாநுமதிரூபமாய், ஸக்ருத₃நுஷ்டே₂யமாய், வ்யபி₄சார விளம்ப₃விது₄ரமாய், ஸர்வாதி₄காரமாய், நியமஶூந்யமாய், அந்திமஸ்ம்ருதிநிரபேக்ஷமாய், ஸுஶகமாய், யாச்ஞாக₃ர்ப்ப₄மாய், த்₃ருட₄ாத்₄யவஸாய ரூபமாயிருப்பதொரு ஜ்ஞாநவிஶேஷம். இந்த ஜ்ஞாநத்தில் ப்ரயோஜநாம்ஶமாயிருப்பது ஒரு விஶ்வாஸம். உக்த்யா த₄ாஸ வசநாப₄ாஸ ப₄க்த்யாப₄ாஸங்களாலும், ஈஶ்வர பரீக்ஷை தொடக்கமானவற்றாலும், இவ்வத்₄யவஸாய விஶேஷம் குலையாதிருந்தபோதாய்த்து ப₂லஸித்₃தி₄யுள்ளது. இங்குச் சொல்லுகிற ப்ரபத்தி கரணத்ரயத்தாலேயுண்டாகவுமாம், ஏககரணத்தாலேயுண்டாகவுமாம்; ப₂லஸித்₃தி₄யில் குறையில்லை. இப்பத₃த்தில் வர்த்தமாநநிர்தே₃ஶத்தாலே - காலக்ஷேபஹேதுவாகவும் போ₄க₃ஹேதுவாகவும் ஈஶ்வர ப்ரீதிஹேதுவாகவும் யாவச்ச₂ரீரபாதம் இந்த பு₃த்₃தி₄ விஶேஷம் அநுவர்த்திக்கும் என்னுமிடம் ஸூசிதமாகிறது. 1. " ஸக்ருதே₃வ " என்கையாலே - ப₂லத்துக்கு ஒரு காலமையும்.

## உத்தரவாக்யார்த்த₂ம்

உத்தரவாக்யம், ப்ரபத்திகார்யமாய், ஸ்ரிய:பதி விஷயமாயிருந்துள்ள கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கிறபடியைச் சொல்லுகிறது. கீழ்ச்சொன்ன ஸாத₄நம் ப₂ல சதுஷ்டய ஸாத₄ாரணமாயிருக்கையாலே, இவனுக்கு அபேக்ஷிதமான ப₂லவிஶேஷத்தை நியமிக்கிறது.

## "ஸ்ரீமதே" பத₃ார்த்த₂ம்

(7) இதில் ப்ரத₂மபத₃ம், கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄ மிது₂நமென்னுமிடத்தைச் சொல்லுகிறது. ஶேஷத்வப்ரதிஸம்ப₃ந்தி₄ மிது₂நமானால் கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யும் மிது₂நமாயிருப்பது. a "கோலத் திருமாமகளோடுன்னைக் கூட" b "ஒண்டொடியாள் திருமகளும் நீயும்" c "திருமாற் கரவு" என்கிறபடியே - தனித்து இவர்களுக்கு ப்ராப்யத்வமில்லை. d "அல்லிமாமலராள் தன்னொடுமடியேன் கண்டு கொண்டு" என்கிறபடியே-இச்சேர்த்தியிலே பற்றினலிறே ஸ்ரீவிபீ₄ஷணப்பெருமாளைப்போலே உஜ்ஜீவித்துப் போகலாவது. அல்லாதபோது ராவண ஶூர்ப்பணகி₂களைப் போலே விநாஶமே ப₂லமாயிருக்கும். பூர்வவாக்யத்தில் மதுப்பு, ஆஶ்ரயிக்குமவர்களை ஈஶ்வரனோடே சேர்க்கைக்காகப் பிரியாதிருக்குமிருப்பைச் சொல்லுகிறது; இந்த மதுப்பு, இவன்பண்ணும் கைங்கர்யத்தை ஈஶ்வரன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப் படுத்தி, கைங்கர்யங் கொள்ளுகைக்காகப் பிரியாதிருக்குமிருப்பைச் சொல்லுகிறது.

## நாராயணபத₃ார்த்த₂ம்

(8) இரண்டாம் பத₃ம், கைங்கர்யவர்த்த₄கமாக அநுப₄ாவ்யமாயிருந்துள்ள கு₃ணவிக்₃ரஹவிபூ₄தி யோக₃த்தைச் சொல்லுகிறது. கீழ் உபாயபரிக்₃ரஹத்துக்கு ஏகாந்தமாகச் சொன்ன கு₃ணங்களும், இங்கே ப்ராப்யத்வேந அநுஸந்தே₄யங்கள். கீழில், மற்றை கு₃ணங்களிலுங்காட்டில்

a திருவாய்6-9-3. b திரு4-9-10. c முதல்திருவ53. d பெரியதிரு4-3-6.

ஸௌலப்₄யம் ப்ரதா₄நமாயிருக்கும்; இங்கு, ஸ்வாமித்வம் ப்ரதா₄நமாயிருக்கும்.

### சதுர்த்தி₂யினர்த்த₂ம்

(9) இதில் சதுர்த்தி₂ கைங்கர்யப்ரார்த்த₂நத்தைச் சொல்லுகிறது. a"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்" என்கிறபடியே - இச்சேதநன், அபி₄நிவேஶாதிஶயத்தாலே தே₃ஶ காலா-வஸ்தா₂ ப்ரகார நியமவிது₄ரமாக ப்ரார்த்தி₂க்கக்கடவனா யிருக்கையாலே, ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂ களிலும் ஸர்வப்ரகாரத்தாலும் பண்ணும் - வ்ருத்தி விஶேஷத்தைச் சொல்லுகிறது. ஶேஷத்வ ஜ்ஞாநகார்ய மான உபாயபரிக்₃ரஹத்துக்கு அநந்தரம் ப்ராப்தமாயிருக் கையாலே, இந்தச் சதுர்த்தி₂க்கு, தாத₃ர்த்₂யம் அர்த்த₂மாக மாட்டாது; உத்துங்க₃தத்த்வத்தைக் குறித்துப் பரதந்த்ரனான சேதநன் பண்ணுகிற வ்ருத்திவிஶேஷமாகையாலே, விஷயஸ்வபா₄வத்தாலும், ஆஶ்ரயஸ்வபா₄வத்தாலும் ப்ரார்த் த₂நையே அர்த்த₂மாகக்கடவது.

### நமஶ்ஶப்₃த₃ார்த்த₂ம்

(10) நிரதிஶயபோ₄க்₄யமான ப₄க₃வத்₃விஷயத்தை விஷயீகரித்திருக்கையாலும், நிரஸ்தஸமஸ்தப்ரதிப₃ந்த₄க மான ஸ்வரூபத்தை ஆஶ்ரயமாகவுடைத்தாயிருக்கை யாலும், அத்யர்த்த₂ ப்ரியரூபமான கைங்கர்யத்தில் பார தந்த்ர்யவிரோதி₄யான ஸ்வப்ரயோஜநத்வபு₃த்₃தி₄யை நிவர்த் திப்பிக்கிறது - நமஸ்ஸு. ப₄க₃வந்முக₂விகாஸஹேதுவாகை யாலே இது நமக்கு ஆத₃ரணீயமென்கிற ப்ரதிபத்தியொழிய இதிலே போ₄க்த்ருத்வப்ரதிபத்தியும் மதீ₃யத்வப்ரதிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்த₂மாயிறேயிருப்பது. ஸ்வரூப விரோதி₄யென்றும், ஸாத₄நவிரோதி₄யென்றும், ப்ராப்தி விரோதி₄யென்றும், ப்ராப்யவிரோதி₄யென்றும் சதுர்வித₄

a திருவாய் 3-3-1.

மாயிருக்கும் விரோதி₄. அதில், திருமந்த்ரத்தில் உகாரத்தாலும் நமஸ்ஸாலும் - ஸ்வரூபவிரோதி₄நிவ்ருத்தியை ப்ரதிபாதி₃க்கிறது; சரமஶ்லோகத்தில் அர்த்த₄த்₃வயத்தாலும் - ஸாத₄நவிரோதி₄ நிவ்ருத்தியையும், ப்ராப்தி விரோதி₄நிவ்ருத்தியையும் ப்ரதிபாதி₃க்கிறது; ப்ராப்ய விரோதி₄நிவ்ருத்தியைச் சொல்லுகிறது - இந்த நமஸ்ஸு. அதாவது a ஏருளுமிறையோனிற்படியே அவனுக்குறுப்பல்லாத ஆத்மாத்மீயங்கள் த்யாஜ்யமென்கை. போ₄க₃ விரோதி₄யான ஶேஷத்வாநுஸந்த₄ாநமும், ஆத்மஸமர்ப்பணம்போலே ஸ்வரூபவிருத்₃த₄ம்.

ஆக, புருஷகார ஸ்வரூபத்தையும், உபாயஸ்வரூபத்தையும், உபாயபரிக்₃ரஹத்தையும், கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யையும், கைங்கர்யத்தையும், அதுக்கு விரோதி₄யான அஹங்காரமமகாரங்களினுடைய நிவ்ருத்தியையும் சொல்லித் தலைக்கட்டுகிறது.

பூர்வவாக்யத்துக்கு அர்த்த₂மாக, b "அகலகில்லேன்" என்கிற பாட்டை அநுஸந்தி₄ப்பது; உத்தரவாக்யத்துக்கு அர்த்த₂மாக, c "சிற்றஞ்சிறுகாலே" என்கிற பாட்டை அநுஸந்தி₄ப்பது.

ஶ்ரிய:பதிப்படி ஸம்பூர்ணம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

# 15. தத்த்வஶேக₂ரம்

## உபோத்₃க₄ாதம்

பும்ஸ்பர்ஶக்லேஶ ஸம்ப₄ாவநாக₃ந்த₄விது₄ரமாய், ப்ரத்யக்ஷாதி₃ ப்ரமாணவிலக்ஷணமாயிருந்துள்ள நிகி₂லவேத₃ ஜாதத்துக்கும், தது₃பப்₃ரும்ஹணங்களான ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதி₃களுக்கும் க்ருத்யம்-ஸகல ஸம்ஸாரி சேதனர்க்கும் தத்த்வஜ்ஞாநத்தை ஜநிப்பிக்கை.

a திருவாய் 4-8. b திருவாய் 6-10-10. c திருப்பாவை 29.

தத்த்வஜ்ஞாநமாவது - ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுக்கு, ஸர்வப்ரகாரபரதந்த்ரரான ஸர்வாத்மாக்களினுடையவும் ஸ்வரூபத்துக்கு அநுரூபபுருஷார்த்த₂மான கைங்கர்யத்தை, அநாதி₃யாக ப்ரதிப₃ந்தி₄த்துக்கொண்டுபோருகிற கர்மஸம்ப₃ந்த₄த்தை, நிவர்த்திப்பிக்கும் உபாயம் - தச்சரணாரவிந்த₃ஶரணாக₃தி என்கிற நிரூபணஜ்ஞாநவிஶேஷம்.

## நாராயணகாரணத்வ நிரூபணம்

நாராயணன் ஸர்வஸ்மாத்பரனானபடி எங்ஙனேயென்னில்,-பரத்வசிஹ்நங்களான ஜக₃த்காரணத்வ முமுக்ஷூபாஸ்யத்வ மோக்ஷப்ரத₃த்வங்களுள்ளது இவனுக்கேயாகையாலே இவனே ஸர்வஸ்மாத்பரன். மஹோபநிஷத்தும், ஸுபா₃லோபநிஷத்தும், நாராயணோபநிஷத்தும், ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களும், 1. **"ஏகோ ஹவை நாராயண ஆஸீத்"** 2. **"தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:"** 3. **"அத₂ புருஷோ ஹவை நாராயணோऽகாமயத"** 4. **"அப ஏவ ஸஸர்ஜாதௌ₃"** 5. **"நாராயணோ ஜக₃ந்மூர்த்தி:"** 6. **"விஷ்ணோஸ் ஸகாஶாது₃த்₃பூ₄தம்"** என்று நாராயணாதி₃ தி₃வ்யஶப்₃த₃ங்களாலே ஜக₃த்காரணத்வத்தைச் சொல்லுகையாலே இவனே காரணபூ₄தன்.

ச₂ாந்தோ₃க்₃ய வாஜஸநேய கௌஷீதக்யாதி₃களில் ஸத்₃ப்₃ரஹ்மாத்மாதி₃ஶப்₃த₃ங்களாலேயும் சில வஸ்துக்களைக் காரணமாகச் சொல்லாநின்றதேயென்னில்; பஶ்வதி₄கரணந்யாயத்தாலே ஸாமாந்யஶப்₃த₃ம் விஶேஷபர்யவஸாயியாகையாலே, ஸதா₃தி₃ஶப்₃த₃ங்களும் இவனையே ப்ரதிபாதி₃க்கிறன.

## சதுர்முக₂காரணத்வபக்ஷாநுவாத₃ம்

நநு, 7. **"ஹிரண்யக₃ர்ப்ப₄ஸ் ஸமவர்த்ததாக்₃ரே"** 8. **"தா₄தா யதா₂பூர்வமகல்பயத்"** 9. **"ப்ரஜாபதி: ப்ரஜா அஸ்ருஜத"** 10. **"அஜஸ்ய நாப₄ாவத்₄யேகமர்ப்பிதம் யஸ்மிந் விஶ்வா பு₄வநாநி தஸ்து₂:"** என்று ஹிரண்யக₃ர்ப்ப₄ாதி₃விஶேஷ

ஶப்₃த₃ங்களாலே சொல்லுகையாலே, ப்₃ரஹ்மா காரண மாகக் குறையென்னென்னில்:—

**தத்பக்ஷநிராஸம்**

அது சொல்லவொண்ணாது; 1. **"யோ ப்₃ரஹ்மாணம் வித₃தா₄தி பூர்வம்"** 2. **"தத்ர ப்₃ரஹ்மா சதுர்முகோ₂ऽஜாயத"** 3. **"நாராயணாத், ப்₃ரஹ்மா ஜாயதே"** 4. **"ஸ ப்ரஜாபதிரேக: புஷ்கரபர்ணே ஸமப₄வத்"** 5. **"விராஜோ அதி₄ பூருஷ:"** 6. **"யந்நாபி₄பத்₃மாத₃ப₄வந்மஹாத்மா ப்ரஜாபதிர் விஶ்வஸ்ருட்₃ விஶ்வரூப:"** 7. **"ப்₃ரஹ்ம வை ப்₃ரஹ்மாணம் புஷ்கரே ஸஸர்ஜ"** 8. **"ஹிரண்யக₃ர்ப்ப₄ம் பஶ்யதி ஜாயமாநம்"** என்று - ஸ்ருஜ்யனென்றும், 9. **"ந ப்₃ரஹ்மா"** 10. **"ப்₃ரஹ்மாதி₃ஷு ப்ரலீநேஷு"** என்று ஸம்ஹார்ய னென்றும், 11. **"யுக₃கோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்₄ய பத்₃மபூ₄: । புநஸ்த்ரைலோக்யதா₄த்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும: ॥"** 12. **"ப்ராஜாபத்யம் த்வயா கர்ம பூர்வம் மயி நிவேஶிதம்"** 13. **"மம வேதா₃ ஹ்ருதாஸ் ஸர்வே தா₃நவாப்₄யாம் ப₃லாதி₃த:"** 14. **"யஸ்மாத₃ந பராத₄ஸ்ய ஶிரஶ்சி₂ந்நம் த்வயா மம"** என்று 'ஸர்வேஶ்வர ஸமாராத₄நத்தாலே தன் பத₃ம் பெற்றான்' என்றும், 'அஸுரர் கையிலே வேத₃ங்களைப் பறிகொடுத்தான்' என்றும், 'ருத்₃ரனாலே பரிபூ₄தனானான்' என்றும் இவனைக் கர்மவஶ்யனாகச் சொல்லுகையாலே.

ஹிரண்யக₃ர்ப்ப₄ தா₄த்ரு ப்ரஜாபதி ஶப்₃த₃ங்கள், அபர்ய வஸாந வ்ருத்தியாலேயாதல், அவயவ ஶக்தியாலேயாதல் (நாராயணப்ரவ்ருத்தியாலேயாதல்,) நாராயணவாசகங்கள்,

15. **"அஜஸ்யநாப₄ாவத்₄யேகமர்ப்பிதம்"** என்கிறவிடத்தில், 15. **"அர்ப்பிதம்"** என்றது - ஆவிர்ப்பூ₄தம் என்றபடி, 15. **"ஏகம்"** என்றது-புஷ்கரத்தை. 16. **"அஜஸ்ய நாப₄ாவத்₄யேகம் யஸ்மிந் விஶ்வம் ப்ரதிஷ்டி₂தம் । புஷ்கரம் புஷ்கராக்ஷஸ்ய தஸ்மை பத்₃மாத்மநே நம: ॥"** என்று மஹாபா₄ரதத்திலே வ்யாக்₂யாதமாகையாலே.

### ருத்₃ரகாரணத்வபக்ஷாநுவாத₃ம்

நநு; **1. "யதா₃ தமஸ்தந்ந தி₃வா ந ராத்ரிः ந ஸந்ந சாஸச்சி₂வ ஏவ கேவலः" 2. "காரணம் து த்₄யேயः" 3. "ஸர்வைஶ்வர்யஸம்பந்நஸ் ஸர்வேஶ்வரஶ்ஶம்பு₄ரா-காஶமத்₄யே த்₄யேயः"** என்று - ஶ்வேதாஶ்வதராத₂ர்வ ஶிக₂ாதி₃களிலே ருத்₃ரனைக் காரணபூ₄தனாகச் சொல்லா நின்றதேயென்னில்;

### தத்பக்ஷநிராஸம்

அதுவுமநுபபந்நம்; **4. "பு₃த்₃பு₃தா₃த் த்ர்யக்ஷஶ்ஶூலபாணिः புருஷோऽஜாயத" 5. "நாராயணாத்₃ருத்₃ரோ ஜாயதே" 6. "லலாடாத் க்ரோத₄ஜோ ருத்₃ரோऽஜாயத" 7. "இந்த்₃ரோ வருணஸ் ஸோமோ ருத்₃ரः பர்ஜந்யோ யமோ ம்ருத்யு ரீஶாநः" 8. "த்ர்யக்ஷம் க₂ண்ட₃பரஶுமஜீஜநத்" 9. "ப்₃ரஹ்மணः புத்ராய"** என்று ஏவமாதி₃வாக்யங் களாலே மஹோபநிஷத்தும், நாராயணோபநிஷத்தும் ஸுபா₃லோபநிஷத்தும், ப்₃ருஹதா₃ரண்யகமும், அத₂ர்வண மும், ஸாமவேத₃மும் ஸ்ருஜ்யனாகவும், **10. "நேஶாநः"** என்று ஸம்ஹார்யனாகவும் சொல்லுகையாலே.

ஶதபத₂ப்₃ராஹ்மணத்திலே—**11. "ஸம்வத்ஸரே குமாரோऽஜாயத. ஸோऽரோதீ₃த். தம் ப்ரஜாபதிரப்₃ரவீத்.குமார கிம் ரோதி₃ஷி. யச்ச₂ரமாத் தபஸோऽதி₄ஜாதோऽஸீதி. ஸோऽப்₃ரவீத். அநபஹதபாப்மாஹமஸ்மி"** இத்யாதி₃களிலே - ருத்₃ரன் உத்பந்நனவளவிலே ரோத₃நம் பண்ண, அவனைப் பார்த்து ப்ரஜாபதி 'நீ அழுகிறதென்?' என்று கேட்க, 'நான் அநபஹதபாப்மா, என் பாபங்கள் போம்படி எனக்கு நாமகரணம் பண்ணவேணும்' என்ன, இவன் அழுகையாலே 'உனக்கு ருத்₃ரனென்று பேராகக்கடவது' என்ன, ப₄வ ஶர்வேஶாந பஶுபதி பீ₄மோக்₃ர மஹாதே₃வ ரூபமான நாமஸப்தகத்தையும் அஷ்ட மூர்த்தித்வத்தையும் கொடுத்தான் என்று சொல்லிற்று.

இதுதான், ஸ்காந்த₃புராணத்திலே, **1. "உந்மத்தவத₃துந்மத்த: ப்ரபு₄: ப்ரப₄வதாமபி। ராத்ரௌ ஶ்மஶாநே பர்யடஸி தத்கிமேதத்தவேஶ்வர॥"** இத்யாதி₃யாலே தே₃வீ 'ஶ்மஶாநபர்யடநம் தொடக்கமான நிஹீநவ்ருத்திகளை நீ அநுப₄விக்கைக்கடியென்?' என்று கேட்க, **2. "அஹம் ஶோணிதபங்காலஸ: கராலவத₃நோऽம்பி₃கே। ரௌத்₃ரே முஹூர்த்தே ஸம்பூ₄தோ ஹரே ரோதி₃மி விஸ்வரம்॥"** இத்யாதி₃யாலே - தன்னுடைய உத்பத்தியையும், ரோத₃நத்தையும், நாமஸப்தக மூர்த்யஷ்டகங்களையும் பெற்றபடியையும் சொல்லி, **3. "ரௌத்₃ரே முஹூர்த்தே ஜாதோஹம் ரௌத்₃ரகர்மா ததோ ஹ்யஹம்। யத்₃ப₄வத்யுசிதம் கர்ம புருஷஸ்ய கி₃ரேஸ்ஸுதே। தத்தேநாவஶ்யகர்த்தவ்யம் ம்ருது₃ வா யதி₃ வேதரத்। ப்ரஜாபதேஶ்ச கஶ்ஶக்த ஆதே₃ஶம் கர்த்துமந்யதா₂॥"** இத்யாதி₃யாலே தன்னுடைய நிஹீநாசரண ஹேது கர்மமென்று சொன்னனென்று வ்யாக்₂யாதமாய்த்து. இவ்விடத்திலே, **2. "ஹரே ரோதி₃மி விஸ்வரம், ததோ மாம் பாணிநா ஸ்ப்ருஷ்ட்வா லோகேஶ: ப்ராஹ கேஶவ:"** என்று - ஹரிகேஶவ ஶப்₃த₃ங்களாலே உபக்ரமித்து, ப்ரஜாபதி ஶப்₃த₃த்தாலே உபஸம்ஹரிக்கையாலே, இந்த ஶ்ருதியில் ப்ரஜாபதி ஶப்₃த₃ம் நாராயண பர்யவஸாயியாகக் கடவது.

மார்க்கண்டே₃ய வைஷ்ணவ புராணாதி₃களிலேயும், **4."ருத்₃ரஸர்க்க₃ம் ப்ரவக்ஷ்யாமி தந்மே நிக₃த₃தஶ்ஶ்ருணு"** என்று இவ்வர்த்த₂த்தைச் சொல்லிற்று.

**5. "அஸ்ய தே₃வஸ்ய மீடு₄ஷ:" 6. "மஹாதே₃வஸ் ஸர்வமேதே₄ மஹாத்மா ஹுத்வாத்மாநம் தே₃வதே₃வோ ப₃பூ₄வ"** என்று இவனுடைய பத₃ம் கர்மாதீ₄நமென்று சொல்லிற்று.

ஸ்ரீவராஹபுராணத்திலே, **7. "தவ விஷ்ணோ: ப்ரஸாதே₃ந மயா தத்த்ரிபுரம் ஹதம் ......... தஸ்ய பாபஸ்ய தே₃ாஷேண**

**ந ஶக்நோமி விசேஷ்டிதும்"** என்று - த்ரிபுர த₃ஹநத்தாலுண்டான பாபமடியாக, யோக₃மாயை, ஐஶ்வர்யநாஶம், ஹ்ருத₃யஸந்தாபம், நிஶ்சேஷ்டிதத்வங்கள் இவனுக்கு உண்டாய்த்ததென்றும் சொல்லிற்று.

1. **"ததோ வாக்யாந் முநீந்த்₃ரஸ்ய தே₃வோ ப₄ரலேந் து₃ஶோக₃ர:। ஶங்கரஶ்சி₂ந்நலிங்க₃ஸ்து காநநே விசசார ஹ। ஏவம் ஶாபோ யத₃ாஸ்மாகம் தாப₄யாம் த₃த் தஸ்ஸாத₃ருண:। அவஶ்யகரணீயம் மே தத₃ா காஷ்ட₂மயம் வபு:॥"** என்று ப்₄ருகு₃சத்டத்நி ஶாபங்களாலே சி₂ந்ந லிங்க₃த்வ காஷ்ட₂ரூபத்வங்களும் உண்டாய்த்து என்று ப்₃ராஹ்மபுராணத்திலே சொல்லிற்று.

வாயவ்யத்திலே, 2. **"ததோபி₄ வ்யாஹ்ருதோ த₃க்ஷோ ருத்₃ரம் ஶாப₄யஶபத் புந:। யஸ்மாத் த்வம் மத்க்ருதே க்ரூரம் ருஷீந் வ்யாஹ்ருதவாநஸி। தஸ்மாத் ஸார்த₄ம் ஸுரைர்யஜ்ஞைர் ந த்வா யக்ஷ்யந்தி வை த்₃விஜா:। ஹுத்வாஹுதிம் தவ க்ரூராமபஸ்ஸ்ப்ருஶ்யந்து கர்மஸு॥"** என்று 3. **"அப உபஸ்ப்ருஶதி மேத்₄யத்வாய-தாந்வீக்ஷேத- யத₃ந்வீக்ஷேத-சக்ஷுஸ்ஸ்ய ப்ரமாயுக: ஸ்யாத்-தஸ்மாந்நாந் வீக்ஷ்ய:"** என்று ஶ்ருதியிலேபோலே - த₃க்ஷஶாபத்தாலே இஜ்யத்வாதி₃ நிவ்ருத்தியைச் சொல்லிற்று.

மாத்ஸ்யபுராணத்திலே, 4. **"யஸ்மாத₃பராத₄ஸ்ய ஶிரஶ்சி₂ந்நம் த்வயா மம। தஸ்மாச்ச₂ாப ஸமாயுக்த: கபாலீ த்வம் ப₄விஷ்யஸி............விஷ்ணோ: ப்ரஸாத₃ாத் ஸுஶ்ரோணி கபாலம் தத்ஸஹஸ்ரத₄ா। ஸ்பு₂டிதம் ப₃ஹுத₄ா யாதம் ஸ்வப்நலப்₃த₄ம் த₄நம் யத₂ா"** என்று ப்₃ரஹ்மாவாலே இவன் ஶாபோபஹதனனபடியையும், ஸர்வேஶ்வரன் இவன் ஶாபத்தைப் போக்கினபடியையும் சொல்லிற்று.

விஷ்ணுபுராணத்திலே, க்ருஷ்ண வைப₄வமறியாதே, தன்னை ஆஶ்ரயித்த ப₃ாணனை நோக்குகைக்காக ஸடரி

கரனாய் வந்து க்ருஷ்ணனோடே எதிரிட்டு, **1. "ஜ்ரும்பி₄தஸ்து ஹரோ ரதே₂பஸ்த₂ உபாவிஶத்। ந ஶஶாக ததா₃ யோத்₃தும் க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா ॥"** என்று-தானும் பரிகரமும் தோற்றுத் தேர்த்தட்டிலே விழுந்து கிடந்து, **2. "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபா₃ஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்"** என்று பின்பு க்ருஷ்ணவைப₄வத்தை உணர்ந்து பா₃ணனுடைய ப்ராணப்ரதா₃நார்த்த₂மாக க்ருஷ்ணனை இரந்தானென்றும்;

ஸ்ரீவிஷ்ணு த₄ர்மோத்தர ஸ்ரீராமாயணங்களிலே, **3. "விஷ்ணோராதி₃க்யமந்விச்ச₂ம்ஸ்தஸ்ய மாயாவிமோஹித:। க்ருதவாநஸ்மி தே₃வேஶ தே₃வவாக்யேந விக்₃ரஹம்"** என்று-ப₄க₃வந் மாயா விமோஹிதனாய் விஷ்ணுவோடே எதிரிட்டு, **4. "ஆரோபிதும் ந மே ஶக்தில் ஸர்வயத்நேந சாऽபப₄வத்"** என்று அவன் கையில் வில்லை வளைத்து நாணிலேயேறிடவும் மாட்டாதே, **5. "ததா₃ து ஜ்ரும்பி₄தம் ஶைவம் த₄நுர்பீ₄மபராக்ரமம்। ஹுங்காரேண மஹாதே₃வ: ஸ்தம்பி₄தோத₂ த்ரிலோசந:॥"** என்று-வில்லும் முறிந்துபோய், தானும் ஹுங்காராபி₄பூ₄தனாய், **6. "ததஶ்ச க₃தமோஹேந மயா ஜ்ஞாதோ ஹரி: பர:। ஜ்ஞாத்வா விஸ்ருஷ்டசாபேந ஸ்துதஶ்ச ப₄க₃வாம்ஸ்ததா₃॥"** என்று-பின்பு தெளிந்து ஸ்தோத்ரம் பண்ணினனென்றும் இவனுடைய அஜ்ஞாநஶக்திகளைச் சொல்லிற்று.

வ்ருகாஸுரன் இவனை ஆராதி₄த்து, 'யாவனொருவனுடைய தலையை ஸ்பர்ஶித்தேன் அவனுடைய தலை ஶததா₄வாகவேணும்' என்று அபேக்ஷிக்க, அவனும், அப்படியே வரங்கொடுக்க, அநந்தரம், **7. "ஸ தத்₃வர பரீக்ஷார்த்த₂ம் ஶம்போ₄ர்மூர்த்₄நி வ்ருகாஸுர:। ஸ்வஹஸ்தம் தா₄துமாரேபே₄ ஸோऽபி₃ப்₄யத் ஸ்வக்ருதாச்சி₂வ:। தேநோபஸ்ருஷ்டஸ் ஸந்த்ரஸ்த உபதா₄வந் ஸவேபது₂:। யாவதந்தம் தி₃வோ பூ₄மே: காஷ்டா₂ நாம த₄ராபு₄வ:॥"** என்கிறபடியே-அவன் அத்தைப் பரீக்ஷிக்கைக்காக இவன்

தலையைத்தொட, ஶோகபீ₄தனாய் இவனோட அவன் கண்ட விடமெங்கும் தொடர, ஓடிப் போக்கற்று, ஸ்ரீவைகுண்ட₂த் தேறச்செல்ல, ஸர்வேஶ்வரன், இவனுடைய க்லேஶத்தைக் கண்டு நடுவே வந்து ஆவிர்ப₄வித்து, வ்ருகாஸுரனைப் பார்த்து, 'இவன் ப்₄ராந்தன், பொய்யல்லது சொல்லான், உன் தலையைப் தொட்டுப்பார்க்கமாட்டாயோ ?' என்ன, அநந்தரம் அவன் தன்னுடைய தலையைத்தொட்டு ம்ருதனாய் விழுந்தானென்று ஸ்ரீப₄ாக₃வதத்திலே 1. **"வ்ருகாஸுராய கி₃ரிஶோ வரம் த₃த்வாப ஸங்கடம்"** என்று தொடங்கி, இவன் ஆபந்நனானபடியையும் ஸர்வேஶ்வரன் இவனாபத்தைப் போக்கினபடியையும், இவனுடைய அஜ்ஞாநஶக்திகளையும் சொல்லிற்று.

அந்த₄காஸுரனை நிரஸிக்கைக்காக மாத்ருக₃ணங்களை ஸ்ருஷ்டிக்க, 2. **"த்ரைலோக்யே ப₄க்ஷ்யமாணே து தத₃ா மாத்ருக₃ணேந வை। ந்ருஸிம்ஹமூர்த்திம் தே₃வேஶம் ப்ரத₃த்₄யௌ ப₄க₃வாந்** *ஶிவ:*" என்று அத்தாலே நோவுபட, தன்னாலே ஶமிப்பிக்கவொண்ணாமையாலே ஸர்வேஶ்வரனை த்₄யானம்பண்ண, அவன் ஶமிப்பித்தானென்று மாத்ஸ்யபுராணத்திலே இவனுடைய அஜ்ஞாநஶக்திகளையும் சொல்லிற்று.

ஆக இப்படி ஸ்ருஜ்யத்வ ஸம்ஹார்யத்வ கர்மவஶ்யத்வங்களைச் சொல்லுகையாலே இவனுக்குக் காரணத்வம் கூடாது.

ஆகையால், ஹிரண்யக₃ர்ப்ப₄ாதி₃ஶப்₃த₃ங்கள்போலே *ஶிவஶம்ப்₄வாதி₃ஶப்₃த₃ங்களும்* நாராயணபரங்கள்:— *ஶிவ*னென்றது - ஸர்வப்ரகாரஶுத்₃த₄னென்றபடி. *ஶிவ*ஶப்₃த₃ம், 3. **"*ஶிவ*மஸ்து ஸர்வஜக₃தாம்"** 4. **"*ஶிவா*ஸ்தே ஸந்து பந்த₂ாந:"** 5. **"*ஶிவ*ம் கர்மாஸ்து"** என்று-ஶ்ருதி₃ மாங்க₃ல்யகு₃ணவிஶிஷ்ட வஸ்துக்களிலேயும் ப்ரயுக்தம். ஶம்பு₄வென்றது - 6. **"*ஶம்* - ஸுக₂ம் ப₄ாவயதீதி ஶம்பு₄:"**

என்கிற வ்யுத்பத்தியாலே ஸர்வஸூக₂ப்ரத₃னென்றபடி. ஶம்பு₄ஶப்₃த₃ம் - த்₃ருஹிணனையுஞ்சொல்லும். 1. **"ஸர்வஶ் ஶர்வஶ்ஶிவஸ்ஸ்தா₂ணு:"** 2. **"ஸ்வயம்பூ₄ஶ்ஶம்பு₄ராதி₃த்ய:"** என்று கு₃ணவிவக்ஷையாலே இவைதான் நாராயணன் பக்கலிலே ப்ரயுக்தங்கள். 3. **"யாநி நாமாநி கௌ₃ணாநி"** என்கையாலே - இவைதான் யௌகி₃கங்கள். நாராயண ஶப்₃த₃ம் ருத்₃ரனைச் சொல்லமாட்டாது. இதுதன்னைப் பல உபநிஷத்துக்களிலும் பலகாலுஞ் சொல்லிற்று. ஶிவஶப்₃த₃த்துக்கு அதில்லை.

நநு, - 4. **"ப்₃ரஹ்ம விஷ்ணுருத்₃ரேந்த்₃ராஸ் தே ஸர்வே ஸம்ப்ரஸூயந்தே"** என்று அவர்களோடொக்க நாராயண னும் பிறந்தானென்றும், ஸ்ரீராமாயணத்திலும் லிங்கா₃தி₃ புராணங்களிலும் - ப்₄ருகு₃ஶாபத்தாலே இவனுக்கு து₃:க் கா₂நுப₄வமுண்டாய்த்தென்றும் சொல்லுகையாலே, இவ னுக்குக் கர்மவஶ்யத்வமுண்டேயென்னில்;

அதுசொல்லவொண்ணாது; 4. **"ப்₃ரஹ்மவிஷ்ணுருத்₃ ரேந்த்₃ராஸ்தே"** என்கிறவிடத்தில் இவனை அவர்களைப் போலே பிறந்தானென்கிறதன்று, 5. **"ரக்ஷார்த்த₂ம் ஸர்வபூ₄தாநாம் விஷ்ணுத்வமுபஜக்₃மிவாந்"** என்கிற படியே - ராக₄வயாத₃வஸஜாதீயனானாற்போலே ப்₃ரஹ்ம விஷ்ணுஸஜாதீயனாய்க்கொண்டு விஷ்ணுவாய் வந்து அவ தரித்தபடியைச் சொல்லுகிறது.

6. **"அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே"** என்று-ஶ்ருதி தானே கர்மமூலமான ஜந்மத்தை நிஷேதித்து ஐச்சி₂க மான ஜந்மத்தை விதி₄த்தது. 7. **"ஏஷ ஸர்வபூ₄தாந்த ராத்மா அபஹதபாப்மா"** 8. **"ஸ ஏஷ ஸர்வேப்₄ய: பாப்மப்₄ய உதி₃த:"** 9. **"பஶ்ய தே₃வஸ்ய மாஹாத்ம்யம் மஹிமாநஞ்ச நாரத₃। ஶுபா₄ஶுபை₄: கர்மபி₄ர்யோ ந லிப்யேத கதா₃சந॥"** 10 **"ஸ ஸர்வபூ₄தப்ரக்ருதிம் விகாராந்"** 8. **"ஶுபா₄ ஶுபை₄ர்விநிர்முக்தம் ஊர்மிஷட்காத் பரம் ப்ரபு₄ம்। தம்**

**லைத்₃யமமலம் விஷ்ணும் ஸதா₃ த்₄யாயந் விமுச்யதே ||"** என்று இவனை அகர்மவஶ்யனாகச் சொல்லிற்று.

1. **"ஸர்வாவஸ்தா₂ஸு வை விஷ்ணோர் ஜநநம் ஸ்வேச்ச₂யைவ து | லீலயா சைவ க்ருஷ்ணேந** ஸ்வகுலஸ்ய **ச ஸம்ஹ்ருதி:| ஜரகாஸ்த்ரச்ச₂லேநைவ க₃மநம்** ஸ்வேச்ச₂யைவ **து||"** 2. **" த்₃விஜஶாபச்ச₂லேநைவமவதீர்ணோபி லீலயா "** இத்யாதி₃யாலே லிங்கா₃தி₃கள் தன்னிலே ப₄க₃வத₃வதாரம் இச்சி₂கமென்று சொல்லிற்று.

ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலே, **3. " தே₃வதிர்யங்மநுஷ்யேஷு ஶரீரக்₃ரஹணாத்மிகா | லீலேயம் ஸர்வபூ₄தேஷு தவ சேஷ்டோபலக்ஷணா ||" 4. "நாகாரணாத்காரணாத்₃வா காரணாகாரணாந்ந ச | ஶரீரக்₃ரஹணம் வ்யாபிந் த₄ர்ம த்ராணாய கேவலம் ||" 5. "இச்ச₂ாக்₃ருஹீதாபி₄மதோரு தே₃ஹ:" 6. "ஸமஸ்தஶக்தி ரூபாணி தத்கரோதி ஜநேஶ்வர | தே₃வதிர்யங்மநுஷ்யாக்₂யா சேஷ்டாவந்தி ஸ்வலீலயா | ஜக₃தாமுபகாராய ந ஸா கர்மநிமித்தஜா ||"** என்று ஜக₃த்₃ரக்ஷணார்த்த₂மாக இச்சை₂யாலே அவதரிக்கிறான்; ரிஷிஶாபத்தை ஸர்வமர்யாதா₃ஸ்தா₂பநார்த்த₂மாகத் தானும் அநுவர்த்திக்கிறனத்தனையென்று சொல்லிற்று.

**7. "அஜோபி ஸந்நவ்யயாத்மா பூ₄தாநாமீஶ்வரோபி ஸந் | ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்டா₂ய ஸம்ப₄வாம்யாத்மமாயயா || யதா₃ யதா₃ ஹி த₄ர்மஸ்ய க்₃லாநிர்ப₄வதி பா₄ரத | அப்₄யுத்தா₂நமத₄ர்மஸ்ய ததா₃த்மாநம் ஸ்ருஜாம்யஹம் || பரித்ராணாய ஸாதூ₄நாம் விநாஶாய ச து₃ஷ்க்ருதாம் | த₄ர்மஸம்ஸ்தா₂பநார்த்தா₂ய ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃ || ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம்"** என்று தானும் அருளிச்செய்தானிறே.

ஆகையால் இவன் கர்மவஶ்யனன்று.

நநு - "க்ருஷ்ணன் புத்ரார்த்தி₂யாய் கைலாஸத்திலே சென்று ருத்₃ரனை அர்ச்சித்து அவன் பக்கலிலே புத்ரனை அபேக்ஷித்தான்; அவனும் புத்ரனைக் கொடுத்தான்" என்று மஹாபா₄ரதத்திலே சொல்லுகையால் நாராயணனும் கர்மவஶ்யனாய், ருத்₃ரனும் ஶரண்ய பூ₄தனாகவேண்டாவோ வென்னில்;

'அங்குச் சொல்லுகிற அர்ச்சந ப்ரார்த்த₂நாதி₃கள் கர்ம வஶ்யத்வாதி₃ ஸூசகங்களன்று. வரப்ரதா₃நக்ருதம்' என்னு மத்தை, **1. "அந்யம் தே₃வ வரம் தே₃ஹி ப்ரஸித்₃த₄ம் ஸர்வஜந்துஷு। மர்த்யோ பூ₄த்வா ப₄வாந் தே₃வ மாமா ராத₄ய கேஶவ॥ மாம் வஹஸ்வ ச தே₃வேஶ வரம் மத்தோ க்₃ருஹாண ச। யேநாஹம் ஸர்வபூ₄தாநாம் பூஜ்யாத் பூஜ்யதரோ ऽப₄வம்॥"** என்று ருத்₃ரன் அபேக்ஷிக்க, **2."தே₃வ கார்யாவதாரேஷு மநுஷ்யத்வமுபேயிவாந்। த்வாமேவாரா த₄யிஷ்யாமி மம த்வம் வரதோ₃ ப₄வ॥"** என்று ஸர்வேஶ்வரனும் வரங்கொடுத்தானென்று ஸ்ரீவராஹபுராணத்திலே சொல்லிற்று.

புத்ர ப்ரதா₃நாநந்தரம், ருத்₃ரன் - தே₃வர்களையும் ரிஷி களையும் பார்த்து 'க்ருஷ்ணன் ஜக₃ந்மோஹநார்த்த₂மாகப் புத்ரார்த்தி₂யாய் வந்தானித்தனை; இவனே ஸர்வகாரண பூ₄தன்; ஸர்வஸ்மாத்பரன்; மோக்ஷப்ரத₃னுமிவனே; இவனையே உபாஸித்து முக்தராகப் பாருங்கோள்' என்று உபதே₃ஶிக் கையாலும், இவன் பரத்வத்தை ப₃ஹுமுக₂மாக ஸ்தோத்ரம் பண்ணுகையாலும், புத்ரனைப் பெறுகைக்குப் பிறர்காலிலே விழுகிற க்ருஷ்ணன் தானே வழியிலே க₄ண்டாகர்ண னுக்கு மோக்ஷங்கொடுக்கையாலும் இவனுக்குக் கர்மவஶ்ய த்வாதி₃ஶங்கையில்லை.

லிங்கா₃தி₃புராணங்களில், க்ஷேத்ர ப்ரக்ருதி யோநி ஶக்தி மாயா ஶப்₃த₃ங்களாலே ருத்₃ரனைப்பார்க்க நாராயண னுக்குச் சொன்ன கு₃ணப₃ாவம், ருத்₃ராது₃த்பத்தி, மூர்த்தி த்ரயாதீத ஸதா₃ஶிவபாரம்யம் தொடக்கமானவை, ப்ரத்யக்ஷ

ஶ்ருதி விரோத₄ந்தாலும், ஸ்வக்₃ரந்த₂த்தில் பரஸ்பர விரோத₄த்தாலும், **1. "அக்₃நேஶ்ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே"** என்கிறபடியே, இவை தான் தாமஸ புராணஸித்₃த₄ங்களாகையாலும், ப்₃ரந்தி பரிகல்பிதங்கள்.

ப்₃ரஹ்மருத்₃ரர்களுடைய ஜந்மங்களும் ஸ்வேச்சை₂யாலே யாகுலோவென்னில்; அது சொல்லவொண்ணாது. **2. "ஆப்₃ரஹ்மஸ்தம்ப₃பர்யந்த ஜக₃த₃ந்தர் வ்யவஸ்தி₂தா: । ப்ராணிந: கர்மஜநித ஸம்ஸார வஶவர்த்திந: ॥" 3. "ப்₃ரஹ்மாத்₃யாஸ்ஸகலா தே₃வா: மநுஷ்யா: பஶவஸ் தத₂ா । விஷ்ணோர் மாயாமஹாவர்த்தே மோஹாந்த₄தமஸா வ்ருதா: ॥"** என்று இவர்களைக் கர்மபரதந்த்ரராகச் சொல்லுகையாலே.

இப்படி நாராயணனே காரணபூ₄தனென்கிற இவ் வர்த்த₂த்துக்கு ந்யாயம் வேண்டாதபடி, அநந்தஶாக₂ா நிகி₂லவேத₃நிக₃மநமாய், உபாஸநவிதி₄ விது₄ரமாய், ஸமஸ்த பரவித்₃யோபாஸ்ய விஶேஷநிர்ணயகமாய், நிகி₂லவேதா₃ந்த நிர்வாஹகமாயிருந்துள்ள நாராயணாநுவாகம்-ஸர்வவேதா₃ந்தங்களிலும் பரம்ப்₃ரஹ்ம பரதத்த்வ பரமாத்ம பரஞ்ஜ்யோதி: பராயண புருஷாக்ஷராச்யுத விஶ்வாத்ம ஶிவ ஶம்பு₄ப்ரமுக₂ஶப்₃த₃ங்களாலே நிர்தி₃ஷ்டமான வஸ்துவை அவ்வோ ஶப்₃த₃ங்களாலே அநுவதி₃த்து நாராயணனென்று விஶேஷித்து. **4. "ஸ ப்₃ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்₃ர:"** என்று - கார்யத்வேந ஸப்ரதிபந்நரான இந்த்₃ரனோடே ப்₃ரஹ்மருத்₃ரர்களை ஸஹபடி₂த்து, இவனுக்குக் கார்யபூ₄தனாகவும் சொல்லிற்று.

ஆக, இப்படி ந்யாய ஸ்வப₄ாவத்தாலும் ந்யாய நிரபேக்ஷமாக ஶ்ருதிதானே விஶேஷிக்கையாலும், **5. "ஸ தோ ஹரி:"** என்று-ஹரிஶப்₃த₃த்தாலே உபஸம்ஹரிக்கையாலும், ப்₃ரஹ்மருத்₃ராதி₃களுக்கு ஸ்ருஜ்யத்வ ஸம்ஹார்யத்வ கர்மவஶ்யத்வங்களைச் சொல்லுகையாலும் நாராயணனே காரணபூ₄தன்.

1. "யேந ஜாதாநி ஜீவந்தி" 2. "ஏஷ பூ₄தபால:" 3. "பரித்ராணாய ஸாதூ₄நாம்" 4. "ந ஹி பாலநஸாமர்த்₂யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்" 5. "ஸ ஏவ பாதி" என்கிறபடியே - ஸ்த₂ாபகனும் இவனே.

1. "யத் ப்ரயந்த்யபி₄ஸம்விஶந்தி" 6. "யேநேத₃ம் விஶ்வம் பரிபூ₄தம் யத₃ஸ்தி" 7. "யஸ்ய ப்₃ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே₄ ப₄வத ஓத₃ந: । ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம் ।" 8. "க்₃ரஸேத் ஸம்ஹார ஸமயே ஜக₃தே₃தது₃ம்ப₃ராண்ட₃வத் । லீலயா யஸ்து ப₄க₃வாந் தம் க₃ச்ச₂ ஶரணம் ஹரிம் ॥" 9. "ஸம்ப₄க்ஷயித்வா" என்கிறபடியே-ஸம்ஹர்த்தாவும் இவனே.

நநு, ருத்₃ரன் ஸம்ஹர்த்தாவென்னுமிடம் உப₄யவாதி₃ ஸித்₃த₄மாயிருக்க, இவனே ஸம்ஹர்த்தாவென்னும்படியென்? என்னில்; 10. "கல்பாந்தே ருத்₃ரரூபீ யோ க்₃ரஸதே த்வகி₂லம் ஜக₃த் । தமநந்தபுருஷம் விஷ்ணும் ப்ரணதோऽஸ்மி ஜநார்த்த₃நம் ॥" 11. "ஸ்ருஷ்டிஸ்தி₂த்யந்தகரணீம் ப்₃ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் । ஸ ஸம்ஜ்ஞாம் யாதி ப₄க₃வாந் ஏக ஏவ ஜநார்த்த₃ந: ॥" 5. "ஸ ஏவ ஸ்ருஜ்யஸ்ஸ ச ஸர்க்க₃கர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச ॥" என்கிறபடியே - ருத்₃ராந்தர்யாமியாய் நின்று இவனே ஸம்ஹரிக்கிறான். ஆகையாலே இவனே ஸகல ஜக₃ஜ்ஜந்மாதி₃ காரணபூ₄தன்.

1. "யதோ வா இமாநி பூ₄தாநி ஜாயந்தே......தத்₃ விஜிஜ்ஞாஸஸ்வ" 12. "அஸத்₃வா இத₃மக்₃ர ஆஸீத்...... ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வாநந்தீ₃ ப₄வதி" 13. "தமேவம் வி₃த்வாநம்ருத இஹ ப₄வதி" 14. "பி₄த்₃யதே ஹ்ருத₃யக்₃ரந்தி₂:" 15. "த்வாமாராத்₄ய பரம் ப்₃ரஹ்ம யாதா முக்திம் முமுக்ஷவ: । வாஸுதே₃வமநாராத்₄ய கோ மோக்ஷம் ஸமவாப்நுயாத் ॥" 16. "ஸம்ஸாரார்ணவமக்₃நாநாம் விஷயா

க்ராந்தசேதலாம்। விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சித₃ஸ்தி பராயணம்॥" 1. "ஸம்ஸாரஸாக₃ரம் கோ₄ரம் அநந்தக்லேஶப₄ஜநம்। த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:॥" 2. "ஸமஸ்தஜக₃தாம் மூலே யஸ்ய ப₄க்திஸ் ஸ்தி₂ரா த்வயி। த₄ர்மார்த்த₂காமை: கிம் தஸ்ய முக்திஸ்தஸ்ய கரே ஸ்தி₂தா॥" இத்யாதி₃யாலே - காரண வஸ்துவே உபாஸ்யம், மோக்ஷப்ரத₃ம், முக்தப்ராப்யம் என்கையாலே, முமுக்ஷூபாஸ்யனும் மோக்ஷப்ரத₃னும் முக்தப்ராப்யனும் இவனே.

## பூர்வபக்ஷம்

நநு, சா₂ந்தோ₃க்₃யத₃ஹரவித்₃யையிலேயும், தைத்திரீய த₃ஹரவித்₃யையிலேயும், ப்₃ருஹதா₃ரண்யகத்திலும், அத₂ர்வஶிகை₂யிலும், 3. "த₃ஹரோऽஸ்மிந்நந்தர ஆகாஶ:। தஸ்மிந்யத₃ந்தஸ்தத₃ந்வேஷ்டவ்யம்।" என்றும், 4. "க₃க₃நம் விஶோகஸ் தஸ்மிந் யத₃ந்தஸ் தது₃பாஸிதவ்யம்" என்றும், 5. "ய ஏஷோऽந்தர்ஹ்ருத₃ய ஆகாஶஸ் தஸ்மிந் ஶேதே। ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந:" என்றும், 6. "ஶம்பு₄ராகாஶமத்₄யே த்₄யேய:" என்றும், ஆகாஶ ஶப்₃த₃த்தாலே நாராயணனைச் சொல்லி, அதுக்கு அவ்வருகே. ஶம்பு₄ ஶிவ ஈஶாந மஹேஶ்வர ஶப்₃த₃ங்களாலே ருத்₃ரனை உபாஸ்யனாகச் சொல்லிற்று. 7. "ஸர்வாணி ரூபாணி விசித்ய தீ₄ர: நாமாநி க்ருத்வா" என்று நாராயணனுக்கு அஸாதா₄ரணமான நாமரூபகர்த்ருத்வத்தை— 8. "ஆகாஶோ ஹவை நாமரூபயோர் நிர்வஹிதா" என்று சொல்லுகையாலே, சா₂ந்தோ₃க்₃யத₃ஹரவித்₃யையில் ஆகாஶஶப்₃த₃ம் நாராயணபரம்; அத்தோடு ஏகார்த்த₂ம் ஆகவேண்டுகையாலே, அல்லாதவிடத்திலும் ஆகாஶ க₃க₃ந ஶப்₃த₃ங்களும் நாராயணபரங்கள்.

அத₂ர்வஶிரஸ்ஸிலே, நாலு க₂ண்ட₃த்தாலே - ருத்₃ரனுடைய ஸர்வைஶ்வர்யத்தைச் சொல்லி, அஞ்சாம்

கூண்ட₂த்தாலே **1. "தமாத்மஸ்த₂ம் யேऽநுபஶ்யந்தி தீ₄ரா꞉ தேஷாம் ஶாந்தி꞉ ஶாஶ்வதீ நேதரேஷாம்"** என்று ஹ்ருத₃யாந்தர்வர்த்தியான ருத்₃ரனுடைய உபாஸநத்தையும், அதுக்குப் ப₂லம் மோக்ஷமென்னுமிடத்தையும், **2. "ப₄ஸ்மம் க்₃ருஹீத்வா விம்ருஜ்யாங்கா₃நி ஸம்ஸ்ப்ருஶேத் தஸ்மாத், வ்ரதமேதத் பாஶுபதம் பஶுபாஶவிமோக்ஷாய"** என்று - பாஶுபதவ்ரதத்தைச் சொல்லுகையாலே, உபாஸ்யத்வ மோக்ஷப்ரத₃த்வங்கள் கண்டோ₃க்தம்.

ஶ்வேதாஶ்வதரோபநிஷத்திலே **3. "ததோ யது₃த்தர தரம்"** என்று நாராயணனில் பரத்வத்தையும், **3. "ய ஏதத், விது₃ரம்ருதாஸ்தே ப₄வந்தி"** என்று மோக்ஷப்ரத₃த்வத்தையும் சொல்லிற்று; **4. "தஸ்மாத் ஸர்வக₃த꞉ ஶிவ꞉"** என்கையாலே - இதுதான் ருத்₃ரபரமென்னுமிடம் ஸித்₃த₄ம்.

**5. "ருத்₃ரஸ்தாரகம் ப்₃ரஹ்ம வ்யாசஷ்டே। யேநாஸாவம்ருதீ பூ₄த்வா மோக்ஷீ ப₄வதி॥"** என்கிற ஜாபா₃லிஶ்ருதியாலும் மோக்ஷப்ரத₃த்வம் கண்டோ₃க்தம்.

ஸ்ரீருத்₃ர ஶதருத்₃ர ருத்₃ரபஞ்ஜர பஞ்சப்₃ரஹ்ம மந்த்ரங்களிலேயும் ருத்₃ரவைப₄வத்தைச் சொல்லிற்று. ஆகையாலே ருத்₃ரனே உபாஸ்யனும் மோக்ஷப்ரத₃னுமாக வேண்டாவோ? என்னில்:

## ஸித்₃தா₄ந்தம்

அது அநுபபந்நம்;— சா₂ந்தோ₃க்₃ய த₃ஹரவித்₃யைதன்னிலே **6. "கிம் தத்ர வித்₃யதே யத₃ந்வேஷ்டவ்யம்"** என்று - ஶ்ருதிதானே சோத்₃யம்பண்ணி, **8. "தஸ்மிந் காமாஸ்ஸமாஹிதா꞉ ஏஷ ஆத்மாऽபஹதபாப்மா"** இத்யாதி₃யாலே - த₃ஹராகாஶத்திலே உபாஸ்யமாகச் சொல்லிற்று அபஹதபாப்மத்வாதி₃கு₃ணங்களென்று ஸமாதா₄னம் பண்ணிற்று.

தைத்திரீய த₃ஹரவித்₃யாவாக்யம் இத்தோடு ஏகார்த்த₂ம். **1. "ய:"** என்று அகாரவாச்யனைச் சொல்லுகையாலே. மஹேஶ்வர ஶப்₃த₃ம், அவயவஶக்த்யா ஸர்வ நியந்தாவான நாராயணனைச் சொல்லுகிறது. **2. "அகாரோ விஷ்ணுவாசக:"** என்கையாலே- அகாரவாச்யன் நாராயணன்.

ப்₃ருஹதா₃ரண்யகத்திலும் அத₂ர்வஶிகை₂யிலும் சொன்ன ஆகாஶஶப்₃த₃ம் பரமபுருஷபரமன்று; ஸர்வ ப்ரஸித்₃த₄ாகாஶபரம். த₃ஹராகாஶாதி₃களிற்போலே புருஷோத்தமனுக்கு அஸாத₄ாரணமான த₄ர்மமில்லாமையால். இவ்விடங்களில் ஈஶாந ஶம்பு₄ ஶிவஶப்₃த₃ங்கள், வஶித்வ ஜக₃த்காரணத்வாதி₃ பரமாத்மாஸாத₄ாரண த₄ர்மஸம்ப₃ந்த₄த்தாலே, **3. "ஈஶாந: ப்ராணத₃:"** **4. "ஸ்வயம்பூ₄ஶ் ஶம்பு₄:"** **5. "ஸர்வஶ் ஶர்வஶ் ஶிவ:"** என்கிற ஶப்₃த₃ங்களோடு பர்யாயங்கள்.

**6. "காரணம் து த்₄யேய:"** என்கிற வாக்யம், காரணத்வத்₄யேயத்வங்கள் இரண்டையும் விதி₄க்கிறதன்று; த்₄யாநத்தை விதி₄க்கிறது. இரண்டையும் விதி₄க்கும்போது வாக்யபே₄த₃ம் ப்ரஸங்கி₃க்கும். அநுவதி₃க்கும்போது அந்யத: ப்ரஸித்₃த₄மானத்தை அநுவதி₃க்கவேண்டுகையாலே, காரணவாக்யங்களில் காரணபூ₄தனுகச் சொன்ன நாராயணனை அநுவதி₃த்து, தத்₃த்₄யாநத்தை விதி₄க்கிறது.

அத₂ர்வஶிரஸ்ஸிலே ப்ரத₂ம க₂ண்ட₃த்தில், **7. "அஹமேக: ப்ரத₂மமாஸம் வர்த்தாமி ச ப₄விஷ்யாமி ச நாந்ய: கஶ்சிந்மத்தோ வ்யதிரிக்த:"** இத்யாதி₃யாலே ருத்₃ரன் தனக்கு விஶ்வைஶ்வர்யத்தைச் சொல்லிற்று — **8. "மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம்"** **9. "அஹம் மநுரப₄வம் ஸூர்யஶ்ச"** **10. "ப்ராஜ்ஞோऽஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாமாயுரம்ருதமித்யுபாஸ்வ"** என்று - ப்ரஹ்லாத₃வாமதே₃வேந்த்₃ராதி₃களைப் போலே பரமாத்மபா₄வநாப்ரகர்ஷப₃லத்தாலே என்னுமிடத்தை, **7. "ஸோந்தராத₃ந்தரம் ப்ராவிஶத்"** என்று- ஶ்ருதிதானே சொல்லிற்று.

த்₃விதீயக₂ண்ட₃த்தில் சொன்ன தே₃வவாக்யம் ருத்₃ர வாக்யாநுவாத₃மாகையாலே தத்₃வாக்ய துல்யம்.

த்ருதீயக₂ண்ட₃த்தில் பரமாத்மாவின் வைப₄வம் சொல்லுகிறது. சதுர்த்த₂ பஞ்சமக₂ண்ட₃ங்களில் ஓங்காராதி₃ [ப்ரணவ] நாமங்களையும் தந்நிர்வசனங்களையும் சொல்லுகிறது; ஆகையாலே ருத்₃ரபரங்களன்று அந்த ஶப்₃த₃ங்கள்; ப்ரணவவாச்ய நாராயண பரங்கள்.

ஷஷ்ட₂க₂ண்ட₃த்தில் சொன்ன ருத்₃ரோபாஸநம்— மது₄வித்₃யையிற் சொன்ன ஆதி₃த்யோபாஸநம்போலே பரமாத்மோபாஸநம். இதிற்சொன்ன ப₄ஸ்மஸ்பர்ஶம்— ஸௌத்ராமணியிற்சொன்ன ஸுராக்₃ரஹணம் ஸர்வக்ரது ஸாத₄ரணமல்லாதாப்போலே ஸர்வோபாஸக ஸாத₄ரண மன்று.

ச₂ாந்தே₃ாக்₃யாதி₃களில் **1. " அஸதே₃வேத₃மக்₃ர ஆஸீத்"** இத்யாதி₃களிலே பரமதோபந்யாஸம் பண்ணினாற் போலே, இவ்விடத்திலும் பரமதோபந்யாஸம் பண்ணுகிறது; லைங்க₃த்திலே - நக்₃நத்வாதி₃த₄ர்மாங்க₃மாகச் சொல்லுகையாலும், அத₂ர்வஶிரஸ்ஸிற்சொன்ன மந்த்ரங்களை ப₄ஸ்மோத்₃தூ₄ளநத்திலே விநியோகி₃க்கையாலும், அத₂ர்வ ஶிரஸ்ஸிலும் லைங்க₃த்திலும் சொன்ன பாஶுபத வ்ரதம் ஏகமாகையாலும், **2. " அர்த்தை₂ர்த₃ஶார்த்த₂ஸம்யுக்தம் கூ₃ட₄ம் ப்ராஜ்ஞவிநிந்தி₃தம் । வர்ணாஶ்ரம க்ருதைர்த₄ர்மைர் விபரீதம் க்வசித்ஸமம் ॥"** என்று லிங்க₃ந்தன்னிலே அவைதி₃கமாகச் சொல்லுகையாலும், அத₂ர்வஶிரஸ்ஸில் அதி₄காரஶ்ரவணத்தாலே விஶேஷேண ஸர்வாதி₄காரத்வம் அப்ராப்தமாக, ஸ்ரீவராஹபுராணத்திலும் ஆதி₃த்யபுராணத்திலும் வேத₃பா₃ஹ்யாதி₄காரமென்று ஸங்கோசிக்கையாலும், **3. " ப₄ஸ்மச₂ந்நோ ப₄ஸ்மஶய்யாஶயாந: "** என்று ஶாதாதபத₄ர்மஶாஸ்த்ரத்தில் மஹாபாதக நிவர்த்தகமாகச் சொன்ன ப₄ஸ்மோத்₃தூ₄ளநம் ப்ராயஶ்சித்த விஷய

மாகையாலும், லோகப்ரஸித்,தி,யாலும் இது அவைதி,கம்— என்று சிலர் சொன்னார்கள்.

ஶ்வேதாஶ்வதரத்தில், நாராயணத்பரத்வமும் மோக்ஷப்ரத,த்வமும் சொல்லுகிறதென்கிறதுவும் அநுபபந்நம்; 1. "**வேத,ாஹமேதம்**" என்று தொடங்கி, 1. "**நாந்ய: பந்தா,:**" என்று - மஹாபுருஷவேத,நம் மோக்ஷஸாத,நமென்றும், தத்,வ்யதிரிக்தோபாயமில்லையென்றும், 2. "**யஸ்மாத் பரம் நாபரம்**" இத்யாதி,யாலே - ப்ரஸ்துத புருஷனே பரன், தத்,வ்யதிரிக்தரடைய அபரரென்று சொல்லிவைத்து, அநந்தரம், வேறேயொரு வஸ்துவைப் பரமென்றும் மோக்ஷப்ரத,மென்றும் சொல்லுகையாகிறது ப்ரதிஜ்ஞாஹேதுவிரோத,த்தாலே அஸங்க,தமாகையால்.

3. "**மஹாந் ப்ரபு,ர்வை புருஷஸ் ஸத்த்வஸ்யைஷ ப்ரவர்த்தக:**" என்று - ப்ரஸ்துதனை மஹாபுருஷனை ஸத்வ ப்ரவர்த்தகனாகச் சொல்லுகையாலும், ஸத்வப்ரவர்த்தகன் விஷ்ணுவென்னுமிடம் 4. "**அத, யோ ஹவை க,லு ஏஷ வாஸ்ய ஸாத்விகாம்ஶ: ஸோऽஸௌ ப்,ரஹ்மசாரிணோ யோயம் விஷ்ணு:**" என்கிற மைத்ராயணீயுபநிஷத்ஸித்,த,மாகையாலும், ஸ்ரீபுருஷஸூக்த நாராயணாநுவாக ப்ரப்,ருதிகளிற் சொன்ன ஸர்வாநநத்வாதி,களை 5. "**ஸர்வாநநஶிரோக்,ரீவ:**" இத்யாதி,களில் சொல்லுகையாலும், இந்த ப்ரகரணம் நாராயணபரம். 6. "**ததோ யது,த்தரதரம்**" என்கிறவிடத்தில் தச்ச,ப்,த,ம் ஹேதுபரம். அன்றிக்கே, 7. "**இத,ம் ஸர்வம்**" என்று கீழ்ச்சொன்ன ப்ரபஞ்சத்தைப் பராமர்ஶிக்கிறதாகவுமாம். ஶிவஶப்,த,ம் அவயவ ஶக்த்யா நாராயணபரம்.

8. "**ருத்,ரஸ்தாரகம்**" இத்யாதி,களில் சொல்லுகிறது மோக்ஷப்ரத,த்வத்தையன்று, ஜ்ஞாநோபதே,ஷ்ட்ருத்வத்தை, 9. "**ஸ நோ தே,வஶ்ஶுப,யா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து**" என்கிறவிடத்தில் சொல்லுகிறதும் ஜ்ஞாநப்ர

த₃த்வத்வாத. 1. "உபாயோऽஸ்மி ஹ்ருதே: ஸ்ம்ருதௌ" 2. "ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே,த்" இத்யாதி₃களாலே- அவனுடைய ஜ்ஞாநோபதே₃ஷ்ட்ருத்வமும் நாராயண னுடைய மோக்ஷப்ரத₃த்வமும் ஸித்₃த₄ம். 3. "ஶங்கரஸ்ய து யோ ப₄க்த: ஸப்தஜந்மாந்தரம் நர:। தஸ்யைவ து ப்ர ஸாதே₃ந விஷ்ணுப₄க்த: ப்ரஜாயதே ॥" என்கிறபடியே ருத்₃ரன் ப₄க₃வத்₃ப₄க்தியையுண்டாக்குமித்தனை. ஆகை யாலேயிறே, ருத்₃ரப₄க்தனான வானன், 4. "நிர்வைரிதா ச விபு₄தை₄ர் விஷ்ணுப₄க்திரநுத்தமா। வாஸுதே₃வாத் து மரணம் கல்பாந்தே குபிதாத் புந:॥" என்று - ருத்₃ரன் பக்க லிலே ப₄க₃வத்₃ப₄க்தியை அபேக்ஷித்தது.

ஸ்ரீருத்₃ரர்தி₃களில், பரத்வசிஹ்நமான ஜக₃த்காரணத்வ முமுக்ஷூபாஸ்யத்வ மோக்ஷப்ரத₃த்வங்களில்லாமையாலும், ப்ரப₃லஶ்ருத்யந்தர விரோத₄த்தாலும் அக்₃நிசயநாதி₃ களிலே விநியுக்தங்களாகையாலும், ருத்₃ரபரத்வத்தைச் சொல்லுகிறனவன்று; ஆகையாலே, ருத்₃ரனுக்கு உபாஸ யத்வமோக்ஷப்ரத₃த்வங்கள் கூடாது.

கிஞ்ச, 5. "யே ஸ்வத₄ர்மஸ்தி₂தா வர்ண விப்ராத்₃யா: குருநந்த₃ந!। விகர்மஸு நிவர்த்தந்தே ப்ரீதிமாம்ஸ்தேஷு கேஶவ:। ப்₃ரஹ்மசாரீ க்₃ருஹஸ்தா₂த்₃யா:" 6. "தஸ்மாத் ப்ரியத்வம் க்ருஷ்ணஸ்ய......யேஷாமதுஷ்டி: பாரக்யே...... வேத₃ா: ப்ரமாணம் ஸ்ம்ருதய:" 7. "பரத்₃ரவ்யேஷு ஜாத்யந்த₄ா: பரதா₃ரேஷ்வபும்ஸகா:। பரிவாதே₃ஷு யே மூகா: தே ஸர்வே த₃யிதா மம ॥" 8. "ஶ்ருதிஸ்ம்ருத்யுதி₃ தம் த₄ர்மம்" 9. "ஶ்ருதிஸ்ம்ருதீ மமைவாஜ்ஞா" 10. "த்₃வி விதே₄ா பூ₄தஸர்க்கோ₃ऽயம் தை₃வ ஆஸுர ஏவச। விஷ்ணு ப₄க்திபரோ தே₃வோ விபரீதஸ்ததா₂ஸுர:॥" என்கிற ஸ்ரீவிஷ்ணுத₄ர்மவசநங்களாலும், 11. "தே₃வாநாம் பரமோ த₄ர்மஸ்ஸதா₃ யஜ்ஞாதி₃கா: க்ரியா:। ஸ்வாத்₄யாயதத்த்வ வேதி₃த்வம் விஷ்ணுபூஜா ருதி ஶ்ருதி தை₃த்யா நாம் பா₃ஹுஶாலித்வம் மாத்ஸர்யம் ஸதஸ்வஸத்க்ரியா।

**நிந்த,நம் வேத,ஶாஸ்த்ராணும் ஹாப,க்திருத,ஜ்ருதா॥"** என்கிற ஸ்ரீவாமநபுராண வசநத்தாலும், 1. **"ஸாத்த்விகபதிரஸாரைஸ்ஸத,ரபி,யுக்த: பஶுபதிரப்யவநீதப்,ருத்ய வர்க்க,:। ஸாரகு,ருத்,ருட,ப்ரஸாத,கர்த்தா ஹரி சரணை ஸ்மரதோऽபவர்க்க,ஹேது:॥"** என்கிற ஸ்ரீநாரஸிம்ஹ புராண வசநத்தாலும், 2. **"விஷ்ணுப,க்திஸமாயுக்தாந் ஶ்ரௌதஸ்மார்த்த ப்ரவர்த்தகாந்। ப்ரியோ ப,வதி யோ த்,ருஷ்ட்வா வைஷ்ணவோऽஸௌ ப்ரகீர்த்தித:॥"** என்கிற லைங்க, வசநத்தாலும், 3. **"யே ச வேத,விதோ, விப்ரா:"** 4. **"மஹாத்மாநஸ்து மாம் பார்த்த,"** என்கிற மஹாப,ாரத வசநத்தாலும், ப,க,வத்,ப,க்தர்கள் ஸத்வப்ரக்ருதிகளாய் வைதி,கராயிருப்பர்களென்னுமிடம் ஸித்,த,ம்.

ருத்,ரப,க்தர்கள் தம:ப்ரக்ருதிகளாய் அவைதி,கராயிருப்பர்களென்னுமிடம் ஸித்,த,ம். 5. **"வாஸுதே,வபரா யத்ர வேத,மார்க்க,ாநுஸாரிண:। ருத்,ரப,க்தாஸ்த்ரயீ ப,ாஹ்யா ப,ஸ்மோத்,தூ,ளநவிக்,ரஹா:॥"** என்கிற லைங்க, வசநத்தாலும், ப,ஸ்மோத்,தூ,ளநம் ருத்,ரப,க்தர்களுக்கு லக்ஷணமென்னுமிடம் ஸித்,த,மாய் நின்றது. ப,ஸ்மோத்,தூ,ளநந்தான் 6. **"தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந ப,ஸ்மோத்,தூ,லந விக்,ரஹா:। ஜடிநோ முண்டி,நஶ்சைவ நக்,நா நாநாப்ரகாரிண:॥"** 7. **"ஜடிலா முண்டி,தா வாபி"** என்று லைங்க,த்திலும் மஹாப,ாரதத்திலும் - நக்,நத்வாதி, த,ர்மஸஹசரிதமாகச் சொல்லுகையாலும், 8. **"ந ப,ஸ்மகேஶதுஷகரீஷகபாலாமேத்,யாந்யதி,திஷ்டே,த்"** என்று நிஷேத்,த்,ரவ்யங்களோடே சேரவைக்கையாலும், ப,ஸ்மந்தான் அஶுத்,த,த்,ரவ்யமாகையாலும், 9. **"நக்,நம் வாநுபநீதம் வா விப்ரம் த்,ருஷ்ட்வா ப்ரமாத,த:। ம்ருத்,பி,ர்த்,வாத,ஶபி,ஸ் ஸ்நாத்வா வாஸோபி,ஸ்ஸஹ ஶுத்,த்,யதி॥"** 10. **"தஸ்மாதே,தாந் நரோ நக்,நாந் த்ரயீஸந்த்யாக,தூ,ஷிதாந்। ஸர்வதா, வர்ஜயேத் ப்ராஜ்ஞ: ஆலாபஸ்பர்ஶநாதி,ஷு॥"** என்று - நக்,நத்வாதி,கள் வேத,ப,ரஹ்

யங்களாகையாலும், **1. "த்ரிபுண்ட்,ரத,ாரிணோ நித்யம் ப,ஸ்மோத்,தூ,லநதத்பரா:। ப,விஷ்யத்,வம் த்ரயீப,ாஹ்யா மித்,யாஜ்ஞாநப்ரலாபிந: ॥" 2. "ருஷீணும் மாயயா ஸர்வ மிதி ஸஞ்சிந்த்ய தத்ர வை। ஶஶாப தாந் ஜடாப,ஸ்ம மித்,யாவ்ரதத,ராம்ஸ்தத,ா। ப,விஷ்யத, த்ரயீப,ாஹ்யா வேத,கர்மப,ஹிஷ்க்ருதா: ॥"** என்கிற ஆதி,த்யபுராண ஸ்ரீவராஹபுராண வசநங்களாலும் வேத,ப,ாஹ்யலக்ஷண மென்கின்றன.

இப்படி வேத,ப,ாஹ்யலக்ஷணரான தாமஸபுருஷர்க ளாலே ஸேவ்யனுகையாலும், ஜ்ஞாநாதி,கார்யங்களாலும், தே,வதாத்வத்தாலும் ருத்,ரனுக்கு ஸக்ருத் ஸத்வகு,ண முண்டேயாகிலும் **3. "ந தத,ஸ்தி ப்ருதி,வ்யாம் வா"** என்று கு,ணத்ரயவஶ்யனுகையாலும், தமோகு,ண முண்டாகையாலும், அது தான் ப்,ரஹ்மாதி,களுக்கு முண்டேயாகிலும் அவர்களிலும் இவனுக்கு அதிஶயித் திருக்கையாலே ஆபேக்ஷிகமான தாமஸத்வவ்யப தே,ஶம் யுக்தமாகையாலும், தானும் தாமஸபுருஷனுகை யாலும், ஸாபேக்ஷத்வ ஸூசகங்களான ஜடாசர்மவஸ நாதி, ஸாத,கத,ர்மங்களோடே கூடியிருக்கையாலும் ருத்,ர னுக்கு உபாஸ்யத்வாதி,கள் கூடாது.

ஸ்ரீபுருஷஸூக்த ப்ரக்ரியையாலும், நாராயணனுடைய காரணத்வ முமுக்ஷூபாஸ்யத்வ மோக்ஷப்ரத,த்வாதி,கள் ஸித்,த,ங்கள்.

நநு; இவனுக்கு அஸாத,ாரணங்களான வஹஸ்நாயுத, நாம ஸ்ம்ருதிகளிலே அந்யதமஸங்கீர்த்தநமில்லாமை யாலும், ஈஶாநபத,ம் கிடக்கையாலும் நாராயணபர மன்றே என்னில்;

அது அநுபபந்நம்; ஸஹஸ்ரஶீர்ஷத்வாதி₃களைச் சொல்லுகையாலும், அவைதான் இவனுக்கு அஸாத₄ரண மென்னுமிடம் நாராயணாநுவாகாதி₃ ஸித்₃த₄ங்களாகையா லும், லக்ஷ்மீபதித்வலிங்க₃த்தாலும், நாராயண ப்ரதிபாத₃க ஸுபா₃லோபநிஷத்திலே 1. "புருஷ ஏவேத₃ம்" என்று புருஷஸூக்தவாக்யத்தாலே நிக₃மிக்கையாலும், அதர்வணத்திலே 2. "வைஷ்ணவ்யாம் புருஷஸூக்தம்" என்று வைஷ்ணவமஹாஶாந்தி மந்த்ரமாக விநியோகி₃க்கை யாலும், சா₂ந்தோ₃க்₃யத்திலே 3. "ஏஷா வை வைஷ்ணவீ நாம ஸம்ஹிதா" என்கையாலும், ப₄க₃வத்ஸமாராத₄நரூப கர்மாதி₃களிலே பேௗர்த₃ாயநப்ரப்₄ருதி பரமர்ஷிகளாலே விநியுக்தங்களாகையாலும், 4. "புருஷஸ்ய ஹரேஸ் ஸூக் தம் ஸ்வர்க்₃யம் த₄ந்யம் யஶஸ்கரம்" என்கிற ஶௌநக வாக்யத்தாலும், பலவிடங்களிலும் புருஷஶப்₃த₃ப்ரயோக₃ம் பண்ணுகையாலும், 5. "புருஷம் நாராயணம்" என்கிற ஸமாக்₃யையாலும் நாராயணபரமென்னுமிடம் ஸித்₃த₄ம்.

இவ்விடத்தில் சஶாநஶப்₃த₃ம் நாராயணஶப்₃த₃ம் போலே ஸம்ஜ்ஞையல்ல; 6. "அம்ருதத்வஸ்யேஶாந:" என்கையாலே. புருஷஶப்₃த₃ம் இவன்பக்கலிலே ரூட₄ம். சேதநஸாமாந்யவாசியாகிற அவ்வளவால் ப்ரயுக்தமாகிற தன்று; ஸால பாத₃பாதி₃ஶப்₃த₃ங்கள்போலே ஸாமாந்ய விஶேஷவாசியாயிருக்கும். முண்ட₃கோபநிஷத்து தொடக்க மான பல உபநிஷத்துக்களாலும், 7. "புருஷ: புண்ட₃ரீகாக்ஷ:" 8. "த்₃விர்த்₃வாத₃ஶேப்₄யஸ் தத்த்வேப்₄ய: க்₂யாதோऽயம் பஞ்சவிம்ஶக:। புருஷோ வாஸுதே₃வஶ்ச பரமாத்மேதி சோச்யதே॥" 9. "வித்₃யாத்து புருஷம் பரம்" இத்யாத்₃யுபப்₃ரும்ஹணங்களாலும், 10. "அத₂ாதோ மஹா புருஷஸ்யாஹரஹ: பரிசர்யாவிதி₄ம் வ்யாக்₂யாஸ்யாம:" என்கிற போ₃தா₄யந வசநத்தாலும், 11. "பரம: புமாநிவ பதி: பத்₃ய:" என்கிற அர்வாசீந ப்ரஸித்₃தி₄யாலும் புருஷ ஶப்₃த₃ம் நாராயணபரமென்னுமிடம் ஸித்₃த₄ம்.

1. "தத்புருஷாய வித்,மஹே மஹாதே,வாய தீ,மஹி" 2. "புருஷோ வை ருத்,ர:" இத்யாதி, ப்ரதே,ஶங்களிலே ருத்,ரனையும் புருஷஶப்,த,த்தாலே சொல்லாநின்றதே யென்னில்; அவ்வோவிடங்களில் நாமதயா ப்ரயுக்தமாகிற தன்று, நமஸ்கார்யத்வஹேதுவான பரமாத்மப்ரகாரத்வமடியாக வந்த த்ரிபுரத,ஹந பராக்ரமாதி,கு,ணயோக,ம் தொடக்கமானவற்றாலே ப்ரயுக்தமாகிறதித்தனை.

ஆக, இப்படி பரத்வசிஹ்நங்களான ஜக,த்காரணத்வ முமுக்ஷூபாஸ்யத்வ மோக்ஷப்ரத,த்வங்களுள்ளது இவனுக்கே யாகையாலும், 3. "ஸர்வே வேதா,ஸ யத்பத,மாமநந்தி" 4. "ஸர்வே வேதா,ஸ யத்ரைகம் ப,வந்தி" 5. "வசஸாம் வாச்யமுத்தமம்" 6. "யஶ்ச,ந்த,ஸாம் ருஷபோ,ஸ விஶ்வ ரூப:" என்று வேத,ந்தானே 'தனக்கு ப்ரதிபாத்,யன் நாராயணன்' என்கையாலும், 7. "வேதை,ஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்,ய:" என்று 'நானே வேத,ப்ரதிபாத்,யன்' என்று அவன் தானே சொல்லுகையாலும், 8. "நாராயண பரா வேதா,:" 9. "வேதே, ராமாயணே புண்யே பா,ரதே ப,ரதர்ஷப,। ஆதௌ,ச மத்,யே சாந்தே ச விஷ்ணுஸ்ஸர்வத்ர கீ,யதே ||" 10. "ஏதமேகே வத,ந்த்யக்,நிம் மருதோऽந்யே ப்ரஜாபதிம்। இந்த்,ரமேகே பரே ப்ராணம் அபரே ப்,ரஹ்ம ஶாஶ்வதம் ||" என்று இங்ஙனே ரிஷிகளும் சொல்லுகையாலும், 11. "ஆலோட்,ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந:புந:। இத,மேகம் ஸுநிஷ்பந்நம் த்,யேயோ நாராயணஸ் ஸதா,॥" 12. "தத்த்வம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபி,ஸ் ஸர்வதோமுகை,:। தத்த்வமேகோ மஹாயோகீ, ஹரிர் நாராயண: பர: ||" 13. "ஶ்ரூயதாம் து நரவ்யாக்,ர வேத,வேதா,ந்த நிஶ்சய:। யஜ்ஞேஶோ யஜ்ஞபுருஷ: புண்ட,ரீகாக்ஷஸம்ஜ்ஞித:। யஸ்ஸ விஷ்ணு: பரம் ப்,ரஹ்ம யதோ நாவர்த்ததே புந: ||" 14. "விஷ்ணுரேவ பரம் ப்,ரஹ்ம த்ரிவேத,மிஹ பட்,யதே। வேத,வித்,த,ந்தமார்க்கே,ஷு தந் ந ஜாநந்தி மோஹிதா: ||" 15. "யதே,தத் பரமம் ப்,ரஹ்ம

**வேத,ஶாஸ்த்ரேஷு பட்,யதே। ஸ தே,வ: புண்ட,ரீகாக்ஷ: ஸ்வயம் நாராயண: பர:॥"** 1. **"ப,க,வாந் வாஸு தே,வஶ்ச கீர்த்யதேऽத்ர ஸநாதந:। ஸ ஹி ஸத்யம் ருதஞ்சைவ பவித்ரம் புண்யமேவ ச॥"** என்று ப்ரமாண தர்க்கங்களையிட்டு ஆராய்ந்தவர்கள் இவனையே பரதத்வ மென்று நிர்வஹிக்கையாலும், அவற்றையொழியவே, 'ப்,ரஹ்மவிஷ்ணுஶிவர்கள் மூவரிலும் அதி,கர் ஆரோவென்று ராய்ந்து வா' என்று ப்,ருகு,வைப் போகவிட்டுப் பரீக்ஷித்து, 2. **"தந்நிஶம்யாத, முநயோ விஸ்மிதா முக்தஸம்ஶயா:। பூ,யாம்ஸம் ஶ்ரத்,த,து,ர் விஷ்ணும் யதஶ்ஶாந்திர் யதோऽப,யம்॥"** என்று ஶாந்த்யாதி, கு,ணயோக,த்தாலே இவனையே அதி,கனென்று நிர்ணயிக்கையாலும், 3. **"ஜ்ரும்பி,தம் தத்,த,நுர்த்,ருஷ்ட்வா ஶைவம் விஷ்ணுபராக்ரமை:। அதி,கம் மேநிரே விஷ்ணும் தே,வாஸ்ஸர்ஷிக,ணாஸ்தத,ா॥"** என்று தே,வர்கள் பரீக்ஷித்து நிர்ணயித்தபடியே, பா,ர்க்க,வன் சொல்லுகையாலும், அவன்தான் ருத்,ரன் பக்கலிலே செல்ல, அவன் த்,யாநபரனாயிருக்க, 'நீ ஆரை த்,யாநம் பண்ணுகிறது' என்று அவனைக் கேட்க, 4. **"யோகீ,ஶ்வரம் ஜக,ந்நாத,ம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஸநாதநம்। பத்,ம நாப,ம் விஶாலாக்ஷம் சிந்தயாமி ஜக,த்பதிம்॥"** என்று ஜக,த்பதியான ஸ்ரீமஹாவிஷ்ணுவை த்,யாநம் பண்ணுகிறே னென்று சொல்லுகையாலும், 5. **"ந ஹ்யேதஸ்மாதி,தி நேத்யந்யத் பரமஸ்தி"** 6. **"ந தஸ்யேஶே கஶ்சந"** 7. **"ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம்"** 8. **"நாராயணாத் பரோ தே,வோ ந பூ,தோ ந ப,விஷ்யதி। ஏதத், ரஹஸ்யம் வேத,ாநாம் புராணாநாஞ்ச (ஸம்மதம்) ஸத்தம॥"** 9. **"ந ப்ரமாதும் மஹாப,ாஹு:(யோகீ,) ஶக்யோ ப,ாரத கேஶவ:। பரமேப,ய: பரம் தஸ்மாத், விஶ்வரூபாந்ந வித்,யதே॥"** என்று இவனிற்காட்டில் பரராயிருப்பாரில்லையென்கை யாலும் இவனே ஸர்வஸ்மாத்பரன்.

1-வது பரஸ்வரூபநிர்ணயப்ரகரணம் முற்றிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## 2-வது ஜீவஸ்வரூபநிர்ணய ப்ரகரணம்

இவனுக்கு ஸர்வாத்மாக்களும் ஸர்வப்ரகாரபரதந்த்ரர்; அவர்கள்தான் தேஹாதிவிலக்ஷணர்.

### சார்வாகமதோபந்யாஸம்

நநு; 1. "ஸ்தூலோஹம், க்ருஶோஹம்" என்று தேஹத்திலே அஹம்புத்திவ்யவஹாரம் காண்கையாலே, அஹமர்த்தபூதனான ஆத்மா தேஹந்தானுமித்தனே. இந்த அஹம்புத்திவ்யவஹாரங்களுக்கு தேஹாதிரிக்தன் விஷயமென்னவொண்ணாது; அவனுக்கு ஸ்தௌல்யாதிகள் கூடாமையாலே. கடபடாதிகளைப்போலே, பார்த்திவமான ஶரீரத்துக்குச் சைதந்யம் கூடாதே என்னில்; மதஶக்தி போலே பரிணாமவிஶேஷத்தாலே கூடுமிறே. நநு, பால யுவ வ்ருத்த ஶரீரங்கள் அந்யோந்யம் பிந்நங்களென்று சொல்லவேணும்; ஏகமாகில் பரிணாமபேதங்கள் கூடாது; பேதத்தை இசையில், பால்யத்தில் அநுபவித்தவற்றை யௌவநத்திலே ஸ்மரிக்கக்கூடாது; கூடில், ஒருவன் அநுபவித்ததை மற்றையவன் ஸ்மரிக்கவேணும், அது காண்கிறிலோம். இங்கு ஸ்ம்ருதி காணாநின்றோம்; ஆகையாலே ஆத்மா தேஹாதிரிக்தனாகவேணுமென்னில், அதுவும் அநுபபந்நம். ஶரீரபேதமில்லாமையாலே; ஒருவன் தனக்கே காலபேதத்தாலே பரிணாமபேதம் கூடும்; 'பால்யத்தில் து:க்கித்த நானே யௌவநத்தில் ஸுகியாநின்றேன்' 'பாலனான நானே யுவாவானேன்' என்கிற ப்ரத்யபிஜ்ஞைகளாலே யுவஶரீரம் பழைய ஶரீரம் என்னுமிடம் ஸித்தம்; அல்லாதபோது, பால்யத்தில் அநுபவித்தத்தை யௌவநத்தில் ஸ்மரிக்கக்கூடாது. ஸ்ம்ருதி ப்ரத்யபிஜ்ஞைகள் அஹமர்த்தத்துக்கன்றோ, தேஹத்துக்கன்றே என்னவொண்ணாது; தேஹவ்யதிரிக்தமாயிருப்பதொரு அஹமர்த்தம் காணாமையாலே. கிஞ்ச, தேஹத்திலே நெடுங்காலம் செல்லச்செய்தேயும் 'ஸ ஏவாயம்' என்று பரனுக்குப் பிறக்கும் ப்ரத்யபிஜ்ஞையும் கூடாது. ப்ரத்ய

பி3ஜ்ஞைகளுக்கு விஷயம் தே3ஹாதிரிக்தனென்னவொண்ணாது, அவன் சாக்ஷுஷனல்லாமையாலே. ப்ரத்யபி3ஜ்ஞை ப்4ராந்தியென்னவொண்ணாது, பா3த4கமில்லாமையாலும், விபக்ஷ ஸ்மரணாநுபபத்தியாகிற பா3த4கமுண்டாகையாலும்; இப்படி தே3ஹத்தில் அஹம்பு3த்3தி4 கொள்ளாதபோது-விதி4நிஷேத4மும், அதினுடைய நிவ்ருத்த்யர்த்த2மான ஶாஸ்த்ர ஶ்ரவணாதி3களும் கூடாது. ஆகையாலே தே3ஹமே ஆத்மாவாமித்தனையென்னில்;—

**தத்க2ண்ட3நம்**

அது அநுபபந்நம். தே3ஹம் அநேகாவயவஸங்கா4தாத்மகமென்னுமிடம் ஸித்3த4ம். அதில் எல்லா அவயவங்களுக்கும் சைதந்யமுண்டாகில் அநேக சேதநோபலப்3தி4 ப்ரஸங்கி3க்கும். அவயவங்களுக்கு அந்யோந்யம் அவிவாத3 நியமமும், அவற்றில் மமதாபு3த்3தி4யும், மமதா வ்யவஹாரமும் கூடாது. ஒரு அவயவத்துக்கே சைதந்யங்கொள்ளில், அது விச்சி2ந்நமானால் அவயவாந்தரம் அது அநுப4வித்தத்தை (அவயவாந்தரத்தாலே) ஸ்மரிக்கக்கூடாது. பின்பு அஹம்பு3த்3தி4 வ்யவஹாரங்களும் மமதாபு3த்3தி4 வ்யவஹாரங்களும் தவிரவேணும். ஸர்வஶரீரவ்யாபியான ஸுக2து3:க்கா2நுப4வமும் கூடாது. 'அவயவஸங்கா4தாத்மகமன்று ஶரீரம், அவயவி, அதிலே சைதந்யம்' என்னவுமொண்ணாது; உபலம்பா4நுபபத்திகளில்லாமையாலே அவயவிஸ்வீகாரம் அநுபபந்நமாகையாலே. கிஞ்ச

1. **"பா3லதே3ஹோऽஹம் மந்த3ஜ்ஞாந:, யுவதே3ஹோऽஹம் ப3ஹுஜ்ஞாந:, மம ஶரீரம்"** என்று-ஶரீராஹமர்த்த2ங்களில் பிறக்கிற பே4த3ப்ரதிபத்தியும், பே4த3வ்யவஹாரமுங்கூடாது.

2. **"மமாயமாத்மா"** என்கிறவிடத்திற்போலே அமுக்2யமென்னவொண்ணாது; முக்2யே பா3த4கமில்லாமையாலே. அன்றிக்கே, அஹம்பு3த்3தி4க்கு ஶரீரமே விஷயமென்று கொண்டாலும் ஶ்ருதியாலும், ஶ்ருத்யர்த்தா2பத்திகளாலும் தே3ஹாதிரிக்தனாய் தே3ஹாந்தரபரிக்3ரஹயோக்3யனான ஆத்மா ஸித்3த4ன்.

பா₃ஹ்யேந்த்₃ரியங்களும் ஆத்மாவாகமாட்டாது; ஒருவனே ஸர்வேந்த்₃ரியவிஷயங்களையும் அறிகையாலே. இப்படி கொள்ளாதபோது, 'யாவனொருவன் நான் இவ்வர்த்த₂த்தைக் கண்டேன், அந்த நானே ஸ்பர்ஶியாநின்றேன்' என்கிற ப்ரதிஸந்த₄ாநமுங்கூடாது. சக்ஷுஸ்ஸே ஆத்மாவாகில், அந்த₄ன் ரூபத்தை ஸ்மரியாதொழியவேணும். ஶ்ரோத்ரமே ஆத்மாவாகில், ப₃தி₄ரன் ஶப்₃த₃த்தை ஸ்மரியாதொழியவேணும். இப்படி மற்ற இந்த்₃ரியங்களிலும் கண்டுகொள்வது.

## ஶங்கரமதக₂ண்ட₃நம்

அந்த:கரணமும் ஆத்மாவாகமாட்டாது. ஸ்மர்த்தாவினுடைய ஸ்மரணாதி₃கார்யங்களுக்குக் கரணமாகக் கல்பிதங்களாகையால். இதுதானே ஸ்மரிக்கிறதென்னவொண்ணாது, ஸ்மரணத்துக்குக் கரணமில்லாமையாலே. கரணமும் தானே என்னவொண்ணாது, விருத்₃த₄மாகையாலே. வேறேயொன்று கரணமென்னில், அது பா₃ஹ்யகரணமாகில் அதில்லாதவனுக்கு ஸ்ம்ருதி கூடாது. ஆந்தரகரணமாகில் ஆத்மாவுக்கு மநஸ்ஸென்று பேரிட்டதாய்விடும். ஆந்தரகரணம் அநபேக்ஷிதமாகில் இந்த்₃ரியார்த்த₂ஸம்ப₃ந்த₄முண்டானபோதெல்லாம் ஜ்ஞாநம் பிறக்கவேணும். ஆகையால் மநஸ்ஸும் ஆத்மாவாகமாட்டாது.

ப்ராணன்களும் ஆத்மாவாகமாட்டாது, ஸங்க₄ாதரூபங்களாகையாலே. தே₃ஹம் ஆத்மாவென்கிற பக்ஷத்துக்குச் சொன்ன தூ₃ஷணங்கள் இங்கும் துல்யம்.

## பௌ₃த்₃த₄மதக₂ண்ட₃நம்

ஜ்ஞாநமும் ஆத்மாவாகமாட்டாது. 'எனக்கு ஜ்ஞாநம் பிறந்தது, நஶித்தது' என்று க்ஷணிகமுமாய் ஆத்மத₄ர்மமுமாய்த் தோற்றுகையாலே.

ஸ்தி₂ரனாயிருப்பான் ஒரு ஆத்மாவுண்டு என்னுமிடம் 'நேற்றுக்கண்ட நானே இன்றும் காணுகின்றேன்' என்கிற ப்ரத்யபி₄ஜ்ஞையாலே ஸித்₃த₄ம்.

## இதுவும் ஶங்கரமதக₂ண்ட₃நம்

நிர்விஷயையுமாய் நிராஶ்ரயையுமான ஸம்வித்து ஆத்மாவென்னவொண்ணாது, அப்படி இருப்பதொரு ஸம்வித்துக்காணாமையாலே. நநு; 'ஜ்ஞாநம் ஆத்மத₄ர்ம மாயன்று தோற்றுகிறது, அந்த:கரணரூபமான அஹங் காரத்துக்கு த₄ர்மமாயன்றோ தோற்றுகிறது' என்ன வொண்ணாது; அசேதநமுமாய், ப்ரக்ருதிபரிணாமமுமாய், த்₃ருஶ்யமுமாய், பராக₃ர்த்த₂முமாய், பரார்த்த₂முமாயிருக்கை யாலே தே₃ஹாதி₃களைப்போலே அஹங்காரமும் ஜ்ஞாதா வாகக் கூடாமையாலே. நநு, 'சைதந்ய ஸந்நிதி₄யடியாக சா₂யாபத்தியாலே ஜ்ஞாத்ருத்வம் கூடுமே' என்னில், அது கூடாது. சைதந்யத்துக்கு ஜ்ஞாத்ருத்வம் கூடாமையாலே. நநுச 'த₃ர்ப்பண ஜல க₂ண்ட₃ங்கள் முக₂ சந்த்₃ர கே₂ாத்வங்க ளுக்கு வ்யஞ்ஜகமாகிருப்போலே அஹங்காரமும் சைதந்யத் துக்கு வ்யஞ்ஜகமாகையாலே தந்நிஷ்ட₂மாய்த்தோற்றுகிறது' என்னில், ஸ்வயம்ப்ரகாஶகனான ஆத்மாவுக்கு ஜட₃மான அஹங்காரம் வ்யஞ்ஜகமாகை என்கிறது, ஶாந்தாங்க₃ாரம் ஆதி₃த்யனை ப்ரகாஶிப்பிக்கும் என்றாற்போலேயிருப்ப தொன்று. த₃ர்ப்பணமும் ஜலமும் முக₂த்துக்கும், சந்த்₃ர னுக்கும் வ்யஞ்ஜகமன்று; சாக்ஷுஷதேஜ: ப்ரதிப₂லநத்துக்கு ஹேதுவித்தனை. அபி₄வ்யஞ்ஜகம் ஆலோகாதி₃கள்போலே. ஜாதி வ்யக்திநிஷ்டை₂யாய்த் தோற்றுகிறது வ்யக்திக்கு ஆகாரமாகையாலே. கிஞ்ச, சைதந்யத்தாலே வ்யங்க்₃ய மான அஹங்காரம் அதுக்கு வ்யஞ்ஜகமாகமாட்டாது. ஆதி₃த்யகிரணத்தாலே அபி₄வ்யங்க்₃யமான கரதலம் அதுக்கு வ்யஞ்ஜகமாகக் காணாநின்றோமென்னில்; கரதலம் வ்யஞ்ஜக மல்ல, கிரணப₃ாஹுள்யத்துக்கு ஹேதுவித்தனை. ஸுஷுப்தியிலும் முக்தித₃ஶையிலும் அஹமர்த்த₂மில்லாமை

யாலும் அதுவும் ஆத்மாவாகமாட்டாதென்னில்; அவற்றிலுமுண்டு. ஸுஷுப்தியில் இல்லையாகில், உறங்கியெழுந்திருந்திருந்தவன், 'முன்பு நானித்தைச் செய்தேன். இத்தைக் கண்டேன், இத்தை அநுப₄வித்தேன்' என்று பராமர்ஶிக்கக்கூடாது. முக்தித₃ஶையில் ஆத்மா இல்லையாகில், ஆத்மநாஶம் மோக்ஷமாய்விடும். ஸ்வநாஶத்தையும் இசைந்து மோக்ஷோபாயத்தில் இழிவாரில்லாமையாலே மோக்ஷஶாஸ்த்ரம் அப்ரமாணமாம். **1. "மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம்" 2. "அஹமேக: ப்ரத₂மமாஸம்" 3. "அஹம் மநுரப₄வம் ஸூர்யஶ்ச"** என்று தத்த்வஜ்ஞாநம்பிறந்த முமுக்ஷுக்களும், **4. "அஹமந்நம்"** என்று முக்தனும், **5. "யஸ்மாத் க்ஷரமதீதோஹம்" 6. "அஹமாத்மா கு₃டா₃கேஶ" 7. "ந த்வேவாஹம்" 8. "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த:"** என்று பரப்₃ரஹ்மமும் அஹமென்று வ்யபதே₃ஶிக்கக்கூடாது. அஹமர்த்த₂ம் ஆத்மாவாகில், **9. "மஹாபூ₄தாந்யஹங்கார:"** என்று க்ஷேத்ராந்தர்பா₄வம் கூடும்படியென்னென்னில், அஹங்காரத்தையாய்த்து அங்குச் சொல்லுகிறது; அஹமர்த்த₂த்தையன்று. அஹங்காரத்தை ஶாஸ்த்ரங்களிலே ஹேயமாகச் சொல்லாநின்றதே யென்னில்; அங்குச் சொல்லுகிறது க₃ர்வரூபமான அஹங்காரத்தையாகையாலே, அஹமர்த்த₂ம் அஹங்காரமல்ல; ஆத்மாவேயாகையால்.

## ஆத்மநித்யத்வஸமர்த்த₂நம்

ஆத்மா தே₃ஹாதி₃விலக்ஷணம், அவைபோலே அநித்யனல்லன். **10. "ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித்" 11. "நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம் ஏகோ ப₃ஹூநாம் யோ வித₃த₄ாதி காமாந்" 12. "அஜோ நித்யஶ்ஶாஶ்வதோऽயம் புராண:"** என்று உத்பத்திவிநாஶங்களில்லை என்கையால். நநு, **13. "ப்ரஜாபதி: ப்ரஜா அஸ்ருஜத" 14. "ஸந்மூலாஸ்ஸோம்யேமாஸ்ஸர்வா: ப்ரஜா: ஸதா₃யதநாஸ்ஸத்ப்ரதிஷ்டா₂:" 15. "யதோ வா இமாநி**

**பூ₄தாநி ஜாயந்தே"** 1. **"யத꞉ ப்ரஸூதா ஜக₃த꞉ ப்ரஸூதீ தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூ₄ம்யாம்"** என்று உத்பத்தி விநாஶங்களைச் சொல்லாநின்றதேயென்னில்; அவற்றில் சொல்லுகிறது தே₃ஹஸம்ப₃ந்த₄த்தையும், தே₃ஹவியோக₃த்தையும். நித்யனாகில் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஏகத்வாவதா₄ரணங் கூடாதே என்னில்; ஏகத்வமாவது நாமரூபவிப₄ாக₃ாப₄ாவமாகையாலே கூடும். ஸம்ஹாரத₃ஶையில் ஆத்மா இல்லையாகில் ஈஶ்வரனுக்கு உபாத₃ாநத்வம் கூடாது. அக்ருதாப்₄யாக₃ம க்ருதவிப்ரணாஶங்களும் வரும். ஆகையால் ஆத்மா நித்யன்.

### ஏகரூபத்வஸமர்த்த₂ம்

2. **"அம்ருதாக்ஷரம் ஹர꞉"** 3. **"ஆத்மா ஶாந்தோ₃தே₃ாऽக்ஷர꞉"** 4. **"ஏகம் ஸதே₃கம்"** என்கையாலும், அவைபோலே உபசயாபசயங்களுக்கு அர்ஹனன்றிக்கே ஏகரூபனாயிருக்கும்.

### ஜைநமதக₂ண்ட₃நம்

தே₃ஹபரிமாணனென்கிற பக்ஷம் ஆத்மா நிர்விகாரனென்கிற ஶ்ருதியாலே பா₃தி₄தம். 'ஸ்தூ₂லோऽஹம், க்ருஶோऽஹம், பாதே₃ மே வேத₃நா, ஶிரஸி மே ஸுக₂ம்' என்கிற ப்ரதிபத்தியும் கூடாதேயென்னில்; அது தே₃ஹாத்மப்₄ரமத்தாலே கூடும். ஏககாலத்தில் அநேக ஶரீரபரிக்₃ரஹம் பண்ணுகிற யோகி₃களுடைய ஸ்வரூபத்துக்கு ஶைதி₂ல்யமும் ப்ரஸங்கி₃க்கும்.

### அஜட₃த்வஸமர்த்த₂ம்

இவன் ஸ்வரூபம் அவைபோலே ஜட₃மன்றிக்கே, 5. **"ஹ்ருத்₃யந்தர்ஜ்யோதி꞉ புருஷ꞉"** 6. **"அத்ராயம் புருஷஸ் ஸ்வயஞ்ஜ்யோதிர்ப₄வதி"** 7. **"விஜ்ஞாதக₄ந꞉"** 8. **"தச்ச ஜ்ஞாநமயம் வ்யாபி ஸ்வஸம்வேத்₃யமநூபமம்"** 9. **"ஆத்மா ஜ்ஞாநமய꞉"** 10. **"ஆத்மஸம்வேத்₃யம் தஜ்ஜ்ஞாநம்"** என்கிறபடியே ஸ்வயம்ப்ரகாஶமாயிருக்கும். ஸ்வயம்ப்ரகாஶ

மாகையாகிறது - ஜ்ஞாநத்தையொழியவும் தானே தோற்றுகை. நநு; ஸ்வரூபமும் நித்யமுமாய்த் தானே தோற்றமாகில் ஸுஷுப்தியிலும் தோற்றவேண்டாவோ? என்னில்; அப்போது தோற்றுதாகில் உணர்ந்தபோது, 'இத்தனை போதும் ஸுக₂மாக உறங்கினேன்' என்னக் கூடாது. நநு; 'நானென்றையும் அறிந்திலேன்' என்னும்படி யென்னென்னில்; அறிந்திலேன் என்கிறது என்னையொழிந்தவற்றை அறிந்திலேன் என்றபடி. 'நானென்னையும் அறிந்திலேன்' என்றுலோவென்னில்; என்னையுமறிந்திலேன் என்கிறது ஶரீரவிஶிஷ்டனான என்னையுமறிந்திலேன் என்றபடி. ஸ்வரூபம் ப்ரகாஶித்ததில்லையாகில் நானென்னக் கூடாது. 1. **"அயமஹமஸ்மி"** என்று இவ்வர்த்த₂த்தை ஶ்ருதியும் சொல்லிற்று. அப்போது, விஶத₃மாகத் தோற்றுதொழிகிறது - தமோகு₃ண ப்ரு₄ப₄வத்தாலே.

### ஆநந்த₃ரூபத்வஸமர்த்த₂நம்

ப்ரகாஶந்தான் அநுகூலமாயிருக்கும். 'ஸுக₂மாக உறங்கினேன்' என்கிற ப்ரத்யபி₄ஜ்ஞைதானே இதில் ப்ரமாணம். 'இப்போது ஸுக₂ம் பிறக்கும்படி உறங்கினேன்' என்றன்றோ 'ஸுக₂மாகவுறங்கினேன்' என்கிற இதுக்குப் பொருளென்னவொண்ணாது; ப்ரதிபத்திஶரீரம் அப்படியன்றிக்கே 'இனிதாகப் பாடினேன்' என்கிறுப்போலேயிருக்கையாலே. ஸ்வரூபம் அநுகூலமன்றாகில் ப்ரேமாஸ்பத₃த்வம் கூடாது. 2. **"ஆஶ்சர்யவத் பஶ்யதி கஶ்சிதே₃நம்"** இத்யாதி₃களாலும் இவ்வர்த்த₂ம் ஸித்₃த₄மாகையாலே, 3. **"ஆர்த்₃ரம் ஜ்வலதி ஜ்யோதிரஹமஸ்மி"** என்கிறபடியே ஆத்மா ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபனாயிருக்கும்.

### ஜ்ஞாத்ருத்வஸமர்த்த₂ம்

அவ்வளவுமன்றிக்கே, ஜ்ஞாநாநந்த₃ங்களுக்கு ஆஶ்ரயமுமாயிருக்கும். 4. **"அத₂ யோ வேதே₃த₃ம் ஜிக்₄ராணீதி ஸ ஆத்மா மநஸைவைதாந் காமாந் பஶ்யந் ரமதே"**

**1. "ந பஶ்யோ ம்ருத்யும் பஶ்யதி" 2. "விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்" 3. "ஜாநாத்யேவாயம் புருஷ:" 4."ஏஷ ஹி த்₃ரஷ்டா ஸ்ப்ரஷ்டா ஶ்ரோதா க்₄ராதா ரஸயிதா மந்தா போ₃த்₃த₄ா கர்த்தா விஜ்ஞாநாத்மா புருஷ:" 5. "ஏவ மேவாஸ்ய பரித்₃ரஷ்டு:"** இத்யாதி₃ஶ்ருதியாலும், 'இவ் வர்த்த₂த்தை நான் அறியாநின்றேன்' என்கிற ப்ரத்யக்ஷத் தாலும் ஜ்ஞாதாவென்னுமிடம் ஸித்₃த₄ம். இப்ப்ரத்யக்ஷந் தன்னை, **6. "ஜாநாத்யேவாயம் புருஷ:"** என்று ஶ்ருதியும் சொல்லிற்று.

### பௌ₃த்₃த₄மத க₂ண்ட₃நம்

'ஜ்ஞாநமாத்ரம் ஆத்மா, அதுதான் க்ஷணிகம்' என்னும் பக்ஷத்தில் 'நேற்றுக்கண்ட அர்த்த₂த்தை இன்று காணு நின்றேன்' என்கிறவிது கூடாது; நேற்றை ஜ்ஞாநம் என் றுமின்றில்லாமையால். அது அநித்யமென்கிற பக்ஷமும், அப்படி இருப்பதொரு ஜ்ஞாநம் காணாமையாலே நிரஸ்தம். கிஞ்ச, ஜ்ஞாநமாத்ரமே ஆத்மாவாகில் தே₃ஹாத்மப்₄ரமங் கூடாது; தே₃ஹத்தை ஜ்ஞாதாவாக ப்₄ரமிக்கையால்.

### த₄ர்மபூ₄தஜ்ஞாநநித்யத்வஸமர்த்த₂நம்

**7."ந ஹி த்₃ரஷ்டுர் த்₃ருஷ்டேர் விபரிலோபோ வித்₃யதே। ந ஹி விஜ்ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்₃யதே॥" 8. "யதோ₂த₃பாநகரணாத் க்ரியதே ந ஜலாம்ப₃ரம்। ஸதே₃வ நீயதே வ்யக்திமஸதஸ் ஸம்ப₄வ: குத:॥ ததா₂ ஹேய கு₃ணத்₄வம்ஸாத₃வபோ₃த₄ாத₃யோ கு₃ணா:। ப்ரகாஶ்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே॥" 9. "ஜ்ஞாநம் வைராக்₃யமைஶ்வர்யம் த₄ர்மஶ்ச மநுஜேஶ்வர। ஆத்மநோ ப்₃ரஹ்மபூ₄தஸ்ய நித்யமேதச்சதுஷ்டயம்"** என்கிறபடியே ஜ்ஞாத்ருத்வம் நித்யம். ஆனால், உத்பத்திவிநாஶங்கள் உண் டென்று சொன்னபடியென்னென்னில்; **10. "ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி" 11. "ஸ சாநந்த்யாய கல்பதே"** என்று முக்தித₃ஶையில் ஸர்வவிஷயமாகச் சொல்லுகையாலே ஸர் வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கைக்கு யோக்₃யமாயிருக்கச்செய்

தேயும் **1. "யயா க்ஷேத்ரஜ்ஞஶக்திஸ்ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வக₃ா"** என்கிறபடியே - கர்மத்தாலே ஸங்குசிதமாய், **2. "தயா திரோஹிதத்வாச்ச ஶக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா। ஸர்வபூ₄தேஷு பூ₄பால தாரதம்யேந வர்த்ததே ॥ அப்ராணி மத்ஸு ஸ்வல்பா ஸா ஸ்தா₂வரேஷு ததோऽதி₄கா॥"** என்கிற படியே - கர்மாநுகு₃ணமாகத் தாரதம்யத்தையுடைத்தாய்க் கொண்டு **3. "இந்த்₃ரியாணாம் ஹி சரதாம் யத்₃யேகம் க்ஷரதீந்த்₃ரியம்। தேநாஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞா த்₃ருதே: பாத₃ாதி₃வோத₃கம் ॥"** என்கிறபடியே இந்த்₃ரியத்₃வாரா புறப்பட்டு விஷயங்களை க்₃ரஹிக்கக்கடவதாயிருக்குமாகை யாலே ப்ரஸரணாதி₃யையிட்டு உத்பத்திவிநாஶம் சொல்லு கிறது. ஏகமாயிருக்கச்செய்தே அநேகமாய்த்தோற்று கிறது அத்தாலே.

### த₄ர்மபூ₄தஜ்ஞாநஸ்ய த்₃ரவ்யத்வஸமர்த₂நம்

இதுதான் அஜட₃முமாய் ஸங்கோச விகாஸங்களுக்கும் ஸம்யோக₃வியோகா₃தி₃களுக்கும் ஆஶ்ரயமுமாயிருக்கை யாலே த்₃ரவ்யம்; ஜ்ஞாநம் - நித்யமுமாய், அஜட₃முமா யிருக்குமாகில் ஸுஷுப்தியில் தோற்றவேண்டாவோ வென்னில்; அப்போது தோன்றுதொழிகிறது திரோ ஹிதங்களான மணிப்ரகாஶாதி₃களைப்போலே ப்ரஸரண மில்லாமையாலே.

### த₄ர்மபூ₄தஜ்ஞாநஸ்யாநந்த₃த்வஸமர்த₂நம்

ஸர்வமும் ப₄க₃வதா₃த்மகமாகையாலே அநுகூலமாய்க் கொண்டு தோற்றுகையாலே இதுதான் ஆநந்த₃ரூபமா யிருக்கும். நநு; ஆனால் இப்போது விஷஶஸ்த்ராதி₃கள்- ப்ரதிகூலங்களாயும், சந்த₃நகுஸுமாதி₃கள் - அநுகூலங்க ளாயும், காஷ்ட₂லோஷ்டாதி₃கள் - உபேக்ஷாவிஷயங்க ளாயும், இவை தான் ஸ்வதந்த்ரங்களாய்க்கொண்டு தோற்றுவானென்னென்னில்; கர்மதே₃ஹாத்மாபி₄மாநங்க ளாலே அப்படி தோற்றுகிறதித்தனை. ஸ்வப₄ாவமாயன்று.

ஸ்வப,ாவமாகில், ஒருகால் அநுகூலங்களான சந்த,ந குஸுமாதி,கள் காலாந்தரத்திலே ப்ரதிகூலங்களாகத் தோற்றக்கூடாது. 1, **"வஸ்த்வேகமேவ து,:க்க,ாய ஸுக,ா யேர்ஷ்யாக,மாய ச। கோபாய ச யதஸ்தஸ்மாத்,வஸ்து வஸ்த்வாத்மகம் குத:॥ ததே,வ ப்ரீதயே பூ,த்வா புநர்து,:க்க,ாய ஜாயதே, ததே,வ கோபாய யத: ப்ரஸாத,ாய ச ஜாயதே। தஸ்மாத், து,:க்க,ாத்மகம் நாஸ்தி ந ச கிஞ்சித் ஸுக,ாத்மகம்॥"** என்று ருஷியும் அருளிச்செய்தான். ஆகையால் ஜ்ஞாநத்துக்கு ஆநந்த,த்வமே ஸ்வப,ாவம். இப்படிப்பட்ட ஜ்ஞாநத்தையுடையனுகை ஆநந்தி,யாகிறது.

## புநரபி ஜீவாத்மநோ ஜ்ஞாத்ருத்வஸமர்த்த,நம்

இப்படி ஆத்மா ஜ்ஞாதாவாகில், 2. **"யோ விஜ்ஞாநே திஷ்ட,ந்"** 3. **"விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே"** என்று ஜ்ஞாந ஶப்,த,த்தாலே சொல்லுவானென்னென்னில்; ஜ்ஞாநைக நிருபணீயமுமாய் ஸ்வயம்ப்ரகாஶமுமாகையாலே அப்படி சொல்லுகிறது. ஆகையாலே, ஜ்ஞாதாவுமாய் ஆநந்தி,யு மாயிருக்கும்.

## ஜீவாத்மந: அணுத்வஸமர்த்த,நம்

4. **"தேந ப்ரத்,யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி"** என்று உத்க்ரமணத்தைச் சொல்லுகையாலே, ஆத்மா அணுபரிமாணன். உத்க்ராந்தி என்கிறது ஶரீரவியோக,த் தளவே என்னில்; அது எப்படியானுலும், 5. **"யே வைகே சாஸ்மால்லோகாத் ப்ரயந்தி சந்த்,ரமஸமேவ தே ஸர்வே க,ச் ச,ந்தி"** 6. **"தஸ்மால் லோகாத் புநரேத்ய அஸ்மை லோகாய கர்மணே"** என்கிறபடியே - க,த்யாக,திகள் கூடாது. 7. **"ஏஷோணுராத்மா சேதஸா வேதி,தவ்ய:"** 8. **"வாலாக்,ர ஶதப,ாக,ஸ்ய ஶதத,ா கல்பிதஸ்ய ச - ப,ாகோ,ஜீவஸ்ஸ விஜ்ஞேய:"** இத்யாதி,களாலே - ஶ்ருதிதானே அணு வென்று முக்தகண்ட,மாகச் சொல்லிற்று. 9. **"ஹ்ருதி, ஹ்யயமாத்மா"** 10. **"ஹ்ருத்,யந்தர்ஜ்யோதி: புருஷ:"**

என்கையாலே. ஆத்மா அணுவாய் ஹ்ருதயப்ரதேஶத்திலே நிற்குமாகில் பாணிபாதாதிகளில் ஸுகதுஃக்காநுபவம் கூடும்படி எங்ஙனே? என்னில், ஜ்ஞாநவ்யாப்தியாலே கூடும்.

### ஆத்மபஹுத்வஸமர்த்தநம்

ஆத்மாக்கள்தான் அநேகங்கள். சிலர் 'ஆத்மபேதமில்லை, ஏகாத்மாவேயுள்ளது' என்றார்கள்; அது அயுக்தம்; ஸுகாதிவ்யவஸ்தாநுபபத்தி வருகையால்.

ஸுகதுஃக்கேச்சாத்வேஷாதிகள் நியதங்களாகையாலே தேஹபேதத்தாலேயாதல் அந்தஃகரணபேதத்தாலேயாதல் இவை நியதங்களாகின்றனவென்னில், ஸௌபரிஶரீரத்திலும் இதுவே நியதங்களாகவேணும். தேஹபேதமும் அந்தஃகரணபேதமும் ஸுகதுஃக்காதி நியமத்துக்கு ஹேதுவன்றாகில் ஜந்மாந்தராநுபவத்தை இஜ்ஜந்மத்திலே ஸ்மரிக்கவேண்டாவோ? என்னில்; ஸ்மரியாதொழிகிறது ஸம்ஸ்காரத்தினுடைய அநுத்பவத்தாலேயாதல், நாஶத்தாலேயாதல். ஆனால் ஶரீராந்தரத்தில் ஸுகதுஃக்கஸ்ம்ருத்யாதிகளின்றிக்கேயொழிகிறதும் இரண்டத்தொன்றாலே என்னில்; ஒரு ஶரீரந்தன்னிலும் ஸ்ம்ருதி கூடாதொழியவேணும். ஆகையால் ஸுகதுஃக்கநியமத்துக்கு ஹேது தேஹாதிபேதம் என்னவொண்ணாது. ஒருவனாகில் பந்தமோக்ஷவ்யவஸ்தையும் ஶிஷ்யாசார்யவ்யவஸ்தையும், விஷமஸ்ருஷ்டியும் கூடாது. வைஷம்யநைர்க்ருண்யங்களும் ப்ரஸங்கிக்கும். 1. "நித்யோ நித்யாநாம்" என்று இத்தை ஶ்ருதியும் சொல்லிற்று. 'அந்த ஶ்ருதி ஔபாதிகபேதத்தைச் சொல்லுகிறது; அல்லாதபோது, ஜீவாத்வைத ஶ்ருதிகளோடே விரோதிக்கும்' என்னவொண்ணாது; அவற்றில் சொல்லுகிறது ப்ரகாராத்வைதத்தையாகையாலே. 2. "ஸதா பஶ்யந்தி" 3. "மம ஸாதர்ம்யமாகதா:" 4. "முக்தாநாம் பரமா கதி:"

என்று மோக்ஷத,ஶையிலும் பே,த,த்தைச் சொல்லுகை யாலே பே,த,ம் ஔபாதி,கமென்னவொண்ணாது. ஆகை யால் ஆத்மாக்கள் அநேகரென்னுமிடம் ஸித்,த,ம்.

**அமலத்வகத,நம்**

1. "ஆத்மா ஶுத்,த,:" 2. "ஜ்ஞாநமயோऽமல:" 3. "ஜ்யோ திர்ஜ்வலதி" என்கிறபடியே இவர்கள்தான் பரிஶுத்,த,ர்.

**ஶேஷத்வகத,நம்**

4. "யஸ்யாஸ்மி...யோऽஹமஸ்மி" 5. "ப்,ரஹ்மாஹ மஸ்மி" 6. "தா,ஸபூ,தா:" 7. "க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே" என்கையாலே இவர்கள் ப,க,வச்சே,ஷபூ,தர். 8. "யஸ்யாத்மா ஶரீரம்" 9. "பூ: ப்ராணிந:" 10. "தத் ஸர்வம் வை ஹரேஸ்தநு:" 11. "தாநி ஸர்வாணி தத்,வபு:" 12. "அப ரேயமிதஸ்த்வந்யாம்" என்கையாலே - இந்த ஶேஷத்வந் தான் ஶரீரதயாவாயிருக்கும்.

**உக்தார்த்த,நிக,மநம்**

ஆக, இப்படி ஆத்மாக்கள் - தே,ஹேந்த்,ரியமந: ப்ராணதீ,க்களில் விலக்ஷணராய், ஸ்வயம்ப்ரகாஶராய், ஆநந்த,ரூபராய், ஜ்ஞாநாநந்த,ங்களுக்கு ஆஶ்ரயபூ,த ராய், நித்யராய், அணுக்களாய், பரிஶுத்,த,ராய், ப,க,வச் சே,ஷபூ,தராயிருப்பார்கள்.

**2-வது ஜீவஸ்வரூபநிர்ணயப்ரகரணம் ஸமாப்தம்.**

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

## 3-வது புருஷார்த்த,ஸ்வரூபநிர்ணயப்ரகரணம்

இவர்களுக்குப் புருஷார்த்த,ம் 13. "தம் யதா," இத் யாதி, 14. "ஸ்வேந ரூபேணாபி,நிஷ்பத்,யதே" என்கிற படியே - ஸ்வரூபாவிர்ப,ாவ பூர்வகமாய் நித்யநிர்த்தோ,ஷ நிஸ்ஸீமாநந்த,ாத்மகமாயிருக்கிற ஸவிபூ,திக ஸமஸ்த கல்யாண கு,ணாத்மக பரமாத்மயாத,ாத்ம்யாநுப,வ ஜநித ப்ரீதிகாரித கைங்கர்யம்.

நநு; கைங்கர்யம் து₃:க்க₂ரூபமாக லோகத்திலே காணாநின்றோம், 1. **"ஸேவா ஶ்வவ்ருத்திர் வ்யாக்₂யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத்"** என்று நிஷித்₃த₄மாயிருக்க, இதுவே புருஷார்த்த₂மாம்படி எங்ஙனேயென்னில்; லோகத்திலே கைங்கர்யமெல்லாம் அபுருஷார்த்த₂மன்று; ப்ரியதம விஷயத்திலே கைங்கர்யம் புருஷார்த்த₂மாகக் காண்கையாலே. ஶ்வவ்ருத்தியென்று நிஷேதி₄த்தது — இதர ஸேவையை. இது 'புருஷார்த்த₂ம்' என்கிறவிடம் த₄ர்மி க்₃ராஹக ப்ரமாணத்தாலே பா₃தி₄தம். அது அபுருஷார்த்த₂ மாகைக்கு ஹேது பாபாரப்₃த₄த்வம். 2. **"புண்யபாபே விதூ₄ய"** என்கையாலே இது பாபகார்யமன்று. தன் ஸ்வரூபத்தை யாதொருபடி நினைத்தான் அதுக்கீடாயிருக்கும். இது புருஷார்த்த₂மென்னுமிடம் ஸூரஸுரதிர்ய க்₃ாதி₃களிலே காணாநின்றோம். ஆகையாலே முக்தனும் தன்னை ஶேஷமாக நினைக்கையாலே கைங்கர்யமே புருஷார்த்த₂மாம்; அத்தையொழிந்தது அபுருஷார்த்த₂மாயிருக்கும்.

## சார்வாகமத நிரஸநம்

தே₃ஹாதி₃விலக்ஷணனாகையாலே ஶப்₃தா₃த்₃யநுப₄வம் புருஷார்த்த₂மன்று.

## யோகா₃தி₃மத நிரஸநம்

பரதந்த்ரனாகையாலே ஸ்வாநுப₄வமாத்ரம் புருஷார்த்த₂மன்று.

## பௌ₃த்₃த₄ாதி₃மத நிரஸநம்

ஸ்வரூபம் நித்யமாகையாலே ஸ்வரூபோச்சே₂த₃நம் புருஷார்த்த₂மன்று.

## நையாயிகமத நிரஸநம்

நித்யஜ்ஞாநாதி₃கு₃ணகனாகையாலே வைஶேஷிக ஜ்ஞாநாதி₃கு₃ணவிநாஶம் புருஷார்த்த₂மன்று. நநு;

ஸுக₂மாகில் து₃:க்க₂மிஶ்ரமாயல்லதிராமையாலே ஸுக₂ம் புருஷார்த்த₂மன்று; விஷஸம்ப்ரயுக்தமான் அந்நம்போலே த்யாஜ்யமென்னவொண்ணுது. மோக்ஷ ஸுக₂ம் 1. "ந ரோக₃ம் நோத து₃:க்க₂தாம்" என்று து₃:க்க₂மிஶ்ர மல்லாமையாலே. து₃:க்க₂நிவ்ருத்திதான் புருஷார்த்த₂மாக மாட்டாது, ஸுக₂ரூபமல்லாமையாலே. ஆனுல், து₃:க்க₂ நிவ்ருத்தியில் யத்நம் கூடாதென்னில், து₃:க்க₂மும் ப்ரதி கூலமாகையாலே கூடும். ஸுக₂த்திற்காட்டிலும் து₃:க்க₂ நிவ்ருத்தியே புருஷார்த்த₂மென்னில் - து₃:க்க₂மிஶ்ரமான ஸுக₂ஸாத₄நங்களில் இழியக்கூடாது.

### ஶங்கரமத நிரஸநம்

'அவித்₃யா நிவ்ருத்தியே மோக்ஷம்' என்கிற பக்ஷமும் அநுபபந்நம்; அது ஸுக₂ரூபமல்லாமையாலே. ஸுக₂ ஸாத₄நமென்னவொண்ணுது; ப்₃ரஹ்மத்துக்கு ஸுக₂ம் கொள்ளாமையால், ஸுக₂ம் கொள்ளில், ப்₃ரஹ்மம் ஸவிஶேஷமாம்.

### பா₄ஸ்கரமத நிரஸநம்

'உபாதி₄வியோக₃ம் மோக்ஷம்' என்கிற பக்ஷமும் சேராது, ஸுக₂ரூபமல்லாமையால். திரோஹிதமான ஸுக₂த்துக்கு ப்ரகாஶகமென்னில் ஜீவனுடைய ஸுக₂த்துக்கு ப்ரகாஶகமோ, பரனுடைய ஸுக₂த்துக்கு ப்ரகாஶகமோ? ஜீவஸுக₂த்துக்கு ப்ரகாஶகமென்னவொண்ணுது; ஜீவன் நஶிக்கையால். பரஸுக₂ப்ரகாஶகமென்னவொண்ணுது; அதுக்கு திரோதா₄நமில்லாமையால், உபாதி₄ப்ரதே₃ஶத்தில் ஸுக₂ம் திரோஹிதமென்னில்; ஸர்வஜ்ஞனென்றிக்கே யொழியும்.

### யாத₃வப்ரகாஶமத நிரஸநம்

ஸ்வாபா₄விக பே₄தா₃பே₄த₃ பக்ஷத்திலும் மோக்ஷம் புருஷார்த்த₂மன்று; முக்தனுக்கு ப₃த்₃த₄னோடு அபே₄த₃ முண்டாகையால், ப₃த்₃த₄னுடைய து₃:க்க₂மே முக்தனுக்கு வருமாகையால். ஈஶ்வரனுக்கு ஜீவனோடு அபே₄த₃முண்

டாகையால், ஈஶ்வரன் ஜீவனுடைய து₃:க்க₂த்தைத் தன்னுடைய து₃:க்க₂மாக நினைத்து ஸத்யஸங்கல்பனாகையாலே தானே கழிக்கும்; ஆகையால் ஆத்மாவுக்கு மோக்ஷோபாயத்தில் இழியவேண்டா; ஸர்வமுக்தியும் ப்ரஸங்கி₃க்கும்.

**ஸ்வஸித்₃தா₄ந்த ஸங்க்₃ரஹம்**

ஆகையால், நிர்தோ₃ஷ நிரதிஶயாநந்த₃ரூபமான பரமாத்மாநுப₄வ கைங்கர்யமே மோக்ஷம். **1. "தம் யதா₂ யதோ₂பாஸதே ததை₂வ ப₄வதி". 2. "ப்ருத₂க₃ாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா, ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி" 3. "ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே" 4. "கிங்கரா மம தே நித்யம் ப₄வந்தி நிருபத்₃ரவா:" 5. "ஆக₃ச்ச₂ வத்ஸ ப₄த்₃ரம் தே புண்ட₃ரீக மஹாமதே। மத்₃ரூபதா₄ரீ நித்யாத்மா மம பாரிஷதா₃ஶ்ரய॥"** இத்யாதி₃ ப்ரமாணங்கள் அநந்தம்.

**மோக்ஷே ஜீவபரைக்யவாதி₃ஶங்கோபந்யாஸம்**

நநு; **6. "ப்₃ரஹ்ம வேத₃ ப்₃ரஹ்மைவ ப₄வதி" 7."யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூ₄த்" 8."விபே₄த₃ஜநகேऽஜ்ஞாநே நாஶமாத்யந்திகம் க₃தே। ஆத்மநோ ப்₃ரஹ்மணோ பே₄த₃மஸந்தம் க: கரிஷ்யதி॥" 9. "பரமாத்மநா। ப₄வத்யபே₄தீ₃"** இத்யாதி₃களாலே மோக்ஷத₃ஶையிலே ஐக்யம் சொல்லாநிற்க, கைங்கர்யம் கூடும்படி என்னென்னில்;

**தத்க₂ண்ட₃நம்**

**10."பரமாத்மாத்மநோர்யோக₃: பரமார்த்த₂ இதீஷ்யதே। மித்₂யைதத₃ந்யத்₃ரவ்யம் ஹி நைதி தத்₃த்₃ரவ்யதாம் யத:॥"** என்கிறபடியே - ஹேயப்ரதிப₄டவஸ்துவுக்கும் ஹேய யோக்₃யவஸ்துவுக்கும் ஐக்யஞ்சொல்லுகை வ்யாஹதம். ஐக்யங்கொள்ளில், **11. "ஆத்மபா₄வம் நயத்யேநம் தத்₃ப்₃ரஹ்மத்₄யாயிநம் முநே। விகார்யமாத்மநஶ் ஶக்த்யா லோஹமாகர்ஷகோ யதா₂॥" 12. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" 13. "மம ஸாத₄ர்ம்யமாக₃தா:" 14. "தத்₃பா₄வ**

**ப₄ாவமாபந்ந:"** என்று சொன்ன பரமாத்மஸாத₄ர்ம்யம் கூடாது. **1. "ப்₃ரஹ்ம வேத₃ ப்₃ரஹ்மைவ ப₄வதி"** என்கிற விடத்திற்சொல்லுகிறது - ஸாத₄ர்ம்யத்தை; **2. "விஷ்ணுரேவ பூ₄த்வா"** என்கிறவிடத்திற்போலே, **1."ஏவ"** என்றது- "இவ" என்றபடியாய், ப்₃ரஹ்மம் போலேயாம் என்றபடி. அவத₄ாரணமானாலும் இதுவே அர்த்த₂ம்.

**3. "யத்ர த்வஸ்ய"** என்கிறவிடத்தில், எல்லாம் பரமாத்மாவுக்கு ப்ரகாரமென்று ஸாக்ஷாத்கரித்தபடியைச் சொல்லுகிறது.

**4. "விபே₄த₃ஜநகே" 5. "பரமாத்மநா-ப₄வத்யபே₄தீ₃"** என்கிறவிடத்தில் தே₃வாதி₃ரூபபே₄த₃மில்லை என்றபடி. **6. "தே₃வாதி₃பே₄தே₃ऽபத்₄வஸ்தே"** என்று இது தானே கண்டோ₂க்தம். கநு; கிங்கரனாகில் **7. "ஸ ஸ்வராட்₃ப₄வதி"** என்கிற ஸ்வாதந்த்ர்யம் சேரும்படி என்னென்னில்; **7. "ஸ்வராட்"** என்றது கர்மவஶ்யன் அன்று என்றபடி. ஆனால், ஸாம்யந்தான் கூடும்படி என்னென்னில்; ஸாம்யம் போ₄க₃மாத்ரத்திலே. ஸாயுஜ்யம் என்கிறது இத்தையே. ஸர்வத₄ாஸாத₄ர்ம்யமில்லை; ஜக₃த்₃வ்யாபாராதி₃களில்லாமை யாலே. ஜக₃ந்நியமநாதி₃களில்லையாகில் போ₄க₃ஸாம்யந்தான் கூடும்படி என்னென்னில்; அவை இருவர்க்கும் ஒக்க அநுகூலமாகக்கொண்டு ப்ரகாஶிக்கையாலே கூடும். **8. "அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:"** என்கிறபடியே *ஶரீரஶூ*ந்யனானவனுக்குக் கைங்கர்யம் கூடாதென்னில்; **9. "ஸ ஏகதா₄ ப₄வதி த்ரிதா₄ ப₄வதி"** என்று ஸஶரீரனாகச் சொல்லுகையாலே கூடும். இது தன்னாலே ஸஶரீரத்வம் ஸித்₃த₄ம். **8. "அஶரீரம்"** என்றது கர்மக்ருதமான *ஶரீரம்* இவனுக்கில்லை என்றபடி. **8. "ந ஹவை ஸஶரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி"** என்கிறபடியே *ஶரீரவிஶி*ஷ்டனாகில் ஸுக₂து₃:க்க₂ங்களுண்டாகாதோவென்னில், அங்குச் சொல்லுகிறது கர்ம க்ருத *ஶரீரத்தை. ஶரீர*மாகில் கர்மக்ருதமாயன்றோ

யிருப்பதென்னவொண்ணுது, ப₄க₃வத்₃விக்₃ரஹம் கர்மக்ருத மல்லாமையாலே. அவன் ஸர்வஶக்தனுகையாலும் ஸத்ய ஸங்கல்பனுகையாலும் அவனுக்குக்கூடும்; இவனுக்குக் கூடாதென்னவொண்ணுது; அவனுடைய ஸங்கல்பத்தாலே இவனுக்கும் கூடுகையாலே. 1. **"ஸங்கல்பாதே₃வாஸ்ய பிதரஸ்ஸமுத்திஷ்ட₂ந்தி"** என்று ஸத்யஸங்கல்பனுகச் சொல்லுகையாலே, இவன்தன்னுடைய ஸங்கல்பத்தாலும் ஶரீரங்கூடும். ஈஶ்வரன் ஸத்ய ஸங்கல்பனுகையாலே புநராவ்ருத்தியுங்கூடுமே என்னில்; 2. **"ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂ம்...ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:"** என்றிருக்கிற ஈஶ்வரன் இவனை ஸம்ஸரிப்பிக்கக் கூடாமையாலும், ஸம்ஸாரஹேதுவான கர்மம் நிஶ்ஶேஷமாக நிவ்ருத்த மாகையாலும், 3. **"ந ச புநராவர்த்ததே"** 4. **"இமம் மாநவ மாவர்த்தம் நாவர்த்தந்தே"** 5. **"மாமுபேத்ய புநர்ஜந்ம து₃:க₂ாலயமஶாஶ்வதம்। நாப்நுவந்தி மஹாத்மாநஸ்ஸம் ஸித்₃தி₄ம் பரமாம் க₃தா:॥ ஆப்₃ரஹ்மபு₄வநால்லோகா: புநரா வர்த்திநோऽர்ஜுந। மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்₃யதே॥"** என்கையாலும் புநராவ்ருத்தி ப்ரஸங்க₃மேயில்லை.

ஆகையாலே ஸவிபூ₄திக ஸமஸ்தகல்யாணகு₃ணுத்மக பரமாத்மயாதா₂த்ம்யாநுப₄வஜநித ப்ரீதிகாரித கைங்கர்யமே பரமபுருஷார்த்த₂ம்.

3-வது புருஷார்த்த₂ஸ்வரூபநிர்ணயப்ரகரணம் ஸமாப்தம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## 4-வது விரோதி₄ஸ்வரூபநிர்ணய ப்ரகரணம்

இப்புருஷார்த்த₂த்துக்கு ப்ரதிப₃ந்த₄கம்-இப்படி பரமாத்ம யாதா₂த்ம்யாநுப₄வத்தாலே நிரதிஶயாநந்தி₃யாகைக்கு யோக்₃யனுன ஆத்மா, ஈஶ்வரனுடைய ஸ்வரூபரூபகு₃ண சேஷ்டிதங்களையும் ஸ்வஸ்வரூப யாதா₂த்ம்யத்தையும் அறியாதே, ஸ்வரூப விபரீதங்களாய் க்ஷணக்ஷரணஸ்வபா₄வத்

வாதி₃த₄ர்மவிஶிஷ்டங்களான நாநாவித₄தே₃ஹங்களிலே ஆத்மபு₃த்₃தி₄யைப்பண்ணி, தே₃ஹாநுப₃ந்தி₄களாய் ப₄க₃வதீ₃யங்களாயிருக்கிற க்₃ருஹக்ஷேத்ராராமாதி₃களை ஆத்மீயங்களாகவும், அத்தை ப₄க₃வதீ₃யத்வாகாரத்தையொழிய ஸ்வாதந்த்ர்யேண போ₄க்₃யங்களாகவும் நினைத்து, அவை லபி₄க்கைக்கு அநுகூலித்தவர்கள் பக்கலிலே ராக₃த்தையும் ப்ரதிகூலித்தவர்கள் பக்கலிலே த்₃வேஷத்தையும் பண்ணி, அவற்றை லபி₄க்கைக்கு ஸாத₄நங்களான பரஸ்தோத்ர பரஹிம்ஸா தே₃வதாந்தர பூ₄ஜநங்களிலே அந்வயித்து, அவற்றால் நாநாவித₄ ஶரீரங்களைப் பரிக்₃ரஹித்து, பா₃ல்ய யௌவநவார்த்த₄க்யாத்₃யவஸ்தை₂களிலே ஆத்₄யாத்மிகாதி₃ தாபத்ரயதப்தனாய், மரணத₃ஶையிலே யமகிங்கரபீடி₃தனாய், து₃:க்₂கே₂ந ஶரீரங்களை விட்டு யாதநாஶரீரங்களிலே ப்ரவேஶித்து ரௌரவாதி₃நரகங்களிலே நாநாவித₄து₃:க்₂கங்களை அநுப₄வித்து, தூ₄ம ராத்ரி அபரபக்ஷ த₃க்ஷிணாயந பித்ருலோகாகாஶ சந்த்₃ரக்ரமத்தாலே உபரிதநலோகங்களிலே போய், நாரகித₃ர்ஶநாநந்தர்யத்தாலும் அதி₄கஸுக₂ாநுப₄வத்தாலும், அஸுரராக்ஷஸ பீடை₃யாலும் பதநபீ₄தியாலும் து₃:க்₂கப₄ஹுளமான க்ஷுத்₃ரஸுக₂ங்களை அநுப₄வித்து, த்₃யு பர்ஜந்ய ப்ருதி₂வீ புருஷ யோஷித் ஸ்தா₂நங்களிலே ஶ்ரத்₃தா₄ ஸோம வர்ஷாந்ந ரேதோ ரூபாவஸ்தா₂ விஶிஷ்டனாய்க்கொண்டு ப்ரவேஶித்து, இப்படி ஜந்மஜரா மரண நிரயாதி₃களிலே நாநாவித₄து₃:க்₂கங்களைச் சக்ரநேமி க்ரமத்தாலே அநுப₄விக்கும்படி பண்ணும் கர்மஸம்ப₃ந்த₄ம்.

## ஜக₃ந்மித்₂யாத்வவாதி₃ஶங்கரமதோபந்யாஸம்

நநு; **1. "அந்ருதேந ஹி ப்ரத்யூட₄ா:" 2. "தஸ்மிம்ஶ் சாந்யோ மாயயா ஸந்நிருத்₃த₄:" 3."மம மாயா து₃ரத்யயா" 4. "வஸ்த்வஸ்தி கிம்... மஹீ க₄டத்வம்... தஸ்மாந்ந விஜ்ஞாநாம்ருதே஽ஸ்தி கிஞ்சித் ... ஸத்₃ப₄ாவ ஏவம்"** என்று - ஶ்ருதீதிஹாஸபுராணங்களிலே 'அந்ருதம் - மாயை - நாஸ்தி - அஸத்யம்' இத்யாதி₃ஶப்₃த₃ங்களாலே சொல்லுகையாலே-

மித்₂யாபூ₄தமான அஜ்ஞாநம் ப₃ந்த₄ஹேது, ப₃ந்த₄மும் மித்₂யை என்று சிலர் சொன்னார்கள்.

**தத்க₂ண்ட₂நம்**

அது அநுபபந்நம். அதில் ப்ரமாணமில்லாமையாலும், அநேக ப்ரமாண பா₃தி₄தமாகையாலும்.

**1.** "அந்ருத"ஶப்₃த₃த்தாலே சொல்லுகிறது-ஸாம்ஸாரிக ப₂லத்துக்கு ஹேதுவான கர்மத்தை. ருதேதரமந்ருதம். ருதமாவது - கர்மப₂லம். **2. "ருதம் பிப₃ந்தௌ"** என்கையாலே. இவ்விடத்தில், அந்ருதமென்கிறது - ப₄க₃வத் ப்ராப்திக்கு விரோதி₄யான கர்மத்தை. **1. "ஏதம் ப்₃ரஹ்ம லோகம் ந விந்த₃ந்தி அந்ருதேந ஹி ப்ரத்யூட₄ா:"** என்கையாலே.

மாயை என்கிறது - ப்ரக்ருதியை. **3. "மாயாம் து ப்ரக்ருதிம் வித்₃யாத்"** என்கையாலே. ப்ரக்ருதியை, மாயை என்கிறது - விசித்ரகார்யங்களைப் பண்ணுகையாலே. **4. "வஸ்த்வஸ்தி கிம்"** இத்யாதி₃ ஶ்லோகங்களாலே விநாஶித்வத்தைச் சொல்லுகிறது; மித்₂யாத்வத்தைச் சொல்லுகிறதன்று. மித்₂யாபூ₄தமாகில், ஶுக்திகாரஜதம்போலேயும், ரஜ்ஜுஸர்ப்பம் போலேயும் பா₃தி₄தமாகவேணும். **5. "ம்ருத்திகேத்யேவ ஸத்யம்"** **6. "ஸர்வமேதத்₃ருதம் மந்யே யந்மாம் வத₃ஸி கேஶவ"** **7. "காலஸ்ய ஹி ச ம்ருத்யோஶ்ச ஜங்க₃மஸ்தா₂வரஸ்ய ச। ஈஶதே ப₄க₃வாநேகஸ் ஸத்யமேதத்₃ப்₃ரவீமி தே ॥"** **8. "ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யமுத்₃த்₄ருத்ய பு₄ஜமுச்யதே। வேத₃ஶாஸ்த்ராத் பரம் நாஸ்தி ந தை₃வம் கேஶவாத் பரம் ॥"** இத்யாதி₃ ப்ரமாணங்களோடு விரோதி₄க்கும். ஆகையால், ப₃ந்த₄மும் ப₃ந்த₄ ஹேதுவும் பரமார்த்த₂ம்.

**ப்₃ரஹ்மாஜ்ஞாந வாத₃நிரஸநம்**

**9. "தத் த்வமஸி"** **10. "அயமாத்மா ப்₃ரஹ்ம"** என்று ப்₃ரஹ்மத்துக்கும் ஜீவனுக்கும் தாதா₃த்ம்யம் சொல்லுகை

யாலே, ப்₃ரஹ்மந்தானே ஸம்ஸரிக்கிறது என்கிறதுவும் அஸங்க₃தம். ப்₃ரஹ்மம் நித்யநிர்தோ₃ஷம், ஸமஸ்த கல்யாண கு₃ணாத்மகம், ஜீவாத்₃விலக்ஷணம் என்று சொல்லுகிற **1. "அபஹதபாப்மா" 2. "யஸ்ஸர்வஜ்ஞ:" 3. "ப்ருத₂க₃ாத்மாநம்"** இத்யாதி₃ ஶாஸ்த்ரங்களோடே விரோதி₄க்கையால். **4. "தத் த்வமஸி"** இத்யாதி₃வாக்யங்களில் ஶரீரஶரீரிபா₄வத்தைச் சொல்லுகிறது. ஆகையால், **5. "தஸ்மிம்ஶ்சாந்ய:" 6. "தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்₃வத்தி" 7. "ஈஶ்வரப்ரேரித:"** என்கிறபடியே ஜீவன் ஸம்ஸரிக்கிறான்.

**விரோதி₄ஸ்வருப நிர்ணயப்ரகரணம் ஸமாப்தம்.**

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

## 5-வது உபாயஸ்வருப நிர்ணயப்ரகரணம்

இனி இப்ரதிப₄ந்த₄க நிவ்ருத்திக்கு உபாயம்—ஸந்ந்யாஸ த்யாக₃ நிக்ஷேப ஶரணாக₃த்யாதி₃ ஶப்₃த₃வாச்யமாய், ஸத்யவசநாதி₃ த₄ர்மங்கள்போலே ஸர்வாதி₄காரமாயிருந்துள்ள பரமாத்ம ப்ரபத₃நம்.

### ப்ரபத்திஸ்வருபகத₂நம்

அதாவது — ப₄க₃வத₃ாஜ்ஞாதிவர்த்தநநிவ்ருத்தி, ப₄க₃வத₃ாநுகூல்யம், ஸர்வஶக்தித்வாநுஸந்த₄ாநம் தொடக்கமானவற்றோடே கூடியிருந்துள்ள யாச்ஞாக₃ர்ப்ப₄மான விஸ்ரம்ப₄ருபஜ்ஞாநவிஶேஷம். அதில் ஜ்ஞேயாகாரம் - ஈஶ்வரனுடைய நிரபேக்ஷஸாத₄நத்வம்; ஜ்ஞாநாகாரம் - வ்யவஸாயம். இதுதான் ஶாஸ்த்ரார்த்த₂மாகையாலே ஸக்ருத் கர்த்தவ்யம். **8. "முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்₃யே" 9. "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:"** என்றும், **10. "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:" 11. "அஹமஸ்ம்யபராத₄நாமாலய:" 12. "அநந்ய ஸாத்₄யே ஸ்வாபீ₄ஷ்டே மஹாவிஶ்வாஸபூர்வகம் | ததே₃கோபாயதாயாச்ஞா ப்ரபத்திஶ் ஶரணாக₃தி: ||" 13. "யத்₃

**யேந காமகாமேந .... யாநி நிஶ்ரேயஸார்த்த₂ாநி சோதி₃தாநி தபாம்ஸி வை। தேஷாம் து தபஸாம் ந்யாஸமதிரிக்தம் தபஶ்ஶ்ருதம் ॥" 1. "ப₄வ ஶரணம்" 2. "ஸக்ருதே₃வ ப்ரபந்நாய" 3. "மாமேகம் ஶரணம் வ்ரஜ"** என்றும் இத்யாதி₃களே இதில் ப்ரமாணங்கள். இதுக்கு அதி₄காரிகள் - பரமப்ராப்ய த்ருஷ்ணையையும், ப்ராப்யாந்தர வைத்ருஷ்ண்யையும், ப₄க₃வதௌ₃தா₃ர்ய குணாத்₄யவஸாயத்தையும் உடையவர்கள். இதுக்கு அங்க₃ம் ஆகிஞ்சந்யம். இவ்வதி₄காரிதான் ப்ரபத்திபண்ணின அநந்தரத்திலே மோக்ஷம் வேணுமென்றிருந்தானாகில் அப்போதே ப₂லமாயிருக்கும்; உபாயம் அப்போதே நிஷ்பந்நமாகையாலும், **4. "ஸாத்₄யப₄க்திஸ்து ஸா ஹந்த்ரீ ப்ராரப்₃த₄ஸ்யாபி பூ₄யஸீ"** என்று ப்ராரப்₃த₄மும் நஶிக்கையாலும். அல்லாதபோது, **5. "மாஶுச:"** என்கிறது சேராது. இப்படி ஆர்த்தராயிருக்கச்செய்தேயும் சிலரிருக்கிறது ஈஶ்வரேச்சை₂யாலே. அதுக்கு ப்ரயோஜநம் ஸம்ஸாரி ஸம்ரக்ஷணம், விக்₃ரஹாநுப₄வம் தொடக்கமானவை. ப்ரபத்த்யுத்தரகாலத்திலும் ஸம்ஸாரத்தில் ஸங்க₃ம் நடந்ததாகில்,ஸங்க₃ம் நிவ்ருத்தமாமளவும் வைக்கும். ஆனல் து₃:க்க₂ாம்ஶம் கழியாதொழிவானென் ? என்னில்; ஈஶ்வரன் ஹிதபரனாகையாலே வைராக்₃யஜநநார்த்த₂மாக இட்டுவைக்கும்.

இதுதான் ஸ்வதந்த்ரேண கார்யகரமாமளவன்றிக்கே ப₄க்தியோக₃த்தை உத்பாதி₃த்தும் காரியம் செய்யும்.

**ப₄க்தியோக₃ாதி₃ ஸ்வரூபகத₂நம்**

ப₄க்தியாகிறது :— **6. " யமேவைஷ வ்ருணுதே " 7. "ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய:" 8. "ப₄ஜதாம் ப்ரீதிபூர்வகம்" 9. "ப்ரியோ ஹி ஜ்ஞாநிந:"** என்கிறபடியே ஸ்மர்த்தவ்ய விஷயம் ப்ரியதமமாகையாலே தானும் அத்யர்த்த₂ ப்ரியரூபமாய், பா₄வநாப்ரகர்ஷத்தாலே **10."தஸ்மித்₃ருஷ்டே" 11. "ஆத்மா வா அரே த்₃ரஷ்டவ்ய:"** என்கிற

யாலே, ப்₃ரஹ்மந்தானே ஸம்ஸரிக்கிறது என்கிறதுவும் அஸங்க₃தம். ப்₃ரஹ்மம் நித்யநிர்தோ₃ஷம், ஸமஸ்த கல்யாணகு₃ணாத்மகம், ஜீவாத்₃விலக்ஷணம் என்று சொல்லுகிற **1. "அபஹதபாப்மா" 2. "யஸ்ஸர்வஜ்ஞ:" 3. "ப்ருத₂க₃ாத்மாநம்"** இத்யாதி₃ ஶாஸ்த்ரங்களோடே விரோதி₄க்கையால். **4."தத் த்வமஸி"** இத்யாதி₃வாக்யங்களில் ஶரீரஶரீரிப₄ாவத்தைச் சொல்லுகிறது. ஆகையால், **5."தஸ்மிம்ஶ்சாந்ய:" 6. "தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்₃வத்தி" 7. "ஈஶ்வரப்ரேரித:"** என்கிறபடியே ஜீவன் ஸம்ஸரிக்கிறான்.

**விரோதி₄ஸ்வருப நிர்ணயப்ரகரணம் ஸமாப்தம்.**

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.**

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

## 5-வது உபாயஸ்வரூப நிர்ணயப்ரகரணம்

இனி இப்ரதிப₄ந்த₄க நிவ்ருத்திக்கு உபாயம்— ஸந்ந்யாஸ த்யாக₃ நிக்ஷேப ஶரணாக₃த்யாதி₃ ஶப்₃த₃வாச்ய மாய், ஸத்யவசநாதி₃ த₄ர்மங்கள்போலே ஸர்வாதி₄காரமா யிருந்துள்ள பரமாத்ம ப்ரபத₃நம்.

### ப்ரபத்திஸ்வரூபகத₂நம்

அதாவது — ப₄க₃வத₃ாஜ்ஞாதிவர்த்தநநிவ்ருத்தி, ப₄க₃வத₃ாநுகூல்யம், ஸர்வஶக்தித்வாநுஸந்த₄ாநம் தொடக்கமான வற்றோடே கூடியிருந்துள்ள யாச்ஞாக₃ர்ப்ப₄மான விஸ்ரம்ப₄ரூபஜ்ஞாநவிஶேஷம். அதில் ஜ்ஞேயாகாரம் - ஈஶ்வர னுடைய நிரபேக்ஷஸாத₄நத்வம்; ஜ்ஞாநாகாரம் - வ்யவ ஸாயம். இதுதான் ஶாஸ்த்ரார்த்த₂மாகையாலே ஸக்ருத் கர்த்தவ்யம். **8. "முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்₃யே" 9. "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:"** என்றும், **10. "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:" 11."அஹமஸ்ம்யபராத₄நாமாலய:" 12."அநந்ய ஸாத்₄யே ஸ்வாபீ₄ஷ்டே மஹாவிஶ்வாஸபூர்வகம் । ததே₃ கோபாயதாயாச்ஞா ப்ரபத்திஶ் ஶரணாக₃தி: ॥" 13. "யத்₃**

**யேந காமகாமேந .... யாநி நிஶ்ரேயஸார்த்த₂ாநி சோதி₃தாநி தபாம்ஸி வை। தேஷாம் து தபஸாம் ந்யாஸமதிரிக்தம் தபஶ்ஶ்ருதம் ॥" 1. "ப₄வ ஶரணம்" 2. "ஸக்ருதே₃வ ப்ரபந்நாய" 3. "மாமேகம் ஶரணம் வ்ரஜ"** என்றும் இத்யாதி₃களே இதில் ப்ரமாணங்கள். இதுக்கு அதி₄காரிகள் - பரமப்ராப்ய த்ருஷ்ணையையும், ப்ராப்யாந்தர வைத்ருஷ்ண்யையும், ப₄க₃வதௌ₃தா₃ர்ய கு₃ணாத்₄யவஸாயத்தையும் உடையவர்கள். இதுக்கு அங்க₃ம் ஆகிஞ்சந்யம். இவ்வதி₄காரிதான் ப்ரபத்திபண்ணின அநந்தரத்திலே மோக்ஷம் வேணுமென்றிருந்தானாகில் அப்போதே ப₂லமாயிருக்கும்; உபாயம் அப்போதே நிஷ்பந்நமாகையாலும், **4. "ஸாத்₄யப₄க்திஸ்து ஸா ஹந்த்ரீ ப்ராரப்₃த₄ஸ்யாபி பூ₄யஸீ"** என்று ப்ராரப்₃த₄மும் நஶிக்கையாலும். அல்லாதபோது, **5. "மாஶுச:"** என்கிறது சேராது. இப்படி ஆர்த்தராயிருக்கச்செய்தேயும் சிலரிருக்கிறது ஈஶ்வரேச்சை₂யாலே. அதுக்கு ப்ரயோஜநம் ஸம்ஸாரி ஸம்ரக்ஷணம், விக்₃ரஹாநுப₄வம் தொடக்கமானவை. ப்ரபத்த்யுத்தரகாலத்திலும் ஸம்ஸாரத்தில் ஸங்க₃ம் நடந்ததாகில்,ஸங்க₃ம் நிவ்ருத்தமாமளவும் வைக்கும். ஆனால் து₃:க்க₂ாம்ஶம் கழியாதொழிவானென் ? என்னில்; ஈஶ்வரன் ஹிதபரனாகையாலே வைராக்₃யஜநநார்த்த₂மாக இட்டுவைக்கும்.

இதுதான் ஸ்வதந்த்ரேண கார்யகரமாமளவன்றிக்கே ப₄க்தியோக₃த்தை உத்பாதி₃த்தும் காரியம் செய்யும்.

### ப₄க்தியோக₃ாதி₃ ஸ்வரூபகத₂நம்

ப₄க்தியாகிறது :— **6. "யமேவைஷ வ்ருணுதே" 7. "ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய:" 8. "ப₄ஜதாம் ப்ரீதிபூர்வகம்" 9. "ப்ரியோ ஹி ஜ்ஞாநிந:"** என்கிறபடியே ஸ்மர்த்தவ்ய விஷயம் ப்ரியதமமாகையாலே தானும் அத்யர்த்த₂ ப்ரியரூபமாய், பா₄வநாப்ரகர்ஷத்தாலே **10."தஸ்மிந் த்₃ருஷ்டே" 11. "ஆத்மா வா அரே த்₃ரஷ்டவ்ய:"** என்கிற

படியே ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய், 1. **"த்₄ருவா ஸ்ம்ருதி:"** என்கிறபடியே அவிச்சி₂ந்ந ஸ்ம்ருதிரூபமாயிருக்கும் த்₄யாந விஶேஷம். இதுதான் நாள்தோறும் அப்₄யாஸத்தாலே அதிஶயிதமாய், 2.**"ஸ க₂ல்வேவம் வர்த்தயந் யாவதா₃யுஷம் ப்₃ரஹ்மலோகமபி₄ஸம்பத்₃யதே"** என்கிறபடியே ஆப்ர யாணத்தளவும் அநுவர்த்தித்தாலல்லது கார்யகரமாகாது. இப்படிப்பட்ட த்₄யாநம் நிஷ்பந்நமாவது :— 3. **"யஜ்ஞேந தா₃நேந தபஸாऽநாஶகேந ப்₃ராஹ்மணா விவிதி₃ஷந்தி"** 4. **"யஜ்ஞதா₃நதப: கர்ம ந த்யாஜ்யம் கார்யம்"** 5. **"ஸ்வ கர்மணா தமப்₄யர்ச்ய"** என்கிறபடியே ப₄க₃வத்ஸமாராத₄ந ரூபமாய் ப₂லாபி₄ஸந்தி₄விது₄ரமாயிருந்துள்ள நித்ய நைமித்திக கர்மாநுஷ்டா₂நத்தாலும், 6. **"ஶாந்தோ தா₃ந்த உபரதஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோ பூ₄த்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத்"** என்கிற ஶமத₃மாதி₃களாலும். உக்த கர்மாநுஷ்டா₂நத்தாலே, 7. **"த₄ர்மேண பாபமபநுத₃தி"** என்கிறபடியே புண்யபாபங்கள் நஶிக்கும்; அத்தாலே ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலைசாய்ந்து ஸத்வம் உத்₃பூ₄தமாம்; அத்தாலே த்₄யாநம் நிஷ்பந்நமாம்.

இப்படி அவ்யவஹிதமாயும் வ்யவஹிதமாயும் பரமாத்ம ப்ரபத₃நமே ப்ரதிப₃ந்த₄க நிவர்த்தகம்.

### ஶங்கராதி₃மதம்

சிலர், தத்த்வமஸ்யாதி₃வாக்யங்களாலே பிறக்கிற வாக்யார்த்த₂ ஜ்ஞாநமே உபாயமென்றார்கள். அது அநுப பந்நம். த்₄யாநாதி₃விதி₄களுக்கு வையர்த்₂யம் ப்ரஸங்கி₃க் கையாலும், அநந்தரம் முக்தனாக வேண்டுகையாலும், முக்தனைகில் து₃:க்கா₂நுப₄வம் கூடாமையாலும், ஜ்ஞாநந் தான் விதே₄யமுமன்றிக்கேயொழியும்.

### பா₄ட்டாதி₃மதம்

கேகய - ஜநகாதி₃கள் கர்மநிஷ்டா₂ராகையாலும், 8. **"குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேச்ச₂தம் ஸமா:"**

என்றுகொண்டு யாவஜ்ஜீவம் கர்மாநுஷ்ட₂ாநத்தைச் சொல்லுகையாலும், கர்மமே புருஷார்த்த₂ஸாத₄கம்; அந்தக் கர்மத்தை அநுஷ்டி₂க்கும்போது தே₃ஹாதிரிக்தமான ஆத்மாவை அறியவேண்டுகையாலே ஜ்ஞாநம் அதுக்கு அங்க₃ம்—என்று சிலர் சொன்னார்கள்; அதுவும் அநுபபந்நம்; 1. "**கிமர்த்த₂ா வயம் யக்ஷ்யாமஹே**" என்று - ஜ்ஞாநவானுக்குக் கர்மத்யாக₃ம் காண்கையாலும், அக்₃நிஹோத்₃ர த₃ர்ஶபௌர்ணமாஸாதி₃களில்லாத ஊர்த்₄வரேதாக்களுக்கு ப்₃ரஹ்மநிஷ்டை₂யுண்டாகையாலும் 2. "**கிம் ப்ரஜயா கரிஷ்யாம:**" என்று - விரக்தனுக்கு கா₃ர்ஹஸ்த்₂யத்யாக₃முண்டாகையாலும், 3. "**க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி**" என்று - வித்₃யையாலே புண்யபாபங்களுக்கு நாஶமுண்டாகையாலும், வித்₃யை கர்மத்துக்கு அங்க₃மல்லாமையால். வித்₃யாநுஷ்ட₂ாநநிஷ்ட₂னும் பின்னை கர்மத்தை அநுஷ்டி₂க்கிறதென்? என்னில்; வித்₃யைக்குக் கர்மம் அங்க₃மாகை அநுஷ்டி₂க்கிறார்கள். யாவஜ்ஜீவம் கர்மாநுஷ்ட₂ாநம் சொல்லுகிறது விரக்தரல்லாதவர்களுக்கு.

### யாத₃வப்ரகாஶமதம்

ஜ்ஞாநகர்மஸமுச்சயம் உபாயமென்கிற பக்ஷமும் அநுபபந்நம்; 4. "**அவித்₃யயா ம்ருத்யும் தீர்த்வா**" 5. "**யஜ்ஞேந தா₃நேந**" என்று, கர்மத்தை ஜ்ஞாநத்துக்கு ஶேஷமாக்கி விநியோகி₃க்கையாலே.

நநு - ப்ரபத்தி ஸ்வதந்த்ரோபாயமாகில், 6. "**நாந்ய: பந்தா₂:**" என்று ப₄க்தியையொழிய உபாயமில்லை என்றத்தோடே விரோதி₄யாதோ? என்னில்; ப்ரபத்தியும் ஜ்ஞாநவிஶேஷமாகையாலே விரோதி₄யாது. கு₃ருலகு₄க்களுக்கு விகல்பம் கூடும்படியென்? என்னில்; 7. "**உபாயஸ்ஸுகரஸ்ஸோயம் து₃ஷ்கரஞ்ச மதோ மம**" என்று-அத்₄யவஸாயகௌ₃ரவத்தாலே கு₃ருவாகையாலே கூடும். லகு₄வானாலும் ப₄க்த்யங்க₃ங்களான கர்மங்களில் ஶாக₂ாபே₄த₃த்

தாலும் வர்ணாஶ்ரமபே₄த₃த்தாலும் கு₃ருலகூ₄பாயமுண்டாயிருக்கச்செய்தே விகல்பங்கூடினாப்போலே, இங்கும் விகல்பங்கூடும். உபாயாந்தரநிஷேத₄மும் கு₃ருலகு₄ விகல்பமும் அங்கா₃ங்கி₃பா₄வமும் விஷயபே₄த₃ம் அதி₄காரிபே₄த₃ம் தொடக்கமானவற்றாலே க₄டிக்கும்.

ஆக, அகி₂லபு₄வநஜந்மஸ்தே₂மப₄ங்கா₃தி₃லீலனாய், விதி₄ஶிவஶதமக₂ப்ரமுக₂ - நிகி₂லதே₃வதா - நிர்வாஹகனாய், முமுக்ஷூபாஸ்யனாய், மோக்ஷப்ரத₃னாயிருந்துள்ள நாராயணனுக்கு[1-ப்ர] தே₃ஹேந்த்₃ரியாதி₃ - விலக்ஷணரான ஸமஸ்தாத்மாக்களும் ஸர்வப்ரகார - பரதந்த்ரர் [2-ப்ர]; அவர்களுக்கு ஸ்வரூபாநுகு₃ண புருஷார்த்த₂ம் ஸகல பா₃ஹ்ய - கு₃த்₃ருஷ்டி - த்ருஷ்ட - மோக்ஷ - விலக்ஷணமான பரமாத்ம கைங்கர்யம் [3-ப்ர]; தத்ப்ரதிப₃ந்த₄கீபூ₄தாஜ்ஞாதிலங்க₄நஜநிதப₄க₃வந்நிக்₃ரஹ - நிப₃ர்ஹணோபாயம் நிகி₂ல ஜந்துஜாதஶரண்ய ஸ்ரீமந்நாராயண சரணாரவிந்த₃ ஶரணாக₃தி[4 ப்ர] என்கிற ஜ்ஞாநவிஶேஷம் தத்த்வ ஜ்ஞாநமாவது.

1. ப்ராப்யபூ₄தபரம்ப்₃ரஹ்மாத்₃யர்த்த₂பஞ்சகநிர்ணய: ।
தத்த்வஶேக₂ரநாமாயம் லோகாசார்யேண த₃ர்ஶித: ॥

உபாயஸ்வரூப நிர்ணயப்ரகரணம் ஸமாப்தம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

தத்த்வஶேக₂ரம் முற்றிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 16. தனித்₂வய ரஹஸ்யம்

**1. லோகாசார்யாய கு₃ரவே க்ருஷ்ணபாத₃ஸ்ய ஸூநவே।
ஸம்ஸாரபோ₄கி₃ஸந்த₃ஷ்ட ஜீவஜீவாதவே நம:॥**

## அவதாரிகை

ஸகலவேத₃ஶாஸ்த்ரங்களும் தாமஸ ராஜஸ ஸாத்விக புருஷர்களுக்கு அவ்வோ கு₃ணாநுகு₃ணமாகப் புருஷார்த்த₂ங்களை விதி₄த்தது. எல்லார்க்குமொக்க அபி₄மதமான மோக்ஷந்தான் து₃:க்க₂நிவ்ருத்தியும் ஸுக₂ப்ராப்தியுமிறே. இதுவிறே ப்ரியமாகிறது. இத்தை லபி₄க்கும் உபாயத்தை ஹிதம் என்கிறது.

இதில் தாமஸ புருஷர்கள் பரஹிம்ஸையை ஸாத₄நமாகக்கொண்டு அத்தாலே வரும் த₄நாதி₃களை ப்ரியமான புருஷார்த்த₂மாக நினைத்திருப்பார்கள். இதுக்கு வழியிட்டுக் கொடுக்கும் வேத₃மும் ஶ்யேநவிதி₄ என்கிற முக₂த்தாலே.

ராஜஸபுருஷர்கள் இஹலோக புருஷார்த்த₂மாகப் புத்ர பஶ்வந்நாதி₃களையும், பரலோக புருஷார்த்த₂மாக ஸ்வர்க்₃காதி₃ போ₄க₃ங்களையும் நினைத்திருப்பார்கள். இதுக்கு உபாயமாக ஜ்யோதிஷ்டோமாதி₃ முக₂ங்களாலே வழியிட்டுக் கொடுக்கும் வேத₃மும்.

ஸாத்விக புருஷர்கள் அந்த ஜ்யோதிஷ்டோமாதி₃ கர்மந்தன்னையே மோக்ஷத்துக்கு ஸாத₄நமான அபி₄ஸந்தி₄யைப்பண்ணி ப₂லஸங்க₃கர்த்ருத்வத்யாக₃பூர்வகமாக ப₄க₃வத் ஸமாராத₄நபு₃த்₃தி₄பண்ணி அத்தாலே க்ஷீணபாபராய் ஜ்ஞாநம்பிறந்து அநவரத பா₄வநாரூபையான ப₄க்தி பக்வமாய் ஸாக்ஷாத்கார ஸமாநமாய்ச் செல்லாநிற்க, அந்திமாவஸ்தை₂யில் ப₄க₃வத்₃விஷயமான அந்திம ஸ்ம்ருதி அநுவர்த்திக்குமாகில் ப₄க₃வல்லாப₄மாயிருக்கும். அதுக்கு இப்படி செய்வானென்று வழியிட்டுக்கொடுக்கும் வேத₃மும்.

ஶாத்₃த₁ஸாத்விக புருஷர்கள் நிர்ஹேதுக ப₄க₃வத் ப்ரஸாத₃லப்₃த₄ஜ்ஞாநத்தாலே கர்மஜ்ஞாநஸஹக்ருதை யான ப₄க்திநிவ்ருத்திபூர்வகமாக ஸித்₃த₄ரூபனான ஈஶ் வரனே உபாயமாய், அநந்யக₃திகளுமாய். ஸ்வரக்ஷண ப்ராப்தியில்லாத நமக்கு உபாயமென்று அத்₄யவஸித்திருந்து ஸாத₄கனை அவனைப்போலே கர்மவாஸனையாதல் அந்திம ஸ்ம்ருதியாதல் வேண்டாதே ஈஶ்வரன் தலையிலே அந்திம ஸ்ம்ருதியை ஏறிட்டு இஶ்ஶரீராவஸாநத்திலே திருவடி திருவநந்தாழ்வான் பிராட்டி தொடக்கமானாருடைய ப₄க₃வ த₃நுப₄வ ஜநிதப்ரீதிகாரிதையான நித்யகிங்கரதையை லபி₄ப்பர்கள். இதுக்கு வேத₃ங்களும் ருஷிகளும் ஆழ்வார் களும் தது₃பாய ஸ்வீகாரமான ப்ரபத்தியை ஸாத₄நமாக ஆத₃ரித்து அவனே உபாயமென்று நிஶ்சயித்தார்கள்.

எங்ஙனேயென்னில்; ஶ்ருதி உபாஸந வாக்யத்திலே நின்று 1. **"ஸத்யம் தபோ த₃மஶ்ஶமோ தா₃நம்"** இத்யாதி₃ களைச் சொல்லிற்று. [ஸத்ய]மாவது - பூ₄தஹிதமானது; [தபஸ்]ஸாவது - காயஶோஷணம்; த₃மம்-விரக்தி; [ஶமம்] ஶாந்தி; [தா₃நம்] ஸத்துக்கள் விஷயமாகக் கொடுக்குமவை. இப்படிகளால் உபாஸிக்குமிடத்தில் யம நியமாஸந ப்ராணா யாம ப்ரத்யாஹார தா₄ரணா த்₄யாந ஸமாதி₄களான அஷ் டாங்க₃ யோக₃த்தையும் விதி₄த்தது. இதுதன்னை முக₂ பே₄த₃த்தாலே ஶ்ரவண மநந நிதி₃த்₄யாஸந த₃ர்ஶநம் இத்யாதி₃களையும் சொல்லக்கடவது. [ஶ்ரவண]மாவது— தத்வஹிதங்களை உள்ளபடி கேட்கை; [மநநமா]வது— அவ் வர்த்த₂த்தை விதே₄யமாக மநநம்பண்ணுகை; [நிதி₃த்₄யாஸந] மாவது— அவ்வர்த்த₂த்திலே நிஷ்ட₂னாகை. [த்₄ருவா நு ஸ்ம்ருதி]யாவது— அவ்வர்த்த₂த்தில் அநவரதபா₄வநா. [த₃ர் ஶநஸமாநாகார]மாவது— கண்டாற்போலேயிருக்கை. இப் படிகளாலே அநேகங்களை ஒன்றுக்கொன்று ஶ்ரேஷ்ட₂மாகச் சொல்லிக்கொண்டு போந்து மாநஸமென்கிற ஶப்₃த₃த் தாலே ஆத்மஜ்ஞாநத்தைச் சொல்லிற்று. அதுக்கு மேலான த₃ர்ஶந ஸமாநாகாரமான சரமாவதி₄யிலே

வருந்திப் புகுந்தாலும் அவ்வளவிலே ப்₄ரம்ஶமுண்டாகில் ஆதி₃ப₄ரதனைப்போல அத₄:பதிக்குமத்தனை. இவ்வுபாயந்தான் த்ரைவர்ணிகாதி₄காரமுமாய், அநுஷ்டி₂க்குமிடத்தில் து₃ஷ்கரமாயும், து₃ர்லப₄மாயும், அஸாத்₄யமாயும், பலவாயும், விளம்ப்₃யமாயும் இருக்குமத்தனை. ப₂லப்ரதா₃நஶக்தியில்லாமையாலும், ஸ்வரூபத்துக்கு அப்ராப்தமாகையாலும், அந்திமஸ்ம்ருதி வேண்டுகையாலும், ப்ரத்யவாய பரிஹாரப்ரசுரமாயிருக்கையாலும் இவ்வருமைகளை அநுஸந்தி₄த்துத் தளும்பினார்க்கு **1. "மாதாபித்ருஸஹஸ்ரேஷு"** என்கிற மாதாபிதாக்களிலும் ஆயிரம் மடங்கேற்றமாக முகங்/(கொடுக்கும் மாதாவாகையாலே வேத₃மும் உபநிஷத்₃ பா₄க₃த்திலே ந்யாஸஶப்₃த₃த்தாலே ப்ரபத்தியை) **2."ந்யாஸ இத்யாஹுர் மநீஷிணோ ப்₃ரஹ்மாணம்............ந்யாஸ இதி ப்₃ரஹ்ம(ா)"** என்று ந்யாஸஶப்₃த₃த்தாலே ப்ரபத்தியைச் சொல்லிற்று. கீழ்ச்சொன்ன உபாயங்களோபாதி ப்ரபத்தியும் அந்யதமமாகிறதோ என்னும் அபேக்ஷையிலே உத்க்ருஷ்டோபாயம் ப்ரபத்தியென்னுமிடத்தை ந்யாஸஶப்₃த₃த்தாலே சொல்லிற்று.

ப்ரபத்தி பண்ணும் ப்ரயோக₃ம் இருக்கும்படியென்? என்னும் அபேக்ஷையிலே **3. "பதிம் விஶ்வஸ்ய" 4. "ப்₃ரஹ்மணே த்வா மஹஸ ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத"** என்று ப்ரபத்திபண்ணும் ப்ரயோக₃ம் சொல்லிற்று. எங்ஙனேயென்னில்; விஶ்வபதா₃ர்த்த₂ங்களை உடையவனாயிருக்கிற ப்₃ரஹ்மமுண்டு - ஸர்வரக்ஷகன், அவன் திருவடிகளிலே **4. "ஓமித்யாத்மாநம்"** என்று தனக்கு வாசகமான மந்த்ரத்தைச் சொல்லிக்கொண்டு [யுஞ்ஜீத] ஸமர்ப்பிப்பானென்று சொல்லி, மஹிமாவாகையாவதென்? என்னும் அபேக்ஷையிலே **5. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி"** என்றும் **6. "ப்₃ரஹ்ம வேத₃ ப்₃ரஹ்மைவ ப₄வதி"** என்றும் **7. "தத்₃ப₄ாவப₄ாவமாபந்ந:"** என்றும் **8. "மம ஸாத₄ர்ம்யமாக₃தா:"** என்றும் ௯ 'தம்மையேயொக்க அருள்செய்வர்" என்றும் இப்படி அவனோடொத்த பரமஸாம்யாபத்தியாகிற

/( ) ப்ரக்ஷிப்தம். ௯ பெரியதிரு 11-3-5.

ப₄லத்தைச் சொல்லி, ப்ரபத்திக்கு அதி₄காரிகளாரென்னும் அபேக்ஷையிலே 'வத₄ார்ஹனும் நின்றநிலையிலே ஶரணம் புக்கால் ஶரண்யன் சேதநனாகில் இவன் குற்றம் கண்டு விட்டுக்கொடான்' என்று ஶரணாக₃தியினுடைய வைப₄வத்தை ஶ்ருதியிலே சொல்லிற்று.

எங்ஙனேயென்னில், 1. **"தே₃வா வை யஜ்ஞாத்₃ருத்₃ரமந்தராயந்: ஸ ஆதி₃த்யாநந்வாக்ராமத: தே த்₃விதை₃வத்யாந் ப்ராபத்₃யந்த: தாந் ந ப்ரதிப்ராயச்ச₂ந்: தஸ்மாத₃பி வத்₄யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்ச₂ந்தி"** என்று 'தே₃வர்களுடைய யாக₃த்திலே ருத்₃ரன் தனக்கு ஹவிர்பா₄க₃முண்டென்று வர, இவனுக்கு அவர்கள் 'ஹவிர்பா₄க₃ம் கொடோம்' என்ன, 'நீங்கள் வத₄்யர்' என்று அவர்களைச் சொல்லித் தொடர்ந்தான்; அவர்களும் த்₃விதை₃வத்யர் என்கிற அஶ்விநிகள் பாடேபோய் ஶரணம்புக, அவர்களும், 'எங்கள்பக்கலிலே ப்ரபந்நரான இவர்களை விட்டுக்கொடோம்' என்று ருத்₃ரனோடேயும் மலைந்து நோக்கினார்கள். 2. **"தே₃வா வை த்வஷ்டாரமஜிக₄ாம்ஸந்: ஸ பத்நீ: ப்ராபத்₃யத: தம் ந ப்ரதிப்ராயச்ச₂ந்: தஸ்மாத₃பி வத்₄யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்ச₂ந்தி"** என்று தே₃வர்கள் யாக₃ம் பண்ணுகிறவளவிலே தே₃வதச்சன் தனக்கு ஹவிர்ப்பா₄க₃முண்டென்று வர, அவனுக்கு ஹவிர்பா₄க₃ம் கொடேமென்று அவர்கள் எல்லாருமாகத் துரத்தினார்கள். அவன் அந்த தே₃வபத்நிகள் பக்கலிலேபோய் ஶரணம்புக்கான், 'இவன் வத₄்யன்; விட்டுத் தரவேணும்'என்ன 2. **"தஸ்மாத₃பி வத்₄யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்ச₂ந்தி"** என்று 'எங்கள்பக்கலிலே ப்ரபத்திபண்ணின இவனை விட்டுத்தாரோம்'என்று அவர்களோடேயும் மலைந்து நோக்கினார்கள் — என்னும் இவ்வர்த்த₂ம் ஶ்ருதிஸித்₃த₄மாகையாலே வத₄்யனும் ப்ரபத்த்யதி₄காரியென்னுமிடம் சொல்லிற்று.

'ப்ரபத்தி பண்ணுகைக்கு ஶரண்யரார்' என்னும் அபேக்ஷையிலே ஶ்வேதாஶ்வதரோபநிஷத்திலே

**1. "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்"** என்று ப்ரஸித்₃த₄னை ப்₃ரஹ்மாவை யாவனொருவன் முன்பு உண்டாக்கினன், ஸர்வர்க்கும் ஶரண்யன் அவனே என்னுமிடம் சொல்லிற்று. சதுர்த₃ஶபு₄வநஸ்ரஷ்டாவான சதுர்முக₂னும் இவனாலே ஸ்ருஜ்யனாகையாலே இவனையொழிந்தார்க்கு ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வங்களுண்டாகையாலே அவர்களில் ஶரண்யராக வல்லாரில்லை என்னுமிடம் சொல்லிற்று. **1. "யோ வை வேத₃ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை"**—யாவனொருவன் அந்த ப்₃ரஹ்மாவுக்கு வேத₃ங்களைக் காட்டிக்கொடுத்தான்; இத்தால் ருசிஜநகனும் இவனே என்கிறது. ஜ்ஞாந ப்ரத₃னாகையாலே ருசிஜநகன் என்னத் தட்டில்லையே. வேத₃சக்ஷுஸ்ஸைக் கொடுத்து ஸ்ருஷ்டிப்பித்தானென்கையாலும், இவர்களுக்கு ஸம்ஹர்த்தாவாகையாலும், இவர்கள் ஸம்ஹார்யராகையாலும், இவர்கள் பண்ணும் அவாந்தர ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கு அந்தராத்மதயா நின்று பண்ணுகையாலும், இவர்கள் அவனுக்கு ஶரீரபூ₄தராகையாலும், இவர்கள் அவனுக்கு ஶேஷமாகையாலும், அவன் ஶுத்₃த₄ஸத்வமான தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தையுடையனாகையாலும், இவர்கள் கு₃ணத்ரயோபேதமான ப்ராக்ருத ஶரீரத்தையுடையராகையாலும், அவன் ஹேய ப்ரத்யநீக கல்யாண கு₃ணங்களையுடையனாகையாலும், இவர்கள் ஹேயகு₃ணவிஶிஷ்டராகையாலும், அவன் புண்ட₃ரீகாக்ஷனாகையாலும், இவர்கள் விரூபாக்ஷராகையாலும், அவன் ஶ்ரிய:பதியாகையாலும், இவர்கள் நிஶ்ஶ்ரீகராகையாலும், அவன் உபநிஷத்ஸித்₃த₄னாகையாலும், இவர்கள் ஆக₃மோக்த வைப₄வராகையாலும், அவன் உப₄யவிபூ₄திநாயகனாகையாலும், இவர்கள் அண்ட₃ாந்தர்வர்த்திகளாகையாலும், அவன் மோக்ஷப்ரத₃னாகையாலும், இவர்கள் ஸம்ஸாரவர்த்த₄கராகையாலும், ஶிவஶம்ப₄வாதி₃களாலே சொல்லுகிற பரத்வமும் கு₃ணயோக₃த்தாலும், ப்ரகாரவாசிஶப்₃த₃ங்கள் ப்ரகாரி பர்யந்தமாகக் கண்டபடி

யாலுமாகையாலும் ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தாத்மாக்களும் இவனுக்கு ரக்ஷ்யம், ஶ்ரிய:பதியாய், புருஷோத்தமனான நாராயணனே ஸர்வரக்ஷகன், அவனே ஶரண்யனென்னு மிடத்தைச் சொல்லிற்று.

இனி, ஶரண்யன் பக்கலிலேயிறே ஶரணம் புக அடுப்பது. ஆகையாலே வேத₃ாத்மா ஶரணம் புகுகிறான். 1. **"தம்ஹ தே₃வமாத்மபு₃த்₃தி₄ப்ரஸாத₃ம்"** — 'தானே உபாயமென்கிற வ்யவஸாயமான பு₃த்₃தி₄ப்ரஸாத₃த்தை எனக்குப் பண்ணித்தந்தான்' என்கையாலே வ்யவஸாய ப்ரத₃னும் அவனென்னுமிடம் சொல்லிற்று. 1. **"முமுக்ஷுர்வை ஶரணம் அஹம் ப்ரபத்₃யே"** என்று ப்ராப்யருசியுடையவன் அதி₄காரியென்னுமிடம் தோற்றுகைக்காக 'மோக்ஷார்த்தி₂யான நான் ஶரணம் புகுகிறேன்' என்கிறான்.

ஆக இத்தால் மோக்ஷோபாயம் ப்ரபத₃நம் என்னு மிடத்தையும், ப்ரபத்திக்கு அதி₄காரி முமுக்ஷு என்னு மிடத்தையும் சொல்லிற்று.

இப்படி ஶ்ருதி ஸித்₃த₄மான ப்ரபத₃நத்தை இவ்வுப நிஷத்தை அடியொற்றி உபப்₃ரும்ஹணம் பண்ணின ருஷிகளும், மஹாபா₄ரத ராமாயணாதி₃களிலேநின்றும் வெளியிட்டார்கள்.

எங்ஙனேயென்னில்: 2. **"கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே கு₃ணவாந் கஶ்ச வீர்யவாந். த₄ர்மஜ்ஞ:"** என்று மூன்று கு₃ணத்தினுடைய விவரணம் ஸ்ரீராமாயணம். 2. **"கு₃ணவாந்"** என்கிறது ஶீலகு₃ணத்தை. 2. **"வீர்ய வாந்"** என்கிறது—அந்த ஶீலம் கண்டு ஒதுங்கினவர்க ளுடைய விரோதி₄ வர்க்க₃த்தைக் கிழங்கெடுத்து அவர்களைக் காத்தூட்ட வல்லனாகிறது. 2. **"த₄ர்மஜ்ஞ:"** என்று ஸம்ஸாரிகளுடைய து₃ர்க்க₃தியைக் கண்டு 'இவற்றுக்கு நம்மையொழியப் புகலில்லை; இனி நம்மாலே நம்மைப்பெறு மத்தனை' என்று ஶரணாக₃தித₄ர்மமே பரமத₄ர்மமென்

றிருப்பர் என்கிறது. (ஶீலவத்தை)யாகிறது - அபி₄ஷேக விக்₄நம் பிறந்ததென்று வெறுப்பன்றியே 1. "**வநவாஸோ மஹோத₃ய:**" என்று காடேறப் புறப்பட்டுப்போவது, 2. "**ஆவாஸம் த்வஹமிச்ச₂ாமி**" என்று ரிஷிகள் பக்கலிலே சென்று தாழநிற்பது, 3. "**கிங்கரேண ஸமுபஸ்தி₂தேன**" என்பது, ஜந்மவ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை a "உகந்த தோழன் நீ" என்பது, இப்படிகளாலே *ஶீ*லவத்தையை மூதலித்தது. மாரீச ஸுபா₃ஹுக்கள் வத₄ம் தொடக்கமாக ராவணவத₄ பர்யந்தமாக நடுவுண்டான ப்ரதிகூல நிரஸநத்தாலே வீர்யவத்தையை மூதலித்தது. காகவிபீ₄ஷணாதி₃களை ஸ்வீகரிக்கையாலே த₄ர்மஜ்ஞதையை மூதலித்தது.

எங்கே கண்டோமென்னில்; ஸர்வலோகஜநநியான பிராட்டி திறத்திலே காகம் அபராத₄ம் பண்ணுகையாலே, பரமக்ருபாளுவான பெருமாள் திருவுள்ளத்தாலும் இவன் வத்₄யனென்று ப்₃ரஹ்மாஸ்த்ரத்தை விட, 4."**ஸ தம் நிபதிதம் பூ₄மௌ ஶரண்ய: ஶரணாக₃தம்। வத₄ார்ஹமபி காகுத்ஸ்த₂: க்ருபயா பர்யபாலயத்॥ ஸ பித்ரா ச பரித்யக்தஸ்ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி₄:। த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க₃த:॥**" என்கிறபடியே புறம்பு புகலற்று வந்து விழுந்த இத்தை *ஶ*ரணாக₃தியாக்கி ரக்ஷித்துவிட்டான் *ஶ*ரண்யன் என்கையாலே காகவிஷயமான ஸ்வீகாரம் கண்டோம்.

5. "**ப்ரதீ₃யதாம் தா₃ஶரத₂ாய மைதி₂லீ**" என்று 'பெருமாளையும் அவருடைமையையும் சேர்ந்திருக்க இசையாய்' என்று ராவணனுக்கு ஹிதம் சொல்லக் கேளாதே 6. "**த்வாம் து தி₄க் குலபாம்ஸநம்**" என்று பரிப₄வித்துப் புறப்படவிட, 7. "**பரித்யக்தா மயா லங்கா**" என்று விட்டுப் புறப்படுகிறபோது ஒரு தலை நெருப்புப் பட்டுப்பற்றி வேவப் புறப்படுவாரைப்போலே அங்கு அடிகொதித்துப் புறப்பட்டு

a பெரியதிரு 5-8-1.

**1. "ராவணோ நாம து,ர்வ்ருத்த:"** என்று தன் நிகர்ஷத்தை முன்னிட்டுக்கொண்டு **2. "ஸோऽஹம் பருஷிதஸ்தேந தா,ஸவச்சாவமாநித:। த்யக்த்வா புத்ராம்ஶ்ச தா,ராம்ஶ்ச ராக,வம் ஶரணம் க,த:॥"** என்று ஶரணம் புகுந்தவனை முதலிகள், 'இவன் ஜந்மவ்ருத்தங்கள் இருந்தபடியாலும், வந்த வரவு இருந்தபடியாலும், இவனுடைய நினைவு இருந்தபடியாலும், வந்த காலமிருந்தபடியாலும், ஶரணாக,தனுடைய வார்த்தை ஜீவிக்கும் கோ,ஷ்டி,யென்று அதிலே கலந்து நலியலாமென்று வந்து ஶரணம் புகுந்தபடியாலும், கனத்த மதிப்பரோடே வரில் தட்டுப்படுமென்று பார்த்து, தன் அவயவங்களோபாதி விரகறிந்து தப்பலாம்படி நாலுபேரைக் கொண்டுவந்த படியாலும், ராவணன் தம்பியாய் அவன் சோற்றையுண்டு அவனாபத்காலத்திலே விட்டுப்போர ஸம்ப,வமில்லாமையாலும், இவன் நம்முயிர் நிலையிலே நலியவந்தான்' என்று நிஶ்சயித்து **3. "வத்,யதாம்"** என்றுகொண்டு 'ஸர்வப்ரகாரத்தாலும் இவனைக் கைக்கொள்ளவொட்டோம்' என்று நிற்க, 'நீர் இவனை விடுகைக் குறுப்பாக யாதொரு அநுபபத்தி சொன்னீர்; அவை நமக்கு ஸ்வீகரிக்கைக்குடலாமித்தனை. அவன் வத்,யனேயாகிலும் மித்ரபா,வமுடையவனாய் வந்தவனை **4. "ந த்யஜேயம்"** என்று அவனை விடில் நமக்கு ஸத்,பா,வமில்லை' என்று தன் ப்ரக்ருதியிருந்தபடியைச் சொல்லி, '**5. "ஆர்த்தோ வா யதி,வா த்,ருப்த: பரேஷாம் ஶரணாக,த:"** என்கிறபடியே ஆர்த்தனாய் வரவுமாம், செருக்கனாய் வரவுமாம், நம் பக்கலிலே ஶரணம் புகுந்தவனை **5. "அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா"**—ப்ராணனையழிய மாறி ரக்ஷிப்பன், **5. "ப்ராணாநபி"** என்றாய் விட்டது, ஶரணாக,தனுக்கும் தம்மையழியமாறி ரக்ஷிக்குமது தன்னேற்றம் செய்ததாகப் போந்திராமையாலே, **5. "க்ருதாத்மநா"** என்று ப்ராணனையழியமாறி ரக்ஷிப்பன்; **6. "ஸக்ருதே,வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே। அப,யம் ஸர்வபூ,தேப்,யோ த,தா,ம்யேதத், வ்ரதம் மம॥"'** என்று ப்ரக்ருத்யநு

ருபமான ப்ரதிஜ்ஞையைப் பண்ணி, 1. "கண்டே,ர்வசந முத்தமம்" என்று கண்டு,பாக்,யாநத்தைச் சொல்லி, 2. "ப,த்,த,ாஞ்ஜலிபுடம் தீ,நம் யாசந்தம் ஶரணாக,தம்" இவைதான் எவையென்னில் 2. "ப,த்,த,ாஞ்ஜலிபுடம்" என்றது காயிகமான ப்ரபத்தி, 2. "தீ,நம்" என்றது மாநஸமான ப்ரபத்தி, 2. "யாசந்தம்" என்றது வாசிகமான ப்ரபத்தி; 2. "ஶரணாக,தம்" கீழே இவை மூன்றையும் சொல்லி வைத்து 2. "ஶரணாக,தம்" என்கையாலே 3. "தே வயம் ப,வதா ரக்ஷ்யா ப,வத்,விஷயவாஸிந:" என்று உகந்தருளின தே,ஶங்களிலே அபி,மானித்த எல்லைக்குள்ளே கிடந்துவிடுகையும் ஶரணாக,தி, அவற்றிலே ஒன்றுண்டாகிலும் விடேனென்றவிடத்திலும் மஹாராஜர் தெளியாமையாலே, இவருடைய ப்ரக்ருத்யநுகு,ணமாக இவரைத் தெளிவிப்போமென்று பார்த்தருளி, 'பண்டு கலங்கினவிடத்தில் நம்முடைய ஶக்தியைக்கண்டு தெளித்தார்; அத்தைப் புரஸ்கரிக்கவே தெளிவர்' என்று பார்த்து 4. "பிஶாசாந் த,ாநவாந் யக்ஷாந் ப்ருதி,வ்யாஞ்சைவ ராக்ஷஸாந்" என்றித்யாதி,ப்படியே 'எதிரிகளடைய ஒரு கலத்திலே உண்டு ஒருமுகம்செய்து வந்தாலும் 4. "அங்கு,ல்யக்,ரேண தாந் ஹந்யாம்" - நம் சிறுவிரலில் ஏகதே,ஶத்துக்கும் இரைபோரார்கள் காணும்' என்று தம்முடைய ப,லத்தைச் சொல்லவே ராமப,ாக்,யத்தாலே மஹாராஜர் தெளிந்துவந்து, 'விபீ,ஷணன் நம்மிலும் பரிவனாய் வந்தான்; பெருமாள் கடுகக் கைக்கொண்டருளும்படி விண்ணப்பம் செய்வோம்' என்று பெருமாள்பாடே வந்து 'கடுகக் கைக்கொண்டருளீர்' என்று விண்ணப்பஞ்செய்ய, 'நாம் அவன் வந்தபோதே கைக்கொண்டோம், உம்முடைய அநுமதி பார்த்திருந்தோமித்தனை காணும்; 5. "ஆநயைநம்" — அவன் நிற்கிற நிலைகண்டால் எனக்கு ஆறியிருக்கலாயிருந்ததோ? கடுகக்கொண்டு புகுரீர்' என்ன, மஹாராஜரும் பரிகரமும் ப,ஹிரங்க,மென்னும்படி ராமபரிஸரத்தில் இவனே அந்தரங்க,னென்னும்படி கைக்

கொண்டு a "செல்வ விபீடணற்கு வேருக நல்லானை" என்கிறபடியே அபி₄ஷிக்தனாக்கி ரக்ஷித்தான் என்கை யாலே ஶரண்யனுடைய ப்ரபா₄வமும் ஶரணாக₃தனுடைய ப்ரபா₄வமும் சொல்லிற்று.

இப்ரகரணந்தன்னில் சொல்லிற்றாயிற்ற தாத்பர்யம் என்னென்னில்; ப்ரஹ்லாதா₃தி₃களினுடைய வாக்யங்களிலே ஆஸுரப்ரக்ருதிகளோடு ஸஹவாஸம் பண்ணலாகாது என்னுமிடம் சொல்லி, தன்னை நலிய நினைத்தவனுக்குங் கூட ஹிதஞ்சொன்ன ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் படியாலே ஸத்துக்களோடே ஸஹவாஸம் பண்ணவேணுமென்னு மிடஞ்சொல்லி, இவன் சொன்ன ஹிதங்கேளாத ராவணன் படியாலே ஆஸுரப்ரக்ருதிகளுக்கு ஹிதஞ் சொல்லலாகாது என்னுமிடஞ்சொல்லி, 1. **"யத்ர ராம:"** என்று பெருமா ளிருந்தவிடத்தே வருகையாலே ப₄க₃வத்ஸந்நிதி₄யுள்ள தே₃ஶமே ப்ராப்யம் என்னுமிடஞ் சொல்லி, 2. **"பரித்யக்தா மயா லங்கா"** என்று விட்டுப்போந்தபடியாலே ப₄க₃வத்₃ கு₃ணாநுப₄வத்துக்கு விரோத₄மான தே₃ஶம் த்யாஜ்ய மென்னுமிடம் சொல்லி, இருந்தபடி எழுந்திருந்து வருகை யாலே அதி₄காரத்துக்குப் புரஶ்சரணாதி₃களில்லை என்னு மிடஞ்சொல்லி, ஶரணாக₃தனை 3. **"வத்₄யதாம்"** என்கை ப₄க₃வத்₃ விஷயத்தில் பரிவரிருக்கும்படி சொல்லி, 3. **"வத்₄யதாம்"** என்றவர்தம்மை அநுவர்த்தித்துப் புகுருகையாலே ததீ₃யரைப் புருஷகாரமாகக் கொண்டே பற்றவேணு மென்னுமிடம் சொல்லி, மஹாராஜரை இசைவித்துக் கொள்ளுகையாலே அவனும் ததீ₃யரைப் புருஷகாரமாகக் கொண்டல்லது கைக்கொள்ளானென்னுமிடம் சொல்லி, 4. **"ராவணோ நாம து₃ர்வ்ருத்த:"** என்று சொல்லிக் கொண்டு வருகையாலே ஶரணம் புகுவார் தந்தாமுடைய நிக்ருஷ்டதையை முன்னிட்டுக்கொண்டு ஶரணம் புக வேணுமென்னுமிடம் சொல்லி, ஆக இப்படிகளாலே அதி₄ காரிக்கு வரும் விஶேஷணங்கள் சொல்லிற்று.

---

a பெரியதிரு 6.8.5.

ப்ரபத்தி பண்ணினர் விஷயத்தில் தாம் செய்யும் திறங்கள் அறிந்திருக்கையாலே 1. **"ஸுக்,ரீவம் ஶரணம் க,த:"** 2. **"ஸுக்,ரீவம் நாத,மிச்ச,தி"** என்று தமக்கு ஒரு ஆபத்து வந்தாலும் ப்ரபத்தியைப் பண்ணுமித்தனை; ஶரணாக,தனும், தனக்குப் ப,லித்ததென்னை 3. **"ஸமுத்,ரம் ராக,வோ ராஜா ஶரணம் க,ந்துமர்ஹதி"** என்று ஶரண்ய னுக்கு உபதே,ஶிப்பதும் இத்தையே; ராவணனைப் போலன்றிக்கே 4. **"ப்ரக்ருத்யா த,ர்மஶீலஸ்து"** என்று த,ர்மஶீலராகையாலே அலச்சாயல் பட்டிருந்தது; ஶரணாக,திகொண்டுகந்த கடலுக்கு ஒரு குளப்படியன்றோ இக்கடலென்னக் கடலின் காலிலே விழுந்து ஶரணம் புகுவர் இவர், அந்த கோயாசையிறே இது.

ஸர்வேஶ்வரன் ஸ்வாதந்த்ர்யத்தாலே முசித்து ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை ஆசைப்பட்டு 5. **"பிதரம் ரோசயாமாஸ"** என்று வந்து பிறந்தான்; அங்கே முடியை வைக்கப் பார்த்தார்கள்; கைகேயீ வரவ்யாஜத்தாலே அத்தைப் தப்பினன்; 6. **"ஆவாஸம் த்வஹமிச்ச,ாமி"** என்று ரிஷிகளுக்குப் பரதந்த்ரனாக ஆசைப்பட்டான்; அவர்களே 7. **"ந்யாயவ்ருத்தா யத,ாந்யாயம் பூஜயாமாஸுரீஶ்வரம்"** என்று ஸ்வாதந்த்ர்யத்தை வெளியிடத் தொடங்கினர்கள்; அவர்களை விட்டு அறிவிலாக்குரங்கின் காலைப்பிடிப்போமென்று பார்த்தான்; அவன் 8. **"த,ாஸோ஽ஸ்மி"** என்று எதிரே காலைப்பிடித்தான்; அத்தைவிட்டு 'கடலொரு தே,வதை, நம்மைக் கும்பிடு கொள்ளும்' என்று பார்த்து அதின் காலைப்பிடித்தான்; அவன் சதிரனன்றோ; 'வந்து முகங்காட்டினல் ஶரண்யராவுதோம்' என்று முகங் காட்டானே; இவர்க்குப் பழைய ஸ்வாதந்த்ர்யம் தலையெடா, 'கொண்டுவா தக்கானை' என்பரே; 'நாம் ஶரண்யராய் அவன் நியாம்யனாய் வந்தால் அவன்தன் ஸ்வரூபம் நஶிக்கும்; தொடுத்த அம்புக்கிலக்காமேமாகில் ரூபநாஶமிறே உள்ளது' என்று முகங்காட்டுமே; முகங்காட்டுந்

தன்னபோதுமிறே ஸ்வாதந்த்ர்யமுள்ளது; வந்து முகங் காட்டினால் முன்புத்தை அபராத₄த்தை அறியானே; கோழைகளைப்போலே, 'உனக்கன்றுகாண்; இவ்வம்புக் கிலக்காக உன் எதிரிகளைக் காட்டு' என்னுமித்தனையிறே; இதுவிறே ஸ்ரீராமாயணத்தில் ஸங்க்₃ரஹேண ப்ரபத்தி விஷயமாக நின்றநிலை.

மஹாப₄ாரதத்தாலும் ஆபந்நராஞர்க்கு வஸிஷ்ட₂ாதி₃கள் உபதே₃ஶிப்பது ப்ரபத்தியை.

எங்ஙனேயென்னில்; 1. **"ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாத₄வ:। க₃ச்ச₂த்₄வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷப₄ா:॥"** என்று விதி₄க்க, அநுஷ்ட₂ாந வேளையிலே 2. **"த்₃ரௌபத்₃யா ஸஹிதாஸ்ஸர்வே நமஶ் சக்ருர் ஜநார்த்த₃நம்"** என்று நமஸ்ஸு ஶரணபர்யாய மாகையாலே ப்ரயோகி₃த்தார்கள்.

த்₃ரௌபதி₃யும் அந்தப் பெரிய ஸபை₄யிலே து₃ஶ் ஶாஸநனென்பானொரு முறட்டுப்பயல் வாசாமகோ₃சர மான பெரிய பரிப₄வத்தைப்பண்ண, த₄ர்மம் ஜயிக்கிறது என்றிருந்த ப₄ர்த்தாக்கள் ஐவரும், த₄ர்மமில்லை யென்றி ருந்த நூற்றுவரும், த₄ர்மாத₄ர்மவிவேகம் பண்ணமாட்டாத த்₃ரோணபீ₄ஷ்மாதி₃களும், இப்படி நிர்லஜ்ஜரான ஸபை₃ யிலே ப்ரபத்தியை வெளியிடப்பிறந்த ப₄ாக்₃யவதியாகை யாலே லஜ்ஜையுடையவனை நினைத்து; 3. **"ஶங்க₂சக்ர க₃த₃ாபாணே"**—என் கையில் வளையோபாதியோ உன்கை யில் ஆயுத₄மும்? என் பரிப₄வத்தைப் போக்குதல், உன் கையில் திருவாழியைப் போக்குதல் செய்யவேணும். த்யாக₃க்கொடி கட்டிக்கிடக்கப் புறங்கால் வீங்குவாரைப் போலே திருவாழியேந்தியிருக்க நான் பரிப₄வப்படுவதே! a எப்பொழுதும் கைகழலாநேமியான் நம் மேல்வினை கடி வானிறே. 3. **"த்₃வாரகாநிலய"**—இப்போது முதலியார்

a பெரியதிருவ 87.

வர்த்திக்கிறது ஸ்ரீவைகுண்ட₂த்திலேயோ? 1. "அச்யுத"— பற்றினாரைக் கைவிடோம் என்றது பண்டோ? இன்றன்றோ. 1. "கோ₃விந்த₃"—கோ₃விந்தா₃பி₄ஷேகம் பண்ணிற்று தளர்ந்தாரை நோக்குகைக்கன்றோ, கடலிலே வர்ஷித்தாற் போலே நித்யஸூரிகளை ரக்ஷிக்கவோ? 1."புண்ட₃ரீகாக்ஷ"— இக்கண்படைத்தது ஆர்த்தரக்ஷணம் பண்ணவன்றோ, து₃ஶ்ஶாஸநாதி₃களையிடுவித்துப் பரிப₄விக்கைக்கோ? 1. "ரக்ஷ மாம் ஶரணாக₃தாம்"—"என் கைவிட்டேன்" என்று ப்ரபத்தியைப் பண்ணினாள்.

2. "கோ₃விந்தே₃தி யதா₃க்ரந்த₃த் க்ருஷ்ணா மாம் தூ₃ரவாஸிநம்। ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந்நாபஸர்பதி॥" என்று ஶரண்யப்ரபா₄வமும் சொல்லிற்றிறே.

3. "அத₂ பாதகபீ₄தஸ்த்வம் ஸர்வபா₄வேந பா₄ரத। விமுக்தாந்யஸமாரம்பே₄ நாராயணபரோ ப₄வ॥" என்று த₄ர்ம புத்ரனுக்கு த₄ர்மதே₃வதை 'ஸர்வப₄ரந்யாஸத்தைப்பண்ணி யிராய்' என்றானிறே. 4. "தஸ்மாத் த்வம் லோகப₄ர்த்தாரம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஶ்ரிய:பதிம்। கோ₃விந்த₃ம் கோ₃பதிம் தே₃வம் ஸததம் ஶரணம் வ்ரஜ॥" 5."தமநந்த₃மஜம் விஷ்ணுமச்யுதம் புருஷோத்தமம்। ப₄க்திப்ரியம் ஸுரஶ்ரேஷ்ட₂ம் ப₄க்த்யா த்வம் ஶரணம் வ்ரஜ॥" என்றும், 6. "ஸோऽஹம் தே தே₃வதே₃வேஶ நார்ச்சநாதௌ₃ ஸ்துதௌ நச। ஸாமர்த்₂யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத₃ மே॥" என்றும்*.

ஸ்ரீஶாண்டி₃ல்ய ப₄க₃வானும், ஸம்ஸாரிகளுடைய து₃ர்க்க₃தியையும் ப₄க₃வல்லாப₄த்தில் சீர்மையையும் அநுஸந்தி₄த்துத் தான் க்ருபாளுவாகையாலே, 7. "வ்ருதை₂வ ப₄வதோ யாதா பூ₄யஸீ ஜந்மஸந்ததி:। தஸ்யாமந்யதமம் ஜந்ம ஸஞ்சிந்த்ய ஶரணம் வ்ரஜ॥"—கெடுவிகாள்! ஸம்ஸார பாந்த₂ராய் ஜநித்துப்போருகிற நீங்கள் ஒரு ஜந்மத்தைப் பூவுக்கிட்டோம் போலவன்று; ஒரு ப்ரபத்தியைப்பண்ணிப்


* பங்க்திகள் விடுபட்டிருக்கலாம்.

பிழைக்கவல்லிகோளே என்று தன் செல்லாமையாலே சொன்னானிறே.

க்ருஷ்ணனும் 1. **"மாமேவ யே ப்ரபத்,யந்தே. மாயா மேதாம் தரந்தி தே"** என்று "நான் கர்மாநுகு,ணமாகப் பிணைத்த ஸம்ஸார து,ரிதம் ஒருவராலும் விடுத்துக்கொள்ள வொண்ணாது, என்னையே உபாயமாகப் பற்றினார்க்கு நானே போக்கிக் கொடுப்பேன்" என்றும், 2. **"மாமேகம் ஶரணம் வ்ரஜ"** என்றும் தூசித்தலையிலே ப்ரபத்தியைப் பல் விடங்களிலும் விதி,த்துப் போருகையாலும் இம்மஹா பா,ரதத்துக்கும் இதுவே தாத்பர்யம்.

ஜிதந்தையிலும் ஶ்வேதத்,வீபவாஸிகள் ஸர்வேஶ்வரனுடைய புறப்பாட்டிலே கண்ணழகுக்குத்தோற்று 3. **"ஜிதந்தே புண்ட,ரீகாக்ஷ நமஸ்தே விஶ்வபா,வந"** என்பது, 4. **"ஸர்வதா,ா சரணத்,வந்த்,வம் வ்ரஜாமி ஶரணம் பரம்"** 5. **"ந காமகலுஷம் சித்தம்"** என்பது 6. **"தவ சரண த்,வந்த்,வம் வ்ரஜாமி"** என்பதாய் அடிதோறுமடிதோறும் ப்ரபத்தி பண்ணுவர்கள்.

இப்ரபத்திதன்னை 7. **"அஹமஸ்ம்யபராத,ாநாம் ஆலயோऽகிஞ்சநோऽக,தி:। த்வமேவோபாயபூ,தோ மே ப,வேதி ப்ரார்த்த,நாமதி:। ஶரணாக,திரித்யுக்தா ஸா தே,வேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம்॥"** என்று ருத்,ரன் அதி,காரிஸ்வரூபத்தையும் ப்ரபத்தி லக்ஷணத்தையும் சொல்லி, இத்தை ஸர்வேஶ்வரன் பக்கலிலே ப்ரயோகி,ப்பான் என்று சொன்னானிறே.

8. **"அநந்யஸாத்,யே ஸ்வாபீ,ஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம் ததே,கோபாயதாயாச்ஞா ப்ரபத்திஶ் ஶரணாக,தி:॥"** என்று இவ்விரண்டு ஶ்லோகமும் ப்ரபத்தியினுடைய லக்ஷணவாக்யம்.

9. **"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் । ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ கோ,ப்த்ருத்வவரணம் தத,ா ॥**

**ஆத்மநிக்ஷேபகார்ப்பண்யே ஷட்₃வித₄ா ஶரணாக₃தி:"** என்று இது ப்ரபத்திக்கு அங்க₃ம்—ப்ரபந்நனை பின்பு பிறக்கும் ஸம்ப₄ாவித ஸ்வப₄ாவங்கள் என்று சொல்லிற்று.

ஶ்ருதியும் இத்தை உபப்₃ரும்ஹணம் பண்ணின ரிஷிகளும் இத்தை ஆத₃ரித்து, அவர்கள் ஆத₃ரிக்குமளவன்றிக்கே 1. **"த₄ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதா₃ஶ்ச"** என்று 'ஆப்தபரிக்₃ரஹமே ப்ரப₃லப்ரமாணம், வேத₃ம், இவர்கள் பரிக்₃ரஹத்துக்கு ஸங்கோசித்துப் போமித்தனை' என்கையாலே இதுக்கு ஆப்தபரிக்₃ரஹம் ப்ரப₃லம்.

எங்ஙனேயென்னில், த₄ர்மபுத்ரன் — 2. **"ஶ்ருத்வா த₄ர்மாநஶேஷேண பாவநாநி ச ஸர்வஶ:"** என்று புருஷார்த்த₂ ஸாத₄நங்களையும் மற்றும் பரமபாவநமானவற்றையும் ஸ்ரீபீ₄ஷ்மரோடே அதி₄கரித்து, 2. **"புநரேவாப்₄யபா₄ஷத"** என்று திரியட்டுக்கேட்டான். கீழ் ஸர்வத்தையும் அதி₄கரித்தானாகில் திரியட்டுக் கேட்டதுக்குக் கருத்தென்? என்னில்; 'நான் ஶாஸ்த்ரக₃ம்யஜ்ஞாநத்தாலே அதி₄கரித்தது புருஷார்த்த₂மாகமாட்டாது' என்று.

3. **"கோ த₄ர்மஸ்ஸர்வத₄ர்மாணாம் ப₄வத: பரமோ மத:"** என்று கீழச்சொன்ன த₄ர்மங்களெல்லாவற்றிலும் வைத்துக் கொண்டு உமக்கு அபி₄மதமாக நிர்ணயித்திருக்கவேணும்; ஏதென்ன 4. **"ஏஷ மே ஸர்வத₄ர்மாணாம் த₄ர்மோऽதி₄கதமோ மத:"** என்று 'த₄ர்மங்களில் வைத்துக்கொண்டு அதி₄கமாக நினைத்திருக்கும் அர்த்த₂மிதுவேகாண்' என்று சொன்னான்.

அசலையான ப₄க்தியாலே ஆஶ்ரயிக்கப்பாராயென்று உபதே₃ஶிக்கையாலே ஆசார்யருசிபரிக்₃ருஹீதமே ப்ரப₃ல ப்ரமாணம்.

ஸ்வஶக்தியால் பிறந்த ஜ்ஞாநமின்றிக்கே நிர்ஹேதுக ப₄க₃வத்ப்ரஸாத₃லப்₃த₄ஜ்ஞாநமுடையராய், நமக்குப் பரமாசார்யர்களான ஆழ்வார்களும் ஸம்ஸாரப₄யபீ₄தராய்

ப்ரபத்தியைப் பண்ணுவது. ப்ராப்யத்தில் த்வரையாலே ப்ரபத்தியைப் பண்ணுவதாகாநிற்பர்கள்.

எங்ஙனேயென்னில் a "நெறிவாசல் தானேயாய் நின்றானை" என்றும், b "மாலடியே கைதொழுவான்" என்றும், b "அந்தரமொன்றில்லையடை" என்றும், c "தன் விலங்கை வைத்தான் சரண்" என்றும் பொய்கையாழ்வார் d "பனிமலராளங்கம் வலங்கொண்டானடி-பைங்கமலமேந்திப் பணிந்தேன்" என்றும், e "அவரிவரென்றில்லையரவணை யான்பாதமெவர் வணங்கி" என்றும், f "அன்றிடரடுக்க ஆழியான்பாதம் பணிந்தன்றே" என்றும் பூதத்தார்; g "அரணும் நமக்கென்றும் - ஆவலவன்" என்றும், h "சக்கரத்தான் தாள்முதலே நங்கட்குச் சார்வு" என்றும் பேயார்; i "பழகியான் தாளே பணிமின்" என்றும், j "அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சலென்னவேண்டுமே" என்றும் திருமழிசைப்பிரான்; k "திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்" என்றும், l "உன்னருள் புரிந்திருந்து" என்றும் பெரியாழ்வார்; m "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்றும், n "வேங்கடத்துச் செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்" என்றும் நாச்சியார்; o "திருக்கமலபாதம் வந்து" என்று திருப்பாணாழ்வார்; p "கற்றினம் மேய்த்த வெந்தை கழலிணை பணிமின்" என்றும், q "சிலையினால் இலங்கைசெற்ற தேவனே தேவனாவான்" என்றும், r "உன் கடைத்தலை இருந்துவாழும் சோம்பரையுகத்தி" என்றும் தொண்டரடிப்பொடியாழ்வார்; s "உன் சரணல்லால் சரணில்லை" என்றும், t "உன் பற்றல்லால்

a முதல்திருவ 4. b ஷை 58. c ஷை 59. d இரண்டாம்திருவ 4. e ஷை 12. f ஷை 13. g மூன்றாம்திருவ 78. h ஷை 99. i நான்-திருவ 22. j திருச்சந்த 92. k பெரியாழ்திரு 5.4.7. l ஷை 5-4-1. m திருப்பாவை 1. n நாச்-திரு 8-7. o அமலனாதி 1. p திருமாலை 9. q ஷை 7. r ஷை 38. s பெருமாள்திரு 5-1. t ஷை 5-3.

பத்றிலேன்'' என்றும், a "உன்னிணையடியேயடைய லல்லால்" என்றும், b "மற்றுரும் பத்றிலேன் என்றவனைத் தான் நயந்த கொற்றவேல்தானை". என்றும் பெருமாள்; c "நலம்புரிந்திறைஞ்சும் திருவடியடைந்தேன்" என்றும், d "நாயேன் வந்தடைந்தேன்" என்றும், e "ஆற்றேன் வந்தடைந்தேன்" என்றும், f "உலகமளந்த பொன்னடியே அடைந்துய்ந்தேன்" என்றும், g "கண்ணனே களைகண் நீயே" என்றும் h "நின்னடியிணை பணிவன் வருமிடரகல மாற்றோ வினையே" என்றும் திருமங்கையாழ்வார்; i "அலர்மேல் மங்கையுறைமார்பா" என்றும், i "புகலொன்றில்லாவடியேனுன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே" என்றும், j "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும், k "முகில்வண்ணனடியை அடைந்தருள் சூடியுய்ந்தவன்" என்றும், l "கழல்களவையே சரணாகக் கொண்ட குருகூர்ச்சடகோபன்" என்றும், m "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்றும், n "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றுங்குறைவேண்டேன்" என்றும் o "ஆத்தன் தாமரையடியன்றி மற்றிலமரணே" என்றும், p "ஆவிக்கோர்பற்றுக் கொம்பு நின்னலால் அறிகின்றிலேன்" என்றும் நம்மாழ்வார்; q "மேவினேனவன் பொன்னடி" என்றும், r "அன்பன் தன்னையடைந்தவர்கட்கெல்லாம் அன்பன்" என்றும் ஸ்ரீமதுரகவிகள்.

ஆக, இவ்வாழ்வார்களைப் பின்சென்ற ஆளவந்தாரும் 1. **"ந த,ர்மநிஷ்டே,ாஸ்மி ......... அகிஞ்சநோऽநந்யக,தி:"** 2. **"தவ சரணயோ:"** என்றும், 3. **"அஶரண்யஶரண்யாம் அநந்யஶரண: ஶரணமஹம் ப்ரபத்,யே"** 4. **"லோக விக்ராந்தசரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபே,ா"** என்றும் எம்பெருமானாரும்.

---

a ஷை 5-5. b ஷை 5-10. c பெரியதிரு 1-6-2. d ஷை 1-9-1. e ஷை 1-9-8. f ஷை 5-8-9. g ஷை 4-6-1. h திருவெழுகூற்றிருக்கை. i திருவாய் 6-10-10. j ஷை 5-10-11. k ஷை 7-2-11. l ஷை 5-8-11. m ஷை 5-7-10. n ஷை 5-8-3. o ஷை 10-1-6. p ஷை 10-10-3. q கண்ணி 2. r ஷை 11.

ஆக இப்படி வேத₃ங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும், **1. "லோகேஶ த்வம் பரோ த₄ர்ம:"** என்றும், **2. "ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம:"** என்றும், **3. "க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்"** என்றும் விரோதி, நிவ்ருத்தி பூர்வகமான நிரதிஶய புருஷார்த்த₂மான கைங்கர்யத்தைப் பெற்று உஜ்ஜீவிக்கைக்கு இதுவல்லது ஸித்₃தோ₄பாயமில்லை; ஆதலால் இப்படி ப்ராமாணிகனான சேதநனுக்கு ப்ரபத்தியைப் பற்றவடுக்கும் என்று அறுதியிட்டார்கள்.

நம் ஆசார்யர்களுக்கு இங்ஙனே இருப்பதொரு நிர்ப்ப₃ந்த₄முண்டு.

லோகயாத்ரையில் பரிமாற்றங்களடைய வேத₃யாத்ரையிலே சேர்த்து அநுஸந்தி₄ப்பதொன்று உண்டு.

அது எங்ஙனேயென்னில், பாதிரிக்குடியிலே, ப₄ட்டர் ஒரு வேடனகத்திலே வர்ஷத்துக்கு ஒதுங்கி எழுந்தருளியிருக்கச்செய்தே வேடனைப்பார்த்து 'இவ்விடங்களிலே விஶேஷமென்?' என்று கேட்டருள, "இங்கே புதுசாக ஒரு விஶேஷம் கண்டேன்; காட்டில் ஒரு ம்ருக₃ம் பிடிக்கப் போனேன்; அங்கே முயல்குட்டியைப் பிடித்துக் கூட்டிலே விட்டேன்; இதினுடைய தாய் பலகாலம் தொடர்ந்துவர அத்தைப் பின்சாய்ந்து உள்வாசலளவும் வந்துபுகரப் புக்கவாறே முன்னே வந்து த₃ண்ட₃னிட்டுக் கிடந்தது. பின்னை இத்தைவிட்டேன்" என்று இவ்விஶேஷத்தை விண்ணப்பம் செய்தான். இத்தைக்கேட்டு ப₄ட்டரும் வித்₃த₄ராய் அருளிச்செய்கிறார் — **4. "மாமேகம் ஶரணம் வ்ரஜ"** என்கிற ஜ்ஞாநம் முயலுக்கில்லை; **5. "அரி:ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:"** என்கிற ஜ்ஞாநம் வேடனுக்கில்லை; இவையன்றிக்கேயிருக்க கா₄துகனாயிருக்கிற இவன் இது செய்யக்கடவனானால், பரமசேதனனானவன் பக்கலிலே ப்ரபத்தியை உபயோகி₃த்தால் என்னாகக் கடவனோ? என்று வித்₃த₄ரானார்.

தானும் தன்னுடைய ஸ்த்ரீயுமாக ஒரு காட்டிலே யிருக்க, நாம் சென்று புக்கவாறே துணுக்கென்று எழுந்தி ருந்து பூஹுமானங்களைப் பண்ணிச் செய்தானிவன். நம் வாசியறிந்து செய்தானொருவனல்லன்; இவன் ஜந்மமிது; பரஹிம்ஸைபண்ணி ஜீவிக்கும் வ்ருத்தம். இப்படியிருக்க இவன் நம்மைக் கொண்டாடிற்றுத் தான் அபிமானித்த நிழலுக்குள்ளொதுங்கினோமென்றிறே. இனி, பரமசேதநனுடைய பரமக்ருபாளுவான ஸர்வேஶ்வரன் அபிமானித்து உகந்தருளின திவ்யதேஶங்களைப்பற்றி வர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களளவிலே இவன் என் நினைத்திருக்கிறானோ? என்று விம்மினார்.

மற்றை நாளையில் ப்ரயாணத்திலே தூரமெழுந் தருளின ஆயாஸத்தாலே அமுதுசெய்து ஜீயர்மடியிலே கண்வளர்ந்தருளினார். அப்போது விடிந்தது; "கெட்டேன், என்னை எழுப்பிற்றிலீர், கால்நடையே வழிநடந்த விடாயை மதியாதே என்பக்கலிலே இத்தனை பரிவராயிருந்தவிடம் உமக்கு நாம் சொன்ன த்வயத்தை விஶ்வஸித்த மனமிறே" என்று அருளிச்செய்தார்.

பட்டர்தாம் எம்பாரோடே ரஹஸ்யம் கேட்டாராயிறே யிருப்பது. 'இப்படியிருக்கச்செய்தே எம்பெருமானார் இவர் யதிஸ்தராகிறபோது இவர் கையிலே புஸ்தகத்தைக் கொடுத்து செவியிலே த்வயத்தைச் சொல்லி பெருமாள் திருவடிகளிலே கொண்டுபுக்கு 'நான் இவருக்கு வேண்டும் வித்யை கொடுத்தேன், நீரிவருக்கு வேண்டும் ஆயுஸ்ஸைக் கொடுத்தருளவேணும்' என்று பெருமாள் திருவடிகளிலே காட்டிக்கொடுத்து த்வயத்தைச் சொல்லி ஶரணம்புக்கார்.

சிறியாத்தான் எம்பார் ஸ்ரீபாதத்திலே ஸ்ரீபாஷ்யம் வாசித்துச் சமைந்துபோகக் காலமானவாறே தீர்த்தமாடி ஈரப்புடவையோடே தண்டனிட்டுக் கிடந்தான். 'இதுவென் தாஶரதி! எழுந்திராய்; உனக்கு அபேக்ஷையென்' என்று

கேட்டருள, "ம்லேச்ச தேஶத்தேறப்போகப் புகாநின்றேன்; அங்கு நமக்குத் தஞ்சமாக ஒருவார்த்தை கேட்கலாவாரில்லை. திருவுள்ளத்தில் ப்ரியதமமாகவும், ஹிததமமாகவும் அறுதியிட்டிருக்கும் அர்த்தத்தை எனக்கு அருளிச்செய்யவேணும்" என்ன, '(எம்பெருமானார் ஸ்ரீபாதமே, பெரியபிராட்டியார் ஸ்ரீபாதமே, பெருமாள் ஸ்ரீபாதமே) த்வயத்தில் அறுதியிட்டிருக்கும் அர்த்தத்துக்கு மேற்பட ஶ்ரேஷ்டமாயிருப்பதொரு அர்த்தமில்லை' என்று அருளிச்செய்தார்.

சிறியாத்தானை அழைத்து "திருக்கண்ணபுரத்திலே ஆய்ச்சி ஸ்ரீபாதத்தேறப்போய் வரவல்லையே, உனக்குக் கூலி கொடுக்கும்" என்று அருளிச்செய்தார். அப்படியே அவ்வருகே போய் ஆய்ச்சி ஸ்ரீபாதத்திலே ஸேவித்து விடை கொண்டு போரப்புக்கவாறே சிறியாத்தானுக்கருளிச் செய்த வார்த்தை,—"எம்பெருமான் நாராயணனாயிருக்க, அநாதிகாலம் அவ்வுறவையறுத்துக் கொண்டிருந்த சேதநனை அவன் திருவடிகளிலே பிணைக்கைக்குப் பற்றுசு பிராட்டியுண்டென்று நிர்ப்பரனாயிரு" என்று அருளிச்செய்தார். இத்தைக் கேட்டருளி எம்பார் "தட்டுக்கூலிக்கும் அவ்வருகே போய்த்து" என்றருளிச்செய்தார். "இப்படியேயிருப்பதொரு அர்த்தமில்லையாகில் ஸம்ஸாரிசேதநனுக்குள்ளதடைய எம்பெருமானுடைய நிக்ரஹத்துக்கு ஹேதுக்களாய்க் கிடக்க, எம்பெருமானை ப்ராபிக்க வேறொரு பொருளில்லை" என்று அருளிச்செய்தார்.

பெற்றி ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்தாளொரு கொற்றியம்மைக்கு குருபரம்பரை முன்னாக த்வயத்தை அருளிச் செய்துவிட்டார். அவள் சிறிது நாள் கழித்தவாறே "எனக்குப் பிராட்டி திருமந்த்ரத்தை அருளிச்செய்ய வேணும்" என்று கேட்க, இவளுக்கு இனி பிராட்டி திருமந்த்ரத்தைச் சொல்வோமாகில், இன்னமொரு மந்த்ரத்தைச் சொல்லென்று இத்தை அநாதரித்துப் போமென்று பார்த்து, "எல்லா மந்த்ரங்களிலுமுள்ளதெல்லா

முண்டென்னும் நிஷ்டை₂ பிறக்கைக்காக "பிராட்டி திருமந்த்ரமும் உனக்குச் சொன்ன த்₃வயத்திலந்தர்க₃தம், அங்கே சொன்னேம்காண்" என்று அருளிச்செய்தார். "பிராட்டி திருமந்த்ரத்தை ஜபித்துக் கொள்ளும் ப₂லத்தை இதுதன்னையே ஜபித்துக்கொள்" என்று அருளிச்செய்தார்.

வீராணத்து அருளாளப்பெருமாளெம்பெருமானர், நஞ்ஜீயர் ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயிக்கைக்கு நம்பிள்ளையைப் புருஷகாரமாகக் கொண்டுவந்தார். இவனைக் காட்டிக் கொடுத்து 'இவனுக்கு ஹிதத்தை அருளிச்செய்ய வேணும்' என்ன, "ஸம்ஸாரிகளில் ஒருவர்க்கும் ஹிதம்சொல்ல லாகாதென்று ஸ்வப்நம் கண்டேன்; அவனுக்கு நீர் சொல்லும்" என்று அருளிச்செய்தார். "ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயிக்க வந்தவனுக்கு, எழுந்தருளியிருக்கச்செய்தே நான் சொல்லுகையாவதென்? அவனுக்கு ஸ்ரீகோ₃பால மந்த்ரத்தையாகிலும் அருளிச்செய்யலாகாதோ? ஸ்ரீபாத₃த் திலே ஆஶ்ரயித்தானய்ப்போந்தபடி" என்று விண்ணப்பம் செய்ய, 'ஆனலப்படி செய்கிறேம்' என்று ஆயர்தேவின் திருவடிகளிலே கொண்டு கு₃ருபரம்பரை முன்னக த்₃வயத்தை அருளிச்செய்தார். இத்தைக்கண்டு "அருளிச் செய்யப்புக்கதொன்று, தலைக்கட்டிற்று ஒன்றுயிருந்தது" என்ன, "என்னையொழியப்போமாகில் போகிறதென்றி ருந்தேன், இனித்தான் சொல்லவேண்டின பின்பு நான் விஶ்வஸித்திருக்குமதொழிய வேறென்றைச் சொன்னே மாகில் அவனை விப்ரலம்பி₄த்தேனகாதோ?" என்று அருளிச்செய்தார்.

நம்பிள்ளை நஞ்ஜீயரை "அல்லாத த₃ர்ஶநங்களுக்கு அதி₄காரிகளும் போரவுண்டாய், ப்ரமாணங்களும் போர வுண்டாயிராநின்றது. நம் த₃ர்ஶநத்துக்கு ப்ரமாணங்களும் சுருங்கி அதி₄காரிகளும் சுருங்கியிருப்பானேன்?" என்று கேட்க, "அதி₄காரிகளன்றியிலேயொழிந்தது ஸம்ஸாரிகள்

அஜ்ஞராகையாலே; எங்ஙனேயென்னில், 'ஜ்யோதிஷ்டோமாதி₃களைப் பண்ணி ஸ்வர்க்க₃த்தை லபி₄ப்பான்' என்று ஶாஸ்த்ரங்கள் சொன்னால் அவ்வளவும் போகாதே ஜ்யோதிஷ்டோமாதி₃கள் பண்ணிப் புத்ரபஶ்வந்நாதி₃களைப் புருஷார்த்த₂மாகப் பற்றிப் போராநின்றார்கள். ஸ்வர்க்க₃ந் தான் நரகஸ்தா₂நமென்னும்படியாயிருக்கிற அபுநராவ்ருத்தி லக்ஷணமோக்ஷத்துக்கு அதி₄காரமுண்டாகப்போகிறதோ?" என்று அருளிச்செய்தார். 'ப்ரபத்திக்கு ப்ரமாணாபேக்ஷையில்லை என்றிருப்பன். 1. **"யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" 2. "ஆநந்தோ₃ ப்₃ரஹ்ம" 3. "ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகோ஽ஸௌ"** என்கிற நிர்தோ₃ஷ ப்ரமாணத்தாலே அவன் ஸர்வஜ்ஞன், ஸர்வஶக்தன், ப்ராப்தன், ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகன் என்னுமிடம் ப்ரஸித்₃த₄ம்; நாம் அஜ்ஞர், அஶக்தர் என்னுமிடமும் நமக்கே தெரியும்; ஆகையாலே அமிழ்ந்துமவன் நெடியவன் கையைப் பிடிக்கச் சொல்லவேணுமோ? தன் ஆபத்தே உபதே₃ஶிக்கும்' என்று அருளிச்செய்தார்.

எம்பெருமானார்க்கு இங்ஙனேயிருப்பதொரு நிர்ப்ப₃ந்த₄முண்டு; எங்ஙனேயென்னில், — கண்ணழிவற்றதொரு வைஷ்ணவனைக் கண்டால் அவனுக்கு ப்ரீதிக்குப் போக்குவீடாக ஒருகால் த்₃வயத்தை அருளிச்செய்வர். பிறருடைய து₃ர்க்க₃தியைக் கண்டால் திருவுள்ளத்தால் இரங்கி அருளிச்செய்வதும் த்₃வயத்தை. பெரியகோவில் நாராயணன் மகனை ஏகாயனரோடே கூடியிருக்கக்கண்டார்; அவனைக் கையைப்பிடித்துக்கொண்டு பெருமாள் திருவடிகளிலே புக்கு "பா₃லனாகையாலே உனக்கொரு ப்ரமாணங்களால் ஸ்தா₂பிக்கப்போகாது; நான் ஸகலவேத₃ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து பார்த்தவிடத்தில் இவ்வாத்மாவுக்குத் தஞ்சம் த்₃வயத்துக்கு அவ்வருகு கண்டிலேன். நீயும் அத்தை விஶ்வஸித்திரு" என்று ஸ்ரீஶட₂கோபனையெடுத்துச் சூழறுத்துக் கொடுத்தார். அவரும் அன்று தொடங்கி த்₃வய நிஷ்ட₂ராய்ப் போனார்.

எம்பெருமானார் வெள்ளை சாத்திப் போய் மலராஜ்யத்தேற எழுந்தருளித் திருநாராயணபுரத்திலே எழுந்தருளியிருக்கச் செய்தே அம்மங்கியம்மாள், பிரிவாற்றாமையாலே திரு மேனியும் வெளுத்து வைத்₃யர்களும் பரிஹாரம்பண்ண வென்று உபக்ரமித்தவாறே "நிதா₃நமறிந்து பரிஹரிக்க வேண்டாவோ, எம்பெருமானார் பிரிவாற்றாமையாலே வந்தது, அவர் திருவடிகளிலே கொண்டுபோய் விடுங்கோள்" என்றார். அங்கேற நடந்து அவ்விடத்திலே எழுந்தருளி யிருக்கச்செய்தே அந்தவிடத்திலே எம்பெருமானாரைக் கண்டு அவர் அணைத்துத் தழுவிக்கொண்டார். உடம்பில் ரோகம்போய்த்து. "என்னைப் பிரிந்து உடம்பு வெளுத்து இத்தனை தூ₃ரம் வந்தவருக்கு நாம் பண்ணும் உபகார மென்?" என்று பார்த்தருளி, "முன்புசொன்ன த்₃வயத்துக்கு மேற்படக் கண்டிலோம்; அது தன்னையே இன்னம் கேட்க லாகாதோ?" என்று ஒருரு த்₃வயத்தை அருளிச்செய்தார்.

ஆழ்வான் பரமபத₃த்தேறப் போகைக்குப் பெருமாள் பாடே வீடுபெற்றுக் கூட்டத்திலே வந்திருக்கச்செய்தே "இனிப்பெருமாளை நம்மால் விலக்கப்போகாது. இனி அந்திமகாலத்திலே என்னை அழைத்து வாருங்கோள்" என்று, அந்திமஸமயத்திலே எழுந்தருளி ஆழ்வானுக்குச் செவியில் த்₃வயத்தை அருளிச்செய்தார், அருகிருந்த முதலிகள் 'இஸ்ஸமயத்திலே த்₃வயத்தைச் சொல்ல வேணுமோ?' என்று கேட்க, "ஆழ்வான் ப்ரக்ருதியறியீர் களோ, இத்த₃சையிலே த்₃வயத்தைச் சொன்னால் கர்ப்பூர நிகரத்தை நாவிலே இட்டாற்போலே இருக்குங்காண்" என்று அருளிச்செய்தார்.

எம்பெருமானார் அந்திமத₃சையிலே முதலிகளடையத் திரண்டிருந்து "எங்களுக்குத் தஞ்சமாய்த் திருவுள்ளத்துக்கு ப்ரியமாயிருப்பதொன்றை நாங்கள் விச்வஸித்திருக்கும்படி அருளிச்செய்யவேணும்" என்று கேட்க, "எல்லோரும் பூ₃ர்வ்யத்திலே வாஸனை பண்ணுகையே நமக்கு ப்ரியம்;

அதுக்கு மாட்டாதார் திருநந்தவனஞ் செய்து திருப்படித் தாமம் பறித்துத் திருமாலையெடுக்கையும் ப்ரியதரமாயிருக்கும்; அது எல்லாருக்குமொக்கச் செய்யப்போகாது, த்₃வயத்திலே வாஸநை பண்ணி விஶ்வஸித்திருக்கை மிகவும் ப்ரியதமமாயிருக்கும்" என்று அருளிச்செய்தார்.

அநந்தாழ்வான் பேரருலராஜ்யத்திலே எழுந்தருளின போது ஜீயருடைய பூர்வாஶ்ரமத்தில் ஐஶ்வர்யமும் இவர் செருக்கும் இருக்கும்படியை அநுஸந்தி₄த்துப் போந்தானாய், ஜீயர் இவற்றையடைய விட்டு ஸந்ந்யஸித்து எழுந்தருளின போது அவரைக்கண்டு 'உன்னுடைய மார்த்த₃வமும் உன்னுடைய செருக்கும் கிடக்க ஸந்ந்யஸித்தாய்'என்று அருளிச் செய்து, 'இனி செய்யலாவதில்லையிறே'என்று குளிரநோக்கி, 'திருவேங்கடமுடையானே! இவனைப் பார்த்தருள வேணும்' என்று வேண்டிக்கொண்டு, "திருமந்த்ரத்திலே பிறந்து த்₃வயத்திலே வளர்ந்து த்₃வயநிஷ்ட₂னுவாய்" என்று வாழ்த்தினான். "கோயிலேறப் போனால் ஒரு மட₂மும் கார்யமுமாகக் கடவது; அப்போது ப₄ட்டரை த்₃ருஷ்டா த்₃ருஷ்டங்கள் இரண்டுக்கும் கடவரென்று நினைத்துப் போவதொரு போக்குண்டு; அதிலே ஒன்றை ப₄ட்டரைக்கொண்டு கொள்வது; ஒன்றைப் பெருமாளைக் கொண்டு கொள்வது. அங்ஙனே செய்யாதபோது நீர் ஒருகோடி த்₃ரவ்யத்தை ப₄ட்டர் கையிலே கொடுத்தாலும் அவர் செருக்காலே அரைக்ஷணத்திலே அழித்துவிடுவர்; உம்முடைய காரியத்திலாராயாதபோது நீர் ப₄ட்டரை வெறுப்புதிராகில் உமக்கு விநாஶமாம். பெருமாளோடே வெறுத்தபோது ப₄ட்டரைக் கொண்டு தீர்த்துக்கொள்ளலாம்" என்று பணித்தான்.

சிறியாண்டான் அம்மாள் அந்திம த₃ஶையிலே பணித்த வார்த்தை:— "திருவேங்கடமுடையான் தன் ஸ்வரூபத்தை மறந்து என் ஸ்வரூபத்தை அநுஸந்தி₄த்தானாகில் எனக்குப் பழைய நரகம் போராது, இன்னமும் சில நரகம் ஸ்ருஷ்டிக்கவேணுமென்றிராநின்றேன்; என் ஸ்வரூபத்தை

மறந்து தன் ஸ்வரூபத்தை அநுஸந்தி₄த்தானாகில் எனக்குப் பழைய திருநாடு போராது, இன்னமும் சில திருநாடு ஸ்ருஷ்டிக்கவேணுமென்றிராநின்றேன்".

மருதூர்நம்பி அந்திமத₃ஶையிலே தம்முடைய ஊரிலே எம்பெருமானார் எழுந்தருளியிருக்கச்செய்தே விண்ணப்பஞ் செய்த வார்த்தை,— "மூன்று ஜன்மம் திருவடிகளிலே ப்ராதிகூல்யம் பண்ணின ஶிஶுபாலன் திருவடிகளைப் பெற, அநேக ஜந்மாபராத₄த்தைப் பண்ணிப்போந்த நான் திருவடிகளைப் பெறுதொழிகை வழக்கோ ?" என்ன, அப்போதே திருவடிகளைப் பெற்றார்.

நம்பி திருவழுதிவளநாடு தா₃ஸர்க்கும் பிள்ளைதிரு நறையூரரையர்க்கும், ப₄ட்டர் அருளிச்செய்த வார்த்தை:— "பொய்யேயாகிலும் அவனுகந்தருளினதொரு கோயிலிலே புக்குப் புறப்பட்டுத் திரியவே அந்திமத₃ஶையிலே எம்பெருமான் முகங்காட்டும்; அவன் முகங்காட்டவே இவ்வாத்மா திருந்தும்" என்று. "எம்பெருமானுக்கு இல்லாதது மாய் இவ்வாத்மாவுக்கு உள்ளதுமாய் அவனைப் பெறுகைக்குப் பெருவிலையனுமாயிருக்கும் உபாயம் அஞ்ஜலி" என்று அருளிச்செய்தார். க₃ருட₃முத்₃ரைக்குப் பாம்பு அகப்படுமாபோலே ஸர்வஶக்திகனான ஸர்வேஶ்வரனும் **1. "அஞ்ஜலி: பரமா முத்₃ரா"** என்கிறபடியே அகப்படும்.

ஆக, இப்படி ஆசார்யருசிபரிக்₃ருஹீதமாயாய்த் திருப்பது த்₃வயம். "இதினுடைய ஆநுபூர்வியைச் சொல்லி அதுக்குள்ளீடான அர்த்த₂த்தைச் சொல்லிவிட அமையாதோ ? இவ்விதிஹாஸங்களெல்லாம் திரள நீர் சொன்னத்துக்கு ப்ரயோஜநமென் ?" என்னில், புறம்புள்ள ப்ரமாணங்கள் கிடக்கச்செய்தே இத்தனையும் ஆப்தர் பரிக்₃ரஹித்துப் போந்ததொன்றாகாதே என்று கேட்கிறவனுடைய நெஞ்சிலே இதினுடைய வைப₄வம்பட்டு ருசிவிஶ்வாஸங்களுக்கு உறுப்பாக.

'திருக்கண்ணபுரத்திலே செருகவம்மான் எல்லா அபராத₄ங்களையும் 'க்ஷமஸ்வ' என்று வேண்டிக்கொள்வதும் செய்தார். க்ஷமித்தோமென்று ப₄க₃வது₃க்தியுமுண்டாயிருந்தது; **1. "ந க்ஷமாமி க₃த₃ாசந"** என்று என்னடியார் திறத்தில் அபராத₄ம் பண்ணினவர்களை ஒருக்காலும் பொறேனென்றுண்டாயிருந்தது; இது சேருகிறபடி என்' என்று கேட்க, "ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்திலே அபசாரத்தைப் பண்ணிவைத்துத் தன் முன் நின்று ஶரணம் புகுமன்று பொறேனென்றது. புருஷகாரத்தை முன்னிட்டுக் கொண்டு ஶரணம் புகுருகையாலே இவர்க்கு 'க்ஷமஸ்வ' என்னத் தட்டில்லை, அவனுக்கும் பொறுத்தோமென்னத் தட்டில்லை. ஆகையாலே அஸஹ்யாபசாரத்துக்கு இதுவே பரிஹாரம். ப்ரஜைபண்ணின குற்றம் தாய்பொறுத்தால் பின்னை ஆராய்வாரில்லையிறே."

'ப₄க்திநிஷ்ட₂னுக்குக் கர்மாவஸாநத்திலே மோக்ஷமாவானேன்? ப்ரபந்நனுக்கு ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாவானேன்? **2. "தஸ்ய தாவதே₃வ சிரம்"**—அவனுக்கு அவ்வளவே விளம்ப₃ம். **2. "அத₂ ஸம்பத்ஸ்யே"**—அநந்தரம் ஸம்பந்நனாகக்கடவன் என்கிற ஶ்ருதி இருவர்க்கும் பொதுவன்றோ; கர்மாவஸாநே மோக்ஷமென்னவுமாம், ஶரீராவஸாநே மோக்ஷமென்னவுமாம் என்று இத்தை நியமிப்பாரார்?' என்ன,-ப₄க்திநிஷ்ட₂னுக்கு இருக்கவிருக்க உபாஸநம் பக்வமாகையாலே ப₂லமுண்டு; ப்ரபந்நனுக்குக் கர்த்தவ்யமொன்றில்லாமையாலும், ஈஶ்வரனுக்கு அஜ்ஞாநாஶக்திகளில்லாமையாலும், இங்கொரு ப்ரயோஜனம் இல்லாமையாலும், ப்ரபந்நனுக்கு ஶரீராவஸாநத்திலே மோக்ஷம். 'ஆனால் ஜ்ஞானம் பிறந்தபோதே ஶரீரம்போகாதொழிவானென்?' என்னில், 'ப₄க₃வத்₃விஷயத்திலே தீவ்ர ஸம்ஸர்க்க₃மில்லாமையாலே இவனுக்குள்ள மாத்ரந்தான் கர்மக்ஷயம் பிறந்தவாறே ஶரீரம் விடுமாகில் அநந்தரம் நரகமாயிருக்குமாகில் அத்தைத் தப்பி எம்பெருமானைப் பெறலாயிருக்கு

மாகில் பெற்ருலாகாதோ?' என்றன்ரே இவனிருப்பது. இப்போதே ப்ரக்ருதியை விடவேணுமென்னும் த்வரை ப்ரபத்தி காலத்தில் பிறவாமையாலும்; இவனிருந்தால் பின்னையுஞ் சில அநுகூலரைக் கிடைக்குமென்று ஈஶ்வரனுக்குமிருக்கையாலும் ப்ரியமாயிருக்கும். 'ஆனலிருக்குந்தனை நாளும் ஸுகோ₂த்தரமாக வையாதொழிவானென்' என்னில், து₃:க்கோ₂த்தரமாயிருக்கச்செய்தேயும் இத்தை விடமாட்டாதவன் இதிலே அல்பஸுக₂ம் காணுமாகில் பின்னை அவ்வருகு நினையானே. அவனுக்கு ஹிதமே பார்க்குமவனுகையாலே உபாஸகனுக்கு இருக்கவிருக்க இதிலே உபாஸநம் பக்வமாகிறவோபாதி இவனுக்கும் இருக்கவிருக்க இதிலே ருசி பிறக்கைக்குடலாம்; நம்மையே உபாயமாகப் பற்றினுகில் இனிமேல் ஒருபோகியான அநுப₄வங்கொடுக்கவிருந்தோமாகில் இனி ஶரீரம் விடுந்தனையும் கர்மாநுகு₃ணமாக ஜீவிக்கிருனென்று உதா₃ஸீநனுயிருக்கும்.

நஞ்ஜீயர் 'உபாஸகருக்குச் சொன்ன க்ரமமடைய ப்ரபந்நனுக்கு தே₃ஹயாத்ராஶேஷமாக ரஹஸ்யத்திலே உண்டு' என்று அருளிச்செய்வர். "திருமந்த்ரத்தை இடக்கைப் பத்துக்கொண்டெண்ணுகை கர்மயோக₃ம்; அதினுடைய அர்த்தா₂நுஸந்தா₄நம் பண்ணுகை ஜ்ஞாநயோக₃ம்; அவ்வர்த்த₂மிருக்கை ப₄க்தியோக₃ம்; ப₄க்திபரவஶராய் எம்பெருமானே நிர்வாஹகனென்று துணிகை ப்ரபத்தி."

ப்ரபந்நர்தான் த்ரிவித₄ராயிறே இருப்பது. ப₄க்தி பரவஶராய் ஸாத₄நாநுஷ்டா₂நக்ஷமரல்லாமையாலே ஶரணம்புகுவாரும், ஸ்வரூபஜ்ஞாநத்தாலே அவனைப்பற்றியிருப்பாரும், இவையிரண்டுமொழியத் தந்தாமுடைய அஜ்ஞாநாஶக்திகளையும் அவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி₃களையும் முன்னிட்டுக்கொண்டு ஶரணம் புகுவாருமாய் த்ரிவித₄ராயிருப்பர். உபாயம் எம்பெருமானே. அங்க₃ம் அவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி₃ கு₃ணங்கள்.

திருமந்த்ரத்தையொழிந்த ஶாஸ்த்ரங்களடைய சேதநனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகள்கொண்டே எம்பெருமானைப் பெறலாமென்றது. திருமந்த்ரம் இவனுடைய பாரதந்த்ர்யஜ்ஞாநத்தாலே பெறலாமென்றது. சரமஶ்லோகம் 'இவனுடைய பாரதந்த்ர்யமும் விலக்காமைக் குறுப்பாமித்தனை; ப₄க₃வத்ப்ரபத்தியே சரமமான உபாயம்' என்கிறது. "த்₃வயத்தில் இவனுக்கு விடச்சொன்ன அர்த்த₂மும் அழகியதாக விடவும் போகாது பற்றச்சொன்ன அர்த்த₂மும் அழகியதாகப் பற்றவும் போகாது. 'நாமோ அஜ்ஞர், அஶக்தர், அப்ராப்தர்; ஈஶ்வரன் ஸ்வதந்த்ரன், நாமென் செய்யக்கடவோம்' என்று அஞ்சுவார்க்கு அஞ்சவேண்டாதபடி க்ஷேமமே பச்சையாக, நின்றநிலையிலே பெறலாம்" என்கிறது.

ஆகையாலே க்ரியையாலும், ஜ்ஞாநத்தாலும், துணிவினாலும் பெறவேணும். ருசிமாத்ரம் உடையார்க்குப் பாசுரமாத்ரத்தாலே பெறலாமென்கிறது த்₃வயம். a "மாதவனென்றதே கொண்டு" என்றும் **1. "ஶரணமித்யபி வாசமுதை₃ரிரம்"** என்றும் சொல்லக்கடவதிறே.

வாச்யங்களில் ஸர்வேஶ்வரனுக்கு அவ்வருகில்லாதாப் போலே உபாதே₃யமான வாசகஶப்₃த₃ங்களில் த்₃வயத்துக்கு அவ்வருகில்லை. b "மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்னக்கடவதிறே. தன்னாலே எம்பெருமானைப் பெறப் பார்க்கை இளிம்பு. தன்னைப் பொகட்டு எம்பெருமானாலே எம்பெருமானைப் பெறப்பார்க்கை சதிர். இவனுடைய அபராத₄மும் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யமும் ஜீவியாதபடி பண்ணவல்ல பெரியபிராட்டியார் ஸம்ப₃ந்த₄ங் கொண்டே எம்பெருமானைப் பெறப்பார்க்கை மாசதிர்.

ஜ்ஞாநகர்மாநுக்₃ருஹீதையான ப₄க்தியோக₃த்தை முமுக்ஷுவுக்கு ப₄க₃வத்ப்ராப்தி ஸாத₄நமென்று ஶாஸ்த்ரங்கள் சொல்லாநிற்க, நம் ஆசார்யர்களும் ஆழ்வார்களும்

a திருவாய் 2.7.3. b ௸ 2.7.1.

இவர்களுக்குள்ள ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களில் குறைந்த ப்ரபந்நராயிருப்பாரும் இப்ரபத்தியை விஶ்வஸித்து நிர்ப₄ரராயிருக்கிறது என்கொண்டென்னில்: அநாதி₃காலம் பண்ணின பு₃த்₃தி₄பூர்வாபராத₄ங்களுக்கு ப்ராயஶ்சித்த மாகையாலும், ஸர்வாதி₄காரமாகையாலும், ஆசார்யருசி பரிக்₃ருஹீதமாகையாலும், கர்மாவஸாநம் பார்த்திராதே தே₃ஹாவஸாநத்திலே மோக்ஷத்தைத் தருகையாலும், மற்றையுபாயங்களுக்கு அங்க₃மாக விதி₄த்து இவ்வுபாயத்துக்கு அத்தைத் தவிர்த்துக் கொடுக்கையாலும், விரோதி₄யினுடைய ப்ராப₃ல்யத்தாலும், தன்னுடைய ரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தியில்லாமையாலும், ரக்ஷகனுக்கு ரக்ஷிக்கை முறைமையாகையாலும், நம் ஆசார்யர்கள் த்₃வயத்தையே தஞ்சமாக நினைத்திருப்பர்கள்.

எம்பெருமானுடைய க்ருபை உபாயம். க்ருபைக்கு அடி இவனுடைய க₃திஶூந்யதை. இவனுடைய ஸுக்ருதமானுலோவென்னில், ஸுக்ருததுஷ்க்ருதங்களிரண்டும் அப்ரயோஜகம்; எங்ஙனேயென்னில்: ருஷிகளையும் காகவிபீ₄ஷஞாதி₃களையுமொக்க ரக்ஷிக்கையாலே.

திருமந்த்ரம் ப்ராப்ய ப்ரத₄ாநம். சரமஶ்லோகம் ப்ராபக ப்ரத₄ாநம். த்₃வயம் இவை இரண்டிலும் ருசியுடையார் இவ் விரண்டையும் சேர அநுஸந்தி₄க்கும்படி சொல்லுகிறது. திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறது. ஸ்வரூபாநுரூபமான உபாயவித₄ாநம் பண்ணுகிறது சரமஶ்லோகம். விஹிதமான உபாயத்தினுடைய அநுஷ்ட₂ாநம் த்₃வயம். திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறதென்கிறவிடம் ஆத்மஸ்வரூபம் சொல்லுகிறதோ பரஸ்வரூபம் சொல்லுகிறதோ வென்னில், பரஸ்வரூபம் ஸித்₃த₄மாகையாலே அதில் ஸாதி₄க்கவேண்டுவதில்லை. இவனுடைய ஸ்வரூபமிறே திரோஹிதமாய்க் கிடக்கிறது. அத்திரோத₄ாயகம் போய் நிஷ்க்ருஷ்டவேஷமான ஸ்வரூபம் இன்னதென்றறிய வேண்டுகையாலே ஆத்மஸ்வரூபம் சொல்லுகிறது.

பரஸ்வரூபஞ் சொல்லுகிறதென்றாலும் ஈஶ்வரஸ்வரூபம் ஸம்பாதி₄க்கிறதொன்றன்றிறே. அறியாதவனுக்குச்சொல்லு கிறதாகையாலே பரஸ்வரூபம் சொல்லுகிற திருமந்த்ரம் ப்ராப்யப்ராத₄ாந்யமென்றபோதே ப்ராபகம் அப்ராத₄ாந் யேந உண்டாகக் கடவது. எப்பத₃த்திலே என்னில், திருமந்த்ரத்தில் நமஸ்ஸிலே "ம:" என்று ஷஷ்டி₂விப₄க்தி– எனக்கு என்கையாலே; அத்தை நகாரம் நிஷேதி₄க்கை யாலே தன்னோடு தனக்குண்டான அந்வயத்தைத் தவிர்க் கிறது. தான் என்று வைத்து தன்னோடு தனக்கு அந் வயமில்லையென்னுமிடத்துக்குக் கருத்து என்னென்னில், தன்னோடு தனக்கு அந்வயமில்லையென்றவிடம் ஸ்வரக்ஷ ணத்தில் ப்ராப்தியில்லாத பாரதந்த்ர்யத்தைச் சொன்னபடி. இப்பரதந்த்ரவஸ்துவுக்கு ஸ்வதந்த்ரன் ரக்ஷகனாகவேண்டு கையாலே அவ்வழியாலே ஈஶ்வரனுடைய உபாயபா₄வம் ஆர்த்த₂மாகவும் சொல்லிற்றாகக்கடவது. அங்ஙனன்றியே ஸ்த₂ாநப்ரமாணத்தாலே ஶாப்₃த₃மாகவும் சொல்லக்கடவது. ஸ்த₂ாநப்ரமாணங்கொண்டு ஶாப்₃த₃மாதல் ஆர்த்த₂மாதல் செய்யவேண்டுகையாலே அப்ராத₄ாந்யேந ப்ராபகம். ப்ராப்யப்ரத₄ாநமே திருமந்த்ரம். திருமந்த்ரம் ஸ்வரூப ஜ்ஞாநவைஶத்₃யஹேதுவென்று அநுஸந்தி₄க்கக் கடவோம். த்₃வயம் இவற்றினுடைய அர்த்த₂ாநுஸந்த₄ாநமென்று அநுஸந்தி₄க்கக்கடவோம். சரமஶ்லோகம் இவற்றுக்கு ப்ரமாணமென்று அநுஸந்தி₄க்கக்கடவோம். திருமந்த்ரம் ஸகல வேத₃தாத்பர்யமென்று அநுஸந்தி₄க்கக்கடவோம். சரமஶ்லோகம் ஶரண்யனுக்கு அபி₄மதமென்று அநுஸந் தி₄க்கக்கடவோம். த்₃வயம் ஆசார்யருசிபரிக்₃ருஹீத மென்று அநுஸந்தி₄க்கக்கடவோம்.

ஆக எல்லார்க்கும் அபி₄மதலாப₄த்துக்கும் அநபி₄மத நிவ்ருத்திக்கும் அவனே உபாயமாக ஸ்வீகரிக்கை. இது தன்னில் நிஷ்டை₂யில் அருமையாலே இதுதான் ரஹஸ்யமு மாய் அதி₄க்ருதாதி₄காரமுமாயிருக்கும்.

த்₃வயமென்று திருநாமமானபடி எங்ஙனேயென்னில், உபாயோபேயமான அர்த்த₂த்₃வயத்துக்கும் வாசகமான வாக்யத்₃வயத்தையுடையதாகையாலே. இத்தால் கர்மாத்₃யுபாயாபா₄ஸநிவ்ருத்திபூர்வகமான உபாயத்துக்கும் ஐஶ்வர்யாத்₃யுபேயாபா₄ஸ நிவ்ருத்திபூர்வகமான உபேயத்துக்கும் தந்த்ரேண புஷ்கலமாகச் சொல்லுகையாலே வாக்யத்₃வயமென்று திருநாமமாய்த்து. இதுதான் நம் ஆசார்யர்களுக்கு நித்யாநுஸந்தா₄நமுமாயிருக்கும். இது சொன்னவன் ஆசார்யனாகவுங்கடவன். கேட்டவன் ஶிஷ்யனாகவுங் கடவதாயிருப்பதொரு வ்யவஸ்தை₂யுண்டு. இதுதான் வாக்யத்₃வயமென்று மந்த்ரத்வமுண்டு, திருமந்த்ரத்தினுடைய விஶத₃நுஸந்தா₄நமாகையாலே. மந்த்ரத்வமாவது— **1. "மநநாந்மந்த்ர:"** ஆதல், **2. "மந்தாரம் த்ராயத இதி மந்த்ர:"** ஆதல். யாவதா₃யுஷம் மநநம்பண்ணினாரையும் த₄ரிப்பிக்குமதாகையாலே மந்த்ரத்வமுண்டென்கிறது.

ருஷிச்ச₂ந்தோ₃ தே₃வதைகளில்லையாவானேன்? என்று நஞ்ஜீயரைக் கேட்க இது சொல்லுகிற அர்த்த₂த்துக்குக் கூட்டுவேண்டுமன்றன்றோ இதுக்குக் கூடவேண்டுவதென்று அருளிச்செய்தார்.

"த்₃வயத்தில் அர்த்த₂த்தை பு₃த்₃தி₄பண்ணி ஶப்₃தா₃ந்தரத்தாலே திருமுன்பே விண்ணப்பம் செய்யலாமோ?" என்று நஞ்ஜீயரைக் கேட்க, 'இஶ்ஶப்₃த₃ந்தன்னாலே விண்ணப்பம் செய்யவேணும்' என்று அருளிச்செய்தார். 'இப்பாசுரத்துக்குச் சுரக்கும் அர்த்த₂ம் வேறொரு பாசுரத்துக்குச் சுரவாதுகாண்' என்று அருளிச்செய்தார்.

அவதாரிகை முற்றிற்று.

இதுதான் ஆறு பத₃மாய் பத்து அர்த்த₂ம் அநுஸந்தே₄யமாயிருக்கும். (ஸ்ரீமந் நாராயண சரணௌ) என்று ஸமஸ்த பத₃ம். மேலுடைய வ்யஸ்தபத₃ம். நாலிரண்டர்த்த₂ம் சேர்ந்திருக்குமது ஸமாஸபத₂ம், இதுதன்னில் முதற்

பத₃ம் ப்ரக்ருதி ப்ரத்யயங்களாயிருக்கும். "**ஸ்ரீ**" என்ற விடம் ப்ரக்ருதி. "**மந்**" என்றவிடம் ப்ரத்யயம்.

"**ஸ்ரீ**" என்கிற திருநாமத்துக்கு 1. "**ஶ்ரிஞ்-ஸேவாயாம்**" என்கிற தா₄துவிலே முடிக்கையாலே ஸேவ்யமானை என் கிறது. ஆராலே ஸேவிக்கப்படும்? ஆரை ஸேவிக்கும்? என்னுமபேக்ஷையிலே **2. "ஸ்ரீயத இதி ஸ்ரீ:"** என்றும், **3. "ஶ்ரயத இதி ஸ்ரீ:"** என்றும் வ்யுத்பத்தியாய் இதில் "**ஸ்ரீயதே**" என்று தன்னையொழிந்த த்ரிவித₄ாத்மவர்க்க₃த்தா லும் ஆஶ்ரயிக்கப்படுமவளென்கிறது. "**ஶ்ரயதே**" என்கை யாலே இவள்தான் எம்பெருமானை ஆஶ்ரயியாநின்று ளென்று ஸ்ரீயென்னும் திருநாமத்தையுடையவளாயிருக்கும். இத்தால் தன்னையொழிந்த த்ரிவித₄ சேதநருடைய ஸ்வ ரூபஸ்தி₂தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் இவளுடைய கடா க்ஷாதீ₄நமாயிருக்குமென்னுமிடத்தையும், இவள்தன்னுடைய ஸ்வரூபஸ்தி₂திப்ரவ்ருத்திகள் இவனுடைய கடாக்ஷாதீ₄நமா யிருக்குமென்னுமிடத்தையும் சொல்லிற்று.

ஆக இவர்களைக் குறித்துத் தான் ஸ்வாமினியாய் அவனைக் குறித்துத் தான் பரதந்த்ரையாயிருக்கையே இவள் தி₃வ்யாத்மஸ்வரூபத்துக்கு ஸ்தி₂தியென்னுமிடத்தைச் சொல்லிற்று.

இத்திருநாமந்தான் புருஷகாரத்தைக் காட்டுகிறது, தன்னையொழிந்தார்க்குத் தான் ஸ்வாமினியாய், அவனைக் குறித்துப் பரதந்த்ரை என்னுங்காட்டில் புருஷகாரத்தைக் காட்டுமோ இஶ்ஶப்₃த₃ம்? என்னில்: புருஷகாரமாவாருடைய லக்ஷணம் இதுக்குண்டாகையாலே. புருஷகாரமாவார்க்கு இரண்டிடத்திலும் குடல்துடக்கு உண்டாகவேணும். தன்னை யொழிந்தாரோடு தனக்குக் குடல்துடக்கு இல்லையாகில் கார்யம் தீரக்கழியச் செய்யக் கூடாது. கார்யங்கொள்ளு மிடத்தில் தனக்கு ப்ராப்தியில்லையாகில் கார்யம் வாய்க்கச் செய்விக்கக் கூடாது. ஆக இரண்டிடத்தில் ப்ராப்தியும்

புருஷகாரமாவார்க்கு அபேக்ஷிதமாகையாலே இத்திருநாமந்தான் புருஷகாரத்தைச் சொல்லிற்று.

இன்னமும் 'நிருக்தத்திலே இவ்வர்த்த,ந்தன்னை முக்தகண்ட,மாகச் சொல்லிற்று' என்று நஞ்ஜீயர் அருளிச் செய்வதொன்றுண்டு. அதாவது, **1. "ஶ்ருணோதீதி ॥ ஶ்ரீ:"**, **2. "ஶ்ராவயதீதி ॥ ஶ்ரீ:"** என்னும் வ்யுத்பத்தியாலும். அதில் **1. "ஶ்ருணோதீதி ஶ்ரீ:"** என்று ஸம்ஸாரப,யபீ,தரான சேதநர்கள் தந்தாமுடைய ஆர்த்தியையும் அபராத,த்தையும் ஈஶ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் அநுஸந்தி,த்து, 'இப்படி இருக்கிற எங்களை அவன் திருவடிகளிலே சேர்க்க வேணும்' என்று திருமுன்பே விண்ணப்பம் செய்தால், ஆபி,முக்,யம்பண்ணிச் செவிதாழ்த்துக் கேட்குமென்னுமிடத்தையும், **2. "ஶ்ராவயதீதி ஶ்ரீ:"** என்று தான்கேட்ட வார்த்தையை அவன் செவியிற்படுத்திப் பொறுப்பித்துச் சேர்க்குமிடத்தையும் சொல்லுகிறது என்பர்கள்.

இவ்வர்த்த,ம் வ்யுத்பத்திஸித்,த,மேயன்று. ப்ரமாணஸித்,த,மும். **3. "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ"**, **4. "அஸ்யேஶாநா ஜக,த:"** என்று ஜக,த்துக்கு ஈஶானை என்கையாலே இவர்களைக் குறித்து ஸ்வாமிநி என்னுமிடத்தைச் சொல்லிற்று.

**5. "நித்யைவைஷா ஜக,ந்மாதா விஷ்ணோஶ் ஶ்ரீரநபாயிநீ"**, **4. "விஷ்ணுபத்நீ"** என்கையாலே அவனைக் குறித்துப் பரதந்த்ரை என்னுமிடம் சொல்லிற்று.

இப்படியொழிய சேதநரோடு ஸமானை என்னுதல் ஈஶ்வரனோடு ஸமானை என்னுதல் சொல்லுவது சேராது.

ஆனல் **1. "பும்ப்ரத,ாநேஶ்வரேஶ்வரீம்"** என்று அவனிலுமிவளுக்கு ஆதி,க்யஞ்சொல்லுகிற ப்ரமாணங்கள் சேருகிறபடி எங்ஙனேயென்னில், அவளுடைய போ,க்,யதையிலுண்டான வைப,வத்தைப்பற்ற அவனுக்குண்டான

ப்ரணயித்வ பாரதந்த்ர்யமாமித்தனை. a "பித்தர் பனிமலர் மேற்பாவைக்கு" என்றும், b "மலராள் தனத்துள்ளான்" என்றும், c "மாமலர் மங்கை மணநோக்கமுண்டான்" என்றும்; d "அல்லிமலர்மகள் போக மயக்குக்களாகியும் நிற்குமம்மான்" என்றும் சொல்லுகையாலே தன் போ₄க்₃ய தையாலே அவன் நெஞ்சைத் துவக்கிக்கொண்டாய்த் திருப்பது, அவன் ஸ்வரூபம் எல்லை காணவொண்ணாத வைப₄வம்போலே இவளுடைய ஸ்வரூபம் அணுவாயிருக்கச் செய்தே இவளுடைய போ₄க்₃யதையிலுண்டான வைப₄வம் சொல்லிற்றுகக்கடவது. அவன் ஸ்வரூபமெல்லைகாணிலும் காணவொண்ணாதுகாணும் இவளுடைய போ₄க்₃யதையில் ஏற்றமிருக்கும்படி. இவளுடைய ஸ்வரூபம் அணுவாயிருக்கச் செய்தே போ₄க்₃யதையாலே அவனதில் இவள் ஸ்வரூபத் துக்கு வைப₄வஞ்சொல்லலாமோ ? என்னில், முருக்கம் பூவுக்கும் செங்கழுநீர்ப் பூவுக்கும் நிறம் ஒத்திருக்கச்செய்தே தனக்கு விஶேஷணமான பரிமளத்தாலே செங்கழுநீர் பெருவிலையனாய்த்தென்றால் வேறொன்றாலே வந்த உத்கர்ஷ மாகாதிறே. அப்படி இவள் ஸ்வரூபமும் அவனுக்கு ஶேஷமாயிருக்கச்செய்தேயும் அவனிலும் இவளுக்கு ஏற்றம் சொல்லிற்றென்றால் வேறொன்றாலே வந்த ஏற்றமாகாதிறே; ஆகையாலே ஜக₃த்து இருவர்க்கும் ஶேஷமாயிருக்கை யாலே ஜக₃த்துக்குப் பூஜ்யையாயிருக்கும். ஸ்வரூபேண ப்ரணயித்வத்தாலே அவனுக்குப் பூஜ்யையாயிருக்கும். **1. "த்ரயாணாம் ப₄ரதாதீ₃நாம் ப்₄ராத்ரூணாம் தே₃வதா ச யா"** என்றும், **2. "தத்ர பூஜ்யபதா₃ர்த்தோ₂க்தி பரிபா₄ஷா ஸமந் விதः. ஶப்₃தோ₃₹யம்"** என்று பூஜ்யவாசகமாயிருக்கை யாலே பூஜ்யை என்கிறது.

இது ப்ரமாண ஸித்₃த₄மேயன்று, லோகஸித்₃த₄ம். எங்ஙனேயென்னில், ப்ரஜைகளைக்குறித்துத் தாய் ஸ்வாமினி யாய்,ப₄ர்த்தாவைக் குறித்துப் பரதந்த்ரையாயிருக்கச்செய்தே

a திருநெடுந்தாண்டகம் 18. b மூன்றுந்திருவ 3.
c பெரியதிருமொழி 8-10-1. d திருவாய் 3-10-8.

இவள் போக்யதையைப்பற்ற அவன் பரதந்த்ரனான் என்ன, அவளுடைய ஸ்வாதந்த்ர்யம் சொல்லாதிறே; இவன் ப்ரணயித்வமாமித்தனையிறே. இப்ரணயித்வத்தாலே ப்ரஜைகளுக்கு ரக்ஷணமாய்த் தலைக்கட்டுகிறது. எங்ஙனே யென்னில், தாஸதாஸிகள் பணிசெய்கைக்காகவும் புத்ராதிகளுடைய வ்யுத்பத்திக்காகவும் பிதாவானவன் நியமித்தால் மாதாவின் நிழலிலே ஒதுங்கிநின்று அவன் இவளுக்கும் உதவியனானவளவிலே இவற்றின் குற்றத்தைப் பார்க்கக்கடவதோ ? என்று இவள் காட்டிக்கொடுக்கக் காணாநின்றோமிறே. ஆகையாலே புருஷகாரமும் லோக ஸித்தம், ஆக இப்பதத்தால் புருஷகாரம் சொல்லிற்று.

ஆக இங்குத்தை ஸ்ரீமத்பதத்துக்கு அவனில் இவளுக்கு ஏற்றமென்னென்னில்: ப்ராப்தி இருவர்க்குமொத்திருக்கச் செய்தே இவைதன்னுடைய அபராதங்களைப் பொறுப்பித்து, அவன் திருவடிகளிலே சேர்ப்பிக்கும் ஏற்றஞ்சொல்லிற்று. இனிமேல் ப்ரத்யயம், [ஶ்ரயதே] என்கிற வர்த்தமாநத்தை வ்யாக்யாநம்பண்ணுகிறது. (மந்) என்று மதுப்பைச் சொல்லுகிறது. 1. "நித்யயோகே மதுப்" என்னக்கடவதிறே. ௧ "இறையுமகலகில்லேன்" என்றும், 2. "நித்யாநபாயிநீ" என்றும் சொல்லுகிறபடியே ஒருகாலும் பிரியாதிருக்கும் என்கிறது. இத்தால் பலித்ததென்னென்னில், புருஷகார பூதையான இவள் நித்யவாஸம் பண்ணுகையாலே ஆஶ்ரயிப்பார்க்குக் காலம் பார்க்கவேண்டா என்கிறது. அதாவது—ஈஶ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் தந்தாமுடைய ஸம்ஸாரித்வத்தையும் அநுஸந்தித்துக் கைவாங்க வேண்டாதபடியிருக்கை. அவனுடைய ஸர்வ ஜ்ஞத்வத்தையும் தந்தாமுடைய ஸாபராதத்வத்தையும் அநுஸந்தித்து இழக்கவேண்டாதபடியிருக்கை. ஆகையாலே அவனும் ஸர்வகாலமும் ஆஶ்ரயணீயனுமாயிருக்கும்; இவளுடைய ஸந்நிதியாலே ஸர்வகாலமும் ஆஶ்ரயிக்கலாயிருக்கும். ஏதேனும் காலமும், ஏதேனும் அதிகாரமுமாம்.

௧ திருவாய் 6-10-10.

ருசிபிறந்தபோதே இவர்களை அவன் திருவடிகளிலே சேர்ப்பிக்கும் பாசுரமென்னென்னில்: "ஒருதலை ஜந்மம், ஒருதலை மரணம், நடுவே காம க்ரோத₄ லோப₄ மோஹ மத₃ மாத்ஸர்யங்கள். தே₃வர் பெருமையிது, அவற்றின் சிறுமையிது; உமக்கு ஸத்₃ருஶமான பச்சை இவர்களால் இடப்போகாது, இவர்களிடம் பச்சை கொண்டு வயிறுநிறையும் ஸாபேக்ஷரல்லர் நீர்; ஆனபின்பு இவர்களைப் பார்த்தால் உம்மை வந்து கிட்டவொண்ணாது; உம்மைப் பார்த்தாலும் உம்மைக் கிட்டவொண்ணாது; நாமே இவற்றுக்கு விலக்கடிகளைப் பண்ணிவைத்து இவர்களைக் கைவிடுகையாவது, உம்முடைய நாராயணத்வம் ஒருவாயாய், உம்முடைய ரக்ஷண ஸ்வரூபத்தையும் இழக்குமித்தனை காணும்; உம்முடைய ஸ்வரூப ஸித்₃த்₄யர்த்த₂மாக இவர்களைக் கைக்கொள்ள வேணுங்காணும்; உம்முடைய பேற்றுக்கு நான் காலைக் கட்டி இரக்கவேண்டிற்றே?" என்று இவள் சொன்னால் அவன் சொல்லுமது ஏதென்னில்: "1. 'அத₃ண்ட்₃யாந் த₃ண்ட₃யந் ராஜா' என்கிறபடியே ஸாபராத₄ரை த₃ண்டி₃க்கச் சொல்லுகிற ஶாஸ்த்ரம் ஜீவியாதபடியோ நாம் ஸ்வரூபம் ஸம்பாதி₃ப்பது" என்னும். "ஆனால் ஶாஸ்த்ரம் ஜீவிக்கவேணுமாகில் உம்முடைய க்ருபை ஜீவிக்கும்படி யென்? அத்தைச் சொல்லிக்காணும்" என்னும் இவள்; "ஆனாலும் ஶாஸ்த்ராநுவர்த்தநம் பண்ணவேணுங்காண்" என்னும் அவன். "ஆனால் உம்முடைய க்ருபையும் ஜீவித்து ஶாஸ்த்ரமும் ஜீவிக்கும்படி வழியிட்டுத் தருகிறேன், அத்தைச் செய்யப்பாரும்" என்னுமிவள். "ஆனால் சொல்லிக்காண்" என்னும் அவன். "உம்முடைய பக்கலிலே வைமுக்₂யத்தைப் பண்ணி விஷயப்ரவணராயிருக்கிறவர்கள் பக்கலிலே த₃ண்டி₃க்கச் சொல்லுகிற ஶாஸ்த்ரத்தை விநியோக₃ங் கொள்வது, உம்முடைய பக்கலிலே ஆபி₄முக்₂யத்தைப் பண்ணி என்னைப் புருஷகாரமாகக்கொண்டு உம்மை ஆஶ்ரயித்தவர்கள் பக்கலிலே உம்முடைய க்ருபையை விநியோக₃ங் கொள்வது" என்று அவனைக் கேட்பித்துச் சேரவிடும்.

இப்படி காரியப்பாடாகச் சொல்லி, புருஷகாரமாகைக் காகவே நித்யவாஸம் பண்ணுகிறது அவனுக்கு போ₄க₃ ரூபமாகவன்றோவென்னில், ஆம்; போ₄க₃ரூபமாகை எங்ஙனேயென்னில், அவளோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே அவனுக்குப் பிறந்த ஹர்ஷத்துக்குப் போக்குவீடாக இவளுக்கென்ன உபகாரத்தைப் பண்ணுவோமென்று தடுமாறுவதொரு தடுமாற்றமுண்டு; அதுதான் ப்ரணய கலஹத்தில் பரிமாறும் பரிமாற்றத்திலே என்றும் தோற்றுமோபாதி இவன் தடுமாறி நோக்கும் அந்நோக்கு இவன் கண்ணிலே தோற்றும். அப்போதைத் தடுமாற்றத்துக்குப் போக்கடி காட்டாதபோது அவனுடைய ஆஶ்ரயம் இழக்க வருமென்னுமத்தாலே 'இவற்றினுடைய அபராத₄த்தைப் பொறுத்துக் கைக்கொள்ளீர்' என்று தன் திருப்புருவத் தாலே ஒரு நெளி நெளிக்கும். இவன் அவள் புருவம் நெளிந்தவிடத்திலே குடநீர்வழிக்குமவனாகையாலே இவற்றையும் ரக்ஷித்துத் தானும் உளனும். இதுகாணும் இவளுக்கும் இவனுக்குமுண்டான சேர்த்தியிருந்தபடி. ஆகையால் இரண்டு வகைக்கும் ப்ரணயித்வம் செல்லா நிற்கச்செய்தே இருவருடைய ஹர்ஷமும் வழிந்து புறப் பட்டுச் சேதநருடைய ரக்ஷணமாய்த் தலைக்கட்டும். ஆனால் இருவர்க்கும் ப்ரணய ரஸமுண்டானபோது இவற்றினு டைய ரக்ஷணமாய், அல்லாதபோது ரக்ஷணம் குறைந்தோ இருப்பதென்னில், இவளோட்டை ஸம்ஶ்லேஷம் நித்ய மாகையாலே அநுப₄வம் நித்யமாயிருக்கும். அநுப₄வம் நித்யமாகையாலே ஹர்ஷமும் நித்யமாயிருக்கும். ஹர்ஷமும் நித்யமாகையாலே ஹர்ஷத்தால் வந்த நோக்கும் நித்யமா யிருக்கும். அந்த நோக்கு நித்யமாகையாலே ரக்ஷணமும் நித்யமாயிருக்கும்.

இந்நித்யரக்ஷணம் மதுப்பில் நித்யயோக₃த்தாலே வந்த ரக்ஷணத்தில் ஏற்றம். எங்ஙனேயென்னில், இதிறே

ஸர்வாத்மாக்களுக்கும் பற்றுசு; அங்ஙனன்றிக்கே, த்ரிபாத்₃ விபூ₄தியையும் தன் ஸ்வரூபாநுரூப கு₃ண விபூ₄திகளாலே அநுப₄வித்துச் செல்லாநிற்கச்செய்தே ஜக₃த்₃ரக்ஷணமும் திருவுள்ளத்திலேபட்டு நிர்வஹித்துக்கொண்டு போருகிறுப் போலே, இவளும் அவனுடைய போ₄க்₃யதையை விளாக்குலைகொண்டு அநுப₄வியாநிற்கச் செய்தேயும் ப்ரஜைகளுடைய ரக்ஷணமும் திருவுள்ளத்திலே பட்டு நிர்வஹித்துக் கொண்டு போரக்கடவதாய்த்து வஸ்துஸ்வப₄ாவமிருக்கும்படி. ப்ரஜைகள் விஷயத்தில் தான் 1. **"தே₃வ தே₃வ தி₃வ்ய மஹிஷீம்"** என்கிற மேன்மை அநுவர்த்தியாது. ப்ராப்தியிறே அநுவர்த்திப்பது; எல்லார்க்குமொக்க வரையாதே தாயாயிருக்கும்

பூர்வாவஸ்தை₂யைப் பார்த்து அஞ்சவேண்டாதே மடியிலே சென்று அணுகலாயிருக்கும். அஶரண்யஶரண்யையிறே. ப₄க₃வத்₃விஷயத்திலும் புறம்புகலார்க்கும் புகலாயிருக்கும் அந்த ஸர்வஸாத₄ாரணமான ப்ராப்தியின்றியே, விஶேஷஸம்ப₃ந்த₄முண்டு; 2."செய்தாரேல் நன்று செய்தார்" என்கிறவனுடைய கையும் வில்லுமாய்ச் சீறினுலும் இவள் திருவடிகளிலே புகலாயிருக்கும். ஆகையாலே ஜந்ம வ்ருத்தங்களில் உத்க்ருஷ்டரோடு அபக்ருஷ்டரோடு வாசியற நின்ற நிலையிலே ப₄க₃வத்ஸமாஶ்ரயணம் பண்ணலாவது, அவளோட்டை ஸம்ப₃ந்த₄த்தாலும், இவள் திருமார்பிலே நித்யவாஸம்பண்ணுகையாலுமிறே. ஆகையாலே ஸர்வாதி₄காரம் ஸூசிப்பிக்குமது இப்பத₃த்திலேயாயிருக்கும்.

ஆக இப்பத₃த்தாலே புருஷகாரஞ்சொல்லி மதுப்பாலே அவனுக்கு மறுக்கவொண்ணுத புருஷகாரத்தினுடைய நித்யயோக₃ம் சொல்லிற்று.

இப்படி புருஷகாரபூ₄தையாயிருக்கிற இவள்தான் ஒரு குறை சொல்லும்போதும், 2 "என்னடியாரது செய்யார்

---

2 பெரியாழ்திரு 4-8-2.

செய்தாரேல் நன்று செய்தார்'' என்னும் வாத்ஸல்யாதிஶயத்தையுடையனுகையாலே, மேல் நாராயணன் என்கிறது. உ ''தன்னடியார் திறத்தகத்து''—அவன் தன்னடியார் என்கைக்கும் இவன் சிதகுரைக்கைக்கும் ஒரு சேர்த்தியில்லையிறே. பெற்றதாய் நஞ்சிடக் கூடாதிறே. இனி இவன் அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் இவற்றினுடைய ஸாபராத₄த்வத்தையும் அநுஸந்தி₄த்து 'இவற்றின் பக்கலிலென்னுய் விளைகிறதோ' என்று அதிஶங்கை பண்ணி, இவனைச் சோதிக்கிருளிறே. அவன் இவளுடைய மார்த்₃வத்தையும், ஔதா₃ர்யத்தையும் அநுஸந்தி₄த்து, 'இனியிவள் இவற்றின் பக்கல் எவ்வளவாயிருக்கிருளோ?' என்று இவளை அதிஶங்கைபண்ணுமவன். 'தன் அபேக்ஷைக்காக இவர்கள் ரக்ஷணம் பண்ணுகிருளே, தன் அபேக்ஷையில்லாதபோது ரக்ஷணம் திருவுள்ளத்திலுண்டோ இல்லையோ ?' என்று ஶோதி₄க்கிருளாகவுமாம்.

ஆக இப்படி ஒருவரை ஒருவர் அதிஶங்கைபண்ணி நோக்கும் இருவருடைய நிலையும் பற்றியிறே உப₄யவிபூ₄தியும் கிடக்கிறது. தன்னைப் புருஷகாரமாகக்கொண்டு அவனை உபாயமாகப்பற்றின அநந்யப்ரயோஜநரை ஒருவரை ஒருவர் அதிஶங்கைபண்ணி நோக்கும்படியிறே. இனி இவள் அவனை அதிஶங்கைபண்ணிச் சிதகுரைக்குமன்று 'நம்மைப் பற்றினர்க்கு அக்குறையில்லைகாண்' என்று அவளோடுங்கூட மன்ருடும் கு₃ணதி₄க்யம் சொல்லுகிறது. 'அக்குற்றம்' என்கிருனிறே-இவள் சொன்ன குற்றம் தன் வாயால் சொல்லமாட்டாமையாலே. 'இல்லை,நான் இப்போது கண்டேன்' என்று ஸாக்ஷிபூர்வகமாகக் காட்டிக்கொடுத்தாலும், 'ஆனல் அவர்கள்தான் த₄ர்மாத₄ர்மங்களும், ஒரு பரலோகமும், ஒரு பரதே₃வதையும் இல்லையென்று செய்கிருர்களோ ? ப்ராமாதி₃கத்துக்கு நாமுளோம் என்றன்றே செய்கிறது. ஆனபின்பு கூட்டுகை உங்கள் தேவையா

உ பெரியாழ்திரு 4-8-2.

மித்தனை போக்கி, ஒரு மிது₂நத்துக்கு இவர்கள் குழைச் சரக்காயிருக்கப் பிரிக்கை உங்கள் தேவையோ? என்று, கூட்டின ஸ்ரீவைஷ்ணவர்களோடும், கூட்டின பிராட்டியோடும் மறுதலித்து நோக்கும் கு₃ணுதி₄க்யம் சொல்லுகிறது.

[நாராயண] - வாத்ஸல்ய ஸௌஶீல்ய ஸௌலப்₄ய ஸ்வாமித்வங்கள், இவை நாராயண ஶப்₃தா₃ர்த்த₂ம். ஆனாலும் இந்நாராயண ஶப்₃த₃த்துக்கு ஸௌலப்₄யத்திலே நோக்கு.

[வாத்ஸல்ய]மாவது - வத்ஸத்தின்பக்கல் தாய் இருக்கு மிருப்பை ஈஶ்வரன் ஆஶ்ரிதர்பக்கலிலேயிருக்கும் என்கிறது. அதாவது - சுவடுபட்ட தரையில் புல்தின்னாத பசு தன் கடையாலே புறப்பட்ட கன்றினுடைய தோ₃ஷத்தைத் தன்வாயாலே தழும்பற நக்கித் தன் முலைப்பாலாலே த₄ரிப் பிக்குமாபோலே ஆஶ்ரிதருடைய தோ₃ஷங்களைத் தனக்கு போ₄க்₃யமாக விரும்பித் தன் கல்யாணகு₃ணங்களாலே அவர்களை த₄ரிப்பிக்கை. எங்கே கண்டோமென்னில்:
1. **"தஸ்ய - தோ₃ஷ:"** — அவனுடைய தோ₃ஷமன்றோ; ஶரணாக₃தனுடைய தோ₃ஷமன்றோ; அது நமக்கு அபி₄மத விஷயத்திலழுக்கன்றோ— என்று மேல் விழுந்து விரும்பும் படியிறே வாத்ஸல்யமிருப்பது. தமக்குப் பரிவரான மஹா ராஜரையும் தம்பால் ஸக்தையான பிராட்டியையும் விட்டு அவன் தோ₃ஷம் ஏதேனுமாகிலும் இன்றுவந்த ஶரணா க₃தனை விடில் நாமுளோமென்று, அநுகூலரோடேயும் மலைந்து ரக்ஷிக்கும்படியிறே வாத்ஸல்யகு₃ணம் இருப்பது.

2. **ஶீலம் ஹி நாம, மஹதோ மந்தை₃ஸ்ஸஹ நீரந்த்₄ரேண ஸம்ஶ்லேஷஸ்வபா₄வத்வம் ஶீலம்"**; அதா கிறது-சிறியவனோடே பெரியவன் வந்து கலவாநின்றால் தன் பெருமை இவன் நெஞ்சில் படாமே நம்மோட்டை யாவன் ஒருவனென்று புரையறக் கலக்கலாம்படியிருக்கை.

அஸ்ப்ருஷ்டஸம்ஸாரக₃ந்த₄ரான நித்யஸூரிகளுக்கும் அவ்வருகாய், அப்ராக்ருதனாய், உப₄யவிபூ₄தி யோக₃த்தாலும் பெரிய ஏற்றத்தையுடையனாய், அ "அவன் எவ்விடத்தான்" என்னும்படி இருக்கிறவன் 'நித்ய ஸம்ஸாரிகளுக்கும் அவ் வருகே கழியப்போனான்' என்னும் இவனோடே வந்து கலவாநின்றால் இவன் அஞ்சி இருக்கவேண்டாதபடி தானே மேல் விழுந்து புரையறக் கலக்கை ஶீலகு₃ணமாவது. இப்படி கலக்கப்பெற்றது இவனுக்குக் கார்யம் செய்ததாக வன்றியே, அது தன்பேறாக நினைத்திருக்கை ஸௌஶீலம்.

[ஸ்வாமித்வ]மாவது - கர்ஷகன் பயிர்த்தலையிலே குடில் கட்டி நோக்குமாபோலே உடைமை 'உனக்கல்லேன்' என்று முடித்துக்கொண்டவன்றும் தன்னுடைமையானது தோற்றத் தான் இவற்றை விடமாட்டாதே இவற்றினுடைய ரக்ஷண சிந்தை பண்ணியிருக்கிற இருப்பு. அதாவது— இவனுக்குத் தன் ஸௌஹார்த்₃த்தாலே யாத்₃ருச்சி₂க ஸுக்ருதத்தையுண்டாக்கி, அதடியாக அத்₃வேஷத்தை யுண்டாக்கி, அதடியாக ஆபி₄முக்₂யமுண்டாக்கி, அதடியாக ருசியையுண்டாக்கி, அதடியாக ஸத்ஸம்பா₄ஷணத்தை யுண்டாக்கி, அதடியாக ஆசார்ய ஸமாஶ்ரயணத்தை யுண்டாக்கி, ஸம்யக்₃ஜ்ஞானத்தைப் பிறப்பித்து, ஸித்₃த₄ ஸாத₄நத்திலே நிஷ்டை₂யைப் பிறப்பித்து, கண்ணழிவற ப்ராப்யத்திலே ருசியைப் பிறப்பித்து,விரோதி₄நிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுத்து, அர்ச்சிராதி₃மார்க₃ப்ரவேஶத்தை யுண்டாக்கி, லோகப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து, ஸ்வரூப ப்ரகாஶத்தைப் பிறப்பித்து, பரப₄க்தி பரஜ்ஞான பரமப₄க்திகளையும் பிறப்பித்து, இவை தொடக்கமான ப₄க₃வத₃நுப₄வத்தையும் இவ்வநுப₄வ ஜநிதமான ப்ரீதியாலே பண்ணப்படுவதான நித்யகைங்கர்யத்தை ஏவிக்கொள்வ தாக வந்து இப்படிக்குப் பரமஶேஷித்வம் ஸ்வாமித்வமாவது.

---

அ *திருவாய் 5.1-7.*

[ஸௌலப்₄ய]மாவது — அதீந்த்₃ரியமான பரமவஸ்து இந்த்₃ரிய கோ₃சரமாம்படி எளிய ஸம்ஸாரிகளுக்கும் கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி தன்னை எளியனாக்கிக் கொடுக்கை. அதாகிறது — ' மாம் " என்றுகொண்டு ஸேநாதூ₄ளியும், கையுமுழவுகோலுமாய் ஸாரதி₂யாய் நிற்கிற நிலையையிறே உபாயமாகப்பற்று என்று விதி₄வாக்யத்தில் சொல்லிற்று. அந்த ஸௌலப்₄யத்தையாய்த்து இங்குச் சொல்லுகிறது. அதுதான் பரத்வம் என்னலாம்படியிறே இங்குத்தை நாராயண ஶப்₃த₃த்தில் ஸௌலப்₄யம்.

எங்ஙனேயென்னில்; அங்கு 1. **"மய்யாஸக்தமநா: பார்த₂,"** என்றுகொண்டு தன்பக்கலிலே ஆஸக்தமான மநஸ்ஸையுடைய அர்ஜுநன் ஒருவனையும் நோக்கியிறே ஸுலப₄னாய்த்து. இங்கு எல்லார்க்குமொக்க ஸுலப₄னா யிருக்கும். அங்கு முன்புமில்லை பின்புமில்லை. நாமறியாத நாளிலுமுண்டாய், நாமறிந்த நாளிலுமுண்டாயிருக்கிற ஏற்றம் இந்த ஸௌலப்₄யம். இக்கு₃ணங்கள் உண்டானாலும் கண்ணுக்கு விஷயமானாலல்லது போக்கி இக்கு₃ணங்கள் ஜீவியாமையாலே ஸௌலப்₄யம் ப்ரதா₄நமாகிறது.

இக்கு₃ணங்கள் உபாயமாமிடத்தில், ஸௌலப்₄யம்— எளியனை இவனளவிலே தன்னை எளியனாக்குகை யாலே, இவனே உபாயமென்கிறது. ஸுஶீலம்— இப்படி கலக்கிற இது, தன் பேருகக் கலக்கையாலே அவனே உபாயமென்கிறது. ஸ்வாமித்வம் — ஸம்ஸாரிசேதநனை நித்யஸூரிகள் கோவையிலே கொண்டுபோய் வைத்தால் நிவாரகரில்லாத நிரங்குஶஸ்வாமித்வம் உபாயமென்கிறது.

ஆக, இங்குச்சொன்ன நாலு கு₃ணங்களும் பற்றுகைக் குப் பற்றுசானவோபாதி ஜ்ஞாநஶக்த்யாதி₃கு₃ணங்களும் மோக்ஷப்ரத₃த்வத்திலே விநியோக₃ம். எங்ஙனேயென்னில், இவனும் விடுமதறிந்து விடுகைக்கும், பற்றுமதறிந்து பற்றுகைக்கும் ஸர்வஜ்ஞனாகவேணும். ஜ்ஞாநமுண்டானா லும் ப்ரயோஜநமில்லை ஶக்தனன்றாகில். அது, அநாதி₃

காலார்ஜிதமான பாபங்களைத் துணித்துத் தாவி அக்கரைப் படுத்தும்போது, ஸர்வஶக்தியாகவேணும். ஶக்தனானாலும் ப்ரயோஜநமில்லையிறே நிரபேக்ஷனன்றாகில். நிரபேக்ஷனாகிலும் ப்ரயோஜநமில்லையிறே ப்ராப்தியில்லையாகில். ஆக ஸர்வஜ்ஞத்வமும், ஸர்வஶக்தித்வமும், அவாப்தஸமஸ்த காமத்வமும், ஸர்வஶேஷித்வமும், இவை நாலு குணமும், ஸர்வஸாதாரணமான ரக்ஷணத்துக்கு உடலாயிருக்கும்.

ஓரளவிலே ஆஶ்ரிதக்ருதமோக்ஷ ப்ரதத்வத்துக்கும் உடலாயிருக்கும். ஸஹாயாந்தர நிரபேக்ஷமாகப் பலப்ரதன் அவனாகில், இவர்களுக்கும் அவனுக்கும் ப்ராப்தியொத்திருந்ததாகில், புருஷகாராபேக்ஷையென்? என்று நஞ்ஜீயர் பட்டரைக் கேட்க, 'வாரீர் ஜீயரே! அவள் ஸந்நிதிக்கும் அவன் ஸந்நிதிக்குமுள்ள வாசி அந்வயவ்யதிரேகங்களாலே கண்டு கொள்ளீர்' என்று அருளிச்செய்தார். அதாவது—''ஜநகி பக்கல் அபராதம் காகத்துக்கும் ராவணனுக்கும் ஒத்திருக்கச் செய்தே அவள் ஸந்நிதியுண்டாகையாலே அபராதத்தில் கைதொடனான காகம் ப்ரபந்நர் பெறும்பேற்றைப் பெற்றுப் போய்த்து. அத்தனை அபராதமின்றிக்கே கடக்கநின்று கதறிப்போந்த ராவணன் அவள் ஸந்நிதியில்லாமையாலே தலையறுப்புண்டான். இனித்தான் மாத்ருஸந்நிதியிலே ப்ரஜைகளை அழிக்கமாட்டாமையுமொன்றுண்டிறே பிதாவுக்கு. இனி 1. **'தமேவ ஶரணம் கத:'** என்றதும், 2. **'ந நமேயம்''** என்றதும் அப்ரயோஜகம். எங்ஙனேயென்னில், காகத்துக்கு உதவுகிறபோது அகவாயில் நினைவு அதுவிறே. இல்லையாகில் 3. **'ஸ்வகமாலயம் ஜகாம'** என்று போகப் பொருநே. செயல்மாட்சியாலே விழுந்ததித்தனையிறே. இம்மாத்ரம் ராவணனுக்கும் உண்டாயிருக்க அது கார்யமாய்த்தில்லையிறே, இவள் ஸந்நிதியில்லாமையாலே. இதுகாணும் அவள் ஸந்நிதிக்கும் அவன் ஸந்நிதிக்கும் வாசி'' என்று அருளிச்செய்தார்.

மற்றும் பற்றினுரையுடைய ஆராய்ந்து பார்த்தவாறே இவள் முன்னாகவாயிருக்கும். மஹாராஜருள்ளிட்ட முதலிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் இவள் முன்னாக வாய்த்துப் பற்றிற்று அந்வயவ்யதிரேகங்களில் ப₂லாப₂லங்களன்றியே ஆஶ்ரயித்த ஏற்றமுண்டு. எங்ஙனேயென்னில், அவனுடைய ஶீலாதி₃கு₃ணங்களோடே ஹேயகு₃ணங்கள் கலசியிருக்குமாபோலேயல்லவாய்த்து இவளுடைய ஶீலாதி₃கு₃ணங்களிருப்பது. அவனுடைய நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யமும். **1. "க்ரோத₄மாஹாரயத் தீவ்ரம்"** என்று அழித்துக் கார்யம் கொள்ளலாயிருப்பன சிலவும் உண்டிறே. அதுவுமில்லையிறே இவளுக்கு. அதுண்டாகில் இவளுக்கும் ஒரு புருஷகாராபேக்ஷை வேண்டியிருக்குமிறே. அது இல்லாமையாலே இவள் புருஷகாரமாகவேணும். இல்லையாகில் ப₂லஸித்₃தி₄யில்லை.

எங்கே கண்டோமென்னில், ராவணகோ₃ஷ்டி₂யிலே **2. "ப்ரதீ₃யதாம் த₃ாஶரத₂ாய மைதி₂லீ"** என்று பிராட்டிக்காகப் பரிந்தும், தூ₃தரை ஹிம்ஸிக்கலாகாதென்று திருவடிக்காகப் பரிந்தும் வார்த்தை சொன்னவனைத் துறந்து **3. "த்வாம் து தி₄க் குலபாம்ஸநம்"** என்று புறப்படவிட, ராவணப₄வநத்தில் நின்றும் புறப்பட்டுவந்து மநோவாக்காயங்கள் மூன்றாலும் ஶரணம் புகுந்த ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானைக் குறித்து. **4. "ந த்யஜேயம் கத₂ஞ்சந"** என்று ரக்ஷித்த நீர்மையிறே பெருமாளுக்குள்ளது. இவளுக்கு அங்ஙனன்று. மநோவாக்காயம் மூன்றிலும் ராவணாபஜயத்தையும் ஸ்வப்நம் கண்டோமென்று ப₄யப்பட்டு த்ரிஜடை விண்ணப்பஞ்செய்ய, அவளும் **5. "அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோ ப₄யாத்" 6. "ப்ரணிபாத ப்ரஸந்நா ஹி மைதி₂லீ ஜநகாத்மஜா"** என்று 'நம்மாலே நலிவுபடுகிற இவள்தானே நம்மை ரக்ஷிக்குங்காணுங்கோள்' என்று சொல்லியும், இவ்வுக்தியேயன்றியே பிராட்டிதானும் இவர்கள் நடுவேயிருந்து **7. "ப₄வேயம் ஶரணம் ஹி வ:"** என்று 'நானுளளாக நீங்கள் அஞ்சவேண்டா' என்று அருளிச்செய்தும்

இவ்வுக்திமாத்ரமாய்ப் போகையன்றிக்கே, 'ராமவிஜயமுண்டாய் ராவணனும் பட்டான், மஹாராஜருள்ளிட்ட முதலிகளுக்கும் ஒரு குறையில்லை என்று நம் மைதிலிக்குச் சொல்லிவா' என்று திருவடியை வரவிட, அவன் வந்து விண்ணப்பஞ்செய்ய, இதைக் கேட்டருளி ஹர்ஷத்தாலே 'இவனுக்கு என்ன உபகாரத்தைப் பண்ணுவோம்' என்று தடுமாறுகிறவளவிலே "எனக்குப் பண்ணும் உபகாரமாகிறது தே₃வர் விஷயத்திலே நலிந்த இவர்களை விட்டுக் காட்டித்தருகையே" என்ன, அதைக்கேட்ட பின்பு அவன் பண்ணின உபகார பரம்பரைகளையும் பார்த்திலள், இவர்கள் இப்போது நிற்கிற ஆர்த்தியே திருவுள்ளத்தில் பட்டு **1. "க₁ குப்யேத்₃ வாநரோத்தம"** என்றும், **2. "ந கஶ்சிந்நாபராத்₄யதி"** என்றும், பெருமாளுக்கு அந்தரங்க₃பரிகரமான திருவடியோடே மறுதலித்து ரக்ஷித்த இவள், நம்முடைய குற்றங்களைத் தன் சொல்வழிவரும் பெருமாளைப் பொறுப்பித்து ரக்ஷிப்பிக்கச் சொல்லவேணுமோ? இதிறே இவள் நீர்மையிருந்தபடி.

இதுவேயன்று; தன்பக்கலிலே அபராத₄த்தைப் பண்ணின ராவணனைக் குறித்து **3. "மித்ரமௌபயிகம் கர்த்தும்"** என்றும், **4. "தேந மைத்ரீ ப₄வது தே"** என்றும், அவனுக்கு **"மாஶுச:"** என்னும் வார்த்தை சொன்னவளிறே. ஆகையாலே நித்யஸாபராத₄ஜந்துக்களுக்கு நித்யஸஹவாஸம் பண்ணுமிவள் புருஷகாரமாகவேணும். கல்யாண கு₃ண விஶிஷ்டனுமாயிருக்கிற ஈஶ்வரன் உபாயமாமிடத்தில், இப்புருஷகார பூ₄தையான இவள், இவனுடைய ஆப₄ரணங்களோபாதி அநந்யார்ஹஶேஷ பூ₄தையாகில் இவள் புருஷகாரமானாலல்லது ப₂லஸித்₃தி₄யில்லை.

"ப₂லத்துக்குப் பூர்வக்ஷணவர்த்தியாயிருக்குமதிலேயிறே உபாயப₄ாவமிருப்பது. ஆனால் இப்புருஷகாரத்துக்கு உபாயஶரீரத்திலே அந்தர்ப₄ாவம் உண்டாகவேண்

டாவோ ?" என்னில், கு₃ணங்களும் விக்₃ரஹங்களும் அசேதநமாகையாலே உபாய ஸ்வரூபத்திலே அந்தர் ப₄ாவமுண்டு. கு₃ணாகாமாஶ்ரய ஸ்வரூபமாகையாலே இவளுக்கும் ஸ்வரூபாநுப₃ந்தி₄த்வ முண்டேயாகிலும் இவள் சேதநாந்தரகோ₃சரையாகையாலே உபாயஶரீரத்தில் இவளுக்கு அந்தர்ப₄ாவமில்லை. இவள் புருஷகாரத்திலே ஸாத₄நப₄ாவங் கிடையாதேயாகிலும் இவள் ஸந்நிதி₄யை அபேக்ஷித்துக்கொண்டாய்த்து உபாயம் ஜீவிப்பது. ஆகை யால் இவள் பக்கல் ஸாத₄நப₄ாவங் கிடையாது. எங்ஙனே என்னில், ராஜமஹிஷியைப் புருஷகாரமாகக்கொண்டு ராஜாவின் பக்கலிலே ப₂லஸித்₃தி₄யுண்டாமென்று சென் ருல், அவன் பக்கல் இரக்கமில்லாதபோது புருஷகாரத் துக்குப் ப₂லப்ரத₃ாநஶக்தியில்லாமையாலே இப்புருஷ காரத்திலே ஸாத₄நப₄ாவம் கிடையாது. அந்யநிரபேக்ஷ மாகப் ப₂லப்ரத₃ஞகையாலே அவனே உபாயம்.

"**சரணௌ**" என்று—1. "**மாம்**" என்கிறவிடத்தில் ஸாரத்₂யவேஷத்தோடே நிற்கிற விக்₃ரஹமும் இப்பத₃த் திலே அநுஸந்தே₄யம். "**சரணௌ**" என்கிற இது திருவடிகளிரண்டையும் என்றபடி. ஸ்தநந்த₄ய ப்ரஜைக்கு ஸ்தநம்போலே அடிமையிலே அதி₄கரித்தவனுக்குத் திரு வடிகளினுடைய உத்₃தே₃ஶ்யதையைச் சொல்லுகிறது. ஶேஷபூ₄தன் ஶேஷிபக்கல் கணிசிப்பது திருவடிகளிரண் டையுமிறே, மாதாவினுடைய ஸர்வாவயவங்களிலும் ப்ர ஜைக்கு ப்ராப்தியுண்டாயிருக்க, விஶேஷித்து உத்₃தே₃ஶ் யப்ராப்தி ஸ்தநங்களிலேயுண்டாகிறது, தனக்கு தா₄ரக மான பாலை மாருமலுபகரிக்கையாலேயிறே. அப்படி, ஶேஷபூ₄தனுக்கும் ஶேஷியினுடைய ஸர்வாவயவங்களி லும் ப்ராப்தியுண்டாயிருக்க விஶேஷித்துத் திருவடி களில் உத்₃தே₃ஶ்யப்ராப்தி இவனுக்கு தா₄ரகமான கைங் கர்யத்தை மாருமல் கொடுத்துப் போருகையிறே. இத்தால் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹஸத்₃ப₄ாவஞ் சொல்லிற்று.

கீழ்ச்சொன்ன புருஷகாரமும் கு,ணங்களும் இல்லையே யாகிலும் விக்,ரஹந்தானே போரும் உபாயமாகைக்கு. எங்கே கண்டோமென்னில், சிந்தயந்தி தன் ஸ்வரூபாநு ஸந்த,ாநத்தைப் பண்ணியன்றிறே முடிந்தாள். க்ருஷ்ண னுடைய ஸ்வரூபகு,ணங்களிலே அகப்பட்டவளன்று; காமுகையாகையாலே அவன் விக்,ரஹத்திலே அகப்பட் டாள். அவ்வடிவழகுதானே அவள் விரோதி,யையும் போக்கி அவ்வருகே மோக்ஷத்தையும் கொடுத்ததிறே. **1. "சிந்தயந்தீ ஜக,த்ஸூதிம் பரப்,ரஹ்மஸ்வரூபிணம்। நிருச்ச்,வாஸதயா முக்திம் க,தா ந்யா கே,ாபகந்யகா ॥"** என் கிறபடியே ஸ்வரூப ஸ்வப,ாவங்களறியாத சிந்தயந்தி யாகையாலே. விக்,ரஹந்தானே ஸ்வரூபகு,ணங்களுக்கும் ப்ரகாஶகமுமாய், ஸம்ஸாரிகளுக்கு ருசிஜநகமுமாய், முமுக்ஷுக்களுக்கு ஶுப,ாஶ்ரயமுமாய், நித்யர்க்கும் முக் தர்க்கும், பே,ாக,ரூபமுமாயிருக்கும். எங்கே கண்டோ மென்னில், **2. "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச ப,ாஹவ:"** என்று நெஞ்சுபறியுண்டு அகப்பட்டது விக்,ரஹத்திலே. **3. "ஏஷ ஸர்வஸ்வபூ,தஸ்து பரிஷ்வங்கே,ா ஹநூமத:"** என்று தான் மதித்தார்க்குப் பரிசிலாகக் கொடுப்பது விக்,ரஹத்தை. அங்குள்ளார் ஸத,ாபஶ்யந்தியிறே.

ஆக இவ்வுபாயத்துக்கும் உறுப்பாயிருக்கையாலே அவற்றை ஒதுக்கிக் கூற்றறுத்து உபாயத்திலே நோக் கென்னுமிடம் தோற்றச் சொல்லுகிறது இஶ்ஶரண ஶப்,த,ம்.

**4. "உபாயே க்,ருஹரக்ஷித்ரோஶ் ஶப்,த,ஶ்ஶரண மித்யயம்। வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தை,க வாசக: ॥"** என்கிறபடியே இஶ் ஶரணஶப்,த,ம், உபாயத் தையும் க்,ருஹத்தையும் ரக்ஷிதாவையும் சொல்லுகிறது. ரக்ஷகமென்றும் உபாயமென்றும் பர்யாயமென்று சொல் லிப்போருவர்கள். அங்ஙனன்றியே ரக்ஷகனும் வேறே

இப்ரமாணத்தால். ரக்ஷகனென்றால், ஸாத₄ாரணரக்ஷணத்துக்கு, உபாஸகனுக்கும் ப்ரபந்நனுக்கும் பொதுவாயிருக்கும், உபாயமென்று விஶேஷித்தால் ப்ரபந்நனுக்கு உகவாயிருக்கும். எவ்வுபேயத்துக்காக? என்னில், இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயம். அநிஷ்டமாவது - தே₃ஹாத்மாபி₄மாநம் தொடக்கமாகக் கைங்கர்யத்தில் அஹங்காரக₃ர்ப்ப₄மீருக நடுவுண்டான விரோதி₄யான பாபங்கள். அவையாவன — அவித்₃யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ங்கள், இவற்றின் கார்யமான க₃ர்ப்ப₄ம், ஜந்மம், பா₃ல்யம், யௌவநம், ஜரை, மரணம், நரகம் இவற்றோடொக்க அநுவர்த்தித்துப் போருகிற தாபத்ரயங்கள், இவற்றுக்குக் காரணமான அவித்₃யை.

இவற்றினுடைய ஸ்வரூபமிருக்கும்படியென்? என்னில்; [அவித்₃யை] யாகிறது அஜ்ஞானம்; அதாகிறது— அநாத்மந்யாத்மபு₃த்₃தி₄யும், அஸ்வே ஸ்வபு₃த்₃தி₄யும்; அவையாகிறன—தானல்லாதத்தைத் தானென்று ப்₄ரமித்தும், தன்னதல்லாதத்தைத் தன்னதென்கையும், ஈஶ்வரனையுடைத்தான தன்னை அபஹரித்தும், விபூ₄தியை அபஹரித்துக் கொண்டிருக்கையும். இதுக்குள்ளே எல்லா விரோதி₄யும் பிடிபடும். இதுதன்னை உபதே₃ஶத்தில் ௧ "நீர் நுமது" என்றார். எங்ஙனே யென்னில், அவித்₃யா வாஸனை, கர்மவாஸனை, தே₃ஹவாஸனை, அவித்₃யாருசி, கர்மருசி, தே₃ஹருசி. யதா₂ஜ்ஞாநம் பிறந்தவாறே அவித்₃யை நஶிக்கும், புண்யபாபங்கள் ப்ரக்ருத்யநுகூலமாயிருக்கையாலே அநுகூலங்கள் கண்டவாறே அவை நஶிக்கும், அநுகூலமாவது ப₄க₃வத்₃ப₄க்தியாகவுமாம். திருநாமஞ் சொல்லவுமாம். அன்றிக்கே அவன்தானே உபாயமாகவுமாம். இனி இவற்றுக்கு அடியான ப்ரக்ருதியாகிறது— இந்த ஶரீரம், நரகாத்₃யநுப₄வத்துக்கு வரும் யாதநா ஶரீரம், ஸ்வர்க்கா₃த்₃யநுப₄வத்துக்கு வரும் புண்ய ஶரீரம்,

௧ திருவாய் 1-2-3.

இவற்றுக்குக் கிழங்கான ஸூக்ஷ்மஶரீரமும்; இவை யித்தனையும் நஶிக்கை அநிஷ்ட நிவ்ருத்தியாவது.

இனி இஷ்ட ப்ராப்தியாவது—ப்ராபியாதத்தை ப்ராபிக்கை. அதாவது பரஹிம்ஸாநிவ்ருத்தி பூர்வகமாகக் கைங்கர்யமெல்லையாக ஸ்வரூபாநுரூபமாக இவ்வதி,காரிக்கு அவன் பிறப்பிக்கும் பர்வங்கள்; அவையாவன — தே,ஹாத்மாபி,மாநத்தைப் போக்கி, ஆத்மயாத,ாத்ம்யஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, உபாயாந்தர நிவ்ருத்திபூர்வகமாக ஸித்,தோ,பாயத்திலே நிஷ்டை,யைப் பிறப்பித்து, விஷயப்ராவண்யத்தைப் போக்கி, தன்பக்கலிலே ப்ராவண்யத்தை உண்டாக்கி, லோகப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து, ஸ்வரூபப்ரகாஶத்தையும் பிறப்பித்து, பரப,க்தி பரஜ்ஞாந பரமப,க்தியையும் பிறப்பித்து, இவை பூர்வகமாக ப,க,வத,நுப,வத்தையும் பிறப்பித்து, ப,க,வத,நுப,வஜநிதப்ரீதிகாரித கைங்கர்யத்தையும் கொடுத்துவிடுகை இவன் பற்றின உபாயத்தின் க்ருத்யம். 1. **"நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி"** என்கிறது இவற்றிலே அந்தர்க்க,தம்; அபஹதபாப்மத்வாதி, கு,ணஸாம்யமும், ஜ்ஞாநப,லைஶ்வர்யாதி,கு,ணஸாம்யமும், பே,ாக,ஸாம்யமும், இவையிறே ஸாம்யாபத்திகள். 2. **"பரஞ்ஜ்யோதிருபஸம்பத்,ய ஸ்வேந ரூபேணாபி,நிஷ்பத்,யதே"** என்கிறபடியே கைங்கர்யமும் அபஹதபாப்மத்வாதி, கு,ணங்களும் பரப,க்த்யாதி, கு,ணங்களும் ஸ்வரூபப்ராப்திகளிலே அந்தர்க்க,தமாய் ப்ரகாஶிக்குமவை. இனி பரப,க்தி பரஜ்ஞாந பரமப,க்திகளும் நித்யமாயிருக்கும். ஸ்வரூபத்தோடே ஸஹஜமாயிருக்கையாலே. ஆனால் இவை நித்யமாகிறபடி எங்ஙனே? யென்னில், ஒருகாலநுப,வித்த கு,ணங்கள் ஒருகாலநுப,வியாநின்றால் நித்யாபூர்வமாய் வருகையாலே பரப,க்த்யாதி, கு,ணங்கள் நித்யமாயிருக்கும். ஸாலோக்ய ஸாரூப்ய ஸாயுஜ்யமானவை கைங்கர்யோபயோகி,யாகையாலே கைங்கர்யத்திலே அந்தர்க்க,தம். 3. **"அபஹதபாப்மா

**விஜரோ விம்ருத்யுர் விஶோகோ விஜிக,த்ஸோ ऽபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:".** [அபஹதபாப்மா] என்றது- போகப்பட்ட பாபத்தையுடையவன; [விஜர:] விடப்பட்ட ஜரையையுடையவன்; [விம்ருத்யு:] விடப்பட்ட ம்ருத்யுவை யுடையவன்; [விஶோக:] - விடப்பட்ட ஶோகத்தையுடை யவன்; [விஜிக,த்ஸ:] போகப்பட்ட பசியையுடையவன்; [அபிபாஸ:] போகப்பட்ட பிபாஸையையுடையவன்; [ஸத்யகாம:] - நினைத்தவை அப்போதேயுண்டாயிருக்கை; [ஸத்யஸங்கல்ப:] உண்டானவற்றைக் கார்யங்கொள்ளுமா போலே இல்லாதவற்றை உண்டாக்க வல்லனுகை; இவை தான் ஸ்வத: அன்றிக்கேயிருக்கிற விஷயத்தைச் சொல்லு வானென்னென்னில், கர்மவஶ்யனுக்குள்ளது அகர்மவஶ்ய னுன ஈஶ்வரனுக்கில்லையென்று இவனுக்கு ஜ்ஞானம் பிறக் கைக்காக. கு,ணங்கள் தான் ஶேஷபூ,தனுன சேதந னுக்குமுண்டாய் அவனுக்குமுண்டாயிருக்கும். இவை எட்டு கு,ணமும் சேதநனுக்கு உபாயகதம். நிஷ்க்ருஷ்ட வேஷத்தில் இல்லையென்கை. அவனுக்கு விநியோக,ம் ரக்ஷணத்திலே; சேதநனுக்கு ஸத்யஸங்கல்பங்களாகிறது அவன் நினைத்த கைங்கர்யமுண்டாயிருக்கை. இனி ஜ்ஞாநஶக்த்யாதி,கு,ணங்கள் அவனுக்கு ஜக,த்,ரக்ஷணத் திலே, இவனுக்குக் கைங்கர்யத்திலே.

அவனுக்கு [ஜ்ஞாந]மாவது 1. **"யோ வேத்தி யுக,பத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண"** என்கிறபடியே எல்லாவற்றையும் அறிந்துகொண்டிருக்குமாபோலே, இவன் செய்யக்கடவ கைங்கர்யங்களை ஒருபோகியாக அறியவல்லனுயிருக்கும்; [ப,லமாவது]-அவன் இத்தை த,ரித்து ரக்ஷிக்குமாகில், இவன் கைங்கர்யத்து த,ாரணஸாமர்த்,யத்தையுடையனுயிருக் கும்; [ஐஶ்வர்ய] மாவது - அவன் ஸ்வவ்யதிரிக்தங்களை நியமித்துக்கொண்டிருக்குமாகில், அவனுக்குக் கரணங்களை நியமித்துக்கொண்டு அடிமைசெய்ய வல்லனுயிருக்கும். அதாவது—கைங்கர்யத்துக்கு அநுரூபமாக அநேக ஶரீர

பரிக்₃ரஹங்கள் நியமிக்க வல்லனாயிருக்கை, [வீர்ய] மாவது அவன் இவற்றை ரக்ஷிக்குமிடத்தில் விகாரரஹிதனாய் ரக்ஷிக்குமாகில், இவனும் கைங்கர்யங்களைச் செய்யாநின்றால் ஒரு விகாரமின்றிக்கே யிருக்கை. [ஶக்தி]யாவது அவன் சேராதவற்றைச் சேர்ப்பித்து ரக்ஷிக்குமாகில், இவனும் அநேகம் அடிமைகளை எக்காலத்திலும் செய்யவல்ல அக₄டித க₄டநாஸாமர்த்₂யத்தை உடையனாகை, [தேஜஸ்]ஸாவது அவன் அநபி₄பூ₄வநீயனாயிருக்குமாகில், இவனும் கைங்கர் யங்களை ஒரு போகியாகச் செய்கிற தேஜஸ்ஸை உடையனா யிருக்கும்.

இனி விக்₃ரஹத்தில் அவனுக்கும் இவனுக்கும் ஒக்கும். கு₃ணங்களும் அவனுக்கும் இவனுக்கும் ஒக்கும். ஜ்ஞாந ஶக்த்யாதி₃களும் அவனுக்கும் இவனுக்கும் ஒக்கும். ஆகை யாலே பரமஸாம்யாபத்தியைப் பண்ணிக்கொடுக்குமென் கிறது. ஶேஷித்வ ஶேஷத்வங்கள் கிடக்கச்செய்தே ஸாம்யாபத்தியு முண்டாகிறது. ஸஜாதீயங்கலந்தாலல்லது ரஸவிஶேஷமுண்டாகாது. இரண்டு தலைக்கும் போ₄க்₃யம் பிறக்கைக்காக ஸாம்யாபத்தி உண்டாய்த்தென்றால் ஶேஷஶேஷித்வங்களென்கிற முறை மாறாது. எங்ஙனே? என்னில், இவனைக் கிஞ்சித்கரிப்பித்துக்கொண்டு அவனுக்கு ஶேஷித்வம்; அவனுக்குக் கைங்கர்யத்தைப் பண்ணிக் கொண்டு இவனுக்கு ஶேஷத்வம். இருவர்க்கும் இரண்டும் வ்யவஸ்தி₂தம். அவனோடு ஸமமென்னவொண்ணாது.

இஷ்டப்ராப்தி பண்ணிக்கொடுக்கையாவது-இவன் ஸ்வீ கரித்த உபாயத்தில் நிலைநின்றவனுடைய அதி₄காராநு கு₃ணமாக அவன் பண்ணிக்கொடுக்குமவை.

ஆக இந்த ஶரணஶப்₃த₃ம் உபாயபா₄வத்தைச் சொல்லுகையாலே கீழ்ச்சொன்ன நாராயண ஶப்₃த₃ம் தொடங்கி இவ்வளவும் உபாயபரமாக அநுஸந்தே₄யம். இவனுடைய உஜ்ஜீவநார்த்த₂மும் லக்ஷ்மீஸம்ப₃ந்த₄மும் அநு ஸந்தே₄யம்.

இப்படி உபாயம் ஸித்₃த₄மாயிருக்க, அநாதி₃காலம் ப₂லியாதொழிந்தது இவனுடைய ப்ரபத்தியில்லாமையிறே. அந்த ப்ரபத்தியைச் சொல்லுகிறது மேல் — "**ப்ரபத்₃யே**" என்கையாலே. "**ப்ரபத்₃யே**" என்றது அடைகிறேன் என்றபடி. அதாவது - அங்குத்தை 'வ்ரஜ'வினுடைய அநுஷ்டா₂நம். 1. "**க₃த்யர்த்தா₂ பு₃த்₃த்₄யர்த்தா₂:**" என்கிறபடியே அத்₄யவஸாயமான ஜ்ஞாநவிஶேஷத்தைச் சொல்லுகிறது. "**ப்ரபத்₃யே**" இப்ரபத்திதான் மாநஸமோ வாசிகமோ காயிகமோ? என்னில், மூன்றுமாம், ஒன்றுமாம். ஒன்றமையுமாகில் இரண்டுமில்லை; மூன்றும் வேணுமாகில் ஒன்று போராது; ஆனாலென் சொல்லுகிறதென்னில் - ஒன்றுள்ளவிடத்திலும் ப₂லஸித்₃தி₄ கண்டோம். மூன்றுள்ள விடத்திலும் ப₂லஸித்₃தி₄ கண்டோம். ஆகையாலே இவற்றில் ஒரு நிர்ப₃ந்த₄ம் பெரிசன்று. ஒன்றிலும் ஸாத₄நபா₄வமில்லை; மூன்றிலும் ஸாத₄நபா₄வமில்லை. அவனுடைய அநுக்₃ரஹமே ஹேதுவாமித்தனை. ஜ்ஞாநந்மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கொள்ளக் கடவோம். ஆனால் ப₂லத்துக்கு ஸாத₄நமன்றாகில் இவை வேண்டுகிறதென்னென்னில், இவ்வதி₄காரி முமுக்ஷு வென்றறியும்போது ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தி வேணும். சேதநனென்றறியும்போது அசித்₃வ்யாவ்ருத்தி வேணும். இனி அசித்₃வ்யாவ்ருத்தமான ஜ்ஞாநம் சேதநத₄ர்ம மாகையாலே, ஸ்வரூபமாமித்தனை. ஸ்வரூபாதிரேகியான ஈஶ்வரன் பக்கலிலே உபாயபா₄வம் கிடக்குமித்தனை. "**ப்ரபத்₃யே**" என்கிற பத₃ம் மாநஸத்தைக் காட்டுமோவென்னில், 2. "**பத்₃லு க₃தௌ**" என்கிற தா₄துவிலே ஒரு க₃திவிஶேஷமாய் க₃த்யர்த்த₂மாய், பு₃த்₃த்₄யர்த்த₂மாகிறது. பு₃த்₃தி₄யாகிறது, 3. "**வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄:**" என்றும், 4. "**பு₃த்₃தி₄ரத்₄யவஸாயிநீ**" என்றும், சொல்லுகையாலே, மநோவ்யாபாரமான அத்₄யவஸாயத்தைச் சொல்லுகையாலே ப்ரபத்திக்கு மாநஸமே அர்த்த₂ம். இம்மாநஸ ஜ்ஞாநம் இருக்கும்படியென்னென்னில்; க்ரியாரூபமான

கர்மமாதல், கர்மத்தாலே க்ஷீணபாபனாய்ப் பிறக்கும் ஜ்ஞாநமாதல், கர்மஜ்ஞாந ஸஹக்ருதையான அநவரத பா₄வநாரூபையான ப₄க்தியாதல், இவை மூன்றும், கைங்கர்யத்துக்கும் உபயோகி₃யாய், ஸாத₄நதயாவிஹிதமாயிருக்கையாலே, இவற்றில் உபாயபு₃த்₃தி₄த்யாக₃பூர்வகமாய், தான் உபாயமன்றியிலே ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரமுமாய், அதி₄காரிக்கு விஶேஷணமுமாய், அத்₄யவஸாயாத்மகமுமாய் இருப்பதொரு ஜ்ஞாநவிஶேஷம் ப்ரபத்தியாகிறது. "ப்ரபத்₃யே" என்கிற வர்த்தமாநம், பே₄ாஜநஶயநாதி₃களிலே அந்யபரனானபோதொழிய, ஶரீரமும் பரவஶமாய், ஸத்வோத்தரனாய், முமுக்ஷுவாகையாலே அவனை விஸ்மரித்து இருக்கும்போதில்லையிறே; ஆகையாலே தானுணர்ந்திருந்தபோது அவனே உபாயமென்றிருக்கிற நினைவு மாறுதிருக்குமிறே, அத்தைச்சொல்லுகிறது. ஸம்ஸாரப₄யமும் ப்ராப்யருசியும் கனக்கக்கனக்க, 1. "**த்வமேவோபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நாமதி:**" என்கிற லக்ஷணவாக்யத்துக்கு உறுப்பாய் ப்ரார்த்த₂னை உருவச் செல்லவேணும். நினைக்கிறது அவனையாகையாலே நெஞ்சு விட்டுப்போம்படியாம்; பரத்வம் எட்டாது; வ்யூஹம் கால் கடியார்க்கு; அவதாரம் அக்காலத்திலுதவினார்க்கு; அர்ச்சாவதாரம் உகந்தருளின நிலங்களிலே புக்கபோது; திருவடிகளைப் பிடித்துக்கொண்டு கிடக்கவும் போகாதே; இனி இவனுக்கெங்குமொக்கச் செய்யலாவது ஜ்ஞாநாநுஸந்த₄ாநமிறே; அத்தைச் சொல்லுகிறது வர்த்தமாநம்; இதுவும் அப்படியே அநுவர்த்தகமாகிறதாகில் ப₂லஸித்₃தி₄யளவும் செல்ல அநுவர்த்திக்கிற உபாஸநத்திற் காட்டில் இதுக்கு வாசியென்னென்னில், ரூபத்தில் பே₄தி₃க்கலாவதொன்றில்லை, ஹேதுவை விஶேஷிக்குமத்தனை. 2. "**நித்₃ய₂ாஸிதவ்ய:**" என்று விதி₄பரமாய் வருவதொன்று அது; இவ்வநுஸந்த₄ாநம் ராக₃ப்ராப்தம்; அது ஸாத₄நதயா விஹிதமாகையாலே அநுஸந்த₄ாந விச்சே₂த₃ம் பிறந்தால்

ப₂லவிச்சே₂த₃ம் பிறக்கும்; ராக₃ா நுவர்த்தநமாகையாலே அநுஸந்த₄ாநவிச்சே₂த₃ம் பிறந்தால் ப₂லவிச்சே₂த₃மில்லை ப்ரபந்நனுக்கு, ஸாத₄நம் அவனாகையாலே. இதுக்கு வேதா₃ந்தத்தில் ந்யாயம் கோ₃சரிக்கிறவிடம் எங்ஙனே யென்னில்: 1. **"ஸம்பே₄ாக₃ப்ராப்திரிதி சேந்ந வைஶேஷ்யாத்"** என்று ஜீவாத்மாவோபாதி பரமாத்மாவுக்கும் அசித்₃வ்யாவ்ருத்தி ஒத்திருக்கச் செய்தே இத்தோட்டை ஸம்பர்க்கத்தாலே வரும் து₃:க்க₂ஸுக₂ாத்₃யநுப₄வங்கள் அவனுக்கு வாராது. ஸ்பர்ஶமொத்திருக்கச்செய்தே, வாராதொழிவானென்னென்னில்: உபாயந்தன்னில் ராக₃ம்பிறக்கிறது விஷயவைலக்ஷண்யத்தாலேயிறே; அவ்வோபாதி இந்த ஸாத₄நந்தானே லக்ஷ்மீபதியாய் கு₃ணாதி₄கமுமாய் விக்₃ரஹோபேதமுமாய் ஸித்₃த₄ரூபமுமாயிருப்பதொன்றாகையாலே அசேதநக்ரியா கலாபமாயிருக்கிற ஸாத₄நத்திற்காட்டில் இதிலே ராக₃ம் பிறக்கச் சொல்லவேணுமோ? திரைமேல் திரையான மிறுக்குக்கள் மேல்வந்து குலைக்கப் பார்த்தாலும், ப்ரமாணங்கள் வந்து குலைக்கப்பார்த்தாலும், அவன்தானே வந்து குலைக்கப்பார்த்தாலும் குலைக்க வொண்ணாதபடியான நிஷ்டை₂யைச் சொல்லுகிறது க்ரியாபத₃ம். பிள்ளை திருநறையூரரையரைப்போலே. ஆக பூர்வார்த்த₄ம் உபாயத்தைச் சொல்லுகிறது என்றதாய்த்து.

பூர்வவாக்யம் முற்றிற்று.

### உத்தரவாக்யத்தின் தாத்பர்யம்

இந்த உபாயந்தான், ஐஶ்வர்யாத்₃யுபேயாப₄ாஸங்களுக்கும் பொதுவாயிருக்கையாலே, அவற்றினுடைய் த்யாக₃பூர்வகமாக மேல் நிரதிஶயமான உத்தமபுருஷார்த்த₂த்தை விவக்ஷிக்கிறது. **"ஸ்ரீமதே"** என்று.

இவ்வைஶ்வர்யாதி₃புருஷார்த்த₂ங்களை ஶாஸ்த்ரம் ஆத₃ரியாநிற்க உபேயாப₄ாஸமென்று கழிப்பானென்னென்னில், இவைதான் அல்பாஸ்தி₂ரத்வாதி₃தோ₃ஷ தூ₃ஷிதங்களாயிருக்கையாலும், ஸ்வரூபப்ராப்தமல்லாமையாலும்,

த்யாஜ்யம். தே₃ஹாத்மாபி₄மாநிக்குப் புத்ர பஶ்வந்நாதி₃கள் புருஷார்த்த₂மாயிருக்கும். தே₃ஹம் அஸ்தி₂ரமென்னும் ஜ்ஞாநம் பிறந்தவாறே, அவை அவனுக்கு த்யாஜ்யமாயிருக்கும். இனி பரலோக புருஷார்த்த₂ங்களில் வந்தால் நரகம் அநிஷ்டமாயிருக்கையாலே அதில் ருசியே பிறந்ததில்லை. ஐஶ்வர்யமாகிற ஸ்வர்க்கா₃த்₃யநுப₄வத்தில் வந்தால் ஊர்வஶீஸாலோக்யத்திலே ஸுக₂ப்₄ராந்தி கிடக்கையாலே ருசியுண்டாயிருக்கும். அத்தை லபி₄த்து அநுப₄விக்கப் புக்கில் தே₃வதை து₃ஶ்ஶீலதே₃வதையாகையாலே தன்னை உபாஸித்துத் தான் கொடுத்த ப₂லத்தை அநுப₄விக்கும் ஸாம்யாபத்தி பொறுக்கமாட்டாமையாலே யயாதியை 1. **"த்₄வம்ஸ"** என்று தள்ளினாற்போலே தன்னும். இது தப்பி அநுப₄விக்கப் புக்கன்றே, 2. **"க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி"** என்று புண்யக்ஷயம் பிறந்து நரகத்திலே விழப்புகுகிறோம் என்கிற ப₄யத்தோடேயிருந்து அநுப₄விக்கையாலே, உயிர்க்கழுவில் ஸுக₂ம்போலே து₃:க்க₂ விஶேஷமாயிருக்குமத்தனை. ஸுக₂லவமுண்டானாலும், வகுத்த புருஷார்த்த₂மல்லாமையாலே ஸ்வரூபப்ராப்தமன்று. லோகவிநாஶமுண்டாகையாலே அஸ்தி₂ரம். இனி ப்₃ரஹ்மலோகப்ராப்தியில் வந்தால் அநுப₄வம் செல்லாநிற்கச் செய்தே க்ஷுத்பிபாஸையாலே ஸ்வமாம்ஸத்தை ப₄க்ஷித்துப் பின்னையும் போயிருக்கும் என்று சொல்லுகையாலும், பூர்ணமான நிஷ்க்ருஷ்டஸுக₂மல்லாமையாலும், ஸ்வரூப ப்ராப்தமல்லாமையாலும் த்யாஜ்யம். இங்ஙனொத்த து₃ரிதபரம்பரைகளுமின்றியிலே, அசித்₃வ்யாவ்ருத்தி விஶேஷணமான ஆத்மவஸ்து, விலக்ஷணமாகையாலே, ப்ராப்தியிலே ருசியுண்டாயிருக்கும். அத்தை லபி₄த்து அநுப₄விக்கப் புக்கால், ப₄க₃வத₃நுப₄வமும் அங்குள்ளாருடைய பரிமாற்றமும் ப்ரகாஶியாநிற்க, அவ்வநுப₄வத்துக்கு யோக்₃யதையுண்டாயிருக்கக் கிடையாமையாலே கீழ்ச் சொன்னவற்றிற் காட்டில் தனக்குண்டான ஸுக₂மடைய, வித₄வாலங்காரம்போலே அவத்₃யமாய், து₃:க்க₂மாய், முடி

வில்லாத நரகஸமானமாயிருக்கையாலே அதுவும் த்யாஜ்யம். கீழ்ச்சொன்னவைபோலே அல்பமன்றியே நிரதிஶயமுமாய், அஸ்தி₂ரமன்றியே நித்யமுமாய், ஸ்வரூபத்துக்கு அநநுரூப மன்றியே அநுரூபமுமாய், புநராவ்ருத்தியின்றியே அபுநரா வ்ருத்திலக்ஷணமோக்ஷமுமான, உத்தமபுருஷார்த்த₂த்தை விவக்ஷிக்கிறது உத்தரவாக்யம்.

உத்தரவாக்யத்தின் தாத்பர்யம் முற்றிற்று.

**உத்தரவாக்யத்தின் ப்ரதிபத₃வ்யாக்₂யாநாரம்ப₄ம்**

"**ஸ்ரீமதே**" என்றது கீழ் புருஷகாரபூ₄தையானாற் போலே நித்யப்ராப்யம் என்கிறது.

இவள் ப்ராப்யை என்னுமித்தை இஸ்ஶப்₃த₃ம் காட்டுமோவென்னில், "**ஸ்ரீமதே**" என்கிற விப₄க்தியாலும், "**ஆய**" என்கிற சதுர்த்தி₂யாலும், தாத₃ர்த்₂யத்தைக் காட்டுமித்தனை. இரண்டும் ஏகவிப₄க்தியாகையாலே நாராயணபத₃த்துக்கு ஸ்ரீஶப்₃த₃ம் விஶேஷணமாகையாலே ஸ்ரீமந் நாராயணன் பொருட்டென்றாய்த்து ஸ்ரீஶப்₃த₃ம் காட்டுவது. ப்ராப்யை என்று இஸ்ஶப்₃த₃ம் காட்டா தாகில், அவனோபாதி ப்ராப்யையென்று சொல்லுகிற அர்த் த₂ம் சேருகிறபடி யெங்ஙனேயென்னில்; அவன் ப்ரத₄ாந ப்ராப்யனாய்த்தது ஸ்வாமியாகையாலேயிறே. இவளும் இவனுக்கு மஹிஷி, இவர்களைக் குறித்து ஸ்வாமிநி என்னும் இஸ்ஶப்₃த₃மே, இவளுடைய ப்ராப்யதை யைச் சொல்லத்தட்டில்லை. எங்ஙனேயென்னில்; கீழ் ஸ்ரீஶப்₃த₃த்திலே இவர்களைக் குறித்து ஸ்வாமிநியென்னும் வ்யுத்பத்தியாலும் 1. "**விஷ்ணுபத்நீ**" என்கிற ப்ரமாணத் தாலும் ஸித்₃த₄மான அர்த்த₂த்துக்கு வாசகமான ஸ்ரீமச் சப்₃த₃த்தை இங்கே ப்ரயோகி₃க்கையாலே, இஸ்ஶப்₃த₃மே இவளுடைய ப்ராப்யதையைச் சொல்லுகிறது. தன்னை யொழிந்தார்க்கு ப்ராப்யஸித்₃தி₄கள் இவளுடைய கடாக்ஷமா யிருக்கும். இதுதன்னை நம்மாழ்வார் a "கோலத்திருமா

a திருவாய் 6-9-3.

மக்ளோடுன்னைக்கூடி" என்றும், இளையபெருமாளும் 1. "ப,வாம்ஸ்து ஸஹ வைதே,ஹ்யா கி,ரிஸாநுஷு ரம்ஸ்யதே" என்று பெருமாள் ப்ராப்யரானவோபாதி பெரியபிராட்டியார் ப்ராப்யை என்றும் அருளிச்செய்தார்கள். இவ்வடிமை கொள்ளச் சேர இருக்கிறவிருப்பை 2. "ஶ்ரியா ஸார்த்த,ம் ஜக,த்பதி:" இத்யாதி,களாலே. இவன் ப்ராப்யதை எங்கு மொக்க வ்யாப்தம். அவனுடைய ப்ராப்யதை ஸ்வதஸ் ஸித்,த,ம். அதுக்கு ஏகாயநனுமிசையுமே. இவளுடைய ப்ராப்யதையைச் சொல்லுகையாலேயிறே இதுக்கு ப்ராத,ாந்யம். மாதாபிதாக்கள் இருவரையும் சேர அநுவர்த்திக்கும் புத்ரனைப்போலே, ஸ்வாமியும் ஸ்வாமிநியும் சேர்ந்த சேர்த்தியிலே அடிமை செய்கை ஶேஷபூ,தனுக்கு ஸ்வரூபம். ஸாத,நத,ஶையில் புருஷகாரத்தை அபேக்ஷித்தவோபாதி, ஸாத்,யத,ஶையிலும் இருவருமான சேர்த்தி அபேக்ஷிதம். "ஸ்ரீமதே"என்கிற மதுப்பாலே கீழில் மத் பத,த்தில் அர்த்த,ம்போலே இங்கும் இருவருமான சேர்த்தியால் வந்த போ,க்,யதை நித்யமென்கிறது. இப்படி இச்சேர்த்தியொழியத் தனித்து அவளே ப்ராப்யையென்று பற்றுதலும், அவனே ப்ராப்யமென்று பற்றுமதுவும் விநாஶம். எங்கே கண்டோமென்னில். பிராட்டியொழிய, பெருமாள் பக்கலிலே போ,க்,யபு,த்,தி, பண்ணின ஶூர்ப்பணகி, நஶித்தாள். பெருமானைப்பிரித்துப் பிராட்டி பக்கலிலே போ,க்,ய பு,த்,தி, பண்ணின ராவணன் நஶித்தான். உடலையும் உயிரையும் பிரித்தார்க்கு விநாஶமல்லதில்லையிறே.
3 "அநந்யா ராக,வேணாஹம் பா,ஸ்கரேண ப்ரபா, யதா,"
4. "அநந்யா ஹி மயா ஸீதா பா,ஸ்கரேண ப்ரபா, யதா,"
என்றிருவருடைய ஸத்,பா,வமும் இதுவானபின்பு இனி இவர்களைப் பிரிக்கையாவது வஸ்துவினுடைய ஸத்,பா,வத்தை இசையாமையித்தனையிறே. இவ்வஸ்துஸத்,பா,வத்தை இசைந்தார்க்கு மிது,நமேயிறே ப்ராப்யம்.

**"நாராயணன்"** என்று எல்லாவழியாலும் வகுத்த ஸர்வாத்ம ஸ்வாமி என்கிறது. கீழ் பற்றுகைக்கு ஸௌலப்,யம்

ப்ரதா,நமானவோபாதி, இங்கும் அடிமை செய்கைக்கு வகுத்த ஶப்,த³ம் அபேக்ஷிதமாகையாலே ஸ்வாமித்வத்திலே நோக்கு. வகுத்த ஸ்வாமி என்கையாலே இவனையொழிந்த அஸேவ்யஸேவை அபுருஷார்த்த₂மென்கிறது. திருமந்த்ரத்தில் நாராயண ஶப்₃த₃வாச்யமான அர்த்த₂ விஶேஷங்கள் இந்தநாராயண ஶப்₃த₃த்தில் உபதே₃ஶியாதொழிவானென்னென்னில், அங்கு ஸ்வரூபம் சொல்லுகிறதாகையாலே சேதநாசேதநமான நித்யபதா₃ர்த்த₂ங்களினுடைய ஸமூஹங்கள் பலவற்றுக்கும் ஆவாஸபூ₄மியாயிருக்கிறனென்று ஸர்வஸ்வாமித்வம் சொல்லிற்று. இங்கு அசித்₃வ்யாவ்ருத்தனான சேதநனுக்கு ப்ராப்யம் சொல்லுகையாலே ஸர்வாத்மஸ்வாமித்வம் சொல்லிற்று. கீழ் நாராயண பத₃த்தில் சொன்ன கு₃ணங்களும் இப்பத₃த்திலே ப்ராப்ய பரமாக அநுஸந்தே₄யம். அவன்தான் நிற்கும் நிலையிலே கு₃ணங்கள் நிற்பது. ப்ராப்யமான ஆகாரமும் ப்ராபகமான ஆகாரமும் அவன்தனக்குண்டானாற்போலே அவன் கு₃ணங்களுக்குமுண்டு. அங்கும் தன்கு₃ணங்களை ப்ராப்ய பரமாகச் சொல்லுகிறது. 1. **"ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதேதி"** என்றும், a"பிணங்கியமரர் பிதற்றும் குணம்" என்றும் கு₃ணாநுப₄வமே ப்ராப்யமாகச் சொல்லிற்றிறே.

நித்யஸூரிகளநுப₄விக்கக்கடவ கு₃ணங்களை — நித்யஸம்ஸாரியை முக்தனாக்கி இக்கு₃ணங்களை இவர்களளவிலே மட்டம் செய்துகொடுத்து ஸாக்ஷாத்கரித்து அநுப₄விப்பிக்கையாலே ஸௌலப்₄யம் ப்ராப்யம். சேறுதோய்ந்த இவனை ப்ராக₃ல்ப்₄யமேயாயிருக்கிற நித்யஸூரிகளுடைய கோவையிலே ஒருவனாக்கி அநுப₄விப்பிக்கையாலே ஶீலகு₃ணம் ப்ராப்யம். அநுப₄விக்கிற இவனுடைய தோ₃ஷம்பார்த்தல், தன் வைலக்ஷண்யம் பார்த்தல் செய்யாதே இவனை அநுப₄விப்பிக்கையாலே வாத்ஸல்யம் ப்ராப்யம். இவனுடைய அஸேவ்யஸேவைகளைத்தவிர்த்து ஸ்வரூபாநுரூபமான கைங்

---

a திருவாய் 1-6-4.

கர்யத்தைக்கொடுத்து அடிமை கொள்ளுகையாலே வகுத்த ஸ்வாமித்வம் ப்ராப்யம். இந்த ஜ்ஞாநஶக்த்யாதி, கு,ணங்களை அநுப,விக்கிற இவனுக்கு போ,க்த்ருத்வஶக்தியையுங் கொடுத்து அநுப,விப்பிக்கையாலே, அவற்றோடு இவற்றினுடைய கார்யாவஸ்தை,யான ஶீலாதி,கு,ணங்களோடு வாசியற எல்லாம் கட்டடங்க இவனுக்கு ப்ராப்யம். ஈஶ்வரன்தான் ப்ராப்யனாகிறது. இக்கு,ணங்களுக்கு ஆஶ்ரய பூ,தனென்றிறே. நித்யஸம்ஸாரியை முக்தனாக்கி அநுப,விப்பிக்கையாலே வேறே கு,ணங்கள் ப்ராப்யமாய்த்தென்னில், ஸ்வேந ரூபேண கு,ணங்களடைய ப்ராப்யமென்னுமிடம் கண்டோமிறே. நித்யஸூரிகள் குமிழிநீருண்கையாலே ஸம்ஸாரிசேதநரை இதுக்கு நிலவனாக்கி அநுப,விப்பிக்கிற உபகாரஸ்ம்ருதிக்காக இட்ட பாசுரங்களிறே இவை. ஒன்றும் செய்யாதபோதும் போ,க்,யதையிறே கு,ணங்களுக்கு வேஷம். அவன் கு,ணமென்று இவை போ,க்,யமான பின்பு கு,ணாமாஶ்ரயமானவன் ஸ்வரூபத்துக்கு போ,க்,யதையே நிரூபகமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. நாராயண ஶப்,த,த்தில் அநந்தரத்தில் விக்,ரஹத்தையே ஸ்பஷ்டமாகச் சொல்லாதொழிவானென்? விக்,ரஹம் ப்ராப்யமாயிருக்க? என்னில், இதுக்கு ஸாத,நமான பூர்வார்த்த,த்திலே விக்,ரஹவைலக்ஷண்யத்தைச் சொல்லுகையாலே ப்ராப்கமான வஸ்துதான் ப்ராப்யமாகையாலே, இங்கு ஶப்,தே,ந சொல்லிற்றில்லையேயாகிலும், இங்குண்டென்னுமிடம் அர்த்த,ாத் ஸித்,த,ம். விக்,ரஹத்துக்கு போ,க்,யதையே வேஷமாயிருக்கையாலே இங்கு ஸித்,த,மாயிருந்தது. அதி,காரியினுடைய க,திஶூந்யதையாலே உபாயமாக வேண்டுகிறது. அதுவும் அவனுக்கு அபாஶ்ரயமாம்படி உபதே,ஶிக்க வேண்டுகையாலே ஶப்,தே,ந சொல்லிற்று. ப்ரஸித்,த,மான விஷயத்துக்குப் பூரிக்க வேண்டாவே இந்த விக்,ரஹத்துக்கு இங்ஙனே இருப்பதொரு ஏற்றமுண்டு—மாணிக்கச்செப்பிலே பொன்னையிட்டு வைத்தாற்போலே ஸ்வரூபகு,ணங்களுக்கு ப்ரகாஶகமா

யிருக்கையாலே, இக்கு₃ணங்களினுடைய போ₄க்₃யதை யெல்லையறிந்து விக்₃ரஹத்தளவும் செல்லப்பெற்றதில்லை. விக்₃ரஹத்தை அவன் தான் ஆவிஷ்கரித்து ஸதா₃பஶ்யந்திக்கு விஷயமாக்கின போது அநுப₄விக்குமத்தனை. ஆக இந் நாராயணஶப்₃த₃த்தாலே ஸர்வாத்மஸ்வாமித்வம் சொல்லிற்றாய்த்து.

"ஆய" என்கிற இது சதுர்த்தி₂யாகையாலே நித்ய கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கிறது. இச்சதுர்த்தி₂க்கு தாத₃ர்த்₂யம் அர்த்த₂மாயிருக்க நித்யகைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கிறது என்கைக்குக் கைங்கர்யத்தைக் காட்டுமோ வென்னில்: "வ்ருக்ஷாய ஜலம்" என்றால் வ்ருக்ஷத்தின் பொருட்டென்னுமாபோலே "நாராயணாய" என்றால் நாராயணனுக்கு ஶேஷமென்று காட்டுமத்தனையன்றோவென்னில்; ஸ்வரூபம் தாத₃ர்த்த₂மானபோதே ஸ்வரூபாநுப₃ந்தி₄யாய் வரும் ஸ்வபா₄வங்களும் தாத₃ர்த்த₂மாகக் கடவதிறே. ஶேஷபூ₄தனுக்கு ஶேஷவ்ருத்தியிறே ஸ்வரூபம்; புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே. ஸ்வரூப ப்ராப்தியாவது - கைங்கர்யப்ராப்தியாகக் கடவது, கைங்கர்யம் ஸஹஜமாகையாலே. தாத₃ர்த்த₂மாவது—ஶேஷத்வம் சொன்னவிடத்திலே ஶேஷவஸ்துவைச் சொல்லிற்றாய், அது சொன்னவிடத்திலே ஶேஷவ்ருத்தியைச் சொல்லிற்றாய், அவ்வழியாலே கைங்கர்யம் சொல்லிற்றாகக் கடவது.

ஆனால் "ஸர்வதே₃ஶஸர்வகாலஸர்வாவஸ்தோ₂சிதமான ஸகல கைங்கர்யங்களையும் பண்ணப்பெறுவேனாகவேணும்" என்கிற ப்ரார்த்த₂னையைக் காட்டுமோ இஶ்ஶப்₃த₃ம்? என்னில்,— இந்த ஸ்வரூபஸ்வபா₄வந்தான் ஒரே காலத்திலேயாய், வேறொரு காலத்திலின்றிக்கேயிருக்குமோ? என்னில், எல்லா தே₃ஶத்திலுமுண்டென்று வந்து புகுந்து ௧ "உடனாய்" என்கிறபடியே, இத்தே₃ஶங்களில் ஒரோரவஸ்தை₂களில் ஓரோரிடங்களிலேயாய் ஓரோரடிமையின்

௧ திருவாய் 3-3-1.

றிக்கேயிருக்குமோ வென்னில்: ஸகல கைங்கர்யங்களும்உண்டென்று வந்து புகுந்து ௨ "வழுவிலாவடிமை" என்கிற படியே ப்ரணவத்தாலும், நமஸ்ஸாலும், ஶுத்₃த₄ஸ்வருபரான நமக்கென்று போ₄கா₃தி₄காரியைச் சொல்லுகிறது. அவ்விடத்திலே ௨ "செய்யவேண்டும் நாம்" என்று திருப்பாவாடை இனிதென்று சொல்லுமாபோலே இவன் கைங்கர்யம் இனிதென்று இவன் எல்லா அடிமையையும் பாரித்தால் அவன் கொள்ளுமோ, உத்துங்க₃தத்த்வமன்றோ என்னில், இவனிருந்து ப்ரார்த்தி₂க்கவே அவன் கொள்ளுமிடத்தைப் பற்றவே ப்ரார்த்த₂னை புகுந்தது.

இஶ்ஶப்₃த₃த்துக்கு ஶேஷத்வம் அர்த்த₂மாயிருக்க, கைங்கர்யத்தைக் காலதே₃ஶங்களையிட்டுப் பெருக்கி அநுஸந்தி₄க்கிறதற்கு ப்ரயோஜநம் என்னென்னில், கலியன் பைபையாகக் குவிக்க வேணுமென்னுமாபோலே தனக்கு ஸ்வருபாநுருபமுமாய் ஸர்வாதி₄காரமுமான கைங்கர்யத்திலேயிறே போ₄க்₃யதையில் வைப₄வத்தாலே வந்த அபி₄நிவேஶம்.

ப₄க₃வத₃நுப₄வமும் கைங்கர்யமாய் இருக்கச்செய்தே அது ஈஶ்வரனுக்குமொத்து, தனக்கும் ப்ரீதியுண்டாகையாலே இப்ரீதிகாரிதமான கைங்கர்யம் உண்டாய்த்து. இனி கைங்கர்யத்துக்கு அவ்வருகில்லையே ப்ராப்யம்.

கீழ்சொன்ன பிராட்டியும், கு₃ணங்களும், விக்₃ரஹமும், ஈஶ்வரனும் ப்ராப்யமன்றோவென்னில், இக்கைங்கர்யத்துக்கு வர்த்த₄கராகையாலே ப்ராப்யரானார்களித்தனை; கைங்கர்யமே ப்ராப்யம். அர்ச்சிராதி₃ ஸாலோக்யாதி₃ பரப₄க்த்யாதி₃கள் ப்ராப்யமானவோபாதி ப₄க₃வல்லாப₄மும் ப்ராப்யமான ஆகாரம். ஒகைங்கர்யமே ப்ரத₄ான ப்ராப்யம். ஸாலோக்யாதி₃களில் ஸாயுஜ்யம் ப்ரத₄ாநமாகச் சொல்லுகிறது கைங்கர்யமாகையாலேயிறே. 1. "ஸாயுஜ்யம் ப்ரதி

௨ திருவாய் 3.3.1.

யந்நா யே தீவ்ரப₄க்தாஸ்தபஸ்விந:। கிங்கரா மம தே நித்யம் ப₄வந்தி நிருபத்₃ரவா:॥" என்கிறபடியே. ஸாயுஜ்யமாவது கூட்டரவு; கூடினலல்லது கைங்கர்யம் ஸித்₃தி₄யாது. ஸ்த்ரீபுமாந்கள் ஒன்ருனர்களென்ருல் ஏகத்₃ரவ்யமானர்கள் என்றன்றிறே. ஒருமிடருனர்களென்று பொருளாய்த்து. அப்படியே இக்கைங்கர்யம் கொள்ளவிருக்கிற ஶேஷியுடைய நினைவும், கைங்கர்யஞ்செய்து ஸ்வரூபம் பெறவிருக்கிற ஶேஷபூ₄தனுடைய நினைவும் ஒன்ருய், அதாவது ஶேஷியினுடைய நினைவு தனக்கு நினைவாய் அவனுடைய போ₄க்₃யமே தனக்கு போ₄க்₃யமாகத் தலைக்கட்டுகை. ஒரு மிது₂நம், போ₄க்₃யம் மிக்கு உந்மஸ்தக ரஸமாய்க் கலவாநின்ருல், பிறக்கும் இனிமை இருவர்க்கும் ஒக்குமிறே. அதில் பரதந்த்ரனை இவனுக்குப் பிறக்கும் இனிமை பாரதந்த்ர்யத்தோடே சேர்ந்திருக்க வேணுமிறே. அதாவது இவன் செய்யும் அடிமைகண்டு அவனுகந்தால், பின்னை அவனுகந்தபடி கண்டுகக்கையிறே இவனுக்கு ஸ்வரூபம். கைங்கர்ய விஷயமாக வங்கிபுரத்து நம்பி பணிக்கும்படி:— "1. 'கிம் குர்ம இதி கைங்கர்யம்' என்று ப₄க₃வத₃நுப₄வப்ரீதியாலே தடுமாறி என்செய்வோம் என்றிருக்கை" என்று. அங்ஙனன்றிக்கே மாநஸமாயும் வாசிகமாயும் காயிகமாயுமிறே செய்யும் அடிமைகள். 2. "ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ, ப்₃ரஹ்மணா விபஶ்சிதா" என்று மாநஸமான அடிமை. 3. "ஹாவு ஹாவு ஹாவு. அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம். அஹமந்நாதோ₃ऽஹமந்நாதோ₃ऽஹமந்நாத₃:" 4. "நம இத்யேவ வாதி₃ந:" என்னும் இவை வாசிகமான அடிமை; 5. "யதா₂ தருணவத்ஸா வத்ஸம், வத்ஸோ வா மாதரம், சா₂யா வா ஸத்த்வம் அநுக₃ச்சே₂த். / (க₃ச்ச₂ந்தமநுவ்ரஜேத்) ததா₂ ப்ரகாரம் யேந யேந தா₄தா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி" என்னும் இவை காயிகமான அடிமை.

ஆக இவையாய்த்து கைங்கர்யம். இவை செய்யுமிடத்தில் a"தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்கிற

---

a திருவாய் 2-9-4. / ( ) இது அதி₄கபாட₂ம்.

படியே ஸ்ரக்சந்த₃நாதி₃களைப்போலே அவனுக்குக் கைதொடுமானமாயிருக்கை. அதாவது, விநியோக₃ங் கொள்ளுமவனுக்கேயுறுப்பாய், தனக்கென்ன வேறொரு ஆகாரமின்றிக்கேயிருக்கை. அப்படி a“படியாய்” என்கிற படியே அசித்ஸமாதி₄யிலேயாம்படி தன் ஸ்வரூபத்தை ரக்ஷித்தால், பின்னை அவனுகந்தபடிகண்டு உகக்குமென்னத் தட்டில்லையிறே புருஷார்த்த₂மாகைக்கு.

இதுக்கு வரும் விரோதி₄நிவ்ருத்தியைச் சொல்லுகிறது - நமஸ்ஸு. “நம:” என்கிறது - கைங்கர்யத்தில் நானென்கிற விரோதி₄யைப் போக்கித் தந்தருளவேணுமென்கிறது. அஹங்கார க₃ர்ப்ப₄மான கைங்கர்யம் புருஷார்த்த₂மன்றே. ஆகையாலே அவ்வளவுஞ்செல்லவுள்ள அஹங்கார மமகாரங்களைப் போக்கித்தந்தருளவேணுமென்கிறது. அஹங்காரத்தை நிஷேதி₄க்கையாலே அத்தால் வந்த மமகாரமும் இந்நமஸ்ஸிலே நிஷேத்₄யமாய்த்து. அஹங்கார மமகாரங்களாகிற சேற்றிலே அநாதி₃காலம் புதையுண்டுகிடந்த சேதநனை நமஸ்ஸாகிற நீரிலே கழுவுகையாலே b ஆசும், b மாசும் அற்றபடி.

இவன் முக்தனாய் ப்ராப்யாநுப₄வம் பண்ணும்போதும் எனக்கென்னுமது அங்குண்டோவென்னில், அங்கில்லை, இக்கைங்கர்யம் பெறவேணுமென்று அபேக்ஷிக்கிறவன் விரோதி₄யோடே இருந்து அபேக்ஷிக்கிறவனாகையாலே, தே₃ஹாத்மாபி₄மாநம் தொடக்கமாக, கைங்கர்யத்தில் அஹங்கார க₃ர்ப்ப₄மீறாக நடுவுண்டான விரோதி₄களைப் போக்கித்தந்தருளவேணுமென்று உபாஸநவேளையாகையாலே அபேக்ஷிக்கிறான். திருமந்த்ரத்தில் நமஸ்ஸிலே ஸ்வரூப விரோதி₄ நிவ்ருத்தியைச் சொல்லிற்று. இந் நமஸ்ஸிலே ப்ராப்ய விரோதி₄யான ஸ்வப்ரயோஜநத்தைத் துடைத்தது.

---

a பெரு-திரு 4-9. b திருமாலை 22.

கைங்கர்யமாவது— 1. "ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றும், a "படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே" என்றும், b"உன்றன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும்" என்றும், c "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்றும், d "உனக்கே நாமாட்செய்வோம்" என்றும், e "தூயனவேந்தி" என்றும், 2. "ந்ீத: ப்ீதிபுரஸ்க்ருத:" என்றும், 3. "ச₂ாயா வா ஸத்த்வமநுக₃ச்சே₂த்" என்றும், 4. "ப்ரீயதே ஸததம் ராம:" என்றும், f "முகப்பே கூவிப்பணிகொள்ளாய்" என்றும், 5. "க்ரியதாமிதி மாம் வத₃" என்றும், g "ஏவ மற்றமரராட்செய்வார்" என்றும், 6. "ரமமாணா வநே த்ரய:" என்றும் இவையிறே இவனடிமை செய்யும்போது இருக்கும்படி. இத்தால் சொல்லுகிறது பாரதந்த்ர்யகாஷ்டை₂கள்.

ஆக, புருஷகாரஞ்சொல்லி, அதினுடைய நித்யத்வம் சொல்லி, அப்புருஷகாரம் மிகையென்னும்படியான வாத்ஸல்யாதி₃கு₃ணயோக₃ஞ்சொல்லி, விக்₃ரஹவைலக்ஷண்யம் சொல்லி, இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவாரணத்துக்கும் நிரபேக்ஷமான உபாயஞ்சொல்லி, தத்ஸ்வீகாரஞ்சொல்லி, ஸ்வாமித்வபூர்த்தி சொல்லி, கைங்கர்ய ப்ரார்த்தநை சொல்லி, கைங்கர்ய விரோதி₄ போனபடி சொல்லித் தலைக்கட்டுகிறது.

ஷட்₃கு₃ணரஸாந்நமான அஹமந்நத்திலே நெஞ்சுவையாதே ஸ்வாமிக்காக்குகை. h "தேனும் பாலுங் கன்னலும் அமுதுமாகித் தித்திப்ப" i "அங்கண்ணனுண்ட என்னுருயிர்க்கோதிது" என்று பின்பு ஆபாத₃ரணீயம்.

தனித்₃வயம் முற்றிற்று.

உலகாசிரியன் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

a பெரு-திரு4.9. b திருவாய்10.3.9. c டி2.9.4. d திருப்பாவை29. e திருவிருத்தம் 21. f திருவாய் 8.5-7. g டி 8.1-1. h டி 4.3.10. i டி 9.6.6.

# 17. தனிசரமம்

## அவதாரிகை

**லோகாசார்யாய கு₃ரவே க்ருஷ்ணபாத₃ஸ்ய ஸூநவே।**
**ஸம்ஸாரபோ₄கி₃ஸந்த₃ஷ்ட ஜீவஜீவாதவே நம: ||**

**வாழியுலகாசிரியன் வாழியவன் மன்னுகுலம்**
**வாழிமுடும்பை யென்னுமாநகரம்—வாழி**
**மனஞ்சூழ்ந்தபேரின்ப மல்குமிகுநல்லார்**
**இனஞ்சூழ்ந்திருக்கு மிருப்பு.**

ஸர்வேஶ்வரன், ஜக₃த்ஸ்ருஷ்டி பண்ணி, வேதோ₃பதே₃ஶத்தைப் பண்ணியருளி, தத்₃த்₄வாரா சேதநருடைய ருச்யநுகூலமாகப் புருஷார்த்த₂ங்களையும் தத்ஸாத₄நங்களையும் காட்டி, அவ்வழியாலே தானே ஸாத்₄யமும் ஸாத₄நமும் என்கிற ஶாஸ்த்ரத்தையும் உபதே₃ஶித்துவிடுகையன்றிக்கே, பரவ்யூஹவிப₄வார்ச்சாவதாரங்களிலும் அதிமாநுஷ சேஷ்டிதங்களாலும் தானே ரக்ஷகனென்னுமிடத்தைக் காட்டி, இத்தனையும் செய்தவிடத்திலும் 1. **"ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா₄ ஜந்மநி ஜந்மநி। மாமப்ராப்யைவ கௌந்தேய! ததோ யாந்த்யத₄மாம் க₃திம் ||"** என்று ஆஸுர ப்ரக்ருதிகளாய் இவ்வாத்மாக்கள் ப்ரக்ருதி ப்ராக்ருதங்களையே புருஷார்த்த₂ங்களாகவும் அவை ஸம்பாதி₃க்குமிடத்திலும் தாங்களே ஸம்பாதி₃த்துக்கொள்ளுவதாகவும் கோலி, அவை பெற்றபோது ப்ரியப்பட்டும், பெறாதபோது வெறுத்தும் இங்ஙனே அநுதாபப்படுகிறபடியைக் கண்டு க்ருபயா பரயா ऽऽவிஷ்டனாய், அவர்கள் செய்தபடி செய்கிறார்களென்று தன் கு₃ணங்கள் தன்னையிருக்கவொட்டாமையாலே, நாம் செய்த குறையிறே சேதநர் நல்வழிவராதொழிகிறதென்று பார்த்து, 2. **"க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்"** 3. **"பவித்ராணாம் ஹி கோ₃விந்த₃: பவித்ரம் பரமுச்யதே"** 4. **"புண்யாநாமபி புண்யோऽஸௌ மங்க₃ளாநாம் ச மங்க₃ளம்"** என்று இங்ஙனே தானே ஸாத₄நமும் ஸாத்₄யமுமென்கிற ஶாஸ்த்ரத்தைக் காட்டிக்கொடுப்போமென்று பார்த்தருளி, 5. **"த₄ர்ம**

**ஸம்ஸ்த,ாபநார்த்த,ாய ஸம்ப,வாமி"** என்றும், **1. "ததோ ऽகி,லஜக,த்பத்,மபே,ாத,ாயாச்யுதப,ாநுநா। தே,வகீ பூர்வ ஸந்த்,யாயாமாவிர்ப்பூ,தம் மஹாத்மநா ॥"** என்றும் சொல்லு கிறபடியே ஸ்ரீமது,ரையிலே திருவவதாரம் பண்ணியருளி பூதநாஶகடயமளார்ஜுநாதி,களாகிற ப்ரதிகூலவர்க்க,ம் மண் ணுண்ணும்படியாகவும், அக்ரூரமாலாகாராத்,யநுகூல ஜநங் கள் வாழும்படியாகவும் இப்படி ஸர்வாத்மாக்களினுடைய ப,ாஹ்யாப்,யந்தர தமோநிரஸநம் பண்ணி வளர்ந்தருளு கிற காலத்திலே, பாண்ட,வர்களுக்கும் து,ர்யோத,நாதி, களுக்கும் பரஸ்பரம் பிறந்த வைரஸ்யத்தை, யுத்,த,வ்யா ஜத்தாலே ஶமிப்பிப்பதாகப் பார்த்தருளி, யுத்,த,ார்த்த,மாக ஸர்வலோகத்தையும் குருக்ஷேத்ரத்திலே கூட்டி, அர்ஜுநஸாரதி,யாய் நிற்க; அவனும், **2. "ஸேநயோ ருப,யோர் மத்,யே"** என்று உப,யஸேனையிலுமுள்ள தன் ப,ந்து,வர்க்க,த்தைப் பார்த்து, இவர்களை ஹிம்ஸித்து நாம் ஜீவிக்கையாவதென்னென்று தளும்பின அர்ஜுந னுக்கு, அவனுடைய தளும்பு நிமித்தமாக ப்ரக்ருத்யாத்ம விவேகத்தையும், ஆத்மாவினுடைய நித்யத்வாதி,களையும், தத்ப்ராப்தியினுடைய யோ,க்,யதையையும், தத்ப்ராப்தி ஸாத,நம் கர்மஜ்ஞாநங்களென்னுமிடத்தையும் அருளிச் செய்ய; அவனுமவ்வளவிலே அஸந்துஷ்டனாக; **3. "ஏஷ து வா அதிவத,தி, யஸ்ஸத்யேநாதிவத,தி"** என்கிற ஶ்ருதி போலே, தானே, தன்னுடைய ஸ்வரூபஸ்வப,ாவங்களை யும், தத்ப்ராப்தி வைலக்ஷண்யத்தையும், தது,பாயமான கர்மஜ்ஞாநஸாத்,ய ப,க்தியோக,வைப,வத்தையும் அருளிச் செய்ய, கீழ் உக்தமான புருஷார்த்த,த்தில் விளம்ப,ாஸஹை யான ருசியாலும், தது,பாயத்தினுடைய து,ஷ்கரதை யாலும், ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத ஸ்வரூப பாரதந்த்ர்யத்தாலும், "து,ஷ்கரமுமாய், விளம்ப்,ய ப,லப்ர த,முமாய், ஸ்வரூபவிருத்,த,முமாய் இருக்கிற உபாயத்தாலே எம்பெருமானைப்பெற என்பதொன்றில்லை, இனி இழந்து போமித்தனையாகாதே!" என்று ஶோகித்த அர்ஜுநனைக்

குறித்து, பரமகாருணிகனை கீ₃தோபநிஷதா₃சார்யன், வேதா₃ந்தஸித்₃த₄மாய், பரமரஹஸ்யமுமாய், ஸர்வாதி₄காரமுமாய், ஸுலபமுமாய், அவிளம்ப்₃ய ப₂லப்ரத₃முமாயிருந்துள்ள பரம ரஹஸ்யமான சரமோபாயத்தை அர்ஜுந வ்யாஜத்தாலே ஸர்வாத்மாக்களுக்கும் அருளிச்செய்தருளினது சரமஶ்லோகமாகிறது.

ப்ரத₂மஶ்லோகமென்று கீழொன்றுண்டாய் அத்தைப் பற்றச் சரமஶ்லோகமென்கிறதோவென்னில், அதன்று; சரமார்த்த₂த்தைச் சொல்லுகையாலே சரமமென்னில், 1. "ஸக்ருதே₃வ" இத்யாதி₃களிலும் சரமஶ்லோகத்வ ப்ரஸங்க₃முண்டாம்; இங்கு, கர்மாத்₃யுபாயங்களைச் சொல்லி அநந்தரம் இத்தைச் சொல்லுகையாலே இதுக்கு அவ்வருகொரு உபாயமில்லாதபடியான உபாய விஶேஷத்தைச் சொல்லுகையாலே இத்தைச் சரமஶ்லோகமென்று ஆசார்யர்கள் சொல்லுவர்கள்.

"மாஶுச:" என்று ஶோகநிவ்ருத்தியைச் சொல்லுகையாலே, ஶோகஹேது உண்டாகவேணும். அதாவதென்னென்னில், கீழே 2. "ஶோக ஸம்விக்₃நமாநஸ:" என்றதுக்கு "மாஶுச:" என்கிறதாய், ஏகவாக்யமாகிறதல்ல, 3. "நாநுஶோசந்தி பண்டி₃தா:" என்று தொடங்கி ப்ரக்ருத்யாத்ம விவேகம் பண்ணுவித்தருளினபோதே அந்த தத்த்வவிஷய ஶோகம் போயிற்று. இனி கர்மாத்₃யுபாயங்களைப் பற்றி ஶோகிக்க, அந்த ஹிதவிஷய ஶோகத்தைப் பற்றச்சொல்லுகிறது இங்கு. அதாகிறது, புருஷார்த்த₂லாப₄த்தாலும், உபாயகௌ₃ரவாதிஶயத்தாலும், நாம் அதி₄காரிகளாய் இவ்வுபாயத்தை அநுஷ்டி₂த்து இப்புருஷார்த்த₂ம் பெறுகையென்பதொன்றில்லையென்றும், ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத நமக்கு ஸ்வாதந்த்ர்ய க₃ர்ப்ப₄மான உபாயங்களை அநுஷ்டி₂க்க ப்ராப்தியில்லையென்றும் ஶோகிக்க, உபாயாந்தரவித₄நம பண்ணுகிறது என்றபடி. ஆகையாலே ப்ரபத்திக்கு இவ்வளவுபிறந்து

ஶோகித்தவன் அதி₄காரியென்கை. "இவ்வளவு பிறவாத வனுக்கு இவ்வர்த்த₂ம் சொல்லுகையாகிறது, பறிப்பான் கையில் சிற்றறிவான் கொடுக்குமோபாதி" என்று திருக் கோட்டியூர் நம்பி அருளிச்செய்வர்.

**"ஸர்வத₄ர்மாந்"** இத்யாதி₃ — ஶ்ருதிஸ்ம்ருதீதிஹா ஸாதி₃சோதி₃தமான நித்ய நைமித்திக காம்யரூபமான த₄ர் மங்களையும், மோக்ஷோபயோகி₃ த₄ர்மங்களையும் ஸவாஸந மாக விட்டு, என்னையே ஸஹாயாந்தர நிரபேக்ஷமான உபாயமாகப்பற்று; நானுன்னை ஶோகவிஷயமான ஸர்வ பாபத்தில்நின்றும் விடுவிப்பேன்; நீ ஶோகியாதே கொள் என்றபடி.

வேத₃ங்கள் த₄ர்மங்களைச் செய்யச்சொல்லாநிற்க விடச்சொல்லுகிற இது வேத₃ங்களெல்லாத்தோடும் விருத்₃ த₄ம்; ஆதலால் இதுக்கு வேறொருபடி அர்த்த₂ங்கொள்ள வேணுமென்று பார்த்து, விஹிதத₄ர்மங்களை விட்டவனுக்கு ப்ராயஶ்சித்தமாக ஶரணாக₃தியை விதி₄க்கிறதென்றார்கள், அது கூடாது; எங்ஙனேயென்னில், ஶாஸ்த்ரவிரோத₄ மில்லாமையாலே; அதாவது — யாக₃ம்பண்ணும்போது மற்றை ஸ்நாநஹோமாதி₃ கர்மங்களை விலக்கினாற்போல ஶரணாக₃திக்கு அங்க₃மாக மற்றை த₄ர்மங்களை விலக்கு கைக்கு விரோத₄மில்லை. இவ்விதி₄ மோக்ஷார்த்த₂மாத லால் ஸ்வர்க்கா₃ர்த்த₂மான விதி₄களோடு விரோத₄மில்லை. அவற்றை இங்கு விலக்காமையால் மோக்ஷார்த்த₂மான கர்ம ஜ்ஞாந ப₄க்திகளோடு விரோத₄மில்லை. அவையாதல் இதுவாதல் என்கையாலும், அர்ஜுநன் முன்பு த₄ர்மங் களை விட்டு நின்றொருவனல்லாமையாலும், அவனை நோக்கி ப்ராயஶ்சித்த விதி₄யாகவும் கூடாது.

வேறே சிலர் த₄ர்மஶப்₃த₃த்தாலே ப₂லத்தைச் சொல்லு கிறதாக்கி த₄ர்மத்தை அநுஷ்டி₂யாநின்றே ப₂லத்தில் இச்சை₂யை விடவே, அது மோக்ஷத்துக்கு ஸாத₄நமாம் என்றார்கள்; அதுவுங்கூடாது; த₄ர்மஶப்₃த₃ம் ப₂லத்தைக்

காட்டாமையாலும், ஶரணாகதிவிதியோடு அதுக்கு ஸங்கதியில்லாமையாலும், ஶோகியாதே கொள்ளென்கிறவிது கூடாமையாலும் [அதுவும் பொருளன்று.]

வேறேசிலர், தர்மத்தில் அதிகாரமில்லாத ஸ்த்ரீஶூத்ராதிகளுக்கு மோக்ஷோபாயமாக ஶரணாகதியை விதிக்கிறதென்றார்கள், அதுவுங்கூடாது. அவர்களுக்கு தர்மப்ராப்தி இல்லாமையாலே த்யாகம் விதிக்கக்கூடாமையாலும், அர்ஜுநனை நோக்கி அருளிச்செய்கையாலும் [அதுவும் அர்த்தமன்று.]

வேறேசிலர், தேவதாந்தரங்களைச் சொல்லுகிறதாக்கி அவற்றைவிட்டு எம்பெருமானையே ஆஶ்ரயிக்கை மோக்ஷோபாயமென்று ஐகாந்த்யம் விதிக்கிறதென்று சொன்னார்கள்; அதவுங்கூடாது, தர்மஶப்தம் அப்படி ப்ரஸித்தியில்லாமையாலும், ஶரணாகதியாவது ஸமாஶ்ரயணமாத்ரமல்லாமையாலும் [அதுவும் பொருளன்று.]

வேறேசிலர், ஶரணாகதியோடு விரோதித்த தர்மங்களை விட்டு ஶரணாகதியைப்பண்ண அடுக்குமென்று சொல்லுவர்கள்; அப்படியாகில் "ஸர்வதர்மங்களையும்" என்னக்கூடாது. விரோதித்தவையை விடுகைக்கு ஒரு விதிவேண்டுவதில்லை, விரோதித்த தர்மமென்கைக்கு ஒரு ஶப்தமுமில்லை, ஆதலால் அதுவும் பொருளன்று.

வேறேசிலர், எல்லா தர்மங்களையும் விட்டாகிலும் ஶரணாகதியைப் பண்ணுவானென்று ஶரணாகதியை ப்ரஶம்ஸிக்கிறது, தர்மத்யாகத்தில் தாத்பர்யமில்லை என்றார்கள்; அதுவும் பொருளன்று.

இப்படி இவ்வாக்யத்தில், [ஆகிலும்] என்கிற ஶப்தமில்லாமையாலும், [ஶோகியாதே கொள்] என்கிற ஶப்தம் கூடாமையாலும், [இதுவும் பொருளாகமாட்டாது.]

வேறேசிலர், ஜ்ஞாநமே மோக்ஷஸாத,நமாவது, அதுக்கு விரோதி, கர்மம், ஆதலால் கர்மத்தையெல்லாம் விட்டு ஆத்மஜ்ஞாநத்திலே யத்நம்பண்ண அடுக்குமென்று சொல்லுகிறதென்றார்கள்; அதுவும் கூடாது, கர்மமும் மோக்ஷஸாத,நமென்று பல ஶாஸ்த்ரங்களிலும் சொல்லு கையாலும், "**ஶரணம் வ்ரஜ**" என்கிற ஶப்,த,ம் ஆத்ம ஜ்ஞாநத்தைக் காட்டாமையாலும், மற்றிங்கு ஆத்மஜ்ஞா நத்தை விதி,க்கிறதொரு ஶப்,த,மும் காணாமையாலும், ஆத்மஜ்ஞாநத்தாலே மோக்ஷம் பெறுகிறவனை நோக்கி, 'நானுன்னை எல்லா பாபங்களினின்றும் முக்தனாக்குகிறேன்' என்று எம்பெருமான் தானே மோக்ஷங்கொடுக்கிறானாகச் சொல்லுகிற சொல் கூடாமையாலும், [அதுவும் பொரு ளன்று.]

ஆகையால் இஶ்லோகத்தால் தோற்றுகிற பொரு ளொழிய மற்றுச் சொல்லுகிற பொருள்கள் பொருளல்ல என்னுமிடம் ப்,ரஹ்ம புராணத்திலே தெளியச் சொல் லிற்று; **1. "ஶரணம் த்வாம் ப்ரபந்நா யே த்,யாநயோக, விவர்ஜிதா:। தேபி ம்ருத்யுமதிக்ரம்ய யாந்தி தத், வைஷ் ணவம் பத,ம்॥"** என்று.

ஶரணாக,தி மோக்ஷஸாத,நம் என்னுமிடம் ஶ்வேதாஶ் வதரோபநிஷத்திலும் சொல்லிற்று. **2. "யோ ப்,ரஹ்மாணம் வித,த,ாதி பூர்வம் யோவை வேதா,ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை। தம் ஹ தே,வமாத்மபு,த்,தி,ப்ரஸாத,ம், முமு க்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்,யே॥"** யாவனொருத்தன் பண்டு ப்,ரஹ்மாவைப் படைத்தான், யாவனொருத்தன் அந்த ப்,ரஹ்மாவுக்கு வேத,ங்களைக் கொடுத்தான், அந்த தே,வனை - என் பு,த்,தி,க்குத் தேற்றத்தைப் பண்ணின வனை, மோக்ஷார்த்தி,யான நான் ஶரணம் புகுகிறே னென்றவாறு.

தைத்திரீயோபநிஷத்திலே, திருநாராயணத்திலே, இவ் வர்த்த,ம் சொல்லப்பட்டது. **3. "ஸத்யம் தபோ த,மஶ்**

**ஶமோ தா₃நம் த₄ர்ம: ப்ரஜநநமக்₃நயோऽக்₃நிஹோத்ரம் யஜ்ஞோ மாநஸம் ந்யாஸ:"** என்று ஒன்றுக்கொன்று ஶ்ரேஷ்ட₂மாகச் சொல்லி, மாநஸஶப்₃த₃த்தாலே ஆத்ம ஜ்ஞாந வைப₄வத்தைச் சொல்லி, எல்லாத்துக்கும் மேலாக ந்யாஸஶப்₃த₃த்தாலே ஶரணாக₃தியைச் சொல்லிற்று.

இவ்வர்த்த₂ம் இதிஹாஸபுராணங்களிலே ஸுஸ்பஷ்டம்.

ஆகையாலே வேத₃விருத்₃த₄மென்று ஶங்கிக்கைக்கு உபாயமில்லை.

இங்கே சிலர் இங்ஙனே சோத்₃யம் பண்ணினார்கள்; ஏதென்னில்: த₄ர்மங்களை எல்லாம் த்யஜித்து ஶரணாக₃தியைப் பண்ணவே மோக்ஷம் பெறலாமாகில், அநேக ஜந்மங்கள் கூடிப் பண்ணவேண்டி ஒருகால் செய்து முடிக்கவொண்ணாதே வருத்தங்களை உடைத்தாயிருந்துள்ள மஹா தபஸ்ஸுக்களாலும், வைராக்₃யத்தாலும், இந்த்₃ரிய ஜயத்தாலும், யோகா₃ப்₄யாஸத்தாலும் பிறந்த ப்₃ரஹ்ம ஜ்ஞாநத்தால் பெறவேண்டுவதாகச் சொல்லுகிற மோக்ஷ ஶாஸ்த்ரம் வேண்டாதொழியும்; அறவெளியதாக ஸாதி₄க்கலாம் அர்த்த₂த்தை வருந்தி ஸாதி₄ப்பாருமில்லை; ஆதலால் மோக்ஷோபாயமாகச் சொல்லுகிறது. ப₃ஹ்வாயாஸ ஶாஸ்த்ர ஸந்நிதா₄நத்திலே அல்பயத்நமாயிருக்கிற ஶரணாக₃திஶாஸ்த்ரம் ஜீவியாதென்றார்கள்.

இதுக்கு உத்தரம்:— லோகத்தில், அர்த்தா₂ர்ஜநத்துக்கு ஸாத₄நமாக அல்பயத்நமான ரத்நவாணிஜ்யாதி₃களும், மஹாயத்நமான க்ருஷ்யாதி₃களும் உளவாகக்கண்டோம்; மஹாயத்நங்களுக்கு அல்பப₂லமாகவும் கண்டோம், அல்ப யத்நங்களுக்கு மஹாப₂லமாகவும் கண்டோம். இவ்விடத்தில் தந்தாம் பூர்வபுருஷர்கள் செய்துவரும்படிக்குத் தக்கபடியும், தந்தாம் பா₄க்₃யத்துக்குத்தக்க ருசிகளாலும், அல்பயத்நத்தாலே மஹாயத்நப₂லம் பெறுவர்கள் சிலர்.

இப்படியே வேத₃த்திலும் மஹார்யத்னமான ஸத்ர யாக₃ாதி₃களாலும், தபஶ் சாந்த்₃ராயணாதி₃களாலும், பஶு புத்ராதி₃களான அல்பப₂லங்களைச் சிலர் கொள்ள, சிலர் அவற்றினாலேயாதல் அத்யல்பயத்நமான கர்மாதி₃க ளாலேயாதல் மஹாப₂லமான மோக்ஷத்தைப் பெறு வர்கள்.

அப்படியே தந்தாம் ப₄ாக்₃யத்துக்குத்தக்க ருசிபே₄ த₃ங்களாலே, சிலர்க்கு ஶரணாக₃தியே உபாயமாகலாம், சிலர்க்கு யோக₃ாப்₄யாஸாதி₃களே உபாயமாகலாம். அந்த ப்ரக்ருதிபே₄த₃ங்களுக்குத்தக்க ருசிபே₄த₃ங்கள் லோகத்திலே காண்பதும் செய்யாநின்றோம். ஶரணாக₃தி தானும் எல்லாரும் செய்யலாமத்தனை எளிதாமோ வென்ன—; ஜந்மாந்தர ஸஞ்சித மஹாபுண்யங்களை யுடையரல்லாதார்க்கு இந்த ருசியும் மஹாவிஶ்வாஸமும் பிறக்கமாட்டாமையாலே எல்லார்க்கும் எளிதன்று.

ஶரணாக₃திஸ்வரூபம்:— 1. "**ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் । ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ கோ₃ப்த்ருத்வவரணம் ததா₂ । ஆத்மநிக்ஷேபகார்ப்பண்யே ஷட்₃வித₄ா ஶரணாக₃தி: ॥**"

1. "**ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:**" ஆநுகூல்யமென்றது ப்ரியத்வம்; அதாவது - 2. "ப்ரியோஹி ஜ்ஞாநிநோத்யர்த₂ **மஹம் ஸச மம ப்ரிய:**" என்கிறபடியே அநந்யப்ரயோ ஜநதை.

1. "**ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்,**" என்றது அதிப்ரவ் ருத்திவ்யவஸாய நிவ்ருத்தி.

1. "**ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸ:**" என்றது, த்ரிவித₄ஶங்கா ரஹிதமான ப₄க₃வத்₃ கு₃ணவத்தாத்₄யவஸாயம்.

" கோ₃ப்த்ருத்வவரண "மாவது அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமான இஷ்டப்ராப்திக்கு அவ்யவஹிதோபாயமாக ஸ்வீகரிக்கை.

" ஆத்மநிக்ஷேப "மென்றது ரக்ஷ்யத்வேந ஸமர்ப்பிக்கை; அதாகிறது - ஆத்மாத்மீயமான நிகி₂ல ப₄ரஸமர்ப்பணம்.

" கார்ப்பண்ய "மாவது க்ருபாஜநக க்ருபணவ்ருத்தி நிரதத்வம்.

ஏவம்வித₄மான ஶரணாக₃திதன்னையே ஶ்ருதி ஆத்மயாக₃மாக வர்ணித்தது:— 1. "தஸ்யைவம் விது₃ஷோ யஜ்ஞஸ்யாத்மா யஜமாநஶ் ஶ்ரத்₃தா₄ பத்நீ ஶரீரமித்₄மமுரோ வேதி₃ர்லோமாநி ப₃ர்ஹிர்வேத₃ஶ் ஶிகா₂ ஹ்ருத₃யம் யூப: காம ஆஜ்யம் மந்யு: பஶுஸ்தபோக்₃நிஶ் ஶமயிதா த₃க்ஷிணா வாக்₃கோ₃தா ப்ராண உத்₃கா₃தா சக்ஷுரத்₄வர்யுர்மநோ ப்₃ரஹ்மா ஶ்ரோத்ரமக்₃நீத்₄ யாவத்₃ த்₄ரியதே ஸா தீ₃க்ஷா யத₃ஶ்நாதி யத்பிப₃தி தத₃ஸ்ய ஸோமபாநம் யத்₃ரமதே தது₃பஸதோ₃ யத்ஸஞ்சரத்யுபவிஶத்யுத்திஷ்ட₂தே ச ஸ ப்ரவர்க்₃யோ யந்முக₂ம் தத₃ஹவநீயோ யத₃ஸ்ய விஜ்ஞாநம் தஜ்ஜுஹோதி யத்ஸாயம் ப்ராதரத்தி தத்ஸமிதோ₄ யத்ஸாயம் ப்ராதர்மத்₄யந்தி₃நஞ்ச தாநி ஸவநாநி யே அஹோராத்ரே தே த₃ர்ஶபூர்ணமாஸௌ யே அர்த்த₄மாஸாஶ் ச மாஸாஶ் ச தே சாதுர்மாஸ்யாநி ய ருதவஸ்தே பஶுப₃ந்தா₄ யே ஸம்வத்ஸராஶ் ச பரிவத்ஸராஶ் ச தேऽஹர்க₃ணாஸ் ஸர்வவேத₃ஸம் வா ஏதத் ஸத்ரம் யந்மரணம் தத₃வப்₄ருத₂ ஏதத்₃ வை ஜராமர்யமக்₃நிஹோத்ரம் ஸத்ரம் ய ஏவம் வித்₃வாநு₃த₃கா₃யநே ப்ரமீயதே தே₃வாநாமேவ மஹிமாநங்க₃த்வாதி₃த்யஸ்ய ஸாயுஜ்யங்க₃ச்ச₂த்யத₂ யோ த₃க்ஷிணே ப்ரமீயதே பித்ரூணாமேவ மஹிமாநங்க₃த்வா சந்த்₃ரமஸஸ்ஸாயுஜ்யங்க₃ச்ச₂த்யேதௌ வை ஸூர்யாசந்த்₃ரமஸோர்மஹிமாநௌ ப்₃ராஹ்மணோ வித்₃வாநபி₄ஜயதி தஸ்மாத்₃

**ப்₃ரஹ்மணோ மஹிமாநமாப்நோதி தஸ்மாத்₃ப்₃ரஹ்மணோ மஹிமாநமித்யுபநிஷத்"** என்றுகொண்டு ஶ்ருதி ஶரணா க₃தியை ஒரு யஜ்ஞமாக ஸங்கல்பித்து இதுக்கு வேண்டும் உறுப்புகளும் யஜமாநனும் பத்நியும் முதலாக உள்ள வற்றை ஶரணாக₃தன் பக்கலிலே உளவாகக் காட்டு கிறது. **"யே அஹோராத்ரே"** என்றவிடமே தொடங்கி, **"யந்மரணம்"** என்கிற இதுக்குக் கீழெல்லாம் ஶரணாக₃தி தன்னையே எல்லா யாக₃ங்களுமாகச் சொல்லுகிறது. **"யந்மரணந்தத₃வப்₄ருத₂:"** என்று ஶரணாக₃தியாகிற யாக₃த்துக்கு அவப்₄ருத₂மாக மரணத்தைச் சொல்லுகிறது. **"ய ஏவம் வித்₃வாந்"** என்கிறவிடந் தொடங்கி, இவன் போம்வழியே போனால், எம்பெருமானுடைய பெருமை எல்லாத்தையும் அநுப₄விக்கும் என்கிறது **"தஸ்யைவம் வித்₃ஷோ யஜ்ஞஸ்ய"** என்கிற இதுக்குக் கீழில் ஓரிடத்தில் ந்யாஸமென்கிற பேரால் சொன்ன ஶரணாக₃தியை அறியும் வித்₃வானுடைய ஏற்றமென்றபடி.

ஆக ஶரணாக₃தியாகிற யஜ்ஞத்துக்கு உறுப்புக்களிவை என்றதாய்த்து.

1. **"ஏதம் ஹ வாவ ந தபதி. கிமஹம் ஸாது₄ நாகர வம், கிமஹம் பாபமகரவமிதி"** ஶரணாக₃தி ஜ்ஞாநமுடைய புருஷனையே 'எந்தப்புண்யம் பண்ணாதொழிகிறோமோ, எப்பாபம் பண்ணுகிறோமோ' என்கிற பு₃த்₃தி₄ பீடியாது.

2. **"தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:"** த்₄யாநபர்யந்தமான எல்லாத் தபஸ்ஸுக்களிலும் ந்யாஸம் அதிரிக்தம் என்றபடி. ந்யாஸமாவது,—ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளிலே பண்ணப்பட்ட ஆத்மாத்மீய அகி₂லப₄ர ஸமர்ப்பணம். ஆகையாலே ஸ்ரீமானான நாரா யணனைப் ஶரணாக₃தனுடைய ஸர்வயோக₃க்ஷேமாவஹ னாக அநுஸந்தி₄த்து, நிர்ப₄ரத்வாநுஸந்தா₄நம் ஸர்வதா₃ பண்ணவேணும்.

ஸ்வநிர்ப₄ரத்வாநுஸந்த₄ாநபரீத்யுத்₃த₄தியாலே பண்ணப்பட்ட ஸந்மர்யாத₃ாதிவர்த்தநம் உண்டாய்த்தாகிலும், முன்பு ப₄க₃வதி பண்ணின விஶ்வாஸாதிஶயத்தாலே த்₃ருட₄சித்தனுவானென்றுகொண்டு, ஆசார்ய பரம்பராப்ராப்தமான ரஹஸ்யம். 1. "**இத₃ம் தே நாதபஸ்காய நாப₄க்தாய கத₃ாசந। நசாஶுஶ்ருஷவே வாச்யம் நச மாம் யோऽப்₄யஸூயதி ॥**" என்று 'இவ்வர்த்த₂ம் சொன்னபடியே ரக்ஷித்து அநுஷ்டி₂த்து முடிக்கைக்கீடான பா₄க்₃யமில்லாதார்க்கும், கு₃ருவானவன் பக்கலிலே ப₄க்தராய் இராதார்க்கும், உனக்கு ஶுஶ்ருஷை பண்ணுதார்க்கும், சொல்லவேண்டா; என் பக்கலிலே அஸூயையைப் பண்ணுவார்க்குஞ் சொல்லவேண்டா' என்கிறது. 2. "**ய இத₃ம் பரமம் கு₃ஹ்யம் மத்₃ப₄க்தேஷ்வபி₄த₄ாஸ்யதி। ப₄க்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்ஶயः ॥**" என்று இப்பரமகு₃ஹ்யமான அர்த்த₂த்தை என் ப₄க்தர் பக்கலிலே யாவனொருத்தன் சொல்லுகிறன், அவன் அதுவே காரணமாகத் தானும் என்பக்கலில் பரமப₄க்தியை யுடையவனுய் ஒரு ஸம்ஶயமின்றியே என்னையே வந்தடையும் என்றிவ்வர்த்த₂ம் சொல்லுகைக்கு, ஆகாத விஷயத்தையும், யோக்₃யபாத்ரத்திலே சொன்னுலுண்டான நன்மையையும் சொல்லிற்று,

திருமந்த்ர முக₂த்தாலே ஸ்வரூபஜ்ஞாநத்தை யுடையராய், ஸ்வரூபாநுரூபபுருஷார்த்த₂மான ப₄க₃வத் கைங்கர்யத்திலே ருசியுடையராய், விடப்பட்ட கர்மஜ்ஞாநப₄க்தி யோக₃த்தையுமுடையரா்ய் ஆநுகூல்யமாத்ரமுடையரான ஜந்துக்களைப்பார்த்து பரமகாருணிகனுன ஸர்வேஶ்வரன் தானே, பாண்டுபுத்ரவ்யாஜத்தாலே சதுர்த்தே₂பாயததை வெளியிட்டது, சரமஶ்லோகமாகிறது.

[ஶ்லோகவைப₄வ ரூபாவதாரிகை முற்றிற்று]

[ப்ரதிபத₃வ்யாக்₂யாநாரம்ப₄ம்]

"ஸர்வத₄ர்மாந்" இத்யாதி₃. இஶ்லோகத்துக்கு க்ரியாபத₃ம் "மாஶுச:" என்கிறதாகையாலே, ஶோகநிவ்ருத்தி சொல்லுகையிலே தாத்பர்யம். இந்த ஶ்லோகந்தான் ப்ரபத்திவித₄ாயக வாக்யமாகையாலே, இந்த ஶோகமும் ப்ரபத்திக்கு உபயுக்தமாகிறது. எங்ஙனேயென்னில்; இப்ப்ரபத்திக்கு அதி₄காரமும் ப₂லமும் சொல்லவேண்டுகையாலே ஶோகம் அதி₄காரமென்றும், ஶோகநிவ்ருத்தி ப₂லமென்றுஞ் சொல்லுகிறது.

இதில், பூர்வார்த்த₄த்தாலே அதி₄காரிக்ருத்யம் சொல்லுகிறது; உத்தரார்த்த₄த்தாலே ஈஶ்வரக்ருத்யத்தையும், அதி₄காரிக்ருத்ய ஶேஷத்தையும் சொல்லுகிறது.

அதி₄காரிக்ருத்யமாவது, இதரோபாய த்யாக₃பூர்வகமான ஸித்₃தோ₄பாயஸ்வீகாரம். ஈஶ்வரக்ருத்யமாவது, இப்படி ஸ்வீக்ருதோபாயனுக்கு அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான இஷ்டப்ராப்தியைப் பண்ணிக்கொடுக்கை. அதி₄காரிக்ருத்யஶேஷமாவது, ஸ்வீக்ருதோபாயனை பின்பு (யாவத்)ப்ராப்தியளவும் நிஸ்ஸம்ஶயனுமாய் நிர்ப₄ரனுமாய் அத ஏவ ஹ்ருஷ்டமானஸனாயிருக்கை, (வ்ரஜ) என்கிற விதி₄யோபாதி (மாஶுச:) என்கிறதும் விதி₄யாகையாலே, ஸ்வீகரியாதவனுக்கு உபாயஸித்₃தி₄ இல்லாதவோபாதி, ஸ்வீகரித்தபின்பு நிர்ப₄ரனாயிராதவனுக்கும் ப₂லஸித்₃தி₄யில்லை என்கை. இத்தைப்பற்றவிறே "த்யாக₃ம் மேலிட்டு நரகம் வஸ்தவ்யபூ₄மியாதல், ஸ்வீகரித்த உபாயம் மேலிட்டுப் பரமபத₃ம் என் சிறுமுறியாதல் ஆம்படிகாண் என் அதி₄காரமிருப்பது" என்று நஞ்ஜீயரருளிச்செய்தது.

ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரத்துக்கு இதரோபாயத்யாக₃ம் அங்க₃மாகையாலே த்யாக₃விஷயமான த₄ர்மங்களைச் சொல்லுகிறது (ஸர்வத₄ர்மாந்) என்கிற இத்தாலே.

தர்மமாவது,—1. "சோதநாலக்ஷணோऽர்த்தோ தர்ம:" என்கிறபடியே, ஶாஸ்த்ரங்களிலே நித்யநைமித்திககாம்ய ரூபமாய் அநுஷ்டேயதயா விஹிதமானது. அதுதான் வர்ணாஶ்ரம விஹிததர்மமென்றும், ப்ரவ்ருத்திதர்மமென்றும், நிவ்ருத்திதர்மமென்றும், ஸித்ததர்மமென்றும் நாலு வகைப்பட்டிருக்கும்.

(1) வர்ணாஶ்ரம விஹிததர்மமாவது,—2. "க்ரியமாணம் ந கஸ்மைசித்யதர்த்தாய ப்ரகல்பதே। அக்ரியாவதநர்த்தாய தத்து கர்ம ஸமாசரேத்॥ ஏஷா ஸா வைதிகீ நிஷ்டா ஹ்யுபாயாபாயமத்யமா॥" என்கிறபடியே பண்ணினால் ப்ரயோஜநமின்றிக்கே, பண்ணாதபோது அநர்த்தத்தின் பொருட்டாயிருக்குமது.

(2) 3. "ஶ்ருணுத்வம் பரமம் கர்ம த்விவிதம் ததிஹோச்யதே। ஏகம் ப்ரவர்த்தகம் ப்ரோக்தம் நிவர்த்தகமத: பரம்॥ ப்ரவர்த்தகஞ்ச ஸ்வர்க்காதிபலஸாதநமுச்யதே। நிவர்த்தகாக்யம் தேவர்ஷே! விஜ்ஞேயம் மோக்ஷஸாதநம்॥" என்கிறபடியே ப்ரவ்ருத்தி தர்மமாவது—ஸ்வர்க்காதி பலஸாதநமான ஜ்யோதிஷ்டோமாதிகள்.

(3) நிவ்ருத்திதர்மமாவது,—மோக்ஷஸாதநமான கர்ம யோகாதிகள்.

(4) ஸித்ததர்மமாவது,—4. "யே ச வேதவிதோ விப்ரா யே சாத்யாத்மவிதோ ஜநா:। தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்॥" என்கிறபடியே பரம தர்மஸ்வீகாரம். 5. "ந்யாஸ இதி ப்ரஹ்மா" 6. "ந்யாஸ இத்யாஹுர்மநீஷிணோ ப்ரஹ்மாணம்" என்று ஸ்வீகாரத்தில் உபாயத்வப்ரஸங்கமில்லாமையாலே, ஸ்வீகாரத்தையும் ஸ்வீகார்யனைச் சொல்லக்கடவது.

இவ்விடத்தில் சரமோபாய ப்ரகரணமாகையாலே, ஸ்வர்க்காதிபலஸாதநமான ஜ்யோதிஷ்டோமபல்லவென்

ஷுமிடம் ஸித்,த்,ம். மேலே ஸித்,த,த,ர்மம் ஸ்வீகார்யமாகச் சொல்லுகையாலே அதுவுமன்று. இனி இவ்விடத்தில் மோக்ஷோபாயமாய், வர்ணாஶ்ரமத,ர்மங்களை இதிகர்த்தவ்யமாக உடைத்தாய், ஸாத்,யமாயிருந்துள்ள நிவ்ருத்தி த,ர்மங்களைச் சொல்லுகிறது. இதுதான் த,ர்மமும் ப,ஹு வசநமும் ஸர்வஶப்,த,முமாய் த்ரிவித,மாயிருக்கும். த,ர்ம ஶப்,த,த்தாலே மோக்ஷத்துக்கு அவ்யவஹித ஸாத,நத்தைச் சொல்லுகிறது. அதாகிறது, — 1. "ப,க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ,ऽர்ஜுந" 2. "மத்,ப,க்திம் லப,தே பராம்" என்று சொல்லுகிற பர(ம?)ப,க்தி. ப,ஹுவசநத்தாலே அங்க,ஸாத,நங்களைச் சொல்லுகிறது. அதாகிறது—3. "ஜ்ஞாநே பரிஸமாப்யதே" என்றும், 4. "கர்மணைவ ஹி ஸம்ஸித்,தி,மாஸ்தி,தா ஜநகாத,ய:" என்றும் சொல்லுகிற கர்மஜ்ஞாநங்களும், 5. "ஜந்ம கர்ம ச மே தி,வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:। த்யக்த்வா தே,ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥" என்றும் சொல்லுகிற அவதாரரஹஸ்யஜ்ஞாநமும், 6. "ஏதத்,பு,த்,த்,வா பு,த்,தி,மாந் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச பா,ரத" என்று சொல்லுகிற புருஷோத்தமவித்,யையும் 7. "தே,ஶோऽயம் ஸர்வகாமது,க்" என்று சொல்லுகிற க்ஷேத்ரவாஸமும், 8. "யாதி ப்,ரஹ்ம ஸநாதநம்" என்று சொல்லுகிற திருநாமஸங்கீர்த்தநமும். இவைதன்னை ப,க,வத் ப்ரபா,வத்தாலே ஸ்வதந்த்ரோபாயமென்றும் சொல்லுவர்கள், இவைதான் அங்க,ஸாத,நமாயிருக்கச்செய்தே த,ர்மஶப்,த,த்தாலே சொல்லுகிறது. இவைதானும் தனித்தனியே ப,லஸாத,நங்களாயிருக்கையாலே. சேதந பே,த,த்தோபாதியும் போருமிறே, ருசிபே,த,த்தாலே உபாயபே,த,மும், a "நெறியெல்லா மெடுத்துரைத்த" என்னக்கடவதிறே. ஸர்வஶப்,த,த்தாலே ஆஶ்ரமங்கள் பே,தி,த்தாலும் பே,தி,யாத ஸத்,யாவந்த,ந பஞ்சமஹாயஜ்ஞமுன்னிட்ட த,ர்மங்களும், லோகஸங்க்,ரஹதயா

a திருவாய் 4-8-6

கர்த்தவ்யமான ஶ்ரேஷ்ட₂ஸமாசாரமும், பரார்த்த₂மாகப் புத்ராதி₃களைக் குறித்து அநுஷ்டி₂க்கும் பும்ஸவநாதி₃கர்மங் களையும் சொல்லுகிறது. ஆக ஸர்வஶப்₃த₃த்தாலே ப்ரத்ய வாய பரிஹாரமுமாய் யோக்₃யதாபாத₃கங்களுமாயிருந் துள்ள த₄ர்மவிஶேஷங்களைச் சொல்லுகிறது. த₄ர்மத்யாக₃த் தைச் சொன்னபோது யோக்₃யதாபாத₃கங்களுமாயிருந் துள்ள த₄ர்மவிஶேஷங்களைச் சொல்லுகிறது.

ஸர்வஶப்₃த₃த்துக்கு ஸாகல்யம் பொருளானாலோ? என்னில், பூ₄ர்வவசநத்திலே உபாயங்களையடையச் சொல்லுகையாலும், ஸர்வஶப்₃த₃த்துக்கு வேறே விஷய முண்டாகையாலும் ஸாகல்யவாசியன்று. ஆனால் 1. "**ஸாத்₄யாப₄ாவே மஹாபா₃ஹோ ஸாத₄நை: கிம் ப்ரயோஜநம்**" என்று "யோக்₃யதாபாத₃கத₄ர்மங்களையொழிய ப₂ல ஸாத₄நங்களுக்கு உத₃யமின்றியிலே இருக்கையாலே த₄ர்மத்யாக₃த்தைச் சொன்னபோதே யோக்₃யதாபாத₃க த₄ர்மம் தூ₃ரதோ நிரஸ்தமன்றோ; இதினுடைய த்யாக₃ம் இப்போது சொல்லவேணுமோ?" என்னில்:— 2. "**ஸத்₃யாஹீநோऽஶுசிர் நித்யமநர்ஹஸ் ஸர்வகர்மஸு**" என்று ஸத்₃யாஹீநனான அஶுசிக்கு, ஒரு கர்மத்திலும் அதி₄ காரமில்லை என்கையாலே, இவ்வுபாயத்துக்கு இப்படி யிருப்பதொரு நிர்ப₃ந்த₄முண்டோ? என்னில், இவ்வுபா யத்துக்கு இப்படியிருப்பதொரு யோக்₃யதாஸாபேக்ஷதை யில்லாமையாலே விஶேஷித்து உபாதா₃நம் பண்ணுகிறது. உபாயத்துக்கு உபயுக்தமன்றாகிலும், 3. "**விஹிதத்வாச்- சாஶ்ரமகர்மாபி**" என்கிறபடியே விஹிதத்வேநாநுஷ்டே₂ய மானாலோவென்னில், யஜ்ஞத்திலே தீ₃க்ஷித்தவனுக்கு விஹிதாம்ஶமும் த்யாஜ்யமானவோபாதி, இங்கு "**ஸர்வ த₄ர்மாந் பரித்யஜ்ய**" என்கையாலே விஹிதாம்ஶமும் த்யாஜ்யம்.

இனி இவ்வுபாயத்துக்கு அதி₄காரம் அஶக்தியும் அப்ராப்தியும் விலம்ப₃ாஸஹத்வமும். 4. "**இத₃ம் ஶரண**

மஜ்ஞாநமித,மேவ விஜாநதாம்। இத,ம் திதிக்ஷதாம் பார மித,மாநந்த்யமிச்ச,தாம் ॥" 1. "அவித்,யாதோ தே,வே பரிப்,ருட,தயா வா விதி,தயா ஸ்வப,க்தேர்பூ,ம்நா வா ஜக,தி க,திமந்யாமவிது,ஷாம்। க,திர் க,ம்யஶ்சாஸெள ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ க,லு ப,க,வாந் ஶௌநகமுநி: ॥" இப்படியன்றாகில் இதுவும் அதி,க்ருதாதி,காரமாமிறே.

ஆக இத்தால் த்யாஜ்யஸ்வரூபம் சொல்லிற்று.

த்யாஜ்யமான த,ர்மந்தான் 2. "இத,ம் குரு. இத,ம் மாகார்ஷீ:" என்று விதி,நிஷேத,ாத்மகமாயிருக்கும். விஹிதாநுஷ்ட,ாநத்தோபாதி நிஷித்,த, பரிஹாரமும் த்யாஜ்யமானபோது அடைத்த கதவைத் திறந்தால் நிஷித்த பத,ார்த்த,ங்கள் புகுமாபோலே நிஷித்,த,ப்ரவ்ருத்தி உண்டாகாதோ? என்னில், ஸ்வீகார்யமான உபாயம், ஒன்றையும் ஸஹியாத. ஶாஸ்த்ர ஸித்,த,மான த,ர்மம் த்யாஜ்யமாவது ஸ்வீகார்யமான உபாயம் ஒன்றையும் பொறாமையாலேயிறே; பொறப்பது நிவ்ருத்தியையிறே. இதவும் நிவ்ருத்யந்தர்க்க,தமாகிலும் ப்ரவ்ருத்திரூபமாயிருக்கையாலே உபாயம் ஸஹாயாந்தரஸஹமல்லாமையாலும் நிஷித்,த,ாநுஷ்ட,ாநம் இவனுக்குக் கர்த்தவ்யமன்று; நிஷித்,த,ாநுஷ்ட,ாநம் ஈஶ்வரஹ்ருத,யத்துக்கு நிக்,ரஹமாகையாலும் இவனுக்கு ஈஶ்வரனை அதிஶயிப்பிக்கை ஸ்வரூபமாகையாலும் இவனுக்கு அவை அநுஷ்டே,யமன்று. ப்ராப்யம் இவனுக்கு அவனுடைய ப்ரீதியேயாயிருக்கையாலே இவ்வாகாரத்தாலும் அவை அநுஷ்டே,யமன்று. ஆகையால், உபாயத்தைப் பார்த்தாலும் ஆகாது, ஸ்வரூபத்தைப் பார்த்தாலும் ஆகாது, புருஷார்த்த,த்தைப் பார்த்தாலும் ஆகாது.

ஆனால் ஸர்வப்ரகாரத்தாலும் இவனுக்கு த்யாஜ்யமாயிருக்குமாகில் நிஷித்,த, பரிஹாரத்தை த,ர்மஶப்,த,த்திலே ப்ரஸங்கி,க்கிறதற்கு ப்ரயோஜநமென்னென்னில்; இவனுக்கு விஹிதமாயிருப்பதொன்றில்லாமையாலே அவிஶ

மாகப் புகுந்தாலும் இவனுக்கு அவை பந்தகமாக மாட்டாது என்னும் ஆகாரம் தோற்றுகைக்காகச் சொல்லு கிறது. அதவா மோக்ஷோபாயத்வேந விதிநிஷேதாத் மகமான, ஸகலதர்மத்தையும் சொல்லுகிறதென்று சொல்லுவர்கள். ஆகையாலே நரகபதநஹேதுவாய், ஸகல ஜந்துக்களுக்கும் த்யாஜ்யமுமாய், புத்தி பூர்வகமுமா யிருந்துள்ள பகவதபசாராதிகளும் ப்ரஹ்மஹத்யாதி களும் பரிஹரணீயமென்றதாய்த்து.

ஶரணாகதி ப்ரபாவத்தாலே அவை பந்தகமின்றி யிலேயொழிந்தாலும் ஶரணாகதனுக்கு இவை கர்த்தவ்ய மன்றென்னுமிடம் சொல்லிற்றாய்த்து.

" பரித்யஜ்ய "— த்யாகப்ரகாரத்தைச் சொல்லுகிறது. இதுவும், த்யாகமும் வ்யப்பும் உபஸர்க்கமுமாய் மூன்று ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். இங்குச் சொல்லுகிற த்யாகம் ஸ்வரூபேண த்யாகத்தைச் சொல்லுகிறதோ, உபாயபுத்தித் த்யாகத்தைச் சொல்லுகிறதோ, பலத்யாகத்தைச் சொல்லுகிறதோ? என்னில், 1. "மா பலேஷு கதாசந" என்று கீழ் பலத்யாகத்தைச் சொல்லுகையாலே கேவலம் அதுவுமாகமாட்டாது. இனி உபாயபுத்தித்யாகமாதல் ஸ்வரூபத்யாகமாதலாகக் கடவது; உபாயபுத்தித்யாகமென்றபோது, நிஜகர்மாதி பக்த்யந்தம் அவஶ்யமநுஷ்டேயமாய்விடும். இப்படி அநுஷ்டேயமாம் பக்ஷத்தில் ப்ரபத்தி ஸ்வதந்த்ரோ பாயமாகமாட்டாது. ஆகையால் இவை ஸ்வரூபேண த்யாஜ்யமாகக் கடவது.

இனி இவற்றில் நம் ஆசார்யர்கள் அநுஷ்டிக்கிறவை. ஶிஷ்யபுத்ரர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஆந்ருஶம்ஸ்யத்தாலே அநுஷ்டிக்கிறார்களித்தனை. இப்படி அநுஷ்டியாதபோது, பகவத்விபூதிபூதரான சேதநர்க்கு நாஶ ஹேதுவாகையாலே ஈஶ்வரனுக்கு அநபிமதராவர். ஆகை யாலே, யாதோரன்வாலே லோகஸங்க்ரஹம் பிறக்கும்,

யாதோரளவாலே ஶிஷ்யபுத்ரர்களுக்கு உஜ்ஜீவநமுண் டாம், அவ்வளவும் அநுஷ்டே₂யமென்றதாய்த்து. ப்ரவ்ருத்தி த₄ர்மந்தானே, அபி₄ஸந்தி₄பே₄த₃த்தாலே நிவ்ருத்தி த₄ர்ம மானவோபாதி, நிவ்ருத்தித₄ர்மமும் ப்ராப்யத₄ர்மமாகக் கடவது. இவ்விடத்தில் வர்ணாஶ்ரமத₄ர்மம், லோக ஸங்க்₃ரஹதயா அநுஷ்டே₂யமாயிருக்கும். வைஷ்ணவ த₄ர்மம் ப்ராப்யதயா அநுஷ்டே₂யதமமாயிருக்கும். இவ்விடத் தில் அகரணேப்ரத்யவாயமும்—எம்பெருமானுடைய அநபி₄ மதத்வமும் தன்னுடைய புருஷார்த்த₂ஹாநியுமாகக்கடவது.

ஆகையாலே 1. “ விஹிதத்வாச்சாஶ்ரமகர்மாபி ” 2. “ ஸஹகாரித்வேந ச ” என்கிற உப₄யப்ரகாரத்தாலும் அநுஷ்டி₂க்கிறார்களல்லர்.

பரிஶப்₃த₃த்தாலே த்யாக₃த்தின் மிகுதியைச் சொல்லு கிறது. இப்பரிஶப்₃த₃ம் 3. “ பரி ஶாகல்யே ” என்று ஸகலத்தையும் விடச்சொல்லுகிறதானாலோ? என்னில், அது ஸர்வஶப்₃த₃த்தில் உக்தமாகையாலே, இவ்விடத்தில் வேறே அர்த்த₂மாகவேணும். அதாவது, ஸவாஸந த்யாக₃த்தைச் சொல்லுகிறது. ஸவாஸநமாக விடுகை யாவது; — ‘ஶுக்திகையிலே ரஜதப்₄ரமம்போலே அநு பாயங்களிலே உபாயபு₃த்₃தி₄ பண்ணினோமாகாதே’ என்றுகொண்டு லஜ்ஜாபுரஸ்ஸரமாக விடுகை. இப்படி விடுகைக்கு ஹேது, ஸ்வரூபத்தினுடைய ப₄க₃வத்பார தந்த்ர்யாநுஸந்தா₄நத்தாலே, ஸ்வரக்ஷணத்தில் தனக்குப் பிறந்த அந்வயம். ஸ்வரூபத்தில் தன்னோடும் பிறரோடும் ப்ராப்தியுண்டாமன்றாய்த்து, தானும் பிறரும் ரக்ஷக ராகைக்கு ப்ராப்தியுள்ளது. இனி, ஸ்வரக்ஷணத்திலிழிகை யாவது, தாய் முலைப்பாலுக்குக் கூலிகேட்குமாபோலே, தன்னுடைய ஶேஷத்வத்தையும் அழித்து, அவனுடைய ஶேஷித்வத்தையும் அழிக்கை. உபாயங்களை விடுகையா கிறது, — இவை நமக்கு உபாயமன்றென்கிற நைராஶ்யம். நைராஶ்யத்துக்கு ஹேது அஶக்தியும், அப்ராப்தியும்.

"த்யஜ்ய" என்கிற ல்யப்பாலே, 1. "ஸ்நாத்வா பு,ஞ்ஜீத" என்கிறபடியே, உபாயஸ்வீகாரத்துக்கு உபாயாந்தரத்யாக,த்திலுடைய அங்க,த்வம் சொல்லுகிறது. யாக,த்திலிழியுமவனுக்கு தத்,வ்யதிரிக்த ஸர்வத,ர்மத்யாக,ம் அங்க,மாகிருப்போலே இதுவும் ஆத்மயாக,மாகையாலே தத்,வ்யதிரிக்த ஸர்வத,ர்மத்யாக,ம் அங்க,மாகக்கடவதென்று முன்பே சொல்லிற்று. இத்தால் ஶாஸ்த்ர வையர்த்,யமும் பரிஹரிக்கப்பட்டது.

விட்டே பற்றவேணுமாகில் ஸர்வாதி,காரத்வப,ங்க,ம் வாராதோ? என்னில், அஶக்தனுமாய் அயோக்,யனுமானவன் ஸ்வரூபஜ்ஞாந வைஶத்,யத்தாலே விட்டுப் பற்றக்கடவன். அல்லாதவர்களும் உக்த லக்ஷணத்தாலே அஶக்தராயிருக்கு மத்தனைபோக்கி ஸர்வத்திலும் அஶக்தராயிருப்பாரொருத்தருமில்லையே. அவர்களும் விக்,கவிலம்ப,ாதி,ப,யமுடையராகில், யதா,ாயோக்,யம் விட்டுப் பற்றக்கடவர்கள். ஆகையாலே ஸர்வாதி,காரப,ங்க,ம் வாராது. இப்படி கொள்ளாதே ஸர்வோபாயஶூந்யனுக்கு இது உபாயமென்னும் பக்ஷத்தில், ஸர்வோபாயஶூந்யராயிருப்பாரொருத்தருமில்லையாகையாலே, அந்த பக்ஷத்துக்கு இந்த தூ,ஷணம் வரும். ஆகையாலே, த்யாக,ம் அங்க,மென்கிற இது உபபந்நம்.

ஆக இத்தால் த்யாக,ப்ரகாரம் சொல்லிற்று.

இவ்விடத்திலே பிள்ளையருளிச்செய்து போருவதொரு வார்த்தையுண்டு. அதாவது,—"'பதர்க்கூட்டை விட்டுப் பர்வதத்தை அண்டைகொள்வாரைப்போலே பற்று' என்கிறான்" என்று. அது எங்ஙனேயென்னில், அவை ஸாத்,யங்களாகையாலும், பலவாகையாலும், அசேதநங்களாகையாலும் பதர்க்கூட்டிறே. இவன் ஸித்,த,ஸ்வரூபனாகையாலும், ஏகரூபனாகையாலும் பரமசேதநனாகையாலும் பர்வதம்.

(5) அநந்தரம், பற்றும் விஷயத்தையும், பற்றும் ப்ர காரத்தையும் சொல்லுகிறது; "மாம்" என்று ஸ்வீகார்ய மான உபாயத்தைச் சொல்லுகிறது. உபாயமாவது இஷ்டப்ராப்த்யநிஷ்டநிவ்ருத்திஸாத,நமாயிருக்கையாலே, இஷ்டப்ராப்த்யநிஷ்டநிவ்ருத்த்யுபயோகி,யான பரத்வ ஸௌலப்,யங்கள் "மாம்" என்கிற பத,த்திலே விவக்ஷிதம்.

எங்ஙனேயென்னில்; 1. "**ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: । நாக,பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக,தோ மது,ராம் புரீம் ॥**" என்கிறபடியே, "மாம்" என்கிறவன் ஸ்ரீமானுமாய் நாராயணனுமாயிருக்கையாலே

ஸ்ரிய:பதித்வ நாராயணத்வங்கள் பரத்வஸௌலப்,ய ஹேதுவாகிறபடி எங்ஙனே? என்னில், ஸ்ரீயாகிறாள்,— ஸர்வருடையவும் ஸ்வரூப ஸ்தி,திப்ரவ்ருத்தி ஸித்,த்,யர்த்த,மாக ஆஶ்ரயணீயையாயிருக்கையாலே. "இவளுக்குப் பதி" என்கையாலே பரத்வம் சொல்லிற்று. 2. "**ஶ்ராந்: த,யா தே,வோ தே,வத்வமஶ்நுதே**", 3. "**அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா**" a"திருவுடையடிகள்" b "திருமகளார் தனிக்கேள்வன் பெருமையுடையபிரான்" என்னக்கடவதிறே. ஸ்ரீயாகிறாள் ஜக,ந்மாதாவாயிருக்கை யாலே, "இவளுக்குப் பதி" என்கையாலே ஸௌலப்,யஞ் சொல்லிற்று. 4. "**மாத,வோ ப,க்தவத்ஸல:**" c "கோல மலர்ப்பாவைக்கன் பாகிய என்னன்பேயோ" என்றும் நாராயண ஶப்,த,த்துக்கு அர்த்த,ம் ஜக,த்காரணத்வமும் ஜக,த,ந்தராத்மத்வமுமாகையாலே, ஜக,த்காரணத்வப்ரயுக்த மான பரத்வமும், ஜக,த,ந்தராத்மத்வ ப்ரயுக்தமான ஸௌலப்,யமும் சொல்லப்பட்டது.

ஆக, "மாம்" என்று, "ஸ்ரீமானுமாய் நாராயணனுமா யிருந்த என்னை" என்றபடி. இத்தால் அநுஷ்டா,ந வாக்யத்தில் ஸ்ரீமச்ச,ப்,த,த்தையும் நாராயண ஶப்,த,த்தை

a திருவாய் 1-3-8 b ஷை 1-6-9 c ஷை 10-10-7

யும் ஸ்மரிப்பிக்கிறது. இதக்கு ஹேது வித்₃யநுஷ்ட₂ாநங்க ளிரண்டும் ஏகார்த்த₂மாக வேண்டுகையாலே. ஆக, இத்தால் ஸ்ரீமந்நாராயணனே ஶரண்யனென்றதாய்த்து. நாராயண ஶப்₃த₃ந்தானே அவனைப் பரிபூர்ணனாகக் காட்டச் செய்தே ஸ்ரீமச்ச₂ப்₃த₃த்தாலே விஶேஷித்தது,—இவர்கள் அஞ்சாதே சென்று ஆஶ்ரயிக்க வல்லராகைக்கும், அவன் இவர்களைத் தன் பேருக ரக்ஷிக்கைக்கும் உறுப்பாகச் சொல்லுகிறது. ஆனால் ஸ்ரீமச்ச₂ப்₃த₃ந்தானே, அவனைப் பரிபூர்ணனாகக் காட்டச்செய்தே, நாராயணஶப்₃த₃த்தாலே விஶேஷிக்கிறது, பிராட்டி கைவிடிலும் நிலமங்கை கைவிடிலும் கைவிடாதஸ்வப₄ாவனென்னுமிடமும், அந்யநிர பேக்ஷமாக ஶரணாக₃தபரிபாலநம் பண்ணவல்லனென்னு மிடமும் சொல்லுகிறது. ஆகையால் இவ்விஶிஷ்ட வேஷத்தில் ஆஶ்ரயித்தாலாய்த்து ப₂லஸித்₃தி₄யுள்ளது. பிரிவிலாஶ்ரயிக்கையாவது, தே₃வதாந்தர ஸமாஶ்ரயண துல்யமாம்.

"அன்று 'உன் முகங்காணில் முடிவேன்' என்கை யாலே முகந் தோன்றாமல் நடத்தினேன்; இன்று 'உன் முகங்காணாவிடில் முடிவேன்' என்கையாலே முகம் தோற்றநின்று நடத்தினேன்" என்று, தன் வ்யாபாராதி₃ களைக் காட்டுகிறான். அதாகிறது, "என்கையில் மடல் உன்கையிலே வரும்படியாகவும், என் தலையில் முடி உன்தலையிலே வரும்படியாகவும் வேணுமென்று ஆசைப் பட்டு, உன் கால் என்தலையிலே படும்படி தாழநின்றேன்" என்று தன் ஸௌலப்₄யத்தைக் காட்டுகிறான் (மாம்) என்று. "நீ ஶப்₃தா₃தி₃ விஷயங்களிலே மண்டித்திரிகை யாலே உன்னுடம்பில் புகரைப் பாராய்; உன்னை வியோக₃ங்கொள்ளப்பெறுமையாலே உடம்பு வெளுத்திருக் கிற என்னைப்பாராய்" என்று தன் வ்யாமோஹகு₃ணத்தை சட்டையவிழ்த்துவிட்டுக் காட்டுகிறான் என்றதாய்த்து.

இவ்விடத்தில், ஶரண்யஶரண்யதைக்கு உபயுக்தமாகப் பத்து கு₃ணங்கள் அநுஸந்தே₄யங்கள். (மாம்) என்கிற வஸ்து ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகமாயிருந்ததேயாகிலும் உபாஸிக்குமிடத்து வித்₃யைகள்தோறும் சில கு₃ணவிஶே ஷங்களுள் உபாஸ்யமாக கு₃ணயோக₃த்தில் நிஷ்கர்ஷித்தாற் போலே, ப்ரபத்திவித்துக்களான நம்மாசார்யர்கள் ஶரண் யத்வத்துக்கு உபயுக்தமாகப் பத்து கு₃ணங்களை அநுஸந் தி₄த்துப் போருவர்கள். அவையாவன, — ஸர்வஜ்ஞத்வ (1), ஸர்வஶக்தித்வ (2), பரமகாருணிகத்வ (3), பரமோதா₃ ரத்வ (4), ஆஶ்ரிதவத்ஸலத்வ (5), அஶரண்யஶரண்யத்வ (6), அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்யத்வ (7), ஸர்வஸ்வாமித்வ (8), ஶ்ரிய:பதித்வ (9), நாராயணத்வங்கள் (10). இத்தால் "உன்னிலும் உன் கார்யம் அறிவேனு மாய், உன்னிலும் உன் கார்யம் செய்ய க்ஷமனுமாய், உன்னிலும் உன்கார்யத்துக்கு உகப்பேனுமாய், உன் கார்யம் செய்யுமிடத்தில் என் கார்யமாகச் செய்வேனு மாய், உன் குற்றம் காணாதிருப்பேனுமாய், உன் குற்றம் போ₄க்₃யமாக இருப்பேனுமாய், உனக்குப் பற்றில்லாத போதும் பற்றாயிருப்பேனுமாய், உன் பேறு என் பேறா யிருப்பேனுமாய், உன்னிலும் உன் கார்யம் செய்கைக்கு ப்ராப்தனுமாய், உனக்கும் எனக்கும் தா₄ரகையாயிருந் துள்ள ஐஶ்வர்யத்துக்காக உன் கார்யம் செய்வேனுமாய், நீரிலே நெருப்பெழுந்தாற்போலே இவளே குற்றங்காட்டி னாலும் விடவொண்ணாத ப₃ந்த₄த்தையுடையேனுமாயிருக் கிற என்னை" என்றபடி.

அத₂வா, (மாம்) என்கிறவிடத்திலே ஆஶ்ரயணத் துக்கு ஏகாந்தமான சில கு₃ணங்களையும், (அஹம்) என்கிற விடத்திலே ப₂லப்ரதா₃நத்துக்கு ஏகாந்தமான சில கு₃ணங் களையும் அநுஸந்தி₄த்துப் போருவாருமுண்டு. ஆஶ்ர யணத்துக்கு ஏகாந்தமான கு₃ணங்களாவன — வாத்ஸல்ய மும், ஸ்வாமித்வமும், ஸௌஶீல்யமும், ஸௌலப₄்யமும்,

1. [வாத்ஸல்ய]மாவது, அத்₁யஜாதமான வத்ஸத்தின் பக்கல் தே₄நுவுக்குண்டான காமம்; அதாவது, சுவடுபட்ட தரையிலே புல் தின்னாத பசு அன்றீன்ற கன்றின் தோ₃ஷத்தை தோ₃ஷமென்று கருதாதே தனக்கு போ₄க்₃ய மாகக் கொள்ளுமாபோலே ஆஶ்ரிதருடைய தோ₃ஷத்தைத் தன்பேறாகப் போக்கி, தன் கல்யாண கு₃ணங்களாலே த₃ரிப்பிக்கை.

2. [ஸ்வாமித்வ]மாவது, இழவுபேறு தன்னதாம்படியான குடல்துடக்கு.

3. [ஸௌஶீல்ய]மாவது 1. "அவாக்யநாத₃ர:" என்கிறபடியே நிரவதி₄க வைப₄வத்தையுடைய தன்னைத் தாழவிட்டு ஒருநீராகக் கலக்கை.

4. [ஸௌலப்₄ய]மாவது, அதீந்த்₃ரியமான வடிவை இந்த்₃ரியகோ₃சரமாக்கிக்கொண்டு ப₄வ்யனாகை.

இவை ஆஶ்ரயணத்துக்கு உபயுக்தமாகிறபடி எங்ஙனே யென்னில்; தன் தோ₃ஷம் கண்டு இறாயாமைக்கு வத்ஸலனாகவேணும்; நம்மை ரக்ஷிக்குமோ ரக்ஷியானோவென்கிற அச்சங்கெடுகைக்கு ஸ்வாமியாகவேணும்; தன் சிறுமை கண்டு பிற்காலியாமைக்கு ஸுஶீலனாகவேணும்; தூ₃ரஸ்த₂னாயிருக்குமென்று அஞ்சாமைக்கு ஸுலப₄னாக வேணும்,

இந்நாலு கு₃ணமும் ஆஶ்ரயணோபயோகி₃யென்னுமிடத்தை, நம்மாழ்வார் ஶரணம் புகுகிறவிடத்தில் a "நிகரில் புகழாய் உலகம் மூன்றுடையாய் என்னையாள்வானே, நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே" என்று அருளிச்செய்தருளினார். "மாம்" என்கிற நிலைதன்னிலே இவையெல்லாமுண்டு; எல்லாருடையவும் கண்ணுக்கிலக்காய்ப் பாண்ட₃வர்களுக்கு ப₄வ்யனாய் நிற்கிற ஸௌலப்₄யமும், இவர்களில் அந்யதமனென்னலாம்படி

a திருவாய் 6-10-10.

ஸஜாதீயனுய்க் கொண்டு நிற்கிற ஸௌஶீல்யமும், 1. **"விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம்"** என்று கையில் வில்லைப் பொகட்டு யுத்,த,ா து,பர தனுய், குதிரைக்குட்டியான அர்ஜுநனை யுத்,த,த்திலே மூட்டினபின்பு அவனுடைய இழவுபேறு தன்னதாம்படியான ஸ்வாமித்வமும், 2. **"மம ப்ராணா ஹி பாண்ட,வா:"** என்று அவர்களையொழியத் தனக்குச் செல்லாதபடியான வாத்ஸல்யமும் தோற்றநின்று வ்யாபரிக்கையாலே.

ப,லப்ரத,ாநத்துக்கு உபயுக்தமான கு,ணங்களாவன — ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ அவாப்தஸமஸ்தகாமத்வ நிருபாதி,கஶேஷித்வ பரமத,யாளுத்வங்கள்.

இவை ப,லப்ரத,ாநத்துக்கு உபயுக்தமாகிறபடி எங்ஙனேயென்னில், ஸர்வஜ்ஞத்வமாகிறது ஶரணாக,தனுடைய இஷ்டாநிஷ்டங்களை அறியவல்லனாகை; ஸர்வஶக்தித்வமாவது, நித்யஸம்ஸாரிகளை நித்யஸூரிகளோடே ஒரு கோவையாக்க வல்லவனாகை; இது செய்யுமிடத்தில் ப்ரயோஜநநிரபேக்ஷமாகச் செய்யும்போது, அவாப்தஸமஸ்தகாமனாகவேணும். தன் பேறாகச்செய்யும்போதைக்கு நிருபாதி,க ஶேஷியாகவேணும். இக்குணங்களெல்லாம் சுவர்த்தலையில் பூனைபோலே ஸம்ஸரிப்பிக்கைக்கும் உறுப்பாயிருக்கையாலே, இக்குணங்கள் இவனுடைய உஜ்ஜீவநத்துக்கு உறுப்பாம்போது பரமத,யாளுவாகவேணும். ஆகையாலே க்ருபாஸஹக்ருதமான ஜ்ஞாநஶக்த்யாதி,கள் இவனுக்கு உஜ்ஜீவநமென்றதாய்த்து. a "விதிவாய்க்கின்று காப்பாரார்" b "சேமஞ்செங்கோனருளே" c "ஆழியானருளே" d "துணியேனினி நின்னருளல்லதெனக்கு" 3. **"க்ருபயா கேவலமாத்மஸாத்குரு"** 4. **"கேவலம் மதீ,யயைவ த,யயா"** என்று ஆழ்வார்களோடு ஆசார்யர்களோடு வாசியற க்ருபாகு,ணத்தினுடைய ப்ராத,ாந்யம் அருளிச்

---

a திருவாய் 5-1.1 b திருவிருத்தம் 27
c பெரியதிரு 1-1-4 d பெரியதிரு 11-8.8.

செய்யப்பட்டதிறே. க்ருபாஸஹக்ருத ஜ்ஞாநஶக்த்யாதி₃ கு₃ணங்கள் ஶரண்யதைக்கு உபயுக்தமென்னுமிடத்தை 1. "ஶக்தேஸ்ஸுபஸத₃த்வாச்ச க்ருபாயோக₃ாச்ச ஶாஶ்வதாத் । ஈஶேஶிதவ்யஸம்ப₃ந்த₄ாத₃நித₃ம்ப்ரத₂மாத₃பி ॥ ரக்ஷிஷ்யத்யநுகூலாந்ந: இதி யா ஸுத்₃ருட₄ா மதி: । ஸ விஶ்வாஸோ ப₄வேச்ச₂க்ர ! ஸர்வது₃ஷ்க்ருதநாஶந: ॥" என்று ப₄க₃வச்சா₂ஸ்த்ரத்திலே சொல்லிற்று. 2. "ஏவமவஸ்தி₂தஸ்யாப்யர்த்தி₂த்வமாத்ரேண பரமகாருணிகோ ப₄க₃வாந் ஸ்வாநுப₄வ ப்ரீத்யோபநீதைகாந்திகாத்யந்திக நித்ய கைங்கர்யைகரதிரூப நித்யதா₃ஸ்யம் தா₃ஸ்யதீதி விஶ்வாஸ பூர்வகம் ப₄க₃வந்தம் நித்யகிங்கரதாம் ப்ரார்த்த₂யே" என்று எம்பெருமானார் அருளிச்செய்தருளினர். 3. "பாபீயஸோபி ஶரணாக₃தி ஶப்₃த₃ப₄ாஜோ நோபேக்ஷணம் மம தவோசித மீஶ்வரஸ்ய । த்வஜ்ஜ்ஞாநஶக்தி கருணாஸு ஸதீஷு நேஹ பாபம் பராக்ரமிதுமர்ஹதி மாமகீநம் ॥" என்று ஆழ்வானும் அருளிச்செய்தருளினன். கீழுக்தமான கு₃ணங்களெல்லாம் ஶரண்யத்வோபயுக்தங்களாயிருக்கும். "மாம்-அஹம்" என்கிற பத₃ங்களில் பிரித்து அநுஸந்தி₄க்கைக்கு ஹேது, "மாம்" என்கிற பத₃த்தில் சொல்லுகிற கு₃ணங்கள் "வ்ரஜ" என்கிறவிடத்தில் அதி₄காரி க்ருத்யமான விஶ்வாஸ ஜநகமாத்ரமாயிருக்கையாலேயும், "அஹம்" என்கிறவிடத்தில் சொல்லுகிற கு₃ணங்கள் விஶ்வாஸ ஜநகங்களாயிருக்கச் செய்தேயும் உபாயக்ருத்யமான பாபவிமோசநத்துக்குப் பரிகரமாயிருக்கையாலே பாப விமோசகனைச் சொல்லுகிற அஹம் ஶப்₃த₃த்திலே அநுஸந்தி₄க்கவேண்டுகையாலும், கீழுக்தமான கு₃ணங்களெல்லாத்தாலும் * "வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்றார்வுற்ற வென்னை யொழிய என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப்பருகினன்" என்கிறபடியே ஒரு சேதநனைப் பெற்றானாகில் ஜீவித்தல், இல்லையாகில் நாவிலும் பல்லிலும் நீரற்றுக்கிடக்கும்படியான அவனு

* திருவாய் 9-6.10.

டைய வ்யாமோஹ கு₃ணமே இவனுக்கு தா₄ரகம். a "உவ் வுபாயம் மற்றின்மைதேறி" என்று அருளிச்செய்தருளி னாரிறே ஆழ்வார்.

*நாட்டில் ஶரண்யரைக்காட்டில்* இவனுக்கு விஶேஷம், நிருபாதி₄க ஸம்ப₃ந்த₄மும், நிருபாதி₄கரக்ஷகத்வமும். இந்த கு₃ண விஶேஷம் இவ்விடத்திலே, த்₃வயத்திலே சரண ஶப்₃த₃த்தாலே சொல்லப்பட்ட விக்₃ரஹத்தையும் சொல்லு கிறது. அதாவது — ஸௌந்த₃ர்யௌதா₃ர்யஸரிதமான திருக்குழ லும், கையுமுழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளும், திருச்சதங்கையு மாய்க் கொண்டிருக்கும் இருப்பு.

இத்தால் *ஶரண்யவஸ்து*, ஸர்வரக்ஷகமுமாய், ஸமஸ்த கல்யாணகு₃ணாத்மகமுமாய், ஸவிக்₃ரஹமுமாயிருக்கும் என்ற தாய்த்து. "ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்றிறே *ஶரணாக₃திமந்த்ரம்.* b "அலர்மேல் மங்கையுறைமார்பா" என்று தொடங்கி b "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" எனறிறே அபி₄யுக்தர்வார்த்தையும்.

இத்தால் ஸத்₃வாரகமாக அவனை ப₄ஜிக்கும் உபாயாந் தரங்களில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது, உபாயாந்தரங் களிற்காட்டில் இவ்வுபாயத்துக்கு ஐகாந்த்யமுண்டென்னு மிடத்தை த்₃யோதிப்பிக்கிறது. இத்தால் இவ்வுபாயம் ஸ்வரூ பத்துக்கு அநுரூபமாகக்கடவது.

(4) (ஏகம்) இந்த ஏக ஶப்₃த₃த்தை *ஶரணஶப்₃த₃த்* துக்கு விஶேஷணமாக்கி அத்₃விதீயமான உபாயமென்ற படியாய், அதாகிறது, ஸமாப்₄யதி₄கத₃ரித்₃ரமென்று நம்மா சார்யர்களிலே சிலர் நிர்வஹிப்பர்கள்.

நஞ்ஜீயர் இதுக்கு "அவதா₄ரணத்தைச் சொல்லு கிறது" என்று அருளிச்செய்வர். எங்ஙனே என்னில்:

a *திருவாய் 4-3-11* b *திருவாய் 6-10-10.*

1. **"த்வமேவோபாயபூ,தோ மே ப,வ"** என்றும், 2. **"தமேவ ஶரணம் க,ச்ச,"** என்றும் 3. **"மாமேவ யே ப்ரபத்,யந்தே"** என்றும் 4. **"தமேவ சாத்,யம் புருஷம் ப்ரபத்,யே"** என்றும் ஸ்த,ாநப்ரமாண ஸித்,த,மாகையாலே.

ஆனல் இவ்வவத,ாரணத்துக்கு வ்யாவர்த்யமாவதே தென்ருல், கீழே உபாயாந்தரங்களை த்யாஜ்யங்களாகச் சொல்லுகையாலே, அவற்றை வ்யாவர்த்திக்கிறது என்ன வொண்ணுது. [**மாம்**] என்று அஸாத,ாரணகாரத்தைக் கீழே சொல்லுகையாலே, தே,வதாந்தரம் வ்யாவர்த்யம் என்னவொண்ணுது.

பின்னை ஏதாவதென்ருல், இனி இங்குள்ளது ஸ்வீகார்யமும் ஸ்வீகாரமும் ஸ்வீகர்த்தாவுமாகவேணுமிறே. அதில், ஸ்வீகார்யன் உபாயமாய் நின்ருல், இனியுள்ளது ஸ்வீகாரமும் ஸ்வீகர்த்தாவுமிறே. அந்த ஸ்வீகர்த்தாவோபாதி ஸ்வீகாரமும், உபாயத்தில் புகாதென்கிறது. ஆவதென்? 5. **"உபாயோபேயத்வே ததி,ஹ தவ தத்வம் ந து கு,ணௌ"** என்கிறபடியே உபாயத்வம் நித்யமேயாகிலும், இவனுடைய ஸ்வீகாராநந்தரமாகவன்ரே உபாயமாகிறது; 6 **"யத,நந்தரம் யத்,ப,வதி தத்தஸ்ய காரணம்"** என்கிறபடியே, இந்த ஸ்வீகாராநந்தரமாகவல்லது ஈஶ்வரனுடைய உபாயப,ாவம் ஸித்,தி,யாமையாலே, இது உபாயமாதல் ஸஹகாரியாதலாகவேண்டாவோ ? என்னில், **"மாமேகம் ஶரணம் வ்ரஜ"** என்று உபாயஸ்வீகாரமாகச் சொல்லுகையாலே ஸாக்ஷாதுபாயத்வம் இதுக்கில்லை.

இனி ஸஹகரிக்கையாவது, உத்பத்தியிலே ஸஹகரித்தல், ப,லப்ரத,ாநத்திலே ஸஹகரித்தலாய்த்து. ப,க்த்யுபாயம் கர்மஜ்ஞாந ஸாத்,யமாகையாலே, உத்பத்தியிலே சேதநஸாபேக்ஷம்; அசேதனமாகையாலே, ப,லப்ரத,ாநத்தில் ஈஶ்வரஸாபேக்ஷம்; இவ்வுபாயம் ஸித்,த, வஸ்துவுமாய், நிருபாதி,க ஸர்வஸுஹ்ருத்துமாயிருக்கை

யாலே உத்பத்திநிரபேக்ஷம்; ஸர்வஜ்ஞத்வாதி,கு,ண விசிஷ்டமாகையாலே ப,லப்ரதா,நத்தில் நிரபேக்ஷம்.

ஆனால், 1. "**யத்,யத் ஸாங்க,ம் தத்தத் ஸாத,நம்**" என்கிறபடியே உபாயம் ஸாங்க,மாயன்றோ இருக்க வேணும். இவ்வுபாயம் ஸித்,த,மாயிருக்கிறபடியென்னென்னில், உபாயமாகில் ஸாங்க,மாயிருக்கவேணுமென்கிற நிர்ப்ப,ந்த,மில்லை. அவை ஸாத்,யமுமாய் அந்யஸாபேக்ஷமுமாயிருக்கையாலே, ஸாங்க,மாகவேண்டிற்றித்தனை. இவ்வுபாயம் ஸித்,த,முமாய் அந்யநிரபேக்ஷமுமாயிருக்கையாலே நிரங்க,மாயிருக்கும்.

ஆனால், உபாயாந்தரங்களுக்கும் உபாயத்வவ்யபதே,சம் பண்ணுகிறது, ப,லப்ரதை,களான தே,வதைகளுக்கு ப்ரஸாத,கங்களான முக,த்தாலேயன்றோ; அவ்வோபாதி இவ்வுபாயமும் ஈச்வரப்ரஸாத,கமானலோ வென்னில்; தே,வதைகளில் சேதநர்க்கு பூர்வமே ப,லத்தைக் கொடுப்பதாக நினைவின்றிக்கே இருக்கச்செய்தே, இச்சேதநருடைய க்ரியையாய்த்து, அவர்கள் ப்ரஸாத,த்தை ஜநிப்பிக்கிறது.

ஈச்வரவிஷயத்தில் வந்தால், ஸர்வாத்மாக்களுக்கும் ஸ்வரூபாவிர்ப,ாவத்தை உண்டாக்குவதாக பூர்வமேவ சிந்தித்து அவஸரப்ரதீக்ஷனாய்ப் போருகையாலே, அவனுக்கு ப்ரஸாத,ஜநகமாகச் செய்யவேண்டுவதொன்றில்லை. உண்டென்றிருக்கையாகிறது தன் ஸ்வரூப பாரதந்த்ர்யத்தையுமழித்து அவனுடைய ரக்ஷகத்வத்தையும் ஸோபாதி,கமாக்குகிறனித்தனை.

ஆனல் மோக்ஷத்துக்குத் தன்னையொழிய உபாயாந்தரங்களை விதி,ப்பானென்னென்னில், இதை இவர்களுக்கு ஹிதமாய் விதி,க்கிறானல்லன், அர்த்தி,வர்க்க,த்தின் பெருமையாலே, கோயிலங்காடியிலே எல்லாச்சரக்கும் பாரித்து வைக்கிறப்போலே, 2. "**த்ரைகு,ண்யவிஷயா வேதா, நிஸ்த்ரைகு,ண்யோ ப,வார்ஜுந**" a "முத்திறத்துவாணியத்

a திருச்சந்த 68.

திரண்டி லொன்று நீசர்கள் மத்தராய் மயங்குகின்ற திட்டதி விறந்துபோந்து" என்கிறபடியே சேதநருடைய ருச்யநுகு,ணமாகத் தன் செல்லாமையாலே விதி,க்கிருளித்தனே.

புருஷோத்தமவித்,யையில், புருஷோத்தமத்வ வேத,நத்தாலல்லது வழியில்லை என்கிற இதுவும் அவனிட்ட வழக்கு. '**ஶரணம்**' என்கிற இதுவும் அந்த முக்,யாதி,காரிகளுக்கு. ருச்யநுகு,ணமான ஸாத,நங்களில் இதல்லது போக்கி, அவ்யவஹிதஸாத,நமொன்றில்லையென்று அல்லாத உபாயங்களிற் காட்டில் இவ்வுபாயத்தினுடைய ஏற்றமும் அல்லாத அதி,காரிகளிற் காட்டில் இவ்வதி,காரியினுடைய ஏற்றமும் சொல்லுகிறதித்தனே.

1. **"மாம் நயேத், யதி காகுத்ஸ்த,ஸ்தத்தஸ்ய ஸத்,ருஶம் ப,வேத்"** என்றும், a "முன்னின்றாய் என்று தோழிமார்களுமன்னையரும்" என்றும், b "நிறைந்த வன்பழி நங்குடிக்கிவள்" என்றும், c "இருநிலத்தோர் பழிபடைத்தேன்" என்றும், d "சோம்பரையுகத்தி" என்றும் சொல்லுகிறபடியே பதிவ்ரதைக்குப் பதியையொழிய, தன் பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கு பா,த,கமாக ஸ்வயத்நத்தாலே அர்த்த,மார்ஜித்து ஸ்வதே,ஹபோஷணம் பண்ணுமாகில் அது தன் ஸ்வரூபத்துக்குச் சேராதே, தன்னளவிலும் பர்யவஸியாதே, தன் ப,ர்த்தாவுக்கும் அவத்,யாவஹமாயிருக்கும். தானொன்றும் செய்யாதே, அவன் ரக்ஷிக்கக் கண்டிருக்குமாகில், அது இருவர் ஸ்வரூபத்துக்கும் நன்னிறம் உண்டாக்கக்கடவது. அப்படியே, தன் ஸ்வரூபத்தை யுணர்ந்து தன் ஸ்வரூபாநுகு,ணமாக அவனையே ப்ராப்யமும் ப்ராபகமுமாக நினைத்திருக்கும் அதி,காரிகளோடு அவர்களை ஸமராய்ச் சொல்லுகிறதல்ல, 2. **"ஸத்கர்மநிரதாஶ்ஶுத்,தா,ஸ் ஸாங்க்,யயோக,வித,ஸ்தத,ா। நார்ஹந்தி ஶரணஸ்த,ஸ்ய கலாம் கோடிதமீமபி ॥" 3. "விஷ்ணு**

a திருவாய் 5-5-9. b டி 5-5-7. c திருநெடுஂ 12. d திருமாலை 38.

**பாபோ யோऽந்யப₂லஸ்லோऽத₄ம: பரிகீர்த்தித:। அந்யோ பாபோ விஷ்ணுப₂லோ மத்₄யம: பரிகீர்த்தித:। மாத₄வாங்க்₄ரித்₃வயோபாயோ மாத₄வாங்க்₄ரிப்ரயோஜந:। யஸ்ஸ ஏவோத்தம: ப்ரோக்தோ மாத₄வேநைவ தேந வை"** என்னக் கடவதிறே.

ஆனால் அவஶ்யகர்த்தவ்யமான உபாயஸ்வீகாரத்துக்கு வேஷமேதென்னில், அசித்₃வ்யாவ்ருத்தி லக்ஷணமுமாய், ப்ரதிப₃ந்த₄க நிவர்த்தகமுமாய், ஸ்வசித்தஸமாதா₄நமுமாய்க் கிடக்கிறது. 1. **"ப₄க₃வத்ப்ரவ்ருத்தி விரோதி₄ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி: ப்ரபத்தி:"** என்று ஸோமாசியாண்டான் அருளிச்செய்வர்.

இவ்வுபாயந்தான், ஓராகாரத்தாலே ஸாபேக்ஷமுமாய் ஓராகாரத்தாலே நிரபேக்ஷமுமாயிருக்கும். எங்ஙனே? என்னில், ஆஶ்ரயண காலத்தில் அதி₄காரி ஸாபேக்ஷமுமாய், ப₂லப்ரதா₃நத்தில் இதர நிரபேக்ஷமுமாயிருக்கும்.

ஆக எம்பெருமான் நிருபாதி₄சரக்ஷகனுகையாலும், ரக்ஷணப₃லம் தன்னதாகையாலும், a "ஆள்பார்த்துழி தருவாய்" என்கிறபடியே பூர்வமேவ ஸ்ருஷ்ட்யவதாரங்களைப் பண்ணி சேதநருடைய இச்சை₂க்கு அவஸரப்ரதீக்ஷனுய்ப் போருகிறவனுகையாலும் அவனுடைய நிர்ஹேதுகமான க்ருபாப்ரஸாத₃ங்களே உபாயம் என்றதாய்த்து.

2. **"க்ருபயா கேவல மாத்மஸாத்குரு"** 3. **"கேவலம் மதீ₃யயைவ த₃யயா நிஶ்ஶேஷவிநஷ்டஸஹேதுக"** 4. **"கேவலம் மதீ₃யயைவ த₃யயாऽதிப்ரபு₃த்₃த₄:"** என்று ஆளவந்தாரும் எம்பெருமானுரும் ஸ்தோத்ரக₃த்₃யங்களிலே இவ்வர்த்த₂த்தை அருளிச்செய்தருளினர்கள்.

"வ்ருத்₃த₄ஸேவைக்குப ப₂லம் அவதா₄ரணர்த்த₂ாறிகை" என்று பிள்ளையருளிச்செய்தருளுவர். இத்தாலும் இவ்வுபாயம் ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருக்குமென்றதாய்த்து,

a நான்-திருவ 60.

(5) "ஶரணம்" என்றது 1. **"உபாயே க்₃ருஹரக்ஷித்ரோஶ் ஶப்₃த₃ஶ் ஶரணமித்யயம். வர்த்ததே ஸாம்ப்ரதஞ் சைஷ உபாயார்த்தை₂க வாசக:॥"** என்கிறபடியே, ஶரண ஶப்₃த₃ம், உபாயவாசகமாய், அநிஷ்டநிவ்ருத்தி பூர்வக மான இஷ்டப்ராப்திக்கு அவ்யவஹிதோபாயம் என்றபடி. ஶரண ஶப்₃த₃ம் அவ்யவஹிதோபாயம் என்னுமிடத்தைக் காட்டுகிறபடிதான் எங்ஙனேயென்னில், கீழே ப₄க₃வத்₃வ்யதிரிக்தஸாங்க₃ ஸகல த₄ர்மத்தையும் விடச்சொல்லுகையாலே.

(6) **"வ்ரஜ"** - **"வ்ரஜ-க₃தௌ"** என்கிற தா₄துவிலே, க₃த்யர்த்த₂மாய் 2. **"க₃த்யர்த்தா₂ பு₃த்₃த்₄யர்த்தா₂:"** என்கிற படியே, **"அத்₄யவஸி"** என்கிறபடி. அத்₄யவஸாயமும் விஶ்வாஸமும் பர்யாயமாகையாலே விஶ்வாஸத்தைச் சொல்லுகிறது. ப்ரபத்திலக்ஷண வாக்யத்திலே 3. **"மஹா விஶ்வாஸ பூர்வகம்"** என்று சொல்லுகையாலும், அநுஷ்டா₂ந வாக்யத்திலும் உபஸர்க்க₃த்தாலே மஹாவிஶ்வாஸத்தைச் சொல்லுகையாலும், இங்கும் அந்த விஶ்வாஸத்தையே விதி₄த்ததாகக் கடவது.

மஹாவிஶ்வாஸமாவது:— ஶங்காத்ரய ரஹிதமான விஶ்வாஸம். ஶங்காத்ரயமாவது;— உபாயப₄ல்கு₃த்வமும், உத்₃தே₃ஶ்ய து₃ர்லப₄த்வமும், ஸ்வக்ருத தோ₃ஷத₃ர்ஶநமும்.

இவை பரிஹ்ருதமாகிறதெத்தாலேயென்னில்: **"மாம்"** என்கிற பத₃த்தில் சொல்லுகிற கு₃ண[ஸம்ப₃ந்த₄]ங்களாலே.

ஸர்வஜ்ஞனுமாய், ஸர்வஶக்தனுமாய், பரமகாருணிகனுமாய், பரமோதா₃ரனுமாயிருக்குமென்கையாலே ப₃லகௌ₃ரவத்தால் வந்த ஶங்கை பரிஹ்ருதம்.

ஆஶ்ரிதவத்ஸலனென்கையாலே, ஸ்வக்ருத தோ₃ஷத₃ர்ஶநமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

அஶரண்யஶரண்யனுமாய் அநாலோசிதவிஶேஷாஶேஷ லோக ஶரண்யனுமாயிருக்குமென்கையாலே, உபாய லாக₄வமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

ஆக இத்தனையாலும், கு₃ணவத்தாத்₄யவஸாயம் சொல்லிற்று. இனிமேல் ஸ்வரூபாத்₄யவஸாயம் சொல்லுகிறது.

ஸர்வஸ்வாமியென்கையாலே உபாயலாக₄வமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

ஶ்ரீமானென்கையாலே ஸ்வக்ருத தோ₃ஷத₃ர்ஶநமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

நாராயணனென்கையாலே ப₂லகௌ₃ரவமாகிற ஶங்கை பரிஹ்ருதம்.

ஆக இத்தால் தன்னுடைய ஸ்வரூபகு₃ணஸித்₃த்₄யர்த்த₂மாகவே ஶரணாக₃தரக்ஷணம் பண்ணுமென்கிற மஹாவிஶ்வாஸம் ப்ரபத்தி என்றதாய்த்து.

இதுதான் ப்ரார்த்த₂நாக₃ர்ப்ப₄மாயிருக்கும். 1 **"மஹாவிஶ்வாஸ பூர்வகம்। ததே₃கோபாயதா யாச்ஞா ப்ரபத்திஶ் ஶரணாக₃தி:॥"** என்றும், 2. **"த்வமேவோபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நாமதி: ஶரணாக₃தி:"** என்றும், லக்ஷண வாக்யங்களில் சொல்லுகையாலே, விஶேஷேண ஶரணாக₃தியில் ப்ரார்த்த₂நமாவது அவனை உபாயத்வேந ஸ்வீகரிக்கை. அதாகிறது—நமக்கு உபாயம் இவனே என்றிருக்கை.

ஆக, கர்மமுமின்றியிலே, கர்மஸாத்₄யமான ஜ்ஞாநமுமின்றியிலே, ஜ்ஞாநஸாத்₄யமான ப₄க்தியுமின்றியிலே, இவற்றினுடைய த்யாக₃பூர்வகமுமாய், தான் உபாயமுமன்றிக்கே உபேயமுமன்றிக்கே அதி₄காரிக்கு விஶேஷணமாயிருப்பதோர் அத்₄யவஸாயாத்மகஜ்ஞாநவிஶேஷம் என்றதாய்த்து. இனி, வாசிக காயிகங்களுண்டாகவுமாம், இல்லையாகவுமாம் என்கை.

இந்த வித்₄யநுஷ்ட₂ாநத்துக்கு அவதி₄யேதென்னில்: **1. "ஸக்ருதே₃வ ப்ரபந்நஸ்ய க்ருத்யம் நைவாந்யதி₃ஷ்யதே" 2. "ப்ரபத்திர் விஶ்வாஸ:" 3. "ஸக்ருத்ப்ரார்த்த₂நாமாத்ரேண அபேக்ஷிதம் த₃ாஸ்யதீதி விஶ்வாஸபூர்வகப்ரார்த்த₂நமிதி யாவத்"** என்கையாலே, இந்த வித்₄யநுஷ்ட₂ாநமாகிற உபாயஸ்வீகாரம் ஸக்ருத்தென்னுமிடம், ப்ரபத்தி ஶாஸ்த்ரங்களாலும் ப்ரபத்திவித்துக்களாலும் நிஷ்கர்ஷிக்கப் பட்டது.

இந்த விதி₄ஶேஷமான, "**மாஶுச:**" என்கிற விதி₄ யாவத் ப்ராப்தியளவும் அநுஷ்டே₂யம். அதாகிறது—'இனி நமக்குக் கர்த்தவ்யாம்ஶங்களொன்றுமில்லை. ப₂லஸித்₃தி₄யிலும் ஒரு குறையில்லை' என்று விமர்ஶத₃ையில் பிறக்கும் விஶ்வாஸமாகையாலே, உபாயாநுஷ்ட₂ாநமும், அநுஷ்டி₂தோபாயபரிபாலநமும் கர்த்தவ்யமென்றதாய்த்து.

**4. "பூ₄யஸ் த்வம் ஶ்ருணு ஸங்க்ஷேபம் மநஸா தே஽ந ஸம்ஶயா। ஶ்ருத்வா ச குரு யத்நேந ரக்ஷா சாப்யப்ரமாதி₃நீ॥"** என்றும் சொல்லிற்றிறே.

ஆகையால் உபாயஸ்வீகாரம் ஸக்ருத்தென்னுமிடமும், ஸ்வீகார விஶேஷணமுமான விஶ்வாஸம் யாவத்ப்ராப்தியளவும் விமர்ஶத₃ையிலும் அநுவர்த்திக்கவேணும் என்னுமிடமும் சொல்லிற்றாய்த்து.

ஸ்வர்க₃ஸாத₄நமான ஜ்யோதிஷ்டோமம் ஸப்தாஹஸ்ஸிலே விஹிதமாயிருக்கச் செய்தே அந்த யாக₃ாந்தர்பூ₄தமான அக்₃நிஹோத்ரம் ஆப்ரயாணம் அஹரஹரநுஷ்டே₂யமாகிறாப்போலே இந்த அக்₃நிஹோத்ரம் அநுஷ்டி₂யாதொழிந்தால் ப₂லத்துக்கு விலம்ப₃முண்டாய், அநுஷ்டி₂த்தால் ப்ரதிப₃ந்த₄கமின்றிக்கே விஶேஷப₂லமுண்டாயிருக்குமாபோலே ஆவ்ருத்திரூபமான விஶ்வாஸமும் நிஷ்ட₂ாவான்களுக்கு நிஷ்ட₂ாப்ரகாஶகமுமாய், காலக்ஷேபமாகிற ப₂லத்தையுமுடைத்தாயிருக்கும். "விஶ்வாஸத்தினுடைய ஆவ்

ருத்திகள் கிணற்றுக்குள்ளே இருந்து (உஜ்)ஜீவிப்பாரைப் போலே" என்று பிள்ளை அருளிச்செய்தருளுவர்.

ஆக, ஸ்வீகாரத்துக்கு உபாயாந்தரத்யாக₃ம் அங்க₃மென்னுமிடத்தையும், த்யாக₃பூர்வகமான ஸ்வீகாரம் அதி₄காரிக்கு விஶேஷணமென்னுமிடத்தையும், ஸ்வீக்ருதனான அதி₄காரிக்கு கு₃ணவிஶிஷ்டனான ஈஶ்வரன் உபாயமென்னுமிடத்தையும் சொல்லிற்றுய்த்து. ஆகையாலே, த்யாக₃விஶிஷ்டம் ஸ்வீகாரம், ஸ்வீகாரவிஶிஷ்டம் அதி₄காரம், கு₃ணவிஶிஷ்டம் உபாயம் என்றதாய்த்து.

(7)&(8) ஆக, இதுக்குக்கீழே அதி₄காரிக்குக் கர்த்தவ்யம் சொல்லிற்று. இனி ஈஶ்வரனுக்குக்கர்த்தவ்யம் சொல்லுகிறது — "**அஹம் த்வேத்யாதி₃**," [**மோக்ஷயிஷ்யாமி**] என்கிற உத்தமனுக்கும் "**மாஶுச:**" என்கிற மத்₄யமனுக்கும், ப்ரதிஸம்ப₃ந்தி₄தயா "**அஹம் த்வா**" என்கிற ஶப்₃த₃ங்கள் தன்னடையே வருவதாயிருக்க, வாசிகமாகச் சொல்லுகிற இதுக்கு ப்ரயோஜநமென்னென்னில், சில அபி₄ப்ராயத்தைப் பற்றச் சொல்லுகிறது. இதுதான் "**மாமேகம் ஶரணம் வ்ரஜ**" என்கிற ஶரண்யாநுவாத₃மும், ஶரணாக₃தனுடைய அநுவாத₃முமாயிருக்கிறது. அதாகிறது, "உனக்கு உபாயபூ₄தனான நான் என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை" என்றபடி.

(7) தே₃ஹாத்மாபி₄மாநி "**அஹம்**" என்றால், தே₃ஹத்தைக் காட்டும். ப்ரக்ருதி புருஷவிவேகம் பண்ணினவன் "**அஹம்**" என்றால் ப்ரக்ருதே:பரனாய், பரமஶேஷபூ₄தனான ஆத்மாவைக் காட்டும். ஈஶ்வரன் "**அஹம்**" என்றால் உள்ளதெல்லாத்தையும் காட்டுமிறே. இந்த "**அஹம்**" ஶப்₃த₃ம், "**மாம்**" என்கிறத்தோடே சேர்ந்து அஹமாய்த்து. மாமென்கிறவிடம் அதி₄காரிக்ருத்யமான மஹாவிஶ்வாஸத்துக்கு உறுப்பாகச் சொல்லிற்று. அஹமென்கிறவிடம் ஈஶ்வரக்ருத்யமான பாபவிமோசநத்துக்கு உறுப்

பாகச் சொல்லுகிறது அதாகிறது, ப₄ந்த₄கனை நானே விமோசகனானல், நிவாரகருண்டோவென்கை. அதாகிறது, ஸமாப்₄யதி₄கத₃ரித்₃ரனென்றபடி. இவ்விடத்திலே, விமோஷித்து, ப₄லப்ரத₃ாநத்துக்கு உபயுக்தமான கு₃ணங்கள் அநுஸந்தே₄யங்கள்.

(8) "த்வா" "கீழ்ச்சொன்னபடியே ஸகல த₄ர்மங்களையும் விட்டு என்னையே நிரபேக்ஷஸாத₄நமாகப்பற்றின உன்னை" என்றபடி. இத்தால், மேல்சொல்லப்புகுகிற மோசகவிமோசநஹேதுவைச் சொல்லிற்று.

"அஹம் த்வா" என்கிற இரண்டு பத₃த்தாலும் ஸ்வீகார்யமான உபாயவேஷத்தையும், ஸ்வீகர்த்தாவான அதி₄காரிவேஷத்தையும் சொல்லிகின்றது. இனிமேல் ஸ்வீகார்யமான ஈஶ்வரக்ருத்யத்தையும், ஸ்வீக்ருதோபாயனை அதி₄காரிக்ருத்யத்தையும் சொல்லுகிறது.

(9) [ஸர்வபாபேப்₄ய:] பாபமும் ப₃ஹுவசநமும் ஸர்வஶப்₃த₃முமாய் இதுவும் த்ரிப்ரகாரமாயிருக்கும்.

பாபமாவது - அநிஷ்டமான ப₂லத்தைத் தருவதுமாய் இஷ்ட ப₂லத்துக்கு விரோதி₄யுமாயிருப்பதொன்று. இங்குத்தை பாபமாகிறது, அநிஷ்டமான ஸாம்ஸாரிக து₃:க₂த்தையுண்டாக்கக்கடவதாய், இஷ்டமான மோக்ஷத்துக்கு விரோதி₄யுமாயிருப்பதொன்று.

ப₃ஹுவசநத்தாலே அவற்றினுடைய ப₃ாஹுள்யத்தைச் சொல்லுகிறது. அதாகிறது, அவித்₃யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ங்கள்.

[அவித்₃யை] யாவது - அந்யதா₂ஜ்ஞாநமும், விபரீத ஜ்ஞாநமும் ஜ்ஞாநாநுத₃யமும்.

[கர்ம] மாவது - புண்யபாபம். மோக்ஷத்தைப்பற்ற, பாபத்தோபாதி புண்யமும் த்யாஜ்யம். 1. "புண்யபாபே விதூ₄ய" என்னக்கடவதிறே.

[வாஸனை] யாவது - அஜ்ஞாநவாஸனையும், கர்மவாஸனையும், ப்ரக்ருதி ஸம்ப,ந்த, வாஸனையும்.

[ருசி]யும் விஷயபே,த,த்தாலே ப,ஹுவித,மாயிருக்கும்.

[ப்ரக்ருதிஸம்ப,ந்த,] மாவது - ஸ்தூ,ல ஸூக்ஷ்ம ரூபமாயிருந்துள்ள அசித்ஸம்ப,ந்த,ம்.

இவ்வளவால், உபாஸகனுக்கும் ஸாத,ாரணமாக, ஈஶ்வரன் கழித்துக் கொடுக்கும் ஆகாரத்தைச் சொல்லிற்று.

இனி, "**ஸர்வ**" ஶப்,த,த்தாலே ப்ரபந்நனுக்கு அஸாத,ாரணமாகக் கழித்துக்கொடுக்குமவற்றைச் சொல்லுகிறது. அதாகிறது - **1. "தத,தி,க,ம உத்தர பூர்வாக,யோரஶ்லேஷவிநாஶௌ தத்,வ்யபதே,ஶாத்" 2. "இதரஸ்யாப்யேவமஸம்ஶ்லேஷ: பாதே து"** என்று பூர்வோத்தராக,ங்களாகிற புண்யபாபங்களுக்கு அஶ்லேஷ விநாஶஞ் சொல்லி, **3. "போ,கே,ந த்விதரே க்ஷபயித்வாத, ஸம்பத்,யதே"** என்று ப்ராரப்,த,ம் அநுப,வவிநாஶ்யம் என்னுமிடஞ் சொல்லிற்றிறே. இங்கு அப்படியிருப்பதொரு ஸங்கோசமில்லாமையாலே, அதுவும் மோக்ஷஹேதுவாமாகில் ஸர்வஶப்,த,த்திலே அந்தர்பூ,தமாகக் கடவது. எங்ஙனே? என்னில்: இதுக்கு ஸங்கோசகமாயிருப்பதொரு ஶப்,த,ம் இங்கில்லாமையாலே.

"'ப்ரபத்தி-ப்ராரப்,த,கர்மத்துக்கு விநாஶிநி' என்னுமிடத்துக்கு ப்ரமாணமென்?" என்று எம்பெருமானாரை ஆண்டான் கேட்க, "மாஶுச:" என்றதிறே என்றருளிச்செய்தருளினார்.

இதுதான் ப்ராரப்,த,த்தையும் போக்குமென்னுமிடத்துக்கு, கண்டோ,க்தமான ப்ரமாணங்களுமுண்டு. **4. "ஸாத,நம் ப,க,வத் ப்ராப்தௌ ஸ ஏவேதி ஸ்தி,ரா மதி: ஸாத்,யப,க்திஸ் ஸ்ம்ருதா ஸைவ ப்ரபத்திரிதி கீ,யதே।**

**உபாயோ ப₄க்திரேவேதி தத்ப்ராப்தௌ யா து ஸா மதி:। உபாயப₄க்தி ரேதஸ்யா: பூர்வோக்தைவ க₃ரீயஸீ॥ உபாய ப₄க்தி: ப்ராரப்₃த₄வ்யதிரிக்தாக₄நாஶிநீ। ஸாத்₄யப₄க்திஸ் து ஸா ஹந்த்ரீ ப்ராரப்₃த₄ஸ்யாபி பூ₄யஸீ॥"** என்று, ப்ரபந்நனுக்கு ஶரீராந்த ஹேதுவான ப்ராரப்₃த₄ஶேஷம் அநுப₄விக்க வேண்டுகிறது, ப்ராரப்₃த₄ ஶரீரத்தில் ஶோகமில்லாமையாலே. 1 **'ஆரப்₃த₄கார்யாந்"** என்று ப்ராரப்₃த₄மும் ப்ரபத்தியாலே க்ஷந்தவ்யம் என்று உடையவர் அருளிச் செய்தார்.

உபாஸகனுக்கு உத்தராக₄த்துக்குச் சொல்லுகிற அஶ்லேஷமும் ப்ரமாதி₃கவிஷயமென்று உடையவர் பா₄ஷ்யத்திலே அருளிச்செய்தருளினர். இப்படி அருளிச் செய்கைக்கு ஹேது, 2. **"நாவிரதோ து₃ஶ்சரிதாந் நாஶாந்தோ நாஸமாஹித:। நாஶாந்தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத்॥"** என்கிற வாக்யங்களோடு விரோதி₄யாமைக்காகவும், 3. **"அபி சேத் பாதகம் கிஞ்சித், யோகீ₃ குர்யாத் ப்ரமாத₃த:। யோக₃மேவ நிஷேவேத நாந்யம் யத்நம் ஸமாசரேத்॥"** என்று யோகி₃களுக்கு ப்ராயஶ்சித்தத்தை விதி₄க்கையாலும்.

ப்ரபந்நனுக்கு உத்தராக₄த்தில், பு₃த்₃தி₄பூர்வமும் ஶோகஹேதுவாமாகில் அந்த பு₃த்₃தி₄பூர்வத்துக்கும் பரிஹாரமாகக் கடவது. அதாவது,—ஶரீரஸம்ப₃ந்த₄த்தோடே யிருக்கையாலே வாஸனையாலும் ப்ரப₃லகர்மத்தாலும் காதா₃சித்கமாக பு₃த்₃தி₄பூர்வகம் ஸம்ப₄விதம். இவற்றையும் பொறுத்தருளவேணுமென்று பூர்வமேவ ப்ரார்த்தி₂த்தானாகில் அவையும் பூர்வப்ரபத்தி தன்னாலே க்ஷந்தவ்யமாகக் கடவதென்கை. ஆகையிறே, 4. **"வர்த்தமாநம் வர்த்திஷ்யமாணஞ்ச"** என்று உடையவர் அருளிச் செய்தது,

பு₃த்₃தி₄பூர்வகமாக உத்தராக₄த்தில் ஶோகித்து ஶரணம் புக்கானென்னுமிடம் அறியும்படியெங்ஙனே யென்னில், உத்தரப்ரவ்ருத்தியில் அநுதாபம் நடக்கையும், பூர்வப்ரபத்தியை ஸ்மரித்து த்₃ருட₄சித்தனாகையும்.

இன்னமும், ஶ்ரேஷ்ட₂ராயிருப்பார்க்கு ஶிஷ்யபுத்ரர்களைப் பற்ற 'வித்₄யதிக்ரமம் பண்ணி அநுஷ்டி₂க்கவேண்டி வருவன சில பாபமுண்டு; அந்தப் பாபங்களையும் சொல்லுகிறது.

ஆந்ருஶம்ஸ்யப்ரதா₄நராய் அநுஷ்டி₂த்தாலும், ஏறிட்ட சட்டி ஆகாஶத்திலே நில்லாதாப்போலே, அவையுமொரு ப₂லத்தோடே ஸம்ப₃ந்தி₄ப்பிக்கக்கடவது. ஆகையாலே அவையும் பாபஶப்₃த₃வாச்யமாகக் கடவது.

கலங்கி உபாய பு₃த்₃த்₄யா பண்ணும் ப்ரபத்தியும் பாப ஶப்₃த₃வாச்யமாகக் கடவது.

(10) ஆக, கீழ் விரோதி₄வேஷஞ் சொல்லிநின்றது. "மோக்ஷயிஷ்யாமி" என்று விரோதி₄நிவ்ருத்தி ப்ரகாரஞ் சொல்லுகிறது.

[மோக்ஷயிஷ்யாமி] இவற்றில்நின்றும் விடுவிப்பன்.

"யிஷ்யாமி" என்கிற ணிச்சாலே யாவையாவை சில பாபங்களைக் குறித்து நீ ப₄யப்படுகிறாய், அவைதானே உன்னைக்கண்டு ப₄யப்பட்டுப் போம்படி பண்ணுகிறேன்"

அவை தானே விட்டுப்போம்படி பண்ணுகையாவது:—இவை நமக்கு முன்புண்டாய்க் கழிந்ததென்று தோற்றாத படி போக்குகை. இதாகிறது—இவை ஸ்ம்ருதி விஷயமானாலும் தன்னுடைய ஸ்வாபா₄விக வேஷத்தைப் பார்த்து ஸ்வப்நங்கண்டாற்போலே இவை நமக்கு வந்தேறியாய்க் கழிந்ததென்றிருக்கையும், ஸ்ம்ருதியால் து₃:க்க₂ மநுவர்த்தியாதிருக்கையும்.

கீழ் இவனை உபாயமாகப் பற்றிற்று அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமான இஷ்டப்ராப்திக்காயிருக்க, அநிஷ்டநிவ்ருத்தி மாத்ரத்தைப் ப₄லமாகச் சொல்லுவானென்னென்னில்; **1. "யதே₂ாத₃பாநகரணாத் க்ரியதே ந ஜலாம்ப₃ரம்। ஸதே₃வ நீயதே வ்யக்திமஸதஸ்ஸம்ப₄வ: குத:। ததா₂ ஹேயகு₃ணத்₄வம்ஸாத₃வபோ₃தா₄த₃யோ கு₃ணா:। ப்ரகாஶ்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே॥" 2. "ஸ்வேந ரூபேணாபி₄நிஷ்பத்₃யதே" 3. "மம ஸஹஜகைங்கர்யவித₄ய:"** என்கிறபடியே அநிஷ்டநிவ்ருத்தி உண்டானால் இஷ்டப்ராப்தி தன்னடையே உண்டாமிறே.

ஆனால் அநிஷ்டநிவ்ருத்திமாத்ரத்துக்கு ஈஶ்வரன் உபாயமாயிருக்கிறானே? என்னில்: இஷ்டப்ராப்தியாகிற அநவதி₄காதிஶயாநந்த₃ ப்₃ரஹ்மாநுப₄வத்துக்கு அர்ஹதையேயுள்ளது; இனி ஈஶ்வரன் அநுப₄விப்பிக்கும்போதாய்த்து இவனுக்கு அநுப₄விக்கலாவது. ஆகையிறே கைவல்யமாகிற மோக்ஷத்துக்கு அநிஷ்ட நிவ்ருத்தியொத்திருக்கச் செய்தேயும், ஆத்மாநுப₄வமாத்ரமாயிருக்கிறது. இவ்வைஷம்யத்துக்கு ஹேது உபாஸநதாரதம்யத்தாலே, ஈஶ்வரனுக்கு உண்டான ப்ரஸாத₃தாரதம்யமாகையாலே, சேதநன் புருஷார்த்த₂த்தை ப்ரார்த்தி₂க்கும்போது இஷ்டப்ராப்திரூபமான கைங்கர்யத்தை ப்ராதா₄ந்யேந ப்ரார்த்தி₂க்கக்கடவன்.

இவனுக்கு, கைங்கர்யமாகிற புருஷார்த்த₂ம் ஸஹஜமாயிருக்கையாலே தத்₃விரோதி₄ நிவ்ருத்தி மாத்ரத்தையே உபாயமான ஈஶ்வரக்ருத்யமாகச் சொல்லக்கடவது. ஆகையாலே அந்த ப்ராதா₄ந்யத்தைப்பற்ற இங்கு அருளிச் செய்கிறான்.

அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் ஈஶ்வரனுடைய க்ருபா ப்ரஸாத₃க்ருத்யமாக க₃த்₃யத்திலே உடையவர் அருளிச்செய்தருளினார்.

ஆகையால் இப்படி ஶரண்யன் சொல்லுகைக்கடி இஷ்டப்ராப்திரூபமான கைங்கர்யம் இவனுக்கு ஸ்வாப,ாவிக மென்னுமாகாரம் தோற்றுகைக்காவும், அநிஷ்ட நிவ்ருத்தி யுண்டானபோதே ஸஹஜமான இஷ்ட ப்ராப்தியுமுண் டென்றும், அநிஷ்ட நிவ்ருத்தியினுடைய ப்ராத,ாந்யத் தைப்பற்ற அருளிச்செய்கிறான்.

(11) கீழ், **"அஹம்"** என்று உபாயக்ருத்யஞ் சொல்லி நின்றது. மேல், **"த்வா"** என்று நிக்ஷிப்தப,ரனான அதி, காரிக்ருத்யஶேஷஞ் சொல்லுகிறது:—

**"மாஶுச:"** ஶோகியாதேகொள் என்றபடி. [வ்ரஜ] என்கிற விதி,யோபாதி **"மாஶுச:"** என்கிற இதுவும் விதி,யாகையாலே ஸ்வீகாரத்தோபாதி ஶோகநிவ்ருத்தியும் கர்த்தவ்யமென்கை. ஆகையாலே, ப்ரபந்நனுக்கு யாவத் ப,லப்ராப்தி, நிர்ப,ரத்வாநுஸந்த,ாநம் கர்த்தவ்யமென்ற தாய்த்து. ஸ்வீக்ருதோபாயனான பின்பு ஶோகித்தானாகில் ப்ரபத்திநிஷ்டை,க்கு ஹாநியுண்டாய், அத்தாலே ப,ல விலம்ப,முண்டாகக் கடவது.

ப,லியாய்த்து ப,லாலாப,த்தில் ஶோகிப்பான். உபாய கர்த்தாவாய்த்து - உபாயமில்லையென்று ஶோகிப்பான். இவ் வுபாயத்தில் ப,லித்வகர்த்ருத்வங்களிரண்டும் உனக்கில்லை. இனி, நானே ப,லியுமாய் நானே கர்த்தாவுமாயிருக்கை யாலே நீ ஶோகிக்கவேண்டா என்கை. 1. **"ஸக்ருதே,வ ப்ரபந்நஸ்ய க்ருத்யம் நைவாந்யதி,ஷ்யதே"** என்கையாலே, கர்த்தவ்யாம்ஶமுண்டென்று ஶோகிக்கவேண்டா.

**"மாம்-அஹம்"** என்கையாலே, உன் விலக்காமை பார்த்திருக்கிறோம் சிலராகையாலும், விரோதி,நிரஸந ஸமர்த்த,னாகையாலும் ஶோகிக்கவேண்டா. ஆகையாலே "உன்னைப் பார்த்தாலும் ஶோகிக்கவேண்டா. என்னைப் பார்த்தாலும் ஶோகிக்கவேண்டா, நிர்ப்ப,ரனாயிரு" என்கை.

" உடையவனாய்த்து க்ருஷிபண்ணுவான். கர்ஷக னாய்த்து ப,லம் பு,ஜிப்பான். ப,லியாய்த்து ப,லாலாப,த்தில் ஶோகிப்பான். இவை இத்தனையும் உனக்கில்லாமையாலே ஶோகியாதே" என்றதாய்த்து.

இனி ஶோகித்தாயாகில், உன் ஸ்வரூபத்தையுமழித்து, என் ப்ரபா,வத்தையுமழித்தாயாமித்தனை. முன்பு ஶோகித்த தில்லையாகில் அதி,காரஸித்,தி,யில்லை. பின்பு ஶோகித் தாயாகில் ப,லஸித்,தி,யில்லை.

இத்தால் 1. **"அதஸ்த்வம் தவ தத்த்வதோ மத்,ஜ்ஞாந த,ர்ஶந ப்ராப்திஷு நிஸ்ஸம்ஶயஸ்ஸுக,மாஸ்ஸ்வ"** என்றபடி.

" து,ஷ்கரமுமாய் ஸ்வரூபவிரோதி,யுமான ஸாத,னங் களை த்யஜிக்கையாலே ஶோகிக்கவேண்டா; ஸ்வீகரிக்கப்புகு கிற உபாயம் ஸுலப,மாகையாலே ஶோகிக்கவேண்டா; அதுதான் நிரபேக்ஷமாகையாலே ஶோகிக்கவேண்டா, அவ்யவஹிதஸாத,நமாகையாலே ஶோகிக்கவேண்டா; மாநஸவ்யாபாரமாத்ரமாகையாலே வாய்நோவ உடம்பு நோவ க்லேஶிக்கவேணுமென்று ஶோகிக்கவேண்டா. உபாயம் ப,லப்ரதா,நஸமர்த்த,மாகையாலே ஶோகிக்க வேண்டா; இனி கர்த்தவ்யாம்ஶமுண்டென்று ஶோகிக்க வேண்டா; விரோத்,யம்ஶத்தில் ஶேஷிப்பதொன்றுண் டென்று ஶோகிக்கவேண்டா; விரோதி,போமோ போகா தோவென்று ஶோகிக்கவேண்டா " என்கிறது.

(1) த்யாஜ்யஸ்வரூபஞ்சொல்லி, (2) த்யாக,ப்ரகாரஞ் சொல்லி, (3) உபாயஸ்வீகாரத்துக்கு த்யாக,ம் அங்க, மென்னுமிடஞ்சொல்லி, (4) ஸ்வீகரிக்கப்புகுகிற உபாயத்தி னுடைய சீர்மைசொல்லி, (5) அச்சீரிய உபாயம் நிரபேக்ஷ மென்னுமிடஞ்சொல்லி, (6) உபேயத்வம் நித்யம், உபாயத்வ மௌபாதி,கமென்னுமிடஞ் சொல்லி, (7) பற்றுமிடத்தில் மாநஸவ்யாபாரமே அமையுமென்னுமிடஞ் சொல்லி, (8) உபாயத்தினுடைய சீர்மையைச்சொல்லி, (9) அதி,காரி

யினுடைய அபூர்த்தி சொல்லி, (10) அவ்வதி,காரியினுடைய விரோதி,பாபஸமூஹத்தைச் சொல்லி, (11) விரோதி,களில் கிடப்பதொன்றில்லையென்னுமிடஞ் சொல்லி, (12) அவையடையத் தானே போமென்னுமிடஞ்சொல்லி, (13) "நிர்ப்ப,ரனாயிரு" என்கிறான்.

ஆக இத்தால், (1) ஸ்வீகாரங்களையும், (2) த்யாஜ்ய த,ர்ம விஶேஷங்களையும், (3) அந்த த,ர்மங்களினுடைய த்யாக,ப்ரகாரத்தையும், (4) அந்த த,ர்மத்யாக,பூர்வகமாகப் பற்றும் விஷயத்தினுடைய ஸௌலப்,யாதி,கு,ண யோக,த்தையும், (5) தத்,விஶிஷ்ட வஸ்துவினுடைய ஸஹாயாஸஹத்வலக்ஷணமான நைரபேக்ஷ்யத்தையும், (6) அந்த நிரபேக்ஷவஸ்துவினுடைய உபாயபா,வத்தையும், (7) அத்தை உபாயத்வேந ஸ்வீகரிக்கையும், (8) ஸ்வீக்ருதோபாயத்தினுடைய ஜ்ஞாநஶக்த்யாதி,கு,ணயோக,த்தையும், (9) தத்,விஶிஷ்டவஸ்துவில் ந்யஸ்தப,ரனான அதி,காரியையும், (10) தத்,விரோதி,பாபஸமூஹத்தையும், (11) தத்,விமோசநப்ரகாரத்தையும், (12) தத்,விமோசகனைப் பற்றின அதி,காரியினுடைய நைர்ப்ப,ர்யத்தையுஞ் சொல்லிற்றாய்த்து.

ப்ரபத்தி நிர்ப்ப,ரத்வாநுஸந்த,ாநஶிரஸ்கமாகையாலே, நிர்ப்ப,ரத்வாநுஸந்த,ாநம் ஸர்வத,ா கர்த்தவ்யமென்றதாய்த்து "வ்ரஜ" என்கிற ஸ்வீகாரத்துக்கு.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

தனிசரமம் முற்றிற்று.

# 18. தனிப்ரணவம்

**லோகாசார்யாய கு₃ரவே க்ருஷ்ணபாத₃ஸ்ய ஸூநவே।**
**ஸம்ஸாரபோ₄கி₃ஸந்த₃ஷ்டஜீவஜீவாதவே நம:॥**

ஸகலவேத₃தாத்பர்யமாய் ஸகலஶாஸ்த்ர ஸங்க்₃ரஹமாய், ஸகலப₂லப்ரத₃மாய், ஸகல மந்த்ரங்களிலும் அதி₄கமான திருவஷ்டாக்ஷரமான திருமந்த்ரத்துக்கு நம் பூர்வாசார்யர்கள், "ஸ்வரூபஞ் சொல்லுகிறதென்றும், ப்ராப்யஞ் சொல்லுகிறதென்றும், இரண்டுபடி வாக்யார்த்த₂ம்" என்று அருளிச்செய்வர்கள்.

இம்மந்த்ரந்தான் "ஓம்" என்றும், "நம:" என்றும்; "நாராயணாய" என்றும் மூன்று பத₃மாயிருக்கும்.

இதில் முதல்பத₃ம் - ப்ரணவமென்று திருநாமமாய், அகாரமென்றும், உகாரமென்றும், மகாரமென்றும் மூன்று பத₃மாயிருக்கும்.

இம்மந்த்ரத்துக்கு நம்பிள்ளை அருளிச்செய்த தாத்பர்யம்:— (1) ஆஶ்ரயியையும், (2) ஆஶ்ரயியினுடைய வைஶத்₃யத்தையும், (3) ஆஶ்ரயத்தையும், (4) ஆஶ்ரயத்தினுடைய வைஶத்₃யத்தையும், (5) ஆஶ்ரயணீயவைப₄வத்தையும், (6) ஆஶ்ரயணப₂லத்தையும் சொல்லுகிறதென்று.

இங்கு ஆஶ்ரயியென்கிறது ஶேஷத்வத்தை; இது ப்ரத₂மாக்ஷரமான அகாரத்திலே சொல்லுகிறது.

ப்₃ரஹ்மவாசியான அகாரத்தை ஶேஷத்வவாசியாக்கினபடியென்னென்னில், இப்பத₃ம் ப்₃ரஹ்மப்ரதா₄நமன்றியிலே ஸ்வரூப ப்ரதா₄நமாகையாலே.

இங்கு ப்₃ரஹ்மவாசகம் வந்தது,— அந்த ஸ்வரூபத்துக்கு அந்தரங்க₃நிரூபகமான ஶேஷத்வம் ப்ரதிஸம்ப₃ந்தி₄ஸாபேக்ஷமாகையாலே.

இதில், விப,க்தியில் ஶேஷத்வஞ்சொல்லுகிறது; பத,ந்தன்னாலே ப்ரதிஸம்ப,ந்தி,யைச் சொல்லுகிறது.

ப்ரதிஸம்ப,ந்தி,வேஷம் இருக்கும்படி என்னென்னில் - ஸகல ஜக,த்காரணமுமாய், ஸகலஜக,த்,ரக்ஷகமுமாய், அகி,லஹேயப்ரத்யநீகமுமாய், ஸமஸ்தகல்யாணகு,ணாத்மகமுமாய், நிருபாதி,கஸர்வஶேஷியுமாய், ஸலக்ஷ்மீகமுமாயிருக்கும் வஸ்துவென்று, இவ்வக்ஷரஸ்வபா,வத்தாலும், தா,துஸ்வபா,வத்தாலும், இந்த தா,த்வர்த்த,ஸ்வபா,வத்தாலும், விப,க்திஸ்வபா,வத்தாலும் இவ்வஸ்துஸ்வபா,வத்தாலும் சொல்லிற்று.

ஸகல ஜக,த்காரணத்வம் இவ்வக்ஷரஸ்வபா,வத்தாலே சொல்லுகிறது. எங்ஙனேயென்னில், இந்த ப்,ரஹ்மவாசகமான அகாரம் ஸகலவாசகங்களுக்கும் காரணமாகையாலே வாச்யமான ப்,ரஹ்மம் ஸகலவாச்யங்களுக்கும் காரணமாகக் கடவதென்று, வாச்யவாசகஸம்ப,ந்த,த்தாலே சொல்லிற்று.

இன்னமும் இவ்விடத்திலே காரணத்வம் அநுஸந்தி,ப்பதொரு வழியுண்டு; எங்ஙனேயென்னில், வாசகங்களோடு வாச்யங்களோடு வாசியற ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தத்துக்கும் இவ்வகாரமாகிற வாசகமே காரணமாகக் கடவதென்றார்கள். ஆனபடி என்னென்னில், "இவ்வகாரமாகிறேன் நான்" என்று அவன்தானே அருளிச்செய்கையாலும், இவ்வாசகம் காரணமென்கிறவிடத்தில் வாச்யங்களுக்குக் காரணம் அன்றென்கிற நிஷேத,விதி,யில்லாமையாலும், இவ்வாசகமே காரணமாகவற்றென்னலாம்; இத்தால் வாசகப்ரபா,வஞ் சொல்லிற்றுய்த்து.

இன்னமும் இவ்விடத்திலே காரணத்வம் அநுஸந்தி,ப்பதொரு வழியுண்டு; எங்ஙனேயென்னில், இது ஈஶ்வரவாசகமாகையாலும், ஈஶ்வரத்வமாகிறது-ஆபத்,ரக்ஷணம்பண்ணுகையாலும், ஆபத்,ரக்ஷணத்தில் ப்ரதா,நம்-அகரணரான

சேதநரை ஸகரணராக்குகையும், அஸம்ஸ்த₂ாநரூபமான அசித்தை ஸம்ஸ்த₂ானரூபமாக்குகையும். இத்தால் காரணத்வஞ் சொல்லிற்றாய்த்து.

ஈஶ்வரனென்றபோதே, ஜக₃த்காரணவஸ்து என்றதாய்த்து என்றார்கள். இத்தால் வாச்யலக்ஷணஞ் சொல்லிற்றாய்த்து. எங்ஙனேயென்னில்: இவ்வாச்யமான ஈஶ்வரத்வம் மோக்ஷப்ரத₃வஸ்துவுக்கொழிய இல்லாமையாலும், மோக்ஷப்ரத₃த்வமுள்ளது ஜக₃த்காரணவஸ்துவுக்கேயாகையாலும், ஈஶ்வரனென்றபோதே ஸகலஜக₃த்காரணமென்றார்கள்.

இப்படி ப்ரமாணோபபத்திகளாலே, இவ்வகாரத்தில் சொன்ன காரணதவத்தை, நம் ஆசார்யர்கள் ஸ்தூ₂ல ஸூக்ஷ்ம ரூபேண பல வகையாலும் அநுஸந்தி₄த்து உபதே₃ஶித்துப் போருவர்கள். அவைகளெவையென்னில்; இக்காரணத்வந்தான்—

(1) ஔபாதி₄க காரணத்வமென்றும்,
(2) நிருபாதி₄க காரணத்வமென்றும்,
(3) ஸத்₃வாரகௌபாதி₄க காரணத்வமென்றும்,
(4) அத்₃வாரகௌபாதி₄க காரணத்வமென்றும்.
(5) ஸத்₃வாரக நிருபாதி₄க காரணத்வமென்றும்,
(6) அத்₃வாரக நிருபாதி₄க காரணத்வமென்றும் ஆறு படியாயிருக்கும்.

(1) இதில் ஔபாதி₄க காரணத்வமாவது:—பூர்வபூர்வ யுக₃ங்களிலே சேதநர் ஶரீரங்களாலே பண்ணின புண்ய பாபங்கள் ஹேதுவாக ஸ்ருஷ்டிக்கை.

(2) நிருபாதி₄க காரணத்வமாவது:— அநாதி₃யாக அசித₃ந்தர்க₃தராய், அஶரீரிகளாய்த் திரிகிறசேதநர்க்கு நிரவதி₄கக்ருபையாலே ஶரீராதி₃களைக் கொடுக்கை.

(3) ஸத்₃வாரகௌபாதி₄க காரணத்வமாவது:— புண்ய பாபங்களை நிறுத்து, அவற்றின் வழியே தே₃வாதி₃ சதுர்வித₄ ஶரீரங்களையும் ஸ்ருஷ்டிக்கை,

(4) அத்₃வாரகௌபாதி₄க காரணத்வமாவது:— புண்ய லேஶமுடையவர்களுக்கும், ஸஹஜகாருண்யத் தாலே விலக்ஷண ஸ்ருஷ்டியைப்பண்ணுகையும், பாபமேயானவர்களையும் ஸத்தாஹானி பிறக்குமள வில், ஸம்ப₃ந்த₄மே பற்றாசாக அங்கீ₃கரித்து ஆபி₃ முக்₂ய ஜநகமான ஸ்ருஷ்டியைப்பண்ணுகையும்.

(5) ஸத்₃வாரகநிருபாதி₄க காரணத்வமாவது:—இப்படி ஸ்ருஷ்டிப்பதாகப்புரிந்த ஈஶ்வரன், ப்₃ரஹ்மாதி₃ களைக் காரணமாக்கிக்கொண்டு ஸ்ருஷ்டிக்கை.

(6) அத்₃வாரகநிருபாதி₄க காரணத்வமாவது: —காருண் யாதி₃களே காரணமாகத் தானே ஸ்ருஷ்டிக்கை.

இவ்வாகாரத்தால் அப்படி ஜக₃த்காரணத்வஞ் சொன்ன போதே இவனுடைய ஸர்வஸ்மாத்பரத்வமும், அத ஏவ அகி₂லஹேயப்ரத்யநீகத்வமும் அநுஸந்தே₄யம்.

உடையவர்க்குத் திருக்கோட்டியூர்நம்பி, காரணத்வம் அருளிச்செய்யச்செய்தே, "பெற்றதாயை அறியாமல் பிறந்து வளருவாரைப்போலேயிறே—காரணத்வம் காணமல் கண்டு அநுஸந்தி₄க்கும் த₃ர்ஶநார்த்த₂ங்களெல்லாம்" என்றருளிச்செய்தாராம்.

பட்டர் நஞ்சீயர்க்கு இவ்வர்த்த₂ம் அருளிச்செய்யச் செய்தே, "ப₄க₃வத்காரணத்வ நிரூபணம் பண்ணுமவனுக்கு, மோக்ஷத்திலே யொழிய அந்வயமில்லை" என்றருளிச் செய்தார்.

நம்பிள்ளை, பின்பழகிய பெருமாள் ஜீயர் மட₂த்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே. "ஈஶ்வரபரத்வத்தை அநுஸந் தி₄க்கையாவது - ஜக₃த்காரணத்வத்தை அநுஸந்தி₄க்கை" என்று அருளிச்செய்தாராம்.

ஆச்சான்பிள்ளை, நடுவிற்றிருவீதிப்பிள்ளைப₄ட்டரை "ப₄க₃வத்₃கு₃ணங்களெல்லாம் சேர அநுஸந்தி₄க்கலாம் துறையேது" என்று கேட்க, "ஜக₃த்காரணத்வத்தை அநு

ஸந்தி₄க்கவே, எல்லா கு₃ணங்களையும் அநுஸந்தி₄த்ததாம்" என்று அருளிச்செய்தாராம்.

பிள்ளை எங்களாழ்வான், நடாதூரம்மாளுக்கு இவ்வர்த்த₂ம் அருளிச்செய்யச்செய்தே, "ஜக₃த்காரண நிரூபணம் பண்ணினவனுக்கு நிஷித்₃த₄ாநுஷ்டா₂நத்தில் அந்வய மில்லை" என்று அருளிச்செய்தார்.

ஆகையால் நம் பூர்வாசார்யர்கள் ஜக₃த்காரண நிரூபணமே நிரந்தரம் பண்ணுகிற்பர்கள்,

அநந்தரம், ஜக₃த்காரணவஸ்துவினுடைய ரக்ஷகத்வஞ் சொல்லுகிறபடியென்னென்னில்: இது "அவ-ரக்ஷணே" என்கிற தா₄துவையுடைத்தாகையால், ஸாப்₃த₃மாகச் சொல்லிற்று.

இன்னமும் இப்பத₃த்திலே ரக்ஷகத்வம் அநுஸந்தி₄ப்பதொரு ப்ரகாரமுண்டு. எங்ஙனேயென்னில், ஜக₃த்காரணத்வஞ் சொன்னபோதே ரக்ஷகத்வம் சொன்னதாகலாம்; ஆகிறபடியென்னென்னில்: "குடல் துடக்குடையவர்களை ரக்ஷிக்கை கு₃ணப்ரயுக்தம்" என்கிற ந்யாயத்தாலே.

ஜக₃த்தில் குடல்துடக்குடையவர்களெல்லாம் ரக்ஷிக்கிறார்களோ? என்னில்; ஜக₃த்திலுள்ளார் அந்யோந்யம் அஸ்நேஹிகளுமாய், அஸ்வதந்த்ரருமாய், அப்ராப்தருமாகையாலே ரக்ஷிக்கமாட்டார்கள். இங்கு ஜக₃த்காரணபூ₄தன் ஸ்நேஹியுமாய், ஸ்வதந்த்ரனுமாய், காருணிகனுமாய், ப்ராப்தனுமாகையாலே "இவனையொழிய ரக்ஷகரில்லை" என்கிற ந்யாயத்துக்குக் குறையில்லை. நம்பிள்ளை இவ்வர்த்த₂மருளிச் செய்யச்செய்தே *"அயீற்றுப்பரவிக்குப் பொகடப்போம்" என்றருளிச் செய்தாரிறே.

* "அகாரத்தின் முடிந்த பொருளான ரக்ஷணத்தின் பொருட்டு எங்கும் பரவியிருக்கும் எம்பெருமானுக்கு உள்ள நெறிகாட்டி நீக்கும் தன்மை—சேதனன் தான் ஏறிட்டுக்கொண்டிருந்த ஸ்வரக்ஷணத்தை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்தால் போய்விடும்" என்று பொருள்.

இன்னமும் இவ்விடத்திலே ரக்ஷகத்வம் அநுஸந்தி₄ப்ப தொரு வழியுண்டு. எங்ஙனேயென்னில்; இப்பத₃ம் விஷ்ணு வாசகமாகையாலும், விஷ்ணுவாகிறான் - வ்யாபநஶீலனாகை யாலும், வ்யாப்தியாவது - ஸ்வவ்யதிரிக்த ஸகலத்தினுடை யவும் ஸத்தாஸம்ரக்ஷணங்களாகையாலும், ரக்ஷணப்ர காரத்தில் ப்ரதா₄நரக்ஷணம் இதுவேயாகையாலும் இவ்வழி யாலே வரும் ரக்ஷகத்வத்துக்கும் குறையில்லை என்றார்கள்.

இன்னமும் இவ்விடத்திலே ரக்ஷகத்வம் அநுஸந்தி₄ப்ப தொரு வழியுண்டு. எங்ஙனேயென்னில்; இப்பத₃ம் ஈஶ்வர வாசகமாகையாலும், ஸமஸ்த ஜக₃த்துக்கும் தா₄ரகனுமாய், நியந்தாவுமாயிருக்கையாலும், ஈஶ்வரனென்றபோதே ரக்ஷ கத்வத்துக்குக் குறையில்லை என்பர்கள் நம்பூர்வாசார்யர்கள்,

இந்த ரக்ஷகத்வந்தான், (I) ஔபாதி₄க ரக்ஷகத்வ மென்றும், (II) நிருபாதி₄க ரக்ஷகத்வமென்றும், த்₃விவித₄ம்.

[I] இதில் ஔபாதி₄க ரக்ஷகத்வந்தான்:—(1) ஸத்₃வார கௌபாதி₄க ரக்ஷகத்வமென்றும, (2) ஸத்₃வாரகௌபாதி₄க ரக்ஷகத்வ ப்ரகாரமென்றும், (3) அத்₃வாரகௌபாதி₄க ரக்ஷகத்வமென்றும், (4) அத்₃வாரகௌபாதி₄க ரக்ஷகத்வ ப்ரகாரமென்றும்,

[II] நிருபாதி₄க ரக்ஷகத்வந்தான்:— (1) ஸத்₃வாரக நிருபாதி₄க ரக்ஷகத்வமென்றும், (2) ஸத்₃வாரக நிருபாதி₄க ரக்ஷகத்வ ப்ரகாரமென்றும், (3) அத்₃வாரக நிருபாதி₄க ரக்ஷகத்வமென்றும், (4) அத்₃வாரக நிருபாதி₄க ரக்ஷகத்வ ப்ரகாரமென்றும் பலவகையாயிருக்கும்.

I. இதில் ஔபாதி₄க ரக்ஷகத்வமாவது—எதிர்த்தலையில் அபேக்ஷை கண்டு ரக்ஷிக்கை.

II. நிருபாதி₄க ரக்ஷகத்வமாவது—அபேக்ஷா நிரபேக்ஷ மாக ரக்ஷிக்கை.

[I] (1) ஸத்₃வாரகௌபாதி₄க ரக்ஷகத்வமாவது—ஏதேனு மபேக்ஷிக்க ஏதேனும் ப₂லங்கொடுக்கையன்றிக்கே,

அபேக்ஷா ப்ரகாரங்களுக்குத் தகுதியாகப் ப₄லங் கொடுக்கை.

(2) ஸத்₃வாரகௌபாதி₄கரக்ஷகத்வ ப்ரகாரமாவது— தன்னை அபேக்ஷித்தவர்களுக்கேயன்றிக்கே, தன் ஶரீரங்களான ப்₃ரஹ்மருத்₃ராதி₃களை அபேக்ஷித்த வர்களுக்கும் அவர்களுக்குள்ளீடாய் நின்று அவ்வோ அபேக்ஷித ப₄லங்களைக் கொடுக்கை.

(3) அத்₃வாரகௌபாதி₄க ரக்ஷகத்வமாவது— எதிர்த் தலையில் ஆபி₄முக்₂யம் பற்றாசாக, அபூர்ணேபா யர்க்கும் பூர்ணப₄லங்களைக் கொடுக்கை.

(4) அத்₃வாரகௌபாதி₄க ரக்ஷகத்வ ப்ரகாரமாவது— தன்னளவில் ஆபி₄முக்₂யமின்றிக்கே கீழ்ச் சொன்ன தே₃வதைகள் பக்கலிலே ஆபி₄முக்₂யம் பிறக்கிலும், அவர்களுக்குள்ளீடாய் நின்று அவர் களபேக்ஷிதங்களைக் கொடுக்கை.

[II] (1) ஸத்₃வாரக நிருபாதி₄க ரக்ஷகத்வமாவது— ப₂ல ஸாபேக்ஷையுடையராய் ப₂லப்ரத₃விஷயமறியாத வர்களுக்கும் அத்₃வேஷமே பற்றாசாகத் தானே அறிந்து ப₂லப்ரதா₃நம் பண்ணுகை.

(2) ஸத்₃வாரக நிருபாதி₄கரக்ஷகத்வ ப்ரகாரமாவது— து₃ஷ்கரங்களுமாய் ஸ்வரூபவிருத்₃த₄ங்களுமான உபாயாந்தரங்களிலே மண்டினவர்களுக்கும் உபாயபூர்த்தியைப் பிறப்பித்து மோக்ஷ ப்ரதா₃நம் பண்ணுகை.

(3) அத்₃வாரக நிருபாதி₄க ரக்ஷகத்வமாவது—ப₂லா பேக்ஷையில்லாதவர்களுக்கும் ஸம்ப₃ந்த₄மே பற்று சாக ருசியை விளைத்துப் ப₂லத்தைக்கொடுக்கை,

(4) அத்₃வாரகநிருபாதி₄க ரக்ஷகத்வ ப்ரகாரமாவது— தனக்கு நிலைநின்ற வடிவான மோக்ஷப்ரதா₃நம்

பண்ணுமிடத்தில், சேதநக₃த வ்யாபார ஸாபேக்ஷனாயிருக்கையன்றிக்கே, சேதந விஷய ஸாபேக்ஷனாய்க்கொண்டு மோக்ஷம் கொடுக்கை.

இத்தால், சேதநக₃தமான உபாயஸ்வீகாரமும உபகாரஸ்ம்ருதியும், சைதந்யக்ருத்யம் என்றதாய்த்து.

இத்தால் நிருபாதி₄க ரக்ஷகத்வத்துக்கு லக்ஷணஞ் சொல்லிற்றுய்த்து. இந்த லக்ஷணமாகிறது - இப்படி ரக்ஷியாதபோது தன் ஸத்தையில்லையாம்படியாயிருக்கையிறே.

ஆக, இவ்வகாரம் விஷ்ணுவர்சகமாகையாலே, ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தத்துக்கும் ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் ஸர்வப்ரகாரத்தாலும் ஸர்வரக்ஷகனென்று நிர்ணயித்ததாய்த்து.

இவ்விடத்தில் இந்த ரக்ஷகத்வப்ரயுக்தங்களான (1) ஸர்வஜ்ஞத்வ, (2) ஸர்வஶக்தித்வ, (3) பரமகாருணிகத்வ, (4) பரமோதா₃ரத்வ, (5) ஆஶ்ரிதவத்ஸலத்வ, (6) அஶரண்யஶரண்யத்வ, (7) அநாலோசித விஶேஷாஶேஷ லோகஶரண்யத்வ, (8) நிருபாதி₄க ஸர்வஸ்வாமித்வ, (9) ஶ்ரிய:பதித்வ, (10) நாராயணத்வங்களாகிற ஸமஸ்த கல்யாண கு₃ணங்களும் அநுஸந்தே₄யம்.

என்செய்யவென்னில்;

(1) ரக்ஷிக்கும்போது ஸர்வத்தையும் அறியவேண்டுகையாலே ஸர்வஜ்ஞத்வம் சொல்லிற்று.

(2) அஶக்தனுக்கு ரக்ஷகத்வமில்லாமையாலே ஸர்வஶக்தித்வம் சொல்லிற்று.

(3) அகாருணிகனுக்கு ரக்ஷகத்வமில்லாமையாலே பரமகாருணிகத்வம் சொல்லிற்று.

(4) லுப்₃த₄னுக்கு ரக்ஷகத்வமில்லாமையாலே பரமோதா₃ரத்வம் சொல்லிற்று.

(5) தே₃ஶாஸஹனுக்கு ரக்ஷகத்வமில்லாமையாலே ஆஶ்ரிதவாத்ஸல்யம் சொல்லிற்று.

(6) தன்னையொழிய ரக்ஷிப்பாரில்லாமையாலே அஶரண்ய ஶரண்யத்வம் சொல்லிற்று.

(7) சிலரை ரக்ஷிக்கிறோம், சிலரை ரக்ஷியோம் என்னவொண்ணாமையால், அகாலோசிதவிஶேஷாஶேஷலோக ஶரண்யத்வம் சொல்லிற்று.

(8) ரக்ஷிக்கை தன் பேறாகையாலே நிருபாதி₄கஸர்வஸ்வாமித்வம் சொல்லிற்று.

(9) ரக்ஷிக்கும்போது சேரவிடுவார் வேண்டுகையாலே, ஶ்ரிய:பதித்வம் சொல்லிற்று.

(10) ரக்ஷியாதபோது தானில்லாமையாலே, நாராயணத்வம் சொல்லிற்று.

இப்படி ஸர்வரக்ஷகன் ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகனென்றபோதே, காரணத்வோபயுக்தமான அகி₂லஹேய ப்ரத்யநீகத்வம் சொல்லிற்று.

அகி₂லஹேயப்ரத்யநீகத்வமாவது- தன்னையொழிய ஸகல சேதநாசேதநங்களோடு தானிருக்கச்செய்தே, சிறைக் கூடத்திலே சிறையனோடே கூடப் படையிலானும் வர்த்திக்கச் செய்தேயும், சிறையில் து₃:க்க₂ம் படையிலானுக்கு வாராதாப்போலே, ஶரீரத்தில் ஆத்மாவோடே ஈஶ்வரனும் வர்த்தியாநிற்கச்செய்தேயும் ஆத்மாவினுடைய து₃:க்க₂ங்கள் ஈஶ்வரனுக்கு வாராதிருக்கை.

ஆக, காரணத்வ ரக்ஷகத்வோபயுக்தங்களாகிற உப₄ய லிங்க₃த்வமும் சொல்லிற்று.

ஆநந்தரம், இப்பத₃ம் சதுர்த்₂யந்தமாகையாலே, நிருபாதி₄கஸர்வப்ரகார ஸர்வஶேஷித்வமும் சொல்லிற்று.

இப்பத₃த்திலே லக்ஷ்மீஸம்ப₃ந்த₄மும் அநுஸந்தே₄யம். எங்ஙனே? என்னில்:

(1) ஸகல ப்ரமாணங்களும், லக்ஷ்மீ-த,ர்மம், ஈஶ்வரன்-த,ர்மி. என்று சொல்லுகையாலும்.

(2) கீழ்ச்சொன்ன காரணத்வ ரக்ஷகத்வங்களும் லக்ஷ்மீ ப்ரேரிதங்களாகையாலும்.

(3) இவனுடைய ஸ்வரூப நிரூபகங்களான ஸமஸ்த கல்யாண கு,ணங்களிலும் ப்ரத,ாநம் - லக்ஷ்மீ ஸ்வரூபமாகையாலும்,

(4) இப்பத,விவரணமான நாராயணபத,த்தில் நார பத,த்திலே லக்ஷ்மீஸ்வரூபம் வ்யக்தமாகச் சொல்லுகையாலும்,

(5) மேற்சொல்லுகிற ஶேஷத்வத்துக்கு ப்ரதிஸம்ப,ந்தி, ஒரு மிது,நமாக வேண்டுகையாலும்,

(6) இவனுக்கு தே,வதாந்தரவ்யாவ்ருத்தி லக்ஷணங்களிலே ப்ரத,ாநம்-லக்ஷ்மீப,ர்த்ருத்வமாகையாலே இவனுடைய ஸ்வரூபரூபகு,ண விபூ,திகளெல்லாமிவளோட்டை ஸம்ப,ந்த,த்தாலே நிறம் பெறுகையாலும்,

ஆக, இப்படி இவளுடைய ஸ்வரூபம், ப்ருத,க்ஸ்தி,தி ப்ருத,ங்நிர்தே,ஶாநர்ஹமாயல்லதிராமையால், இவ்விடத்திலே பெரியபிராட்டியாருடைய ஸ்வரூபம் ஆர்த்த,மாக அநுஸந்தி,க்க ப்ராப்தமாயிருக்கக்கடவது என்று பிள்ளை அருளிச்செய்வர்.

இன்னமும் சில ஆசார்யர்கள் இங்ஙனே அருளிச்செய்வர்கள். எங்ஙனேயென்னில்; "அபத்நீகனுக்கு யாக,த்திலே அந்வயமில்லாதாப்போலேயும், ப்ரத,ாநமஹிஷீ வ்யதிரேகேண ராஜாவுக்கு அபி,ஷேகமில்லாதாப்போலேயும், இவனுடைய ரக்ஷகத்வஶேஷித்வங்கள் லக்ஷ்மீவ்யதிரேகேண இல்லை" என்று.

நஞ்சீயர், இவ்வர்த்த,ம் அருளிச்செய்யச்செய்தே, "பிராட்டிக்கு ஸத்தாஸித்,தி, எம்பெருமானாலே; எம்பெரு

மானுக்கு நிரூபகஸித்₃தி₄ பிராட்டியாலே” என்றிறே அருளிச்செய்தது.

ஆக இப்பத₃த்தில், ஶேஷத்வப்ரதிஸம்ப₃ந்தி₄யான ஶேஷி, ஸகல ஜக₃த்காரணபூ₄தனுய், ஸர்வஸ்மாத்பரனுய், அத ஏவ அகி₂லஹேயப்ரத்யநீகனுய், ஸர்வவிஷயஸர்வ ப்ரகார ரக்ஷகனுய், ஸமஸ்தகல்யாணகு₃ணுத்மகனுய், நிரு பாதி₄க ஸர்வப்ரகார ஸர்வஶேஷியாய், ஶ்ரிய:பதியாயிருக்கு மென்றதாய்த்து.

இவ்வகாரத்தில் மிது₂நஶேஷத்வஞ்சொல்லுகிற சதுர்த்தீ₂ விப₄க்தியை நிரூபித்தவிடத்தில், லுப்தமாய்க்கிடந்தது. லுப்தமென்றது ஏறிக்கழிந்தது என்றபடி. ஆனுல் கழிந்து போன விப₄க்தியை, சதுர்த்தீ₂விப₄க்தியென்றறிந்தபடி என் னென்னில்; இதினுடைய விவரணமான நாராயணபத₃த் திலே சதுர்த்தி₂ ஏறிக்கிடக்கையாலே. அதினுடைய ஸங்க்₃ரஹமான இதிலும் சதுர்த்தி₂யாகக்கடவது.

இச்சதுர்த்₂யர்த்த₂மான ஶேஷத்வந்தானிருக்கும்படி என்னென்னில்,

சிலர் க்₃ருஹ க்ஷேத்ர க₃ர்ப்ப₄தா₃ஸ புத்ராதி₃வத் ஶேஷமென்ருர்கள்.

சிலர் பா₄ர்யாவத் ஶேஷமென்ருர்கள்.

சிலர் ஶரீரவத் ஶேஷமென்ருர்கள்.

இவையித்தனையும் பார்த்தவிடத்தில், இது தாத₃ர்த்₂ய சதுர்த்தி₂யாகையாலும், தாத₃ர்த்₂யத்துக்கு அர்த்த₂ம் ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தத்துக்கும் ப்ருத₂க்ஸ்தி₂தி ப்ருத₂ங் நிர்தே₃ஶத்துக்கு யோக்₃யதையில்லை என்கையாலும், இங்கு சொன்ன க்₃ருஹ க்ஷேத்ர க₃ர்ப்ப₄தா₃ஸ புத்ர பா₄ர்யா ஶரீரங்களுக்கு ப்ருத₂க்ஸ்தி₂தி ப்ருத₂ங்நிர்தே₃ஶத்

துக்கு யோக்₃யதையுண்டாகையாலும் இவ்வோ ஸாமாந்ய மான ஶேஷத்வம் தாத₃ர்த்₂யத்துக்கு அர்த்த₂மாக மாட்டாது.

இனி இந்தத் தாத₃ர்த்₂ய சதுர்த்தி₂க்கு அர்த்த₂ம்-த₃ர்மி விஷயத₃ர்மவத் ஶேஷத்வமேயாகக்கடவது.

இத்தால், அகாரவாச்யமான பரப்₃ரஹ்மம், ஸூக்ஷ்ம சித₃சித்₃விஶிஷ்டமானபோது காரணமாயும், ஸ்தூ₂ல சித₃சித்₃விஶிஷ்டமானபோது கார்யமாயுமிருக்குமென்ற தாய்த்து.

இவ்வர்த்த₂ம் இவ்விடத்தில் சொல்லுகிறபடி என் னென்னில், ஸ்வவ்யதிரிக்தஸகலத்திலுடைய த₃ர்மத்வமும் இங்கு சொல்லுகையாலே.

ஆக, சதுர்த்தீ₂விப₄க்தியால் ஶேஷத்வஸித்₃தி₄யும், ஶேஷத்வலாப₄மும் சொல்லிற்றாய்த்து.

இங்கு ஶேஷத்வஸித்₃தி₄யாகிறது - பராநர்ஹதையும், ஸ்வாநர்ஹதையும். ஶேஷத்வலாப₄மாகிறது - ப₄க₃வத்₃ வ்யதிரிக்த ஸகலத்துக்கும் ஶேஷத்வமொழிய ஸத்தை யில்லையாயிருக்கை.

ஆக அகாரார்த்த₂ம் தீர்ந்தது.

அநந்தரம், அவ்யயமாய் அவதா₄ரணார்த்த₂மான உகார மும், கீழ் தாத₃ர்த்₂ய ஸித்₃த₄மான ஶேஷத்வலாப₄ம் ஸ்வ லாப₄மோ, பரலாப₄மோவென்கிற ஶங்கையிலே, ஸ்வ லாப₄மன்று, பரலாப₄ம் என்கிறது.

இவ்வவதா₄ரணார்த்த₂த்துக்குச் சொல்லும் ப்ரமாணங்க ளெல்லாம் அவனுக்கே என்றிறே கிடப்பது.

இவ்விடத்திலே ததீ₃யஶேஷத்வமும் அநுஸந்தி₄த்துப் போருவாருமுண்டென்றருளிச்செய்வார்கள். எங்ஙனேயென்

னில்; இப்பத₃ம் (1) ஶேஷத்வவைஶத்₃யப்ரதிபாத₃க மாகையாலும், (2) இஶ்ஶேஷத்வத்துக்கு வைஶத்₃யம் ததீ₃யபர்யந்தமேயாயிருக்கையாலும், (3) ததீ₃யஶேஷத்வ விதா₄நம் பண்ணுமிடத்தில் இவ்வவதா₄ரணார்த்த₂ நிஷ்டன் பக்கல் கொள்ளும் ஶேஷத்வமே ஸ்வரூப ப்ரயுக்தமாயிருக்கையாலும், (4) மேல்ப்ரதிபாதி₃க்கப்படுகிற வஸ்து ஶுத்₃த₄ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயமாகவேண்டுகையாலும், (5) இப்பத₃ந்தான் ததீ₃யஶேஷத்வப்ரதிபாத₃கமான மத்₃யமபத₃ஸங்க்₃ரஹமாகையாலும் இவ்விடத்தில் ததீ₃ய ஶேஷத்வஸூசகத்வம் சொல்லுகையில் சோத்₃யமில்லை.

"இப்பத₃ம் - ஸம்ப₃ந்த₄யாதா₂த்ம்யஜ்ஞாந ப்ரதிபாத₃கம்" என்று அருளிச்செய்வர்கள். இப்பத₃த்தில், ப்ரத₂ம சரமங்களிலே ஜீவபரர்களைச் சொல்லி, நடுவே அவதா₄ரணங்கிடக்கையாலே, இது ஸம்ப₃ந்த₄வாசியாகக்கடவது.

ஆக, அவதா₄ரணார்த்த₂மான உகாரத்தாலே-ஶுத்₃த₄ ஶேஷத்வ லக்ஷணமும், ஶேஷத்வபூர்த்தியும், ஶேஷத்வ ஜ்ஞாநயாதா₂த்ம்யமும் சொல்லிற்றுய்த்து.

அன்றியிலே, சில ஆசார்யர்கள், இவ்வர்த்த₂மித்தனையும் — தாத₃ர்த்₂ய ஸித்₃த₄மேயாய், அவதா₄ரணத்தை ஆர்த்த₂மாக்கி. இவ்வுகாரம் லக்ஷ்மீவாசகமென்றுர்கள்,

ஆக, உகாரார்த்த₂ம் தீர்ந்தது.

அநந்தரம், மகாரம் தாத₃ர்த்₂யஸித்₃த₄முமாய் அவதா₄ரணஸித்₃த₄முமான ஶேஷத்வத்துக்கு, ஆஶ்ரயமாய், ப்ரக்ருதே:பரனாய், ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபமான ஆத்மாவைச் சொல்லுகிறது.

இம்மகாரத்தில், ப்ரக்ருதே:பரத்வமும் ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபத்வமும் சொல்லுகிறபடி என்னென்னில்; இம்மகாரத்தில் சொல்லுகிற ப்ரமாணங்களிலே ப்ரக்ருதே:பரத்வம் சொல்லிற்று. இதில் தா₄துவாலே - ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூ

பத்வம் சொல்லிற்று. இந்த தா₃து - "மந-ஜ்ஞானே" என்று ஜ்ஞானமாத்ரப்ரதிபாத₃கமாயிருக்க, ஜ்ஞாதாவைச் சொல்லு கிறபடி என்னென்னில், 'கு₃ணத்தைச் சொன்னபோதே கு₃ணியையும் சொல்லிற்றும்' என்று வேதா₃ந்தஸூத்ரத் திலே நிர்ணயிக்கையாலே.

கீழ்ச்சொன்ன ஶேஷத்வம் - சேதநாசேதந ஸாதா₄ரண மாயிருக்க, இங்கு சேதநைகாந்தமான மகாரத்தை ப்ரயோகி₃ப்பானென்னென்னில்;

(1) ஶேஷத்வஜ்ஞானம் பிறப்பது சேதநனுக்கேயாகை யாலும்,

(2) ஶேஷத்வஜ்ஞானப்ரதிப₃ந்த₄கமான ஸ்வாஹங்கார மமகார நிவ்ருத்தியுள்ளதும் சேதநனுக்கேயாகை யாலும்,

(3) ஶேஷத்வஜ்ஞானகார்யாந்வயமுள்ளதும் சேதந னுக்கேயாகையாலும்,

(4) தத்ஸாத₄ந ஸ்வரூபஸமர்ப்பண கர்த்ருத்வமுள்ளது சேதநனுக்கேயாகையாலும்,

(5) தத₃நந்தரத்தில் ஸ்வரூபாநுஸந்தா₄னத்தாலே லஜ்ஜாப₄யங்களுண்டாவதும் சேதநனுக்கேயாகை யாலும்,

(6) அகாரத்தில் சொன்ன ஸ்வாமித்வத்துக்கு ப்ரதி ஸம்ப₃ந்தி₄யான தா₃ஸத்வமுள்ளதும் சேதநனுக் கேயாகையாலும்,

(7) (தத₃நந்தரத்தில்) இப்பத₃ந்தான் ப்ரணவத்துக்கு த்ருதீயாக்ஷரமாக வேண்டுகையாலும்,

ஆக, இப்படி ஶேஷத்வாஶ்ரய ப்ரதிபாத₃க பத₃ம் சேதநைகாந்தமான மகாரமாகவேணும்.

ஆனால் இங்கு அசிச்சேஷத்வம் சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்,

இவ்வாத்மாவைச் சொல்லுகிறபோது, ப்ரக்ருதே:பரன் என்று அசித்தைச் சொல்லி அநந்தரம் சொல்லுகையால் இப்பதங்கள்போலே சொன்னவிடத்திலே அசித்தையும் சொல்லிற்றாகக்கடவது.

ஆஶ்ரயியாய் ஆநந்தத்தை முந்துறச் சொல்லுகிற ந்யாயத்தாலும், அசிச்சேஷத்வமும் இவ்விடத்திலே சொல்லிற்றாகக்கடவது.

இத்தால், அநந்யார்ஹதாஶ்ரயம் ஜ்ஞாநஸ்வரூப ஜ்ஞாநகுணகனான ஆத்மா என்றதாய்த்து; ஆஶ்ரயியான ஶேஷத்வத்தை முதல் சொல்லி ஆஶ்ரயமான ஜ்ஞாநாநந்தத்தைப் பின்பு சொல்லுவானென்னென்னில்,

(1) ஆஶ்ரயியான ஶேஷத்வத்தையொழிய ஜ்ஞாநாநந்தம் அஸந்நேவவாய்க்கிடக்கையாலும்,

(2) புஷ்பத்துக்குப் பரிமளத்தாலே ஶ்லாக்யதையானாப்போலே இவ்வாத்மாவுக்கும் ஔஜ்ஜ்வல்யம் ஶேஷத்வத்தாலேயாகையாலும்,

(3) நெருப்புப்பட்ட அகத்திலே அகப்பட்டு நின்றவனை நீரைச் சொரிந்துகொண்டு புறப்படப்படுத்துமாபோலே, அஹங்காரமாகிற அழலிலே அகப்பட்டு உருவழிந்து கிடக்கிற ஆத்மாவை அடியானென்றே உணர்த்திக்கொண்டு (இழி) அறியவேண்டுகையாலும்,

(4) தன்னுண்ணிப்பகைபோலே அத்தராயமான ஆத்மாநுபவமாத்ரமான படுகுழியிலே விழாமைக்காகவும்.

ஆக, இப்படி ஆஶ்ரயியான ஶேஷத்வத்தையொழிய, ஆஶ்ரயமான ஜ்ஞாநஸ்வரூபனும் ஜ்ஞாநகுணகனுமான ஆத்மாவுக்கு ஸத்தையில்லாமையாலே, இவ்வந்தரங்கமான ஶேஷத்வத்தையே முற்படச் சொல்லிற்று.

இச்ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மாவினுடைய ஸ்வரூபம்—(1) ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶமுமாய், (2) ஆநந்தாத்மகமுமாய், (3) ஸங்கோசவிகாஸாயோக்யமுமாய், (4) அணுவாயிருக்குமென்னுமிடமும்; ஸ்வபாவம்—(1) பரஸ்மைஸ்வயம்ப்ரகாஶமுமாய், (2) ஆநந்தஜநகமுமாய், (3) ஸங்கோசவிகாஸயோக்யமுமாய், (4) விபுவாயிருக்குமென்னுமிடமும், இதினுடைய உபப்ருமஹணங்களிலே கண்டுகொள்வது.

இக்குணங்கள், மற்றும் இவ்வாத்மாவுக்குச் சொல்லும் குணங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம்.

இதில் ஏகவசநம்—ஜாத்யேகவசநமாய், த்ரிவிதாத்மவர்க்கத்தையும் சொல்லுகிறது.

ஆக, இம்மகாரத்தால்—ப்ரக்ருதே:பரனும், ஶேஷத்வாஶ்ரயமாய், ஜ்ஞாநாநந்தஸ்வரூபனும், ஜ்ஞாநகுணகனுமான ஆத்மாவைச் சொல்லுகிறது.

a "மூன்றெழுத்ததனை" இத்யாதிப்படியே - அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்தில், ப்ரதமசரமங்களிலே ஜீவபரர்களைச்சொல்லி நடுவே அவதாரணத்தைச் சொல்லுகையாலே ஜீவபரர்களிருவரையும் ஏகதத்வம் என்னலாயிருக்க, பிரியச்சொன்னபடியென்னென்னில்; ஏகாக்ஷரமான ப்ரணவத்தை அக்ஷரத்ரயாத்மகமாக ப்ரமாணங்களில் பிரித்தாற்போலே, ஏகதத்வம்போலேயிருக்கிற இவர்களையும் ப்ரமாணங்களாலே பிரிக்கக்கடவதித்தனை.

a பெரியாழ்திரு 4-7-10.

இப்படி, ஸ்வஸ்வரூபத்தை ப₄க₃வத்₃ப்ருத₂க்ஸித்₃த₄ விஶேஷணமென்றிருக்கையே ஸ்வரூபப்ராப்தம்; இந்த ஜ்ஞானமே மோக்ஷ விஷய யோக்₃யம்.

இத்தால் — ஸ்வரூபவிஷயாந்யதா₂ப்ரதிபத்தி நிவ்ருத்தியைச் சொன்னபடி.

இத்தால் — ஆத்மஸமர்ப்பணம் சொல்லிற்றுய்த்து; ராஜப₄ண்டாரத்துள்ளறையிலே களவுகொண்டு உபகரிப்பாரைப்போலேயிறே.

இத்தால் பழைய சௌர்யமழகியதென்னும்படியிறே ஆத்மஸமர்ப்பண ப்ரகாரமிருக்கும்படி.

ஆனால் ஸமர்ப்பணம் கூடும்படி என்னென்னில்; இருக்கிற ஸம்ஸாரத்தில் கொடுமையாலும், பேற்றில் த்வரையாலும், ஸமர்ப்பணம்பண்ணியல்லது நில்லாதிறே சைதந்யஸ்வப₄ாவம்.

ஆனால் ஸ்வரூபவிரோத₄மான ஸமர்ப்பணம் பண்ணினவன் ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தால் ப்ராயஶ்சித்தம் பண்ண வேண்டாவோ? என்னில்; வேண்டா, எங்ஙனே யென்னில்; அந்யதா₂ப்ரதிபத்தியான ஆத்மாபஹாரம் பண்ணினவன் ஸர்வபாபமும் பண்ணி, தன்னையும் அழித்துக்கொண்டாற் போலே யதா₂வத்ப்ரதிபத்தியான ஆத்மஸமர்ப்பணம் பண்ணினவனுக்கு ஸர்வப்ராயஶ்சித்தமும் கூடி ஸர்வ ப்ராயஶ்சித்தமும் பண்ணினனாகக்கடவன்.

அன்றியே, ஸ்வர்ணாபஹாரம் பண்ணினவன் அபஹரித்த த₄நத்தைக்கொடுக்கத் தானுண்டாகையாலே ப்ராயஶ்சித்தம் பண்ணலாம். இங்கு கொடுத்தது தன்னையாகையாலே ப்ராயஶ்சித்தம் பண்ணுகைக்குத் தானில்லாமையால், ஸர்வப்ராயஶ்சித்தமும், ஸ்வரூபலாப₄மும், ஆத்மஸமர்ப்பணமென்னுமிடமும் ப்ரமாணாந்தரங்களில் கண்டு கொள்வது.

ஸ்வரூபலாப₄மே புருஷார்த்த₂மாகையாலே இவ்விடத்திலே புருஷார்த்த₂ஸ்வரூபம் சொல்லிற்றுத்து.

ஆக, "ப்ரணவத்தால் ஆத்மயாக₃ம் சொல்லித் தலைக் கட்டிற்று. ஆத்மயாக₃ம் வந்தபடி என்னென்னில்; நிருபாதி₄க தே₃வதா பரமாத்மா, நிருபாதி₄கம் ஹவி: ஆத்மா, நிருபாதி₄கோ யாக₃: ஆத்மஸமர்ப்பணம், நிருபாதி₄கோ மந்த்ர: ப்ரணவ:, நிருபாதி₄கப₂லம்-மோக்ஷ:" என்று ப்ரமாணாந்தரங்கள் சொல்லுகையாலே.

ஆக, பத₃த்ரயாத்மகமான ப்ரணவத்தால்-அகாரவாச்யமான பரப்₃ரஹ்மத்துக்கு மகாரவாச்யமான ஜீவஸ்வரூபம் அநந்யார்ஹ ஶேஷமென்றதாய்த்து.

இனி, மந்த்ரஶேஷமும் இப்பத₃த்திலே விவ்ருதம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

தனிப்ரணவம் முற்றிற்று.

அஷ்டாத₃ஶ ரஹஸ்யம்

நிறைவுற்றது.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அஷ்டாத₃ச ரஹஸ்ய ப்ரமாணத்திரட்டு

பக்கம்—17

**1. ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத** *[உண்பது பற்றிய சாஸ்திரவிதி]*

[ஸ்நானம் செய்துவிட்டே உண்ணவேண்டும்.]

**2. யோ வஜ்ரபாதாஶநிஸந்நிபாதாத்**
**ந சுக்ஷுபே₄ நாபி சசால ராஜா ।**
**ஸ ராமபா₃ணாபி₄ஹதோ ப்₄ருஶார்த்த:**
**சசால சாபஞ்ச முமோச வீர: ॥** *[ரா-யு 69-140]*

[எந்த ராவணன் வஜ்ராயுதத்தால் அடிபட்டாலும், தன்மேல் இடிவிழுந்தாலும் மனக்கலக்கத்தை அடையவில்லையோ, சரீரம் நடுங்கவுமில்லையோ, அந்த ராவணன் ஸ்ரீராமபாணத்தால் அடிக்கப்பெற்று மிகவும் கலங்கி நடுநடுங்கினான், வீரனாயிருந்தும் (நிராயுதபாணியை ராகவன் அடிக்கமாட்டான் என்னும் நினைவாலே) வில்லையும் கைவிட்டான்.]

பக்கம்—18

**1. தை₃வீ ஹ்யேஷா கு₃ணமயீ மம மாயா து₃ரத்யயா ।**
**மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥**
*[கீதை 7-11]*

[தேவனாகிற என்னால் நிர்மிக்கப்பட்டதும், முக்குணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை (ப்ரக்ருதி) கடக்க அரிதானது. என்னையே எவர்கள் சரணம் அடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைக் கடக்கிறார்கள்.]

**2. தமேவ சாத்₃யம் புருஷம் ப்ரபத்₃யே-**
**யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ।** *[கீதை 15-4]*

[ஆதிபுருஷனான அவனையே (பகவானையே) சரணடைந்து (அஜ்ஞானமழிதல் முதலான) இவையனைத்துக்கும் (ஸாதன

மான) முமுக்ஷுக்களுடைய செயல்கள் பழங்காலத்திலி ருந்து ஏற்பட்டிருக்கிறது.]

**3. அஹமஸ்ம்யபராத₄நாம் ஆலயோऽகிஞ்சநோऽக₃தி: ।**
**த்வமேவோபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நாமதி: ॥**
**ஶரணாக₃திரித்யுக்தா ஸா தே₃வேஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ॥**
[அஹிர்பு₃த்₄ந்ய ஸம்ஹிதை 36-38]

['நான் குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன். (உன்னைத்தவிர) நான் வேறு கைம்முதலற்றவன்; வேறு புகலும் அற்றவன். நீயே எனக்கு உபாயமாவாயாக' என்று பிரார்த்திக்கும் புத்தியே சரணாகதி எனப்படுகிறது. அது இந்த தேவனிடத்தில் செய்யப்படட்டும்.]

பக்கம்—34

**சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோऽர்ஜுந ।**
**ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தா₂ர்த்தீ₂ ஜ்ஞாநீ ச ப₄ரதர்ஷப₄ ॥**
[கீதை 8-16]

[அர்ஜுன! செல்வமிழந்து வருந்துபவனும், புதிதாகச் செல்வத்தைப் பெறவிரும்புபவனும், ஆத்மஸ்வரூபத்தை அநுப₄விக்க விரும்புபவனும், ஸ்வரூபஜ்ஞானமுடையவனும், என்னையே பெற விரும்புகிறவனுமாகிய புண்யசாலிகளான நாலுவகைப்பட்ட ஜனங்கள் என்னை உபாஸிக்கிறார்கள்]

பக்கம்—43

**அவாக்யநாத₃ர:** [சா₂ந்தே₃ாக்₃ய உபநிஷத் 3-14]

[பரப்₃ரஹ்மம் (சுயநலம் விரும்பி எவரிடமும்) ஏதும் பேசுவதில்லை; அவாப்தஸமஸ்தகாமனாகையாலே. (சுயநலம் பேணி) யாரையும் ஆத₃ரிப்பதுமில்லை.]

பக்கம்—49

**யத₃ந்ந: புருஷோ ப₄வதி**
**தத₃ந்நாஸ் தஸ்ய தே₃வதா: ॥** [ரா. அ. 102-30]

[மனிதன் எதை உணவாகக்கொள்கிறானோ அதனை, அவனால் ஆராதி₄க்கப்படும் தே₃வதைகளும் உணவாகக் கொள்கின்றனர்.]

பக்கம்—53

அர்ஜுந: கேஶவஸ்யாத்மா
க்ருஷ்ணஶ்சாத்மா கிரீடிந:।
அர்ஜுநே ச ஜயோ நித்யம்
க்ருஷ்ணே கீர்த்திஶ்ச ஶாஶ்வதீ ||

[அர்ஜுனன் கண்ணனுக்கு ஆத்மாவைப்போல் த₄ாரகன். கண்ணனும் அர்ஜுனனுக்கு ஆத்மாவைப்போல் த₄ாரகன். அர்ஜுனனிடம் வெற்றியும், கண்ணனிடம் கீர்த்தியும் என்றும் நிலைபெற்றுள்ளன.]

பக்கம்—54

ஸ ஏஷ தே₃ஶ: காலஶ்ச
ப₄வதீஹ யதா₃ ததா₃। [ரா. யு. 17-57]

[விபீ₄ஷணன் யாதொரு தேசத்திலே யாதொரு காலத்திலே வந்தானோ, இதுவே அவன் வரவுக்கு உகந்த தேசமும், காலமும் ஆகும் என்பதை (அடியேன் விண்ணப்பம் செய்யக்கேட்டருளவேணும்)]

பக்கம்—55

1. பூர்ணமித₃ம் பூர்ணமத₃: பூர்ணாத் பூர்ணமுத₃ச்யதே।
பூர்ணஸ்ய பூர்ணமாதா₃ய பூர்ணமேவாவஶிஷ்யதே ||
ஸர்வம் பூர்ணம் ஸஹோம் || [த்₃வயோபநிஷத்]

[அந்தர்யாமிரூபம் கல்யாணகுணங்கள் — நிறைந்தது. பரரூபமும் கல்யாணகுணங்கள் நிறைந்தது. பரரூபத்தினின்றும் தோன்றிய வ்யூஹரூபம் இரண்டிரண்டு குணங்களாலே பல்விதமாகிறது. அவதார மூலமாய், பாற்கடலில் பள்ளிகொண்ட வியூஹத்தில் நின்றும் தோன்றினதாகையாலே கல்யாணகுணம் நிறைந்த அவதாரரூபத்தைத் தனக்குக் காரணமாகக்கொண்டு கல்யாணகுண பூர்ணமான அர்ச்சாவதாரமே எப்போதும் ஆச்ரயிக்கலாம்படி அருகிலிருப்பதாய், எல்லைநிலமாயிருக்கிறது. அதில் மேன்மைக்கும் நீர்மைக்கும் உறுப்பான எல்லா கு₃ணங்களும் நிறைந்துள்ளன.]

2. அவித்,யாதோ தே,வே பரிப்,ருட,தயா வா விதி,தயா
ஸ்வப,க்தேர்பூ,ம்நா வா ஜக,தி க,திமந்யாமவிது,ஷாம் ।
க,திர்க,ம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ:
ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ க,லு ப,க,வாந்
ஶௌநக முநி: ॥ [பட்டர் ஸ்ரீஸூக்தி]

[பகவத் விஷயத்தில் அறியாமையினாலாவது, நன்றாக அறிந்திருப்பதினாலேயாவது, தன் பக்தியின் மிகுதியினாலே யாவது இவ்வுலகில் வேறு உபாயத்தை அறியாதவர்களுக்கு உபாயமும் உபேயமும் இந்த ஹரியே என்று 'ஜிதந்தே' என்கிற திருநாமமுள்ள மந்திரத்தின் ரஹஸ்யத்தை பகவான் ஶௌனகமுனி வெளியிட்டார்.]

3. இத,ம் ஶரணம் அஜ்ஞாநாம்
இத,மேவ விஜாநதாம் ।
இத,ம் திதீர்ஷதாம் பாரம்
இத,ம் ஆநந்த்யமிச்ச,தாம் ॥ [லக்ஷ்மீதந்த்ரம் 17-100]

[இந்த ப்ரபத்தியே அறிவில்லாதார்க்கு உபாயம். சிறந்த அறிவுடையார்களுக்கும் இதுவே உபாயம். ஸம்ஸாரமாகிற கரையைக் கடக்கவேணுமென்னும் விருப்பமுடைய கைவல்யநிஷ்ட,ர்க்கும் இதுவே உபாயம். ஸ்வரூபப்ராப்தமாய் ஸ்வரூபரூப குணவிபூதிகளால் அளவிறந்த ப்,ரஹ்மாநுப,வத்தைப் பெற்றல்லது த,ரிக்கமாட்டாதார்க்கும் இதுவே உபாயம்.]

பக்கம் – 57

ஏகாந்தீ வ்யபதே,ஷ்டவ்ய:
நைவ க்,ராமகுலாதி,பி,: ।
விஷ்ணுநா வ்யபதே,ஷ்டவ்ய:
தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி ॥ [விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

[பகவதேகபரனாயிருக்குமவன் ஊர் குலம் இவற்றையிட்டுச் சொல்லப்படுமவனல்லன். அவனுக்கு அந்த க்,ராம குலங்கள் முதலியவை எல்லாம் எம்பெருமானேயன்றோ.]

பக்கம்—59

**பரமாத்மநி யோ ரக்த: விரக்தோऽபரமாத்மநி ||**

*[பா₃ர்ஹஸ்பத்யஸ்ம்ருதி]*

[யாவனொருவன் பரமாத்மாவின் பக்கலிலே அன்பு (ராக₃ம்) கொள்ளுகிறானோ, அவன் அத்தாலே பரமாத்மாவைத் தவிர மற்ற விஷயத்தில் விரக்தி அடைகிறான்.]

பக்கம்—61

**1. காலேஷ்வபி ச ஸர்வேஷு**
**தி₃க்ஷு ஸர்வாஸு சாச்யுத |**
**ஶரீரே ச க₃தௌ சாபி**
**வர்த்ததே மே மஹத்₃ப₄யம்** [ஜிதந்தே ஸ்தோத்ரம் 1-9]

[அடியார்களை நழுவவிடாதவனே! எல்லாப் புண்யகாலங்களிலும், எல்லா திசைகளிலுமுள்ள புண்யக்ஷேத்ரங்களிலும், (தர்மஸாதனமான) சரீரத்திலும், சரீராந்தரக₃தியிலும் அடியேனுக்கு மிக்க ப₄யமுள்ளது.]

**2. ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய**
**மாமேகம் ஶரணம் வ்ரஜ |**
**அஹம் த்வா ஸர்வ பாபேப்₄ய:**
**மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ||** [கீ₃தை 18 66]

[மோக்ஷஸாத₄னமான எல்லா த₄ர்மங்களையும் வாஸனையுடன் விட்டு, என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று. நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன். வருந்தாதே.]

பக்கம்—62

**1. பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம்**
**யோ மே ப₄க்த்யா ப்ரயச்ச₂தி |**
**தத₃ஹம் ப₄க்த்யுபஹ்ருதம்**
**அஶ்நாமி ப்ரயதாத்மந: ||** [கீதை 9.26]

[இலையோ, பூவோ, பழமோ, நீரோ யாவனொருவன் எனக்கு ப₄க்தியோடே அளிக்கிறானோ, என்னுடைய

அருளையே பயனாக உடைய மனத்தை உடைய அவன் பக்தியோடே இட்டதை (அவாப்தஸமஸ்தகாமனான) நான் பெருவிருப்பத்தோடு உண்கிறேன்.]

**2. அந்யத் பூர்ணாத் அபாம் கும்ப,ாத்**
**அந்யத் பாத,ாவநேஜநாத்।**
**அந்யத் குசலஸம்ப்ரச்நாத்**
**ந சேச்ச,தி ஜநார்த்த,ந:॥** [மஹாபாரதம் உத்-பர்வ 86]

[குளிர்ந்த நீர் நிறைந்த ஒரு குடத்தை வருகிற வழியிலே வாசலிலே வைப்பது போதும். அவன் திருவடிகளை விளக்குவது போதும். நெடுந்தூரம் நடந்துவந்தவனை ஓர் இன்சொல்லால் க்ஷேமம் விசாரிப்பதே போதும். இவற்றை யொழிய மற்றொன்றைக் கண்ணன் விரும்பமாட்டான்.]

பக்கம்—63

**ஹாரோऽபி நார்ப்பித: கண்டே, ஸ்பர்சஸம்ரோத,பீ,ருணா।**
**ஆவயோரந்தரே ஜாதா: பர்வதாஸ் ஸரிதோ த்,ருமா:॥**
[ஸ்ரீராமாயணம்]

[ஸம்ச்லேஷகாலத்தில் ஆலிங்க,னஸ்பர்சத்திற்கு விரோதி, யாயிருக்கும் என்று அஞ்சின பிராட்டி கழுத்தில் ஒரு முத்து மாலைகூட இட்டதில்லை. இப்போது எங்கள் இருவருக்கும் நடுவில் மலைகளும ஆறுகளும் மரங்களும் ஒருவரையொருவர் அநுப,விக்க இடையூறுயுள்ளன.]

பக்கம்—64

**ஸ்நாநம் ரோஷ ஜநகம்**

[அசோகவனத்திலிருந்து பிராட்டி திருமஞ்சனம் செய்து வந்தது ராமனுக்குக் கோபம் விளையக் காரணமாயிருந்தது.]

பக்கம்—65

**1. ந காமகலுஷம் சித்தம்**
**மம தே பாத,யோ: ஸ்தி,தம்।**
**காமயே வைஷ்ணவத்வம் து**
**ஸர்வஜந்மஸு கேவலம்॥** [ஜிதந்தாஸ்தோத்ரம்]

[ஸ்வாமியாய் இனியரான தேவரீர் திருவடிகளில் ஊன்றிய என் நெஞ்சு ஸ்ரீவைகுண்டம் முதலிய வேறு எதையும் புருஷார்த்தமாக நினைத்துக் கலங்கியிருக்கிறதன்று. எல்லாப் பிறவிகளிலும் தேவரீருக்கே அடிமைசெய்ய ஆசைப்படுகிறேன்.]

**2. நஹி மே ஜீவிதேநார்த்த₂:**
**நைவார்த்தை₂ர் ந ச பூ₄ஷணை: ।**
**வஸந்த்யா ராக்ஷஸீமத்₄யே**
**விநா ராமம் மஹாரத₂ம் ॥** [ரா. ஸு 26-5]

[மஹாரதரான பெருமாளை (ராமனை)ப் பிரிந்து அரக்கிகள் நடுவே வசிக்கும் எனக்கு ப்ராணனாலோ, த₄னத்தாலோ, ஆபரணங்களாலோ ஒரு ப்ரயோஜனமில்லை]

**3. ந தே₃ஹம் ந ப்ராணந் ந ச ஸுக₂மஶேஷாபி₄லஷிதம்**
**ந சாத்மாநம் நாந்யத் கிமபி தவ ஶேஷத்வவிப₄வாத் ।**
**ப₃ஹிர்பூ₄தம் நாத₂ க்ஷணமபி ஸஹே யாது ஶதத₄ா**
**விநாஶம் தத் ஸத்யம் மது₄மத₂ந! விஜ்ஞாபநமித₃ம் ॥**
[ஸ்தோ. ர-57]

[ஸ்வாமி மதுசூதனா! உனக்கு ஶேஷமாயிருப்பதான ஐஶ்வர்யத்துக்குப் புறம்பானதாகில், எனது உடலை க்ஷணமும் ஸஹிக்கமாட்டேன்; இவ்வுடலுக்கு தா₄ரகங்களான ப்ராணன்களையும், அனைவரும் விரும்பும் சுகத்தையும், புத்ர மித்ர களத்ரங்களாகிய மற்றவற்றையும் ஸஹியேன். இத்தனைக்கும் போ₄க்தாவான ஆத்மாவையும் ஸஹியேன். இவையெல்லாம் நூறுக்காண ஒன்றுபடி அழியட்டும். அடியேனுடைய இந்த விஜ்ஞாபனம் ஸத்யம்.]

பக்கம்—66

**யா ப்ரீதிர் மயி ஸம்வ்ருத்தா மத்₃ப₄க்தேஷு ஸதா₃ஸ்து தே ।**
**அவமாநக்ரியா தேஷாம் ஸம்ஹரத்யகி₂லம் ஜக₃த் ॥**
[பா₄ர-ஆஶ்வ]

[உனக்கு என் பக்கல் எந்த ப்ரீதி உண்டாயிற்றோ அது என் பக்தர்களிடமும் இருக்கட்டும். என் பக்தர்களை அவமானம் செய்தல் உலகமனைத்தையும் அழித்துவிடுகிறது.]

பக்கம்—67

1. 61ம் பக்கத்தின் முதல் ப்ரமாண ச்லோகம் பார்க்கவும்.
2. ஶ்வபசோபி மஹீபால! விஷ்ணுப,க்தோ த்,விஜாதி,க:।
   விஷ்ணுப,க்திவிஹீநஸ்து யதிஶ்ச ஶ்வபசாத,ம: ॥

[அரசனே! எவ்வளவு தாழ்ந்த பிறவியில் பிறந்திருந்தாலும் பகவத் பக்தன் பிராம்மணனைக் காட்டிலும் மேலானவன். உயர் பிறவி பிறந்ததோடல்லாமல ஸந்ந்யாஸியாயினும் பகவத் பக்தியில்லாதவன் சண்டாளரில் கடையானவன்.]

பக்கம்—68

ப்ராது,ர்ப,ாவைஸ்ஸுரநரஸமோ தே,வதே,வஸ்தத,ீயா:
ஜாத்யா வ்ருத்தைரபி ச கு,ணத: தாத்ருஶோ நாத்ர க,ர்ஹா
கிந்து ஶ்ரீமத்,பு,வநப,வநத்ராணதோ ந்யேஷு வித்,யா-
வ்ருத்தப்ராயோ ப,வதி வித,வாகல்பகல்ப: ப்ரகர்ஷ: ॥

[அயர்வறுமமரர்கள் அதிபதியான எம்பெருமான் அவதாரங்களாலே தேவமனுஷ்யஸஜாதீயனுவான். அவனடியார்களும் ஜாதியாலும் ஒழுக்கத்தாலும், குணத்தாலும் அப்படியே பகவத் ஸம்பந்தமில்லாதாரோடு ஸஜாதீயராவார். இதில் யாதொரு குறையுமில்லை (நிந்தையில்லை); கொண்டாட்டமேயுள்ளது. இவர்களிருவரும் இப்படி இருப்பது லோகரக்ஷார்த்தமாக. அபாகவதர் பக்கல் உண்டான கல்வி ஒழுக்கம் இவற்றால் வரும் மேன்மை விதவையின் அலங்காரம்போலே வெறுக்கத்தக்கது.]

பக்கம்—73

தவாம்ருதஸ்யந்தி,நி பாத,பங்கஜே
நிவேஶிதாத்மா கத,மந்யதி,ச்ச,தி।
ஸ்தி,தேऽரவிந்தே, மகரந்த,நிர்ப,ரே
மது,வ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே ॥ [ஸ்தோ-27]

[ஸ்வாமியான தேவருடைய தேனே மலரும் திருவடித் தாமரைகளின் இனிமையில் அழுந்தின நெஞ்சு வேறு அற்ப விஷயத்தை எப்படி விரும்பும்? தேனே ஜீவனமான வண்டு தேன்நிறைந்த தாமரையைவிட்டு முள்ளிப்பூவிலே சென்று படியாதது மட்டுமல்ல, அதைக் கண்கொண்டு பார்ப்பதும் செய்யாதே.]

பக்கம்—77

1. **மாதா பிதா யுவதய: தநயா விபூ₄தி:**
**ஸர்வம் யதே₃வ நியமேந மத₃ந்வயாநாம் ।**
**ஆத்₃யஸ்ய ந: குலபதே: வகுளாபி₄ராமம்**
**ஸ்ரீமத் தத₃ங்க்₄ரியுக₃ளம் ப்ரணமாமி மூர்த்₄நா ॥**
[ஸ்தோ-ர 5]

[என் வம்சத்தார்க்கு எப்போதும் தாய், தந்தை, மாதர், மக்கள், பெருஞ்செல்வம் ஆகிய அனைத்தும் நம்முடைய ஆதி குலபதியான ஆழ்வார் திருவடியே. மகிழ்மாலை அணிந்து அழகாயிருக்கும் அத்திருவடியிணையைத் தலையால் வணங்குகிறேன்.]

பக்கம்—81

1. **ஸ தம் நிபதிதம் பூ₄மௌ**
***ஶரண்யஶ் ஶரணாக₃தம் ।***
**வத₄ார்ஹமபி காகுத்ஸ்த₂:**
**க்ருபயா பர்யபாலயத் ॥** [ரா-ஸு 38-34]

[*ஶ*ரண்யனான ராமபிரான் கொல்லத்தக்க குற்றம் செய்து ப்₃ரஹ்மாஸ்திரத்துக்கு இலக்காய், புறம்பு புகலற்றுத் திருவடிகளிலே விழுந்த காகத்தைக் கருணையாலே ரக்ஷித்தான்.]

பக்கம்—83

1. **யதா₃ ஹி மோக்ஷகா: பார்த₂**
**பரிப₃ர்ஹமுபேயுஷி ।**
**நிவ்ருத்தமோக்ஷணேச்₂சோ₂ யோக₃ா:**
**தத₃ா ஸந்த உதா₃ஸதே ॥**
[அஹிர்பு₃த்₄ந்யஸம்ஹிதை 14-34]

[வழிபோகிறவன் உயர்ந்த பொருள்களைக்கொண்ட மூட்டையை வைத்துவிட்டு மறைந்து நின்றபோது அவனுடைய மூட்டையை அபஹரிக்க முயலும் திருடர்கள் வழிப்போக்கன் வந்து அதைக் கைப்பற்றினவளவில் திருடும் முயற்சியைவிட்டு எப்படி உதா₃ஸீநமாயிருப்பார்களோ அதுபோல எம்பெருமான் அநுக்ரஹசக்தி ஒருவன்மீது படும்போது புண்யபாப கர்மங்கள் உதா₃ஸீனமாகிவிடும்]

பக்கம்—88

**க்ஷேத்ராணி மித்ராணி த₄நாநி நாத₂**
**புத்ராஶ்ச தா₃ரா: பஶவோ க்₃ருஹாணி।**
**த்வத்பாத₃பத்₃மப்ரவணாத்மவ்ருத்தே:**
**ப₄வந்தி ஸர்வே ப்ரதிகூலரூபா: ॥**

[ஹஸ்திகிரிமாஹாத்மியம் அத். 8]

[பேரருளாளனே! தேவரீர் திருவடித்தாமரைகளில் ஊன்றி ஈடுபட்ட நெஞ்சை உடையவனுக்கு வயல், நண்பன், செல்வம், புதல்வர், மனைவி, பசு, வீடு யாவையும் (நெருப்புப் போலே) ப்ரதிகூலமாகும்.]

பக்கம்—89

**பஶுர் மநுஷ்ய: பக்ஷீ வா**
**யே ச வைஷ்ணவஸம்ஶ்ரயா:।**
**தேநைவ தே ப்ரயாஸ்யந்தி**
**தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் ॥**

[ஶாண்டில்யஸ்ம்ருதி பரத்வாஜஸ்ம்ருதி]

[அறிவில்லாத பசு பக்ஷிகளோ அறிவுள்ள மனிதனோ பகவத் ஸம்ப₃ந்த₄முடைய ஸ்ரீவைஷ்ணவனோடே ஸம்ப₃ந்த₄முள்ளவர்களாகில், அவர்கள் அந்த ஸ்ரீவைஷ்ணவனாலே பரமபத₃த்தை அடைகிறார்கள்.]

பக்கம்—90

1. **முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத்**
**ஶ்வேதத்₃வீபநிவாஸிநாம்।**
**நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா:**
**நம இத்யேவ வாதி₃ந: ॥** [மஹாபாரதம்-சாந்தி]

[எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டும் ஆனந்தித்துக் கொண்டும் வாயால் 'நம:' என்று சொல்லிக்கொண்டு மிருப்பதே ஶ்வேதத்₃வீபவாஸிகளின் லக்ஷணம். அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும்.]

**2. த்₃விதா₄ ப₄ஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்।**
**ஏஷ மே ஸஹஜோ தோ₃ஷ: ஸ்வப₄ாவோ து₃ரதிக்ரம: ॥**
[ரா.யு 36-11]

[இரண்டாகப் பிளந்து விழுந்தாலும் விழுவேனேயொழிய இவ்வாறு ஒருவனுக்கும் வணங்கமாட்டேன். இது என்னு டைய உடன்பிறந்ததோ₃ஷம். அவரவர் ஸ்வப₄ாவம் மீற முடியாததன்றோ]

**3. ஈஶ்வரோऽஹமஹம் போ₄கீ₃**
**ஸித்₃தோ₄ऽஹம் ப₃லவாந் ஸுகீ₂॥** [கீ₃தை 16-14]

[நானே ஈஶ்வரன்; நானே போ₄க₃ங்களை அநுப₄விப்பவன், நான் இயற்கையிலேயே ஸித்₃த₄னயிருப்பவன். ப₃லமுடைய வனும் ஸுக₂முடையவனும் நானே.]

**4. தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:।**
**தி₃வீவ சக்ஷுராததம் தத்₃விப்ராஸோ விபந்யவோ**
**ஜாக்₃ருவாம்ஸஸ் ஸமிந்த₄தே விஷ்ணோர் யத் பரமம் பத₃ம்॥**
[ருக்₃வேத₃ம்-அஷ்டகம் 1-2-7]

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை அல்லது (ஸ்வரூ பத்தை) நித்யஸூரிகள் எப்போதும் பார்க்கிருர்கள். அப் பரமபத₃ம் எல்லாவற்றையும் கண்போல் பிரகாசிக்கச் செய் பவனும் ஆகாயத்திலிருப்பவனுமான ஸூர்யன்போல் விளங்குகிறது. அப்பரமபத₃த்தில் மேதா₄விகளும் துதிப்ப வர்களும் (பரிவாலே) விழிப்புடனிருப்பவர்களுமான நித்ய ஸூரிகள் பிரகாசிக்கின்றனர்.]

**5. ஸ ஏகதா₄ ப₄வதி த்ரிதா₄ ப₄வதி பஞ்சதா₄।**
**ஸப்ததா₄ நவதா₄ சைவ புநஶ்சைகாத₃ஶ: ஸ்ம்ருத:।**
**ஶதஞ்ச த₃ஶ சைகஞ்ச ஸஹஸ்ராணி ச விம்ஶதி:॥**
[சா₂ந் 7-26-2]

[முக்தனான ஆத்மா (நிரவயவமாய் அஞ்சாக ஏழாக ஆவது கூடாமையாலே) பரமாத்ம ஸங்கல்பத்தால் (கைங்கர்யம் செய்வதற்குறுப்பாகி) பல ஶரீரங்களை உடையவனாகிறான்.]

**6. ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।**
**அப₄யம் ஸர்வபூ₄தேப்₄ய: த₃தா₃ம்யேதத்₃ வ்ரதம் மம ॥**

[ரா-யு 18 33]

[ஒருகாலே சரணமென்றவனுக்கும் உனக்கேயடிமை என்றவனுக்கும் எல்லா பூ₄தங்களினின்றும் ஏற்படும் ப₄யத்தைப் போக்குகிறேன். இது என் விரதம்.]

பக்கம்—92

**1. ப்ராயஶ: பாபகாரித்வாத் ம்ருத்யோருத்₃விஜதே ஜந:।**
**க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதி₂ம்॥**

[இதிஹாஸ ஸமுச்சயம்-ப₄ார]

[பெரும்பாலும் பாவம் செய்திருப்பதனாலேயே மனிதன் மரணத்திற்கு அஞ்சுகிறான். செய்யவேண்டியதைச் செய்து முடித்தவர்கள் மரணத்தை இனியனான விருந்ாளியைப் போலே எதிர்பார்க்கிறார்கள்.]

பக்கம்—93

**1. ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந்நாபஸர்ப்பதி।**
**கோ₃விந்தே₃தி யதா₃க்ரந்த₃த் க்ருஷ்ணா மாம்**
**தூ₃ரவாஸிநம் ॥**

[மஹாப₄ாரதம்-உத்₃யோக₃ 47-22]

[ (துச்சாதனன் துகிலுரியும்போது) வெகுதூரத்தில் இருந்த என்னைக்குறித்து, திரௌபதி 'கோவிந்தா' என்று கதறினளே (அவ்வாபத்திலே உதவப்பெறாததாலே) என் நெஞ்சிலிருந்து அக்கூக்குரல் வட்டியாய் வளர்ந்த கடன்போலே அகல்கின்றதில்லை.]

**2. ஏகயாமாவஶிஷ்டாயாம் ராத்ர்யாம் ப்ரதிவிபு₃த்₄ய ஸ:।**
**அலங்காரவிதி₄ம் க்ருத்ஸ்நம் காரயாமாஸ வேஶ்மநி ॥**

[ரா-அ 6-5]

[இரவு ஒரு ஜாமம் இருக்கும்போது விழித்தெழுந்து ராம பிரான் தன் அரண்மனையில் முழுமையாக அலங்காரம் செய்வித்தான்.]

**3. ஏதத்ஸம்ப₃ந்தி₄நஶ் சாந்யே**

[முக்தியடைபவனுக்கு அநுகூலமாயிருந்தவர் அனைவரும் (எங்கிருந்தாலும் புண்யலோகங்களை அடைகின்றனர்).]

**4. ஊட₄: பஞ்சாத்மநா தேந தார்க்ஷ்யரூபேண**

[ப்ராணன் முதலிய ஐந்து காற்றுக்கும் தே₃வதையாய் ஸத்ய ஸுபர்ண க₃ருட₃ தார்க்ஷ்ய விஹகே₃ஶ்வரர் என்கிற ஐந்து மூர்த்தியான வைநதேயனின் தார்க்ஷ்யரூபத்தால் சுமக்கப்பட்டவர்.]

பக்கம்—94

**1. தஸ்மாது₃பஶாந்ததேஜா: புநர்ப₄வம்**
**இந்த்₃ரியைர்மநஸி ஸம்பத்₃யமாநை:**
**யச்சித்தஸ்தேநைவ ப்ராணமாயாதி ॥**

[4-2-2 ஸ்ரீபாஷ்யத்தில் எடுக்கப்பட்ட ஶ்ருதிவாக்யம்]

[ஆகையால் உஷ்ணம் அடங்கப்பெற்றவனாய், **மனத்தில்** ஒடுங்கிய இந்த்₃ரியங்களோடு கூட (ஜீவன்) எந்தப் பயனை மனத்தில் விரும்பினானோ, அப்பயன் காரண மாகவே மறுபிறப்பிற்காக ப்ராணவாயுவை அடைகிறான்.]

**2. வாங்மநஸி ஸம்பத்₃யதே**
**மந: ப்ராணே ப்ராணஸ்தேஜஸி**
**தேஜ: பரஸ்யாம் தே₃வதாயாம் ॥** [சா₂ந் 6-8-6]

[(ஜீவனுடைய மரணகாலத்தில் அவனோடு கூடிய) வாக் இந்த்₃ரியம் மனத்தோடு சேர்ந்து மனம் ப்ராணனோடே சேர்ந்து, ப்ராணன் பூ₄தஸூக்ஷ்மங்களோடு சேர்ந்து அவை பரமாத்மாவின் பக்கலிலே சேரும்.]

**3. ப்ராணப்ரயாணபாதே₂யம்**

[முக்தியடையும் ஜீவனுக்கு (த்₃வயாநுஸந்த₄ானமே) வழி நடைக்குக் கட்டுச்சோறாகும்.]

**4. க₃ச்ச₂தாம் தூ₃ரமத்₄வாநம்**
**த்ருஷ்ணாமூர்ச்சி₂தசேதஸாம் ।**
**பாதே₂யம் புண்ட₃ரீகாக்ஷ**
**நாமஸங்கீர்த்தநாம்ருதம் ॥** [க₃ருட₃புராணம்]

[(ஜீவன் பரணமடைந்தபின்) வெகுதூரம் நடந்ததால் பசி தாகங்களால் மயக்கமடைந்த ஜீவனுக்குத் தாமரைக்கண்ணனின் திருநாம ஸங்கீர்த்தனமாகிற அமுதமே கட்டுச் சோறாகும்.]

**5. ஏதேந ப்ரதிபத்₃யமாநா: இமம்**
**மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே** [சா₂ந் 4-1]

[இந்த அர்ச்சிராதி₃மார்க்க₃த்தால் (பரமபத₃ம்) செல்பவர் இந்த மானுடர் வாழும் உலகில் வந்து உழல்வதில்லை]

**6. தே₃வயாநபத₂ா: ஸர்வே முக்திமார்க்க₃ாபி₄லாஷிண:।**

[தே₃வயாந மார்க்க₃ங்களில் செல்பவர் அனைவரும் முக்தி மார்க்க₃த்தை விரும்புகிறவர்கள்.]

பக்கம்—95

**1. ஶதம் சைகா ச ஹ்ருத₃யஸ்ய நாட்₃ய:**
**தாஸாம் மூர்த்த₄ாநமபி₄நிஸ்ஸ்ருதைகா ।**
**தயோர்த்₄வமாயந்நம்ருதத்வமேதி**
**விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே ப₄வந்தி ॥**
[கட₂ 2.6.16, சா₂ந் 8-6-6]

[ஹ்ருத₃யத்தைச்சுற்றி நூறும் ஒன்றுமாக நூற்றொரு நாடிகள் உள்ளன. அவைகளில் ஒன்று உச்சந்தலையை நோக்கிச் செல்லுகிறது. அந்த நாடி₃ வழியாகக் கிளம்பும் ஆத்மா மோக்ஷமடைகிறது. மற்ற நாடிவழிகளில் செல்லும் ஆத்மாக்கள் ஸம்ஸார க₃திகளையே அடைகின்றன.]

2. தா ஆஸு நாடீஷு ஸ்ருப்தா: ஆப்₄யோ நாடீ₃ப்₄ய:
ப்ரதாயந்தே தேऽமுஷ்மிந் ஆதி₃த்யே ஸ்ருப்தா:
அத₂ ஏதைரேவ ரஶ்மிபி₄ரூர்த்₄வமாக்ரமதே।
[சா₂ந் 8-6-2, 5]

[ஸூர்யரச்மிகள் இந்த நாடிகளில் நுழைந்துள்ளன. இந்த நாடிகளிலிருந்து கிளம்பிப் பரவுகின்றன. அவை இந்த ஸூர்யனிடம் சம்பந்தித்துள்ளன. முக்தியடையும் ஜீவன் இந்த ஸூர்யகிரணங்களால் மேலே செல்கிறான்.]

3. ஓங்காரரத₂மாருஹ்ய
[ப்ரணவமாகிற தேரிலே ஏறி]

பக்கம்—96

1. அர்ச்சிஷமேவாபி₄ஸம்ப₄வந்தி அர்ச்சிஷோऽஹ:
அஹ்ந ஆபூர்யமாணபக்ஷம் [சா₂ந் 4-15-5]

[முக்தியடைபவர்கள் அர்ச்சிரபி₄மானி புருஷனையே அடைகிறார்கள். அர்ச்சிரபி₄மானியிடமிருந்து அஹரபி₄மானி தே₃வதையையும், அஹரபி₄மானியிடமிருந்து சுக்லபக்ஷாபி₄மானி புருஷனையுமடைகிறார்கள்.]

2. அக்₃நிர் ஜ்யோதிரஹஶ் ஶுக்ல:
ஷண்மாஸா உத்தராயணம்।
தத்ர ப்ரயாதா க₃ச்ச₂ந்தி
ப்₃ரஹ்ம ப்₃ரஹ்மவிதோ₃ ஜநா:॥ [கீ. 8-24]

[அர்ச்சிஸ்ஸு, அஹஸ்ஸு, ஶுக்லபக்ஷம், உத்தராயணமாகிற ஆறு மாஸங்கள் என்று சொல்லப்படும் வழியிலே செல்கின்றவர்களாய், ப்₃ரஹ்மத்தை ப்ராப்யமாக உபாஸிக்கிறவர்களான உபாஸகர்கள் ப்₃ரஹ்மத்தை அடைகிறார்கள்.]

பக்கம்—97

1. ப்ரவிஶ்ய ச ஸஹஸ்ராம்ஶும்
[ஸூர்யமண்ட₃லத்தினுள் புக்கு.]

2. க்ரமாச்சந்த்₃ரமஸம் ப்ராப்ய
[முறையே சந்திரமண்ட₃லத்தை அடைந்து.]

3. பீ₄தோऽஸ்ம்யஹம் மஹாதே₃வ
ஶ்ருத்வா மார்க்க₃ஸ்ய விஸ்தரம்।
கேநோபாயேந தம் மார்க்க₃ம் தரந்தி புருஷா: ஸுக₂ம்॥
(ப₄ார-அச 100.61)

[மஹாதே₃வ! மார்க்க₃த்தின் விரிவைக் கேட்டு பயப்படுகிறேன். புருஷர்கள் எந்த உபாயத்தால் இந்த மார்க்க₃த்தை ஸுக₂மாகக் கடக்கிறார்கள்?]

பக்கம்—98

1. ததஸ்து விரஜாதீரப்ரதே₃ஶம்
[பிறகு விரஜா நதிக்கரைப் பகுதியைக் கிட்டி.]

2. ஸ ஆக₃ச்ச₂தி விரஜாம் நதீ₃ம் [கௌஷீ, 1-35]
[அந்த முக்தன் விரஜை ஆற்றுக்கு வருகிறான்.]

3. தத்தோயஸ்பர்ஶமாத்ரேண
[அந்த விரஜாநதி₃யின் நீரைத் தொட்டவுடன்.]

4. ஸூர்யகோடிப்ரதீகாஶ:
[கோடி ஸூர்யஸமமான ஒளியை உடைய.]

5. அமாநவம் ஸமாஸாத்₃ய
[விரஜைக்கரையிலே இருக்கும் அமாநவனைக் கிட்டி.]

பக்கம்—99

1. தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதித₄ாவந்தி
ஶதம் மாலாஹஸ்தா: ஶதமஞ்ஜநஹஸ்தா:
ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம் வாஸோஹஸ்தா:
[கௌஷீ. 1-34]

[அந்த முக்தபுருஷனை நோக்கி ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்கள் ஓடிவருகிறார்கள். நூறுபேர் கையில் மாலை ஏந்தியும், நூறுபேர் கையில் மைகொண்டும், நூறுபேர் கையில் வாசனைப் பொடிகளைக்கொண்டும், நூறுபேர் கையில் ஆடைகளை எடுத்துக்கொண்டும் வருகிறார்கள்.]

2. **தத்ராக₃த்ய ச தே தே₃வா:**
**ஸாத்₄யாஶ்ச விமலாஶயா: ||**
[அங்கு அந்த தே₃வர்களும் ஸாத்₄யர்களும் தூய உள்ள முடையவராய் வந்து.]

3. **தம் ப்₃ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி** [கௌஷீ 1-34]
[அந்த முக்தனை ப்₃ரஹ்மத்தினுடைய அலங்காரத்தால் அலங்கரிக்கிறார்கள்]

4. **ப்₃ரஹ்மாலங்க்ரியா**
[ப்₃ரஹ்மத்தினுடைய அலங்காரம்.]

பக்கம்—100

1. **ஸ தத₃ந்த:புரத்₃வாரம் ஸமதீத்ய ஜநாகுலம் |**
**ப்ரவிவிக்தாம் தத: கக்ஷ்யாம் ஆஸஸாத₃ புராணவித் ||**
[ரா. அ. 16-1]
[பழைய முறைகளை அறிந்த அந்த ஸுமந்த்ரர் முடிசூட்டு விழாவைக் காணவந்த மக்களால் நிறைந்த அந்தப்புர வாசலைக்கடந்து, ஆட்களற்றிருந்த அடுத்த கட்டை அடைந்தார்.]

2. **ஸ்ரீவைகுண்ட₂ாய தி₃வ்யநக₃ராய** நம: [நித்யக்₃ரந்த₂ம் 13]
[ஸ்ரீவைகுண்ட₂மென்கிற தி₃வ்யநக₃ரத்திற்கு வணக்கம்.]

பக்கம்—101

1. **ஸ்ரீவைகுண்ட₂ாய தி₃வ்யவிமாநாய நம:** [நித்யக்₃ரந்த₂ம் 13]
[ஸ்ரீவைகுண்ட₂ தி₃வ்யவிமாநத்திற்கு வணக்கம்.]

பக்கம் 102

1. **ஆநந்த₃மயாய (தி₃வ்ய) மண்டபரத்நாய நம :**
[நித்யக்₃ரந்த₂ம் 13]
[ஆநந்த₃மயமென்கிற (சிறந்த) மண்டபத்திற்கு வணக்கம்]

பக்கம்—103

1. பக்கம் 90ல் முதல் ப்ரமாணம் பார்க்கவும்.

3. ப்,தோ ரஸம்யஹம் மஹாதே,வ
ஶ்ருத்வா மார்க்க,ஸ்ய விஸ்தரம் |
கேநோபாயேந தம் மார்க்க,ம் தரந்தி புருஷா: ஸுக,ம்||
[ப,ார- அச் 100.61]

[மஹாதே,வ! மார்க்க,த்தின் விரிவைக் கேட்டு பயப்படு கிறேன். புருஷர்கள் எந்த உபாயத்தால் இந்த மார்க்க,த்தை ஸுக,மாகக் கடக்கிறார்கள்?]

பக்கம்—98

1. ததஸ்து விரஜாதீரப்ரதே,ஶம்
[பிறகு விரஜா நதிக்கரைப் பகுதியைக் கிட்டி.]

2. ஸ ஆக,ச்ச,தி விரஜாம் நதீ,ம் [கௌஷீ, 1-35]
[அந்த முக்தன் விரஜை ஆற்றுக்கு வருகிறான்.]

3. தத்தோயஸ்பர்ஶமாத்ரேண
[அந்த விரஜாநதி,யின் நீரைத் தொட்டவுடன்.]

4. ஸூர்யகோடிப்ரதீகாஶ:
[கோடி ஸூர்யஸமமான ஒளியை உடைய.]

5. அமாநவம் ஸமாஸாத்,ய
[விரஜைக்கரையிலே இருக்கும் அமாநவனைக் கிட்டி.]

பக்கம்—99

1. தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதித,ாவந்தி
ஶதம் மாலாஹஸ்தா: ஶதமஞ்ஜநஹஸ்தா:
ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம் வாஸோஹஸ்தா:
[கௌஷீ 1-34]

[அந்த முக்தபுருஷனை நோக்கி ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்கள் ஓடிவருகிறார்கள். நூறுபேர் கையில் மாலை ஏந்தியும், நூறு பேர் கையில் மைகொண்டும், நூறுபேர் கையில் வாசனைப் பொடிகளைக்கொண்டும், நூறுபேர் கையில் ஆடைகளை எடுத்துக்கொண்டும் வருகிறார்கள்.]

2. தத்ராக₃த்ய ச தே தே₃வா:
ஸாத்₄யாஶ்ச விமலாஶயா: ||
[அங்கு அந்த தே₃வர்களும் ஸாத்₄யர்களும் தூய உள்ள முடையவராய் வந்து.]

3. தம் ப்₃ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி [கௌஷீ 1-34]
[அந்த முக்தனை ப்₃ரஹ்மத்தினுடைய அலங்காரத்தால் அலங்கரிக்கிறார்கள்]

4. ப்₃ரஹ்மாலங்க்ரியா
[ப்₃ரஹ்மத்தினுடைய அலங்காரம்.]

பக்கம்—100

1. ஸ தத₃ந்த:புரத்₃வாரம் ஸமதீத்ய ஜநாகுலம் ।
ப்ரவிவிக்தாம் தத: கக்ஷ்யாம் ஆஸஸாத₃ புராணவித் ॥
[ரா. அ. 16-1]
[பழைய முறைகளை அறிந்த அந்த ஸுமந்த்ரர் முடிசூட்டு விழாவைக் காணவந்த மக்களால் நிறைந்த அந்தப்புர வாசலைக்கடந்து, ஆட்களற்றிருந்த அடுத்த கட்டை அடைந்தார்.]

2. ஸ்ரீவைகுண்ட₂ாய தி₃வ்யநக₃ராய நம: [நித்யக்₃ரந்த₂ம் 13]
[ஸ்ரீவைகுண்ட₂மென்கிற தி₃வ்யநக₃ரத்திற்கு வணக்கம்.]

பக்கம்—101

1. ஸ்ரீவைகுண்ட₂ாய தி₃வ்யவிமாநாய நம: [நித்யக்₃ரந்த₂ம் 13]
[ஸ்ரீவைகுண்ட₂ தி₃வ்யவிமாநத்திற்கு வணக்கம்.]

பக்கம் 102

1. ஆநந்த₃மயாய (தி₃வ்ய) மண்டபரத்நாய நம :
[நித்யக்₃ரந்த₂ம் 13]
[ஆநந்த₃மயமென்கிற (சிறந்த) மண்டபத்திற்கு வணக்கம்]

பக்கம்—103

1. பக்கம் 90ல் முதல் ப்ரமாணம் பார்க்கவும்.

3

2. நமஶ்ஶப்,த,ம் ப்ரயுஞ்ஜதே
[நம: என்ற சொல்லைச் சொல்லுகிறார்கள்.]

பக்கம்—104, 105
1. பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்
ஶாஶ்வதம் ஶிவமச்யுதம் ।
நாராயணம் மஹாஜ்ஞேயம்
விஶ்வாத்மாநம் பராயணம் ॥ [தை-நா. 1-11]
[உலகத்தின் ஸ்வாமியும், தனக்குத்தானே ஈச்வரனும், ஶாஶ்வதமான மங்க,ளமும், அடியார்களை நழுவவிடாதவனும், அறியப்படும் விஷயங்களில் முதன்மைபெற்றவனும், உலகினுக்கோர் உயிரும், பரமப்ராப்யமுமான நாரணனை (உலகம் உபஜீவித்து உய்கிறது.)]

பக்கம்—107
ப,ாஹும் பு,ஜக,பே,ாக,ாப,ம் உபத,ாயாரிஸூத,ந: ।...
ஶயநே சோத்தமாங்கே,ந *ஸீதாயா: ஶோபி,தம் புரா ॥
[ரா-யு 21.6]
[படுக்கையில் ஸீதையின் தலையாலே அலங்கரிக்கப்பெற்றதாய், பாம்பின் உடல்போன்று ஒளிவீசுவதான கையைத் தலைக்கு வைத்துக்கொண்டு, எதிரிகளை அழிப்பவரான ராமன் (கடல் நோக்கிப் படுத்திருந்தான்).]

பக்கம்—109
1. விஶ்வமாப்யாயந் காந்த்யா
பூர்ணேந்த்,வயுததுல்யயா । [ஸாத்வத ஸம்ஹிதை 2-70]
[பதினாயிரம் பூர்ண சந்திரனுக்கு நிகரான தன் ஒளியினால் உலகத்தை (போஷித்து) சந்தோஷப்படுத்திக்கொண்டு எழுந்தருளியிருக்கிறான் (எம்பெருமான்).]

பக்கம்—110
1. த்,ருஷ்ட ஏவ ஹி நஶ்ஶோகம்
அபநேஷ்யதி ராக,வ: [ரா-அ 83.9]
[ராக,வன் பார்த்த மாத்ரத்திலே நம்முடைய துக்கத்தைப் போக்குவான்.]

மூலத்தில் 'ஸீதயா' என்பதை "ஸீதாயா:" எனத்திருத்திக்கொள்ளவும்.

2. ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:
[ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யம் ₂]

[ஸமஸ்த பரிவாரங்களுடன் கூடியவனும் பெரிய பிராட்டியாருடைய நித்ய ஸம்ப₃ந்த₄முடையவனுமாகிற நாராயணனுக்கே உரியேன்; மற்றொருவர்க்கல்ல.]

3. பக்கம் 48ல் ப்ரமாணம் பார்க்கவும்.

4. ஆக்₄ராய ராமஸ்தம் மூர்த்₄நி
பரிஷ்வஜ்ய ச ராக₄வ: ।
அங்கே ப₄ரதமாரோப்ய
பர்யப்ருச்ச₂த் ஸமாஹித: ॥ [ரா. அ 100-3]

[ரகு₄குலத்தில் உதித்த ராமன் ப₄ரதனை உச்சிமோந்து கைகளால் ஆரத்தழுவி, மடியில் அமர்த்திக்கொண்டு மனம் ஒருமைப்பட்டுக் கேட்டான்.]

5. தம் ப்₃ரஹ்மாஹ கோऽஸீதி [கௌஷீ 1-52]

[பரப்₃ரஹ்மம் முக்தனை "நீ யாராக இருக்கிறாய்" என்று கேட்டது.]

6. அஹம் ப்₃ரஹ்மாஸ்மி [தை-நா 1-40]

[நான் ப்₃ரஹ்மத்தின் ப்ரகாரமானவன்.]

பக்கம்—112

1. ப்ரணஷ்டஸ்ய யதா₂ லாப₄: யதா₂ ஹர்ஷோ மஹோத₃யே:
ததை₂வாக₃மநம் மந்யே ஸ்வாக₃தம் தே மஹாமுநே! ॥
[ரா. பா₃. 18-53]

[இழந்த பொருள் கிட்டியது போலவும், உற்சவத்தில் மகிழ்ச்சி போலவும் தங்கள் வரவை நினைக்கிறேன், மாமுனிவரே! தங்கள் வரவு நல்வரவாகுக.]

2. மநோஹரைஶ் சாடுபி₄ரார்த்₃ரயந்முதா₃

[மனத்தைக்கவரும் இனிய வார்த்தைகளாலே ஸந்தோஷத்துடன் உள்ளத்தை உருக்கிக்கொண்டு.]

3. தஸ்ய தத்₃வசநம் ஶ்ருத்வா
ராமோ வசநமப்₃ரவீத் ।
வசஸா ஸாந்த்வயித்வைநம்
லோசநாப்₄யாம் பிப₃ந்நிவ ॥ [ரா. யு. 19-7]

[அநந்யஶரணனாய் அநந்ய ப்ரயோஜனனான விபீ₄ஷண னுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, அவனை இன் சொல்லாலே நெஞ்சிளகப்பண்ணிக்கொண்டும் கண்களால் அநுப₄வித்துக்கொண்டும் ராமன் வார்த்தை அருளினான்.]

பக்கம்—113

1. நாயமாத்மா ப்ரவசநேந லப்₄ய:
ந மேத₄யா ந ப₃ஹுநா ஶ்ருதேந ।
யமேவைஷ வ்ருணுதே தேந லப்₄ய:
தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ॥
[கட₂ 1-2-23]

[இந்தப்பரமாத்மா (ப₄க்தியற்ற) ஶ்ரவணத்தினாலும் மனனத்தினாலும் தியானத்தினாலும் அடையத்தக்கவ னல்லன். எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ, அவனா லேயே அடையத்தக்கவன். அவனுக்கு இந்தப் பரமாத்மா தன்னுடைய தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தை (அல்லது ஸ்வ ரூபத்தை)க் காட்டுகிறான்.]

2. ஏஷ ஸர்வஸ்வபூ₄தஸ்து பரிஷ்வங்கோ₃ ஹநூமத: ।
மயா காலமிமம் ப்ராப்ய த₃த்தஸ் தஸ்ய மஹாத்மந: ॥
[ரா. யு. 1-14]

[(ராமன் வார்த்தை—) ஸர்வஸ்வ தா₃னம் போன்ற இந்த ஆலிங்க₃னம் மஹாத்மாவான ஹநுமானுக்கு என்னால் இப்போது உரியகாலத்தில் தரப்பட்டது.]

3. கிந்நு ஸ்யாச்சித்தமோஹோ(அ)யம்
ப₄வேத் வாதக₃திஸ் த்வியம் ।
உந்மாத₃ஜோ விகாரோ வா
ஸ்யாதி₃யம் ம்ருக₃த்ருஷ்ணிகா ॥ [ரா. ஸு. 34-24]

[(இக்குரங்கு கூறிய ராமனின் வரலாறு) மனக்குழப்பமாக இருக்குமோ? வாயுக்கோளாறாக இருக்குமோ? பித்தத்தின் தோ₂ஷமாக இருக்குமோ? அல்லது கானலைக் காண்பது போல் மயக்கமாக இருக்குமோ?]

**4. பூர்வாங்க₃ாத் அதி₄கம் பராங்க₃கலஹம்**

[எம்பெருமானுடைய முன்னழகைக்காட்டிலும் பின்னழகு அழகுப் போட்டியில் வீறுபெற்றது.]

பக்கம்—114

**1. யத்ர நாந்யத் பஶ்யதி நாந்யத் ஶ்ருணோதி**
**நாந்யத்₃ விஜாநாதி ஸ பூ₄மா ।** [ச₂ாந். 7-23]

[எந்த வஸ்துவை அநுப₄விக்கும்போது வேறொன்றைப் பார்ப்பதில்லையோ, வேறொன்றைக் கேட்பதில்லையோ, வேறொன்றை அறிவதில்லையோ, அதுதான் பூ₄மா (பெரிது)]

**2. ஹாவு ஹாவு ஹாவு அஹமந்நம் அஹமந்நம்**
**அஹமந்நம் ।** [தை. ப்₄ருகு]

[(முக்தன் அனைத்தையும் எம்பெருமானுடைய விபூ₄தியாகப் பார்ப்பதால்) ஹாவு ஹாவு ஹாவு என்று மகிழ்கிறான். 'நானே பரமாத்மாவுக்கு போ₄க்₃யமான அந்நம்' எனப் பலமுறை வாய் வெருவுகிறான்.]

பக்கம்—115

**1. ததஸ்தம் ம்ரியமாணம் து**
**காஷ்ட₂பாஷாணஸந்நிப₄ம் ।**
**அஹம் ஸ்மராமி மத்₃ப₄க்தம்**
**நயாமி பரமாம் க₃திம் ॥** [வராஹ சரமம்]

[என் ப₄க்தன் மரணகாலத்தில் கட்டையும் கல்லும்போல் இருப்பினும் அவனை நான் நினைக்கிறேன்; உயர்ந்த பத₃மான பரமபத₃த்திற்கு அழைத்துச்செல்கிறேன்.]

பக்கம்—124

**1. நவத்₃வா(3)ரே புரே** [கீ₃தை 5-13]

[ஒன்பது வாசலை உடைய பட்டணம் போன்ற உடலில்.]

2. அவஶ்யமநுபே₄க்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபா₄ஶுப₄ம் ।
நாபு₄க்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி ॥
[ப்₃ரஹ்மவைவர்த்தம் - ப்ரக்ருதிக₂ண்ட₃ம் 26-70]

[நல்லதோ கெட்டதோ செய்த கர்மத்திற்குப் ப₂லனை ஜீவன் கட்டாயம் அநுப₄வித்தே தீரவேணும். நூறு கல்பகோடி காலமானாலும் கர்மம் அநுப₄வியாமல் கழியாது]

பக்கம்—128

நவார்த்த₂ரத்நமாலேயம்
ஸத்₃பி₄ர் தா₄ர்யா ஸதா₃ ஹ்ருதி₃ ।
ப₃த்₃த₄ா யேநா ऽதியஶஸா
தம் ஜக₃த்₃கு₃ருமாஶ்ரயே ॥
[பிள்ளை லோகாசார்யர் சிஷ்யர் அருளிய ஶ்லோகம்]

[இந்த நவரத்னமாலை எப்போதும் நல்லோர்களால் தா₄ரிக்கத் தக்கது. இதை அருளிய பெரும்புகழாளரான உலகாசிரியரை ஆஶ்ரயிக்கிறேன்.]

பக்கம்—129

1. பிதா ச ரக்ஷகஶ்ஶேஷீ ப₄ர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி: ।
ஸ்வாம்யாதா₄ரோ மமாத்மா ச போ₄க்தா சாத்₃யமநூதி₃த:॥
[ஸ்ரீய:பதியான எம்பெருமான் இச்சேதனனுக்குத் தந்தையும், ரக்ஷகனும், ஶேஷியும், ப₄ர்த்தாவும், அறியத்தக்கவனும், ஸ்வாமியும், ஆதா₄ரமும், ஆத்மாவும், போ₄க்தாவுமாவான் என்று திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ளது.]

2. அவ-ரக்ஷணே. [தா₄துபாட₂ம்]
[அவ என்ற தா₄து காத்தல் என்ற பொருளில் உள்ளது.]

பக்கம்—130

1. 129ம் பக்கம் 2ல் பார்க்கவும்.

2. யதோ வா இமாநி பூ₄தாநி ஜாயந்தே
யேந ஜாதாநி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபி₄ஸம்விஶந்தி
தத்₃விஜிஜ்ஞாஸஸ்வ தத்₃ப்₃ரஹ்மேதி ॥ [தை-ப்₄ருகு₃]

[யாதொன்றினிடமிருந்து இந்த ஜீவராசிகள் தோன்று கின்றனவோ, தோன்றினவை எதனால் (ரக்ஷிக்கப்பட்டு) உயிர்வாழ்கின்றனவோ, எதை ப்ரளயத்திலும் மோக்ஷத் திலும் அடைகின்றனவோ அதை அறிவாயாக; அதுவே ப்₃ரஹ்மம்.]

பக்கம்—131

1. யஸ்யாஸ்மி ந தமந்தரேமி
[தைத்-யஜுர்-ப்₃ரா அஷ்டக 3 ப்ரஶ்ன 7]

[எவனுக்கு நான் தா₃ஸனாயிருக்கிறேனோ அவனைவிட்டு வேறொருவனிடம் செல்லமாட்டேன்.]

பக்கம்—132

1. மந-ஜ்ஞானே [தா₄துபாட₂ம்]

[மந என்ற தா₄து (வினைச்சொல்) அறிதல் என்ற பொரு ளில் உள்ளது.]

2. ஸ்வத்வமாத்மனி ஸஞ்ஜாதம்
ஸ்வாமித்வம் ப்₃ரஹ்மணி ஸ்தி₂தம் ।
உப₄யோரேஷ ஸம்ப₃ந்தோ₄
ந பரோऽபி₄மதோ மம ॥ [விஷ்ணுதத்வம்]

[உடைமையாயிருக்கும் தன்மை ஆத்மாவினிடத்தில் உள்ளது. உடையவனாயிருக்கும் தன்மை ப்₃ரஹ்மத்தி னிடமுள்ளது. இருவருக்கும் இதுவே ஸம்ப₃ந்த₄ம். வேறு ஸம்ப₃ந்த₄ம் எனக்கு இஷ்டமன்று.]

பக்கம்—134

1. ஸேயம் தே₃வதைக்ஷத । ஹந்தாऽஹமிமாஸ்திஸ்ரோ தே₃வதா அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணீதி । [சா₂ந் 6-3-2]

[அப்படிப்பட்ட இந்தப் பரதே₃வதை "நான் (நெருப்பு நீர், பூமி என்னும்) இந்த மூன்று தே₃வதைகளையும் இந்த ஜீவஸமஷ்டியுடன் கூடிய என்னுடைய ஸ்வரூபத் தால் வியாபித்து நாமரூபங்களைச் செய்யக்கடவேன்." என்று ஸங்கல்பித்தது.]

பக்கம்—140

1. நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேததாநாம்
ஏகோ ப,ஹூநாம் யோ வித,த,ாதி காமாந் ॥
[கட, 2.5-13, ஶ்வே 6-13]

[நித்யர்களான பல ப,த்,த,சேதனர்களுக்கு நித்யனான யாவனொரு பரமசேதனன் விருப்பங்களை அளிக்கின்றானோ]

2. ஜ்ஞாஜ்ஞௌ த்,வாவஜாவீஶநீஶௌ
அஜா ஹ்யேகா போ,க்த்ருபோ,கா,ர்த்த,யுக்தா ॥
[ஶ்வே 1-9]

[பரமாத்மா ஸர்வஜ்ஞன், ஈஶன். ஜீவன் அஜ்ஞன், அநீஶன். இருவரும் உத்பத்தியில்லாதவர்கள். மற்றொன்றான ப்ரக்ருதி(யும்) உத்பத்தியற்றது. ஜீவனுடைய போ,கத்திற்காக ஏற்பட்டது.]

3. ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ வித்,த்,யநாதீ, உப,ாவபி ।
[கீ,தை 13.19]

[ப்ரக்ருதி ஜீவன் இரண்டும் 'இக்காலந்தொடங்கியுள்ளன' என்னலாம்படி முன் எல்லையில்லாமல் எப்போதும் இருந்து கொண்டிருக்கின்றன.]

4. அஸந்நேவ ஸ ப,வதி அஸத், ப்,ரஹ்மேதி வேத,சேத் ।
அஸ்தி ப்,ரஹ்மேதி சேத்,வேத, ஸந்தமேநம் ததோ
விது,ரிதி ॥ [தை. ஆந 6]

[ப்,ரஹ்மஜ்ஞாநம் இல்லையானால் அவன் இல்லாதவனாகவே ஆகிறான். ப்,ரஹ்மஜ்ஞாநம் உண்டானால் அக்காரணத்தினாலே இவனை உள்ளவனாக அறிகிறார்கள்.]

5. அநந்தா வை வேதா,: [யஜுர் ப்,ரா காட, 1-11]

[வேத,ங்கள் அளவில்லாதவை.]

6. அநந்தபாரம் ப,ஹு வேதி,தவ்யம்
அல்பஶ்ச காலோ ப,ஹவஶ்ச விக்,நா: ।
யத்ஸாரபூ,தம் தது,பாத,தீ,த
ஹம்ஸோ யதா, க்ஷீரமிவாம்பு,மிஶ்ரம் ॥
[உத்தர கீ,தா 3.10]

[ஶாஸ்த்ரங்கள் முடிவில்லாதவை. காலமும் குறைவு, இடையூறுகளோ பல. (ஆகையால்) அன்னம் நீர்கலந்த பாலிலிருந்து பாலைக் கொள்வதுபோல ஸாரத்தைக் கொள்ளவேணும்.]

**7. பூ₄தஜீவிதமத்யல்பம்**

[பிராணிகளுடைய உயிர் வாழ்வு மிக அல்பமானது.]

**8. ஶ்ரேயாம்ஸி ப₃ஹுவிக்₄நாநி**
**ப₄வந்தி மஹதாமபி ।**
**அஶ்ரேயஸி ப்ரவ்ருத்தே து**
**க்வ யாந்தி விக₃தகா: ॥**

[பெரியோர்களுக்குங்கூட நற்காரியங்கள் பல தடைகளை உடையனவாகின்றன. கெட்ட காரியம் செய்யும்போது தடைகள் எங்குப் போகின்றனவோ?]

பக்கம்—141

1. 140ம் பக்கம் 6லே பார்க்கவும்.

**2. ருசோ யஜூம்ஷி ஸாமாநி**
**ததை₂வாத₂ர்வணாநி ச ।**
**ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்ஸ்த₂ம்**
**யச்சாந்யத₃பி வாங்மயம் ॥** [ஹாரீதஸ்ம்ருதி 3-45]

[ருக்குகளும், யஜுஸ்ஸுகளும், ஸாமங்களும், அதுபோலவே அத₂ர்வணங்களும், இதிஹாஸபுராணங்களும், மற்றுமுள்ள ஸ்ம்ருத்யாதி₃களும் (பொருள் வகையிலே) இவ்வஷ்டாக்ஷரத்துக்குள்ளே இருக்கின்றன.]

**3. யதா₂ ஸர்வேஷு தே₃வேஷு**
[நாரதீ₃யகல்பம் அஷ்டாக்ஷர ப்₃ரஹ்மவித்₃யை 1-41]

[ஸகல தே₃வதைகளிலும் நாராயணன் ப்ரதா₄னனுகிறப் போலே.]

**4. ஆஸ்தாம் தே கு₃ணராஶிவத் கு₃ண-
பரீவாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்₂யா**
[ஸ்ரீரங்க₃ராஜஸ்தவம் 2-74]

[ஸ்ரீரங்க₃நாத₂ரே! தேவரீருடைய கு₃ணஸமூஹங்களுக்குப் போல அக்கு₃ணங்களுக்குப் போக்குவீடான அவதாரங்களுக்கும் எண்ணிக்கை அளவிறந்தது என்பது ஒருபுறமிருக்கட்டும்.]

**5. ப₃ஹவோ ந்ருப கல்யாணகு₃ணா: புத்ரஸ்ய ஸந்தி தே**
[ரா. அ. 2-26]

[தசரத மன்னனே! உன் புத்ரனுகிய ராமனுக்குப் பல நற்கு₃ணங்கள் உள்ளன.]

**6. தவாநந்தகு₃ணஸ்யாபி ஷடே₃வ ப்ரத₂மே கு₃ணா:।
யைஸ்த்வயேவ ஜக₃த் குக்ஷௌ அந்யேऽப்யந்தர்
நிவேஶிதா:॥**

[ப₄க₃வானே! அளவிறந்த கு₃ணங்களை உடையவனுயிருந்தபோதிலும் உமக்கு ஆறே கு₃ணங்கள் முக்கியமானவை; தேவரீர் உலகத்தை வயிற்றில் வைத்துக் கொண்டிருப்பதுபோல், இக்கு₃ணங்கள் மற்ற கு₃ணங்களைத் தமக்குள் கொண்டிருக்கின்றனவன்றே.]

**7. ப₃ஹூநி மே வ்யதீதாநி
ஜந்மாநி தவ சார்ஜுந।
தாந்யஹம் வேத₃ ஸர்வாணி
ந த்வம் வேத்த₂ பரந்தப॥** [கீ₃தை 4.5]

[அர்ஜுநு! உனக்குப்போலே எனக்கும் பல பிறப்புகள் கடந்துவிட்டன. எதிரிகளைத் தவிக்கச்செய்பவனே! அப்பிறப்புக்கள் அனைத்தையும் நான் அறிவேன். நீ அறியமாட்டாய்]

**8. கிம் தத்ர ப₃ஹுபி₄ர் மந்த்ரை:
கிம் தத்ர ப₃ஹுபி₄ர் வ்ரதை:।
நமோ நாராயணுயேதி
மந்த்ர: ஸர்வார்த்த₂ஸாத₄க:॥** [நாரதீ₃யகல்பம். அஷ்டாக்ஷர ப்₃ரஹ்மவித்₃யை 1-41 ப்₃ரஹ்ம புராணம் 57-24]

[திருமந்த்ரமானது எல்லாப் பயன்களையும் தலைக்கட்டிக் கொடுக்குமது; அது உள்ளபோது அநேக மந்த்ரங்களை ஜபிப்பதாலும் பல விரதங்களை அநுஷ்டிப்பதாலும் என்ன பயன்?]

**9. நாராயணாய வித்₃மஹே வாஸுதே₃வாய தீ₄மஹி ।**
**தந்நோ விஷ்ணு: ப்ரசோத₃யாத் ॥** [தை. நா. 2.28]

[நாராயணனைப்பேறாக உபாஸிப்போம். வாஸுதே₃வனை உபாயமாக தியானிப்போம். அந்த த்₄யானத்தை ஸர்வ வ்யாபியான அவ்விஷ்ணுவே தலைக்கட்டித்தரவேணும்.]

பக்கம்—142

**1. ஆர்த்தா விஷண்ணா: ஶிதி₂லாஶ்ச பீ₄தா:**
**கோ₄ரேஷு ச வ்யாதி₄ஷு வர்த்தமாநா: ।**
**ஸங்கீர்த்ய நாராயணஶப்₃த₃மாத்ரம்**
**விமுக்தது₃:க்கா₂ஸ் ஸுகி₂நோ ப₄வந்தி ॥**
[பா₄ர-ஆநு-விஷ்ணு ஸஹஸ்ரநாமம்]

[இழந்த செல்வத்தைப்பெற விரும்புபவர்களும், புதிய செல்வம்பெற விரும்புபவர்களும் பகவானை அடையாது ஆத்மாநுப₄வத்தை விரும்புபவர்களும், ஸம்ஸாரத்துக்கு அஞ்சினவர்களும், பயங்கரமான வியாதியுள்ளவர்களும் நாராயண ஶப்₃த₃த்தை மட்டும் கீர்த்தனம் பண்ணி ஸகல து₃க்க₂ங்களினின்றும் விடுபட்டு ஸுக₂மடைகிறார்கள்.]

**2. ஆபோ நாரா இதி ப்ரோக்தா:**
**ஆபோ வை நரஸூநவ: ।**
**அயநம் தஸ்ய தா: பூர்வம்**
**தேந நாராயண: ஸ்ம்ருத: ॥** [வி. பு, 1.4.6]

[அழியாதவனாகையாலே பகவான் நாராயணன் நரன் எனப்படுகிறான். அப்புக்கள் நரனிடமிருந்து உண்டானவையாகையாலே நாரங்கள் எனப்படுகின்றன. அவை ப்ரளய காலத்தில் நரனான பரமாத்மாவுக்கு அயனமாக (இருப்பிடமாக) இருந்தன. அதனால் அவன் நாராயணன் எனப் பட்டான்.]

3. மாஶுச₂: மாஶுச₂:
[அஞ்சவேண்டாம். அஞ்சவேண்டாம்.]

4. ஸர்வவேத₃ரஹஸ்யேப்₄ய:
[ஸர்வவேத₃ங்களிலும் ஸர்வரஹஸ்யங்களிலும்.]

5. ஏகோऽஷ்டாக்ஷரமேவாலம்
[திருவெட்டெழுத்து ஒன்றே போதும்.]

பக்கம்—143

1. ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யஞ்ச
ஸ்தோப₄ம் ஹேலநமேவ வா ।
வைகுண்ட₂நாமக்₃ரஹணம்
அஶேஷாக₄ஹரம் விது₃: ॥ [பாகவதம் 6.2.14]

[பேரிட்டழைத்தலோ, பரிஹாஸத்துக்காகச் சொல்லுதலோ, பொருளில்லாமல் சொல்லுதலோ, சத்ருவுக்குக் கோபம் பிறக்கும்படி அவனைக் கேலிசெய்து சொல்லுதலோ, ஏதோ ஒரு வகையில் எம்பெருமானுடைய திருநாமத்தை உச்சரித்தல் ஸகல பாபங்களையும் போக்கும் என்று அறிகிறார்கள்.]

2. ஐஹலௌகிகமைஶ்வர்யம்
ஸ்வர்க்கா₃த்₃யம் பாரலௌகிகம் ।
கைவல்யம் ப₄க₃வந்தஞ்ச
மந்த்ரோऽயம் ஸாத₄யிஷ்யதி ॥
[வ்ருத்₃த₄ஹாரீதஸ்ம்ருதி 3.4-7]

[(பசு புத்ரன் தொடக்கமாக சக்ரவர்த்தி பதவிவரை உள்ள) இவ்வுலக ஐச்வர்யத்தையும், ஸ்வர்க்கா₃நுப₄வம் முதலாக (நான்முகன் பதவி ஈருக) உள்ள பரலோக ஐச்வர்யத்தையும், ஆத்மாநுப₄வத்தையும், பரமபுருஷார்த்த₂மான ப₄க₃வல்லாப₄த்தையும் இந்த மந்த்ரம் கொடுக்கும்]

3, பக்கம் 141. 8வது ப்ரமாணம் பார்க்கவும்.

பக்கம்—144

1. பக்கம் 141 இல் பார்க்கவும்.

பக்கம்—145

1. **அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:**

[எம்பெருமான் திறத்தே ஏதும் பணிசெய்யப் பெறுதவனுக்கு ஶேஷத்வம் பொருந்தாது.]

பக்கம்—148

1. **ஏதமாநந்த₃மயமாத்மாநம் உபஸங்க்ரம்ய ।**
**இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்**
**ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே—ஹாவு ஹாவு ஹாவு ॥**
[தை. ப்₄ருகு₃ 10-5]

[முக்தன் இந்த ஆனந்த₃மயனான பரமாத்மாவைக் கிட்டி இஷ்டமான உருவங்களை உடையவனாய், இஷ்டமான அன்னம் (அநுப₄வம்) உடையவனாய், இந்த லோகங்களில் (பரமாத்மாவைப்) பின் தொடர்ந்துகொண்டு "ஹாவு ஹாவு ஹாவு" என்ற ஸாமத்தைப்பாடிக் கொண்டிருக்கிறான்]

2. **அத₂ ய இஹாத்மாநமநுவித்₃ய வ்ரஜந்த்யேதாம்ஶ்ச ஸத்யாந் காமாந் தேஷாம் ஸர்வேஷு லோகேஷு காமசாரோ ப₄வதி** [சா₂ந் 8-1-6]

[எவர் இங்கு பரமாத்மாவையும் அவனது அபஹதபாப்மத்வம் முதலிய கல்யாண கு₃ணங்களையும் உபாஸித்துப் பரலோகமடைகிறார்களோ, அவர்கள் பரமாத்மாவின் உடைமையான எல்லா உலகங்களையும் விரும்பியபடி அநுப₄வித்து த்ருப்தி அடைகிறார்கள்.]

3. **யேந யேந தா₄தா க₃ச்ச₂தி**
**தேந தேந ஸஹ க₃ச்ச₂தி ।**
**தத்₃யதா₂ தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா**
**மாதரம் சா₂யா வா ஸத்வமநுக₃ச்சே₂த்**
**தத₂ாப்ரகாரம் ॥** [பரமஸம்ஹிதை]

[இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவையும், (அல்லது குழந்தை தாயையும்), கிழல் பிராணியையும் எப்படிப் பின்தொடர்கின்றனவோ அப்படியே எப்படி எப்படிப் பரமபுருஷன் செல்லுகிருனே, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப் போகிருன்.]

**4. தந்நியுக்த: கரிஷ்யாமி**
[அவனுல் நியமிக்கப்பெற்றுச் செய்வேன்.]

பக்கம்—149

**1. பரவாநஸ்மி காகுத்ஸ்த,**
**த்வயி வர்ஷஶதம் ஸ்தி,தே।**
**ஸ்வயந்து ருசிரே தே,ஶே**
**க்ரியதாமிதி மாம் வத,॥** [ரா. ஆ. 15-7]

[ராம! அடியேன் பரதந்த்ரன்; தேவர் பல்லாண்டு வாழினும் பரதந்த்ரனுகவே இருப்பேன். தேவரீர் திருவுள்ளத்திற்குப் பாங்கான அழகிய இடத்தில் 'ஆச்ரமம் அமைத்திடுக' என்று அருளிச்செய்யவேணும்.]

**2. ஓமித்யேகாக்ஷரம்। நம இதி த்,வே அக்ஷரே।**
**நாராயணுயேதி பஞ்சாக்ஷராணி। ஓமித்யக்,ரே**
**வ்யாஹரேத்। நம இதி பஶ்சாத்। நாராயணுயே-**
**த்யுபரிஷ்டாத்।** [நாராயணேபநிஷத்]

['ஓம்' என்பது ஓரெழுத்துடையது. 'நம:' என்பது இரண்டு எழுத்துக்களை உடையது. 'நாராயணுய' என்பது ஐந்து எழுத்துக்களை உடையது. 'ஓம்' என்பதை முதலில் உச்சரிக்கவும். 'நம:' என்பதை அடுத்தபடி உச்சரிக்கவும். "நாராயணுய" என்று அதற்குமேல் உச்சரிக்கவும்.]

பக்கம்—151

**1. ப்,ரஹ்மணே த்வா மஹஸ ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத** [தை. நா 51]

[பரப்,ரஹ்மமாகிய உன்னை அடையும்பொருட்டு 'ஓம்' என்ற மந்திரத்தை அநுஸந்தி,த்து ஆத்மஸமர்ப்பணம் செய்யவும்.]

2. **ஓங்காரோ ப₄க₃வாந் விஷ்ணுः**
**த்ரிதா₄மா வசஸாம் பதிः।**
**தது₃ச்சாரணதஸ்தே து**
**விநாஶம் யாந்தி ராக்ஷஸா:॥** [வி. பு. 2-8-54]

[ஓங்காரம் ப₄க₃வான் விஷ்ணு (அதாவது எம்பெருமான் காரணனைச் சொல்லுகிறது.) வ்யாஹ்ருதிகளான பூ₄; பு₄வ: ஸுவ: என்பவற்றின் தே₃வதைகளான அக்₃னி வாயு ஸூர்ய தே₃வதைகளை ஆச்ரயித்துள்ளது. வேத₃ங்களில் தலையானது. அதை உச்சரிப்பதால் அந்த ராக்ஷஸர்கள் நாசமடைகிறார்கள்.]

3. **ரஸோऽஹமப்ஸு கௌந்தேய**
**ப்ரபா₄ऽஸ்மி ஶஶிஸூர்யயோः।**
**ப்ரணவஸ்ஸர்வவேதே₃ஷு**
**ஶப்₃த₃: கே₂ பௌருஷம் ந்ருஷு॥** [கீ₃தை 7-8]

[குந்திமகனே! நான் நீரில் நற்சுவையாயிருக்கின்றேன். சந்த்₃ர ஸூர்யர்களின் ஒளியாயிருக்கிறேன். எல்லா வேத₃ங்களிலும் ஓங்காரமாயிருக்கிறேன். ஆகாஶத்தில் ஶப்₃த₃கு₃ணமாயிருக்கிறேன். ஆண்களின் ஆண்மையா யிருக்கிறேன்.]

4. **நஹி பாலநஸாமர்த்₂யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்।**
**ஸ்தி₂தௌ ஸ்தி₂தம் மஹாப்ராஜ்ஞ! ப₄வத்யந்யஸ்ய**
**கஸ்யசித்॥** [வி. பு. 1.22.21

[மஹாபு₃த்₃தி₄மானே! ரக்ஷணத்தில் நிலைநிற்கும் ஸர்வேச்வரனை ஹரியைத்தவிர வேறு எவனுக்கும் ரக்ஷிக்கும் வல்லமை கிடையாதன்றோ]

பக்கம்—152

1. **அகி₂லபு₄வநஜந்மஸ்தே₂மப₄ங்கா₃தி₃லீலே**
**விநதவிவித₄பூ₄தவ்ராதரக்ஷைகதீ₃க்ஷே।**
**ஶ்ருதிஶிரஸி விதீ₃ப்தே ப்₃ரஹ்மணி ஶ்ரீநிவாஸே**
**ப₄வது மம பரஸ்மிந் ஶேமுஷீ ப₄க்திரூபா॥**
[ஶ்ரீபா₄ஷ்ய மங்க₃ள ஶ்லோகம்]

